# நன்னூல் உரைவளம் (தொகுதி-12)

## சொல்லதிகாரம்

# வினையியல்


பதிப்பாசிரியர்

முனைவர் இரா. கண்ணன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

இரண்டாம் முதன்மைச் சாலை,

தரமணி, சென்னை-600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Nannūl uraivalam (Vol. 12)**<br>**Collatikāram**<br>**Vinaiyiyal** |
| Author | : | Dr. R. Kannan<br>Associate Professor<br>Dept. of Tamil Language<br>Presidency College, Chennai - 5 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 700 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 11 Point |
| No. of Pages | : | 444 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 190/-<br>(Rupees One hundred and Ninety only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>New No. 47, Rajanga Mathya Street<br>Vadapalani, Chennai - 600 026.<br>Phone : 23621409 |
| Subject | : | Tamil Grammar |

முனைவர் கரு.அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை – 113

# அணிந்துரை

வாழ்வை இலகுவாக்க மனிதன் படைத்துக் கொண்ட கருவிகள் பற்பல. அவற்றுள் மொழியும் ஒன்று. ஆயினும் பிற கருவிகள் யாவற்றுள்ளும் தலையாயதும் தனிச் சிறப்புடையதும் மொழியே. மொழி இன்றேல் வேறு எக்கருவியும் தோன்றி யிராது. மொழி, மனத்தின் உயிர்; பிறபிற கலைகளுக்கும் கருவிகளுக்கும் தாய். மாந்தரின வாழ்விற்கு இத்துணை இன்றியமையாக் கருவியாய்த் திகழும் மொழி, உலகம் யாண்டும் பரவிக் கிடக்கும் மக்களினக் குழுக்களிடையே பலவாகக் காணக் கிடக்கிறது. அம் மொழிக்கூட்டத்திடையே பன்மீன் நாப்பண் விளங்கு பால்மதி போல் இலங்குவது தமிழ்.வரலாற்றுக்காலந் தொடங்கி இன்றளவும் தன்னேரிலாத் தகைசால் சீர்மை யுடன் திகழும் இத் தமிழ்மொழியின் இலக்கிய இலக்கணப் பரப்பு அளந்திட்டுக் கூற ஒண்ணா விரிவினை உடையது. காலமும் கடும்புனலும் கொண்டது போக எஞ்சியன சிலவே யாயினும், மறைந்து போனவற்றிற்கு மாற்றாகக் காலந் தோறும் தோன்றிய பனுவல்களோ பற்பல. அழகு தமிழில் அமைந்த அந்நூல்களின் பொதிபொருளைப் பழகு தமிழில் விளக்க எழுந்த உரைகளும் மிகப் பல.

ஒல்காப் புகழுடைய தொல்காப்பியத்திற்குப் பின் ஏறத்தாழ பன்னிரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றி இன்றளவும் தனிச் சிறப்புடன் வாழ்வது நன்னூல். பெயருக்கு ஒப்பவே தமிழின் இலக்கணத்தை நலம்படவும் நயம்படவும் இயம்பும் இந்நூலிற்கு உரைவிளக்கம் கண்டோர் பலர். அவ்வுரைகளுள் பல, தம் பெயரை மட்டுமே நிறுத்தி தாம் மாய்ந்தன. வேறுபலவோ, அச்சேறியபோதும் இன்று காணுதற்கும் அரியனவாய் உள்ளன. இவ்வாறு காலச் செலவால் அருகி உள்ள உரைகளை அரிதின் முயன்று திரட்டி இருபத்திரண்டு தொகுதிகளாக உருவாக்கப் பெற்றுள்ள இவ்வுரைவளத்தினைஎம் நிறுவனத்தின் வழி வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறோம்.

மயிலை நாதர், சங்கர நமச்சிவாயர்,சிவஞான முனிவர், கூழங்கைத் தம்பிரான், விசாகப் பெருமாளையர், ஆ.முத்துத் தம்பிப்பிள்ளை, இராமானுச கவிராயர், கா.கோபாலா சாரியார், தி.கோ.ரங்காசாரியார், ஆறுமுக நாவலர், வ.குமார சாமிப்புலவர்,வை.மு.சடகோபராமானுசாசாரியார், சே.கிருட்டிணமாசாரியார், பவானந்தம் பிள்ளை, கொ.இராமலிங்கத் தம்பிரான், கா.நமச்சிவாய முதலியார், மோசசு பொன்னையா ஆகியோரின் உரைகளும், என்றி பவார் செய்த பாயிரப் பகுதிக்கான ஆங்கில மொழி பெயர்ப்பும், இலாசரசு செய்த எழுத்ததிகாரம் மற்றும் சொல்லதிகாரத்திற்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் இவ்வுரை வளத்தில் திரட்டப் பெற்றுள்ளன. நன்னூலைத் தழுவி இயற்றப் பெற்று ஒரு நூற்றாண்டு காலத்திற்கும் மேல் மீள்பதிப்புக் காணாத திருப்பாற்கடல்நாதன் கவிராயரின் தமிழிலக்கணம், சி.அருணாசலம் பிள்ளையின் TAMIL GRAMMAR, இ.சாமுவேல் பிள்ளையின் தொல்காப்பிய நன்னூல், G.U.போப்பின் காண்டிகையுரை, ஆ.முத்துத் தம்பிப்பிள்ளையின் நன்னூல் இலகுபோதம் ஆகியன இவ்வுரைவளத் திரட்டில் தனித்தனி நூல்களாக வெளியிடப் பெற்றுள்ளன. இவ்வுரைவளம் தமிழன்னைக்கு அணி சேர்க்கும் என்பதில் ஐயமில்லை.

நன்னூல் உரைவளத்தின் பதிப்பாசிரியரான முனைவர் **இரா.கண்ணன்**, சென்னை மாநிலக்கல்லூரித் தமிழ்த் துறையில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றுகிறார். இவர் அறுபதிற்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். இவ்வுரைவளத்தின் பதிப்புப்பணியோடு எழுத்துக் கோர்த்தல், மெய்ப்புத் திருத்தல், வடிவமைத்தல் உள்ளிட்ட அனைத்துப் பணிகளையும் தனியொருவராக இருந்து சிறப்புடன் செய்துள்ள இப்பதிப்பாசிரியரை மனதார வாழ்த்துவதுடன் நன்றி நவிலுங் கடப்பாடுமுடையேன்.

நிறுவனப் பணிகளில் எம்முடன் இணைந்து பணியாற்றும் துணை இயக்குநர், பேராசிரியப் பெருமக்கள் மற்றும் அலுவலக ஊழியர்கள் ஆகிய அனைவர்க்கும் எம் நன்றி உரித்தாகுக.

**கரு.அழ.குணசேகரன்**

சென்னை – 113.

12.10.2010.

# முன்னுரை

தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐம்பெரும் பிரிவுகளை உடையது என்பர். இது பொது வழக்கே யாயினும் பிற்காலத்தில் பாட்டியல் அனைய புதுப்புது இலக்கணப் பிரிவுகள் தமிழில் தோன்றி நன்கு செழித்து வளர்ந்துள்ளன. அவ்வாறே எழுத்து, சொல் முதலான ஒவ்வொரு பிரிவினிலும் தோன்றிய இலக்கண நூல்களும் பல உள. தொல்காப்பியம், எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று அதிகாரங்களை உடையதாதலான் அது மூன்றிலக்கணம் கூறும் நூல் என்பது போதரும். ஆயினும் பொருளதிகாரத்துள் அமைந்து கிடக்கும் உவமவியலும், செய்யுளியலும் முறையே அணியிலக்கணத்தையும், யாப்பிலக்கணத்தையும் வேண்டுமளவிற்கு விளக்கிக் கூறுதலான், அந்நூல் ஐந்திலக்கண நூலுமாம். தொல்காப்பியத்திற்குப் பின் பல்வேறு இலக்கண நூல்கள் எழுந்தன.பழங்காலத்தில் பெருவழக்காய் வழங்கிய அவ்விலக் கண நூல்கள் இன்று வீழ்ந்து போயின. இன்று வழங்கப் பெறும் இலக்கண நூல்களுள் வீரசோழியம், தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த முதல் ஐந்திலக்கண நூலாகும். ஆயினும் அந்நூல் வடமொழி சார்பினைப் பெரும்பான்மை தழுவிச் செல்வதால் அது அவ்வளவாகப் போற்றப் படுவதில்லை. வீரசோழியத்திற்குப் பின் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண் டளவில் பவணந்தி முனிவரால் நன்னூல் இயற்றப்பட்டது. நன்னூல் ஐந்திலக்கணம் கூறிய நூல் என்றும், இன்று எழுத்து மற்றும் சொல்லிலக் கணம் உரைக்கும் பகுதி மட்டுமே கிடைக்கப் பெறுகிறது என்றும் எஞ்சிய பகுதிகள் காலச் செலவால் அழிந்திருக்கக் கூடும் என்றும் கருதுவாரும் உண்டு. இன்று வழக்கில் உள்ள நன்னூலின் மொத்த நூற்பாத் தொகை நானூற்று அறுபத்திரண்டு. பாயிரம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என மூன்று பகுதிகளாய் அமைந்துள்ள இந்நூலின்கண் பாயிரம் 55 நூற்பாக்களையும், எழுத்ததிகாரம் 202 நூற்பாக்களையும் சொல்லதிகாரம் 205 நூற்பாக்களையும் பெற்றுள்ளன. பாயிரம், பவணந்தியால் இயற்றப்பட்டதன்று என்பர்.

நன்னூலிற்கு இன்றுகாறும் எழுந்துள்ள உரைகள் பல. ஆயினும் மயிலைநாதரின் உரையே முதலில் எழுந்த உரையாகும். மயிலைநாதர் நன்னூல் ஆசிரியர் பவணந்தியின் சம காலத்தவர். மயிலைநாதரின் உரை நன்னூலிற்கு இன்று வரை எழுந்துள்ள உரைகள் யாவற்றிலும் தலைமை யானது, தனிச் சிறப்புடையது. இவ்வுரைக்குப் பின் பல உரைகள் எழுந்தன. அவற்றுள் சில அச்சேறாமலேயே இறந்தன.வேறுசில அச்சேறிய பின்னும் இன்று அருகியுள்ளன.இவ்வாறு காலச்செலவான் அருகி வரும் உரைகளைக் காத்தற் பொருட்டும், தமிழாய்விற்குத் தக்க கருவி நூலாய் அமையும் திறம் நோக்கியும் இவ்வுரைவளம் உருவாக்கப் பெற்றுள்ளது.இதில் நன்னூலின் சிறந்த உரைகள் அனைத்தும் திரட்டப் பெற்றுள்ளன.

நூற்பா அதன்கீழ் சீர் பிரிக்கப் பெற்ற நிலையில் நூற்பா,ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு, இலாசரசு செய்த மூல நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பு, தொல்காப்பியம் முதல் சுவாமிநாதம் வரையிலான இலக்கண நூல்களில் இருந்து தரப்பெற்றுள்ள ஒப்புமைப் பகுதி,நன்னூல் உரைகள் ஆகியன இவ்வுரைவளத்தில் நிரல்படுத்தப்பட்டுள்ளன. மூலநூலின் பாட வேறுபாடும், மயிலை நாதர் உரையின் பாடவேறுபாடும் காட்டப் பெற்றுள்ளன.

நன்னூலிற்கு விருத்த யாப்பில் எழுந்த ஆண்டிப்புலவர் உரை அழிந்து போனது. அச்சேறிய உரைகளுள் பல இன்று அருகி பெயரளவில் மட்டுமே அறியப் பெறுபவையாக உள்ளன. அச்சேறிய அரிய உரைகளை யேனும் காக்கும் வகையில் இவ்வுரைவளம் இருபத்திரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெறுகின்றது. தமிழ் உலகம் ஏற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், பேராசிரியர் முனைவர் *கரு.அழ.குணசேகரன்* அவர்களும், துணை இயக்குநர் திரு.க.ந.வீரபாகு சுப்பிரமணியன் அவர்களும் நன்னூல் உரைவள நூல்கள் அனைத்தையும் விரைந்து வெளிக் கொணர்ந்தனர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வுரைவளத் திரட்டுப் பணியின்போது பல்லாற்றான் உதவிய சென்னை இராணிமேரி கல்லூரிப் பேராசிரியை முனைவர் ந.கலைவாணி அவர்களுக்கும், உற்றுழி உதவிய அனைவர்க்கும் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்வதோடு, தோன்றாத் துணையாய் இருந்து எம்மை இயக்கி வரும் தில்லைக் கூத்தனின் பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பணிந்து அமைகிறேன்.

10.10.2010

இரா.கண்ணன்.

சென்னை–55

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அவி | – | அவிநயம் |
| இ-ள் | – | இதன் பொருள் |
| இல. விள | – | இலக்கண விளக்கம் |
| உ-ம் | – | உதாரணம் |
| உணர்-ற்று | – | உணர்த்துதல் நுதலிற்று |
| எ-டு | – | எடுத்துக்காட்டு |
| எ-று | – | என்றவாறு |
| எ-னின் | – | என் நுதலிற்றோ எனின் |
| சுவாமி | – | சுவாமிநாதம் |
| சூ-ம் | – | சூத்திரம் |
| தொல், எழு | – | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொல், சொல் | – | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல், பொருள் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொன் | – | தொன்னூல் விளக்கம் |
| நச் | – | நச்சினார்க்கினியர் |
| ந.பா | – | நவநீதப் பாட்டியல் |
| நேமி | – | நேமிநாதம் |
| பா-டு | – | பாட வேறுபாடு |
| பொ-ரை | – | பொழிப்புரை |
| மா.அலங் | – | மாறனலங்காரம் |
| மு.வீ | – | முத்துவீரியம் |
| வீர | – | வீரசோழியம் |
| வெண், பாட் | – | வெண்பாப் பாட்டியல் |

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ ,ஒ, ஓ, ஔ,
ஃ – இவ்வெழுத்துக்கள் முறையே

a , ā , i , ī ,u ,ū ,e, ē ,ai ,o,
ō, au, k̲h̲

எனவும்,

க், ங் , ச், ஞ் , ட் ,ண், த், ந் , ப், ம், ய்,
ர் , ல் , வ், ழ், ள், ற் , ன் - வ்வெழுத்துக்கள்
முறையே

k, ṅ , s, ñ , t , ṇ, ṭ , n , p ,
m , y , r , l , v ,ḷ ,ḻ, ṛ , ṉ, k̲h̲

எனவும் ஆங்கில எழுத்துப்பெயர்ப்பில்
பயன்படுத்தப் பெற்றுள்ளன.

# வினையியல்

**319.** **செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்**
**செய்பொரு ளாறுந் தருவது வினையே.**

செய்பவன் கருவி நிலம் செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே.

seypavan̲ karuvi nilam seyal kālam
seyporuḷāṟum ṭaruvaṭu vin̲aiyē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Chap.ii. On Verbs**
**Verb**
**Verbs defined**

A (definite) verb (is a word which) signifies the following six (particulars): Agent, instrument, place, action, time and object.

## ஒப்புமைப் பகுதி

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்
(தொல். சொல்.: 198)

இறப்பு நிகழ்வெதிர்வாம் காலங்கள் ஏற்றும்
குறிப்பும் உருபேற்றல் கூடாத் – திறத்தவுமாய்

முற்றெச்ச மென்றிரண்டாய் மூவகைத்தாய் மூன்றிடத்து
நிற்கும் வினைச்சொற்கள் நேர்ந்து

(நேமி.: 63)

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றிப்
பொருட்புடை பெயர்ச்சி புலப்படுப் பதுவே

(இ.வி.: 227)

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங்காலைக் காலமொடு தோன்றும்

(மு.வீ.: 594)

## மயிலை நாதர்

என்பது சூத்திரம்

இவ்வோத்து என்னுதலிற்றோ வெனின், ஒத்து நுதலியதூஉம் ஒத்தினது பெயருரைப்பவே விளங்கும். ஆயின், இவ்வோத்து என்ன பெயர்த்தோ வெனின், வினைச்சொற்களது இயல்புணர்த்திற்றாதலான், **வினையியலென்னும்** பெயர்த்து. மேலோத்தினோடு இதற்கு இயைபு என்னையோ வெனின், மேற் பெயர் வினை இடை உரியெனச் சொல்லை நான்காக்கி, அவற்றுட் பெயர்க்கு இலக்கணம் முன்னருணர்த்தினார், அதன்பின்னர் வினைக்கு ஈண்டு உணர்த்து கின்றா ராகலின், இதனோடு இயைபுடைத் தென்க.

இதனுள், இத் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், பொதுவகை யான் வினைச்சொல்லாவது இன்னதென்பது உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:–** கருத்தாவும் கருவியும் நிலனும் தொழிலும் காலமும் செயப்படு பொருளு மென்னும் ஆறுபொருளையும் விளக்குவது, வினைச்சொல்லாவது, எ – று.

'செய்பவன்' என்று ஒருபால்மேல் வைத்தாரேனும், "ஒரு மொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால், ஐந்து பாற்கண்ணும் கொள்க. செய்பவனென்றும், கருவியென்றும் பொதுப்படவைத்தமையான் ஏவற்கருத்தாவும் கருமக்கருத்தாவும், முதற்காரணமும் துணைக் காரணமுங் கொள்க.

---

பாட வேறுபாடு.:

1.திருகையும்

'ஆறும்' என்புழி உம்மை முற்றும்மை.

வ—று.:—

வனைந்தானென்புழி, கருமக்கருத்தாவும், மண்ணென்னும் முதற்கருவியும், [1]திரிகையும் கோலு முதலான துணைக் கருவியும், அகத்தானும் புறத்தானுமென்னும் இடமும், வனைத லென்னும் தொழிலும், வனைந்தானென்னும் இறந்தகாலமும், குடத்தொடக்கத்தன வென்னும் செயப்படு பொருளுமான ஆறும் முறையே விளங்கினவாறு காண்க.

"முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்" என்பதனானே எச்சமாக்கி, அதனானே இவற்றுட் சில குன்றி வரப்பெறு மென்பதும், [1]இன்னதற்கென்பதும் இது பயனாக வென்பதுங் கூட்டி எட்டும் தருமென்பார் கருத்தும் அறிந்துகொள்க.

கொடியாடிற்று, கொடிதுஞ்சுமென்றற் றொடக்கத்தவற்றுட் சில குறைந்து வந்தவாறு காண்க.

இன்னதற்கென்பதும், இது பயனாக வென்பதும் 'வனைந்தான்' என்றதனுள் வந்தவாறு காண்க.

இவை அத்துணைச் சிறப்பிலவென்று யாவரும் ஒப்ப வேண்டாமையின், [2]விதப்பினாற் றழீஇயினாரென்க.

வனைவித்தானென்பது [3]ஏவற்கருத்தா வெனக் கொள்க. பெயரெச்ச வினையெச்சங்களும் வினையேயாகலின், இவ்வாறும் தரல்வேண்டும் பிறவெனின், அவை செய்த செய்து என எச்சமாய் நின்றே கருவி முதலைந்தையுந் தோற்றிப் பின்னர்த் தம்மெச்சமான பெயர் வினைகளை ஏற்றவாறே கருத்தாவையும் காட்டுமென்பாருமுளர்; அற்றன்று; அவை மேலே விதந்தோதுவாரென்க. அஃதேல், இவ்வாறனையும்

பாட வேறுபாடு.:—

1. இன்னதற்குக் கொடுக்கவென்பதும் இது கொடுக்க இன்னது பயக்குமென்னும் பயனும் இதனுள் வந்தவாறு காண்க.
2. ஆதியிற்சொல்லாது விதப்பினாற்
3. ஏவற்கருத்தாவாகக்
4. வினையும் செயப்படு பொருளு மொழிந்த

தருவதனை வினைச்சொல்லென்னுமாறென்னை? வினையை விளம்புஞ்சொல் வினைச்சொலென்றன்றோ முடிவதெனின், அஃதே! நன்றுசொன்னாய் ; [4]வினையும் கருத்தாவுமொழிந்த நான்கும் உளவழி வினையுளதாமென்னு நியதியில்லை; யாண்டு ஓர்வினையுண்டு? ஆண்டு அவ்வேனையைந்தும் உளவாதல் ஒருதலை; அதனான், அச் சிறப்பு நோக்கி வினைச்சொல்லெனவே படுமெனக் கொள்க. இதற்கு,

**"கால மறிதொழில் கருத்தனோ டியையப்**
**பால்வகை தோறும் படுமொழி வேறே"**

எனவும்,

**"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது**
**நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"**

(தொல். வினை.1)

எனவும் சொன்ன அவிநயனார் கருத்தும், தொல்காப்பியனார் கருத்தும் அறிந்துகொள்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், 'பெயர் வினை என இரண்டாகும்' என நிறுத்தமுறையானே வினைச்சொல்லிலக்கணம் உணர்த்துவான் தொடங்கி அவற்றுள் தெரிநிலைவினைச் சொல்லின் பொதுவிலக்கணம் உணர்–ற்று.

வருஞ் சூத்திரத்தான் வினைக்குறிப்பு என்றமையின் இது தெரிநிலை என்பது பெற்றாம்.

**இ–ள்.:–** கருத்தாவும் கருவியும் இடமும் செயலும் காலமும் செயப்படுபொருளும் ஆகிய அறுவகைப் பொருளையும் தருவது தெரிநிலை வினைச் சொல்லாம், எ–று.

வினை என்றது ஆகுபெயர். நட வா முதலிய எல்லாம் தழுவுதற்குச் செய் என்றார்.

செய்பவன் என ஒருபால்மேல் வைத்து ஓதினாரேனும் 'ஒரு மொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்பதனான் ஐம்பாலும் கொள்க.

செய்பவன் என்றும் கருவி என்றும் பொதுப்படக் கூறினமையின், இயற்றுதற் கருத்தா ஏவுதற் கருத்தா என்னும் இரண்டனையும் முதற்காரணம் துணைக்காரணம் என்னும் இரண்டனையும் கொள்க.

செய்பவன் என்பது செய்பவனாகிய பொருள் என்னும்

பயத்ததாய் நிற்றலின் ஆறும் என்னும் அஃறிணைத் தொகைச் சொல்லோடு முடிந்தது. அன்றித் திணை விரவி அஃறிணை முடிபினவாயின எனினும் அமையும்.

**வ—று.:** **'வனைந்தான்'** என்புழிக் குலாலனாகிய இயற்றுதற் கருத்தாவும், மண்ணாகிய முதற்காரணமும், தண்டசக்கரம் முதலிய துணைக்காரணங்களும், வனையும் இடமும், வனைதற் செயலும், இறந்தகாலமும், குடம் முதலிய செயப்படுபொருளும் தோன்றுதல் காண்க. **'அரசன் ஆலயம் செய்தான்'** என்பது ஏவற் கருத்தா. இஃது இயற்றினான் தொழிற்கு ஏவினானைக் கருத்தாவாக்கிக் கூறுதலின் ஏவற்கருத்தா எனப்படும். 'அரசன் ஆலயம் செய்வித்தான்' என்பது ஏவற்கருத்தா என்பாரும் உளர். செய்தற்றொழிலைத் தச்சன் இயற்றினாற் போலச் செய்வித்தற்றொழிலை அரசன் இயற்றுதலின் இத்தொழிற்கு அரசனும் இயற்றுதற் கருத்தாவேயாம் என்க.

**'முற்றும்மை ஒரோவழி எச்சமுமாகும்'** என்பதனான் ஆறும் தருவது வினை என்பதற்கு, இத்தொகையில் சில குறைந்து வரவும் பெறும் எனப் பொருள் உரைத்துக் கொள்க. அவை வருமாறு : 'கொடி ஆடிற்று', 'கொடி துஞ்சும்' என்புழி, முன்னையது செயப்படுபொருளும் பின்னையது செயப்படுபொருளோடு கருவியும் குறைந்து வந்தன. கொடி துஞ்சும் என்பதற்குக் காற்றினது அபாவத்தைக் கருவியாகக் கூறினும் அமையும்.

இன்னும் ஆறும் என்னும் முற்றும்மையை உயர்வு சிறப்பு உம்மையாக்கி இழிந்தன சிலவுள அவையும் வேண்டுமேற்கொள்க எனவும் பொருள் உரைத்துக் கொள்க. அவை யாவையெனின், இன்னதற்கு எனவும் இதுபயன் எனவும் வருவனவாம். குடத்தைத் தனக்கு வனைந்தான்; பிறர்க்கு வனைந்தான் என்னும், 'இன்னதற்கு' என்பதூஉம், 'அறம் முதலிய பயன் கருதி வனைந்தான்' என்னும் இது பயன் என்பதூஉம் ஏதுவின்பாற்பட்டுக் கருவியுள் அடங்கவும் பெறூஉமாதலின் இழிந்தனவாயின. இப்பொருளை **'முற்றும்மை ஒரோவழி யெச்சமுமாகும்'** என்பதன்பாற் படுத்து ஆறுந் தருவது வினையே எட்டுந் தருவது வினையே என அமையாதோ எனின் இவ்விரண்டுடன் எட்டாய் வருவதன்றி ஆறே வருவதோர் வினையின்மையின் அமையாது என்க.

முற்றுவினைகளுள், பகுதியால் செயலும், விகுதியால் கருத்தாவும், இடைநிலை முதலியவற்றால் காலமும், பெயரெச்ச வினையெச்சங்களின் இம்முறையே செயலும் காலமும்

தோன்றின. அங்ஙனமாதலின் முற்றுச்சொல்லான் மூன்றும், எச்சச்சொல்லான் இரண்டும் என்னாது ஆறும் தருவது வினைச்சொல் என்றது என்னையெனின் :– இவ் ஆறும் காரணமாகக் கூடும் கூட்டத்து இவற்றுள் செயல் என்னும் முதற்காரணத்தினின்றும் ஓர்வினையாகிய காரியம் நிகழுமாதலின் இவ் ஆறு காரணத்தையும் தரும் காரியமாகிய வினையின் தொழிலை ஒற்றுமைநயம் கருதி அதன் சொல்மேல் ஏற்றப்பட்டது. காரணத்தைக் காரியம் தரும் என்பது, [1]"**புகை தன் னாதியாய அனல் காட்டலாகும்**"என்றாற் போலும். இங்ஙனமாகவே செய்பவன் முதலிய ஆறனுள் முற்றின்கண் மூன்றும் எச்சத்தின்கண் இரண்டும் வெளிப்படையாயும் ஏனைய குறிப்பாயும் தோன்றும் என்பதாயிற்று. இவ் ஆறும் காரணமாகவே, இவற்றுள் செயல் என்றது, காரியமாகிய வினையடியை அன்று என உணர்க.

**"காலம் அறிதொழில் கருத்தனோ டியையப்**
**பால்வகை தோறும் படுமொழி வேறே"**

என ஆசிரியர் அவிநயனார் கூறியவாறும்,

**"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது**
**நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"**[2]

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறும் காண்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** ஏது வகையாற் றெரிநிலை வினைச்சொல்லாது இன்னதென அதன் இலக்கணம் கூறுகின்றது.

**இ–ள்.:– செய்பவன் கருவி நிலம்** – கருத்தாவும் கருவியும் நிலனும், **செயல் காலம் செய்பொருள்** – தொழிலும் காலமும் செயப்படுபொருளும், **ஆறுந் தருவது வினையே** – என்னும் ஆறு பொருளையும் விளக்குவது வினையாம்.

உ–ம்.:–

**வனைந்தான்**' என்புழி வனைதற்றொழில் செய்தவன் குலாலன், கருமக்கருத்தா; மண் முதற்கருவி; திரிகை. கோல், தண்ணீர் முதலானவை துணைக்கருவி; அகம், புறம், நிலம்; வனைதல் தொழில்; வனைந்தான் இறந்தகாலம்; மட்குடம் செயப்படு பொருள்; தண்ணீர் வார்க்க இன்னதற்கு; விலை இன்னது பயன்.

இவ்வாறன்றி, பகுதி செயலை விளக்கும்; இடைநிலை காலத்தை விளக்கும், விகுதி செய்பவனை விளக்கும்;

ஒழிந்தவை மறைந்து நின்று விளக்கும் என்பார் கருத்தும் கொள்க. வனைவித்தான் என்பது ஏவுதற் கருத்தாவெனக் கொள்க.

**"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது**
**நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"**

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாறு காண்க.

**"கால மறிதொழில் கருத்தனோ டியையப்**
**பால்வகை தோறும் படுமொழி வேறே"**

என ஆசிரியர் அவினயனார் கூறியவாறும் காண்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** பெயரியலிலே பதின்மூன்றாஞ் சூத்திரத்திலே பெயர் வினை யென இரண்டாகு மென வைத்த முறைப்படியே வினைச்சொலிலக்கணம் உணர்த்தும்படியாகத் தொடங்கி அவற்றுள்ளே தெரிநிலைவினைச்சொல்லின் பொதுவிலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.:–** **செய்பவன்** – கருத்தாவும், **கருவி** – காரணமும், **நிலம்** – இடமும், **செயல்** – செயலும், **காலம்** – காலமும், **செய்பொருள்** – செயப்படு பொருளும் ஆகிய, **ஆறும்** – அறுவகைப் பொருளையும், **தருவது** – கொடுப்பது, **வினை** – தெரிநிலை வினைச்சொல்லாம், **எ–று.**

(நட வா முதலிய வெல்லாந் தழுவுதற்குச் செய்யென்றார் செய்பவனென ஆண்பாலிலே சொன்னா ரேனும், ஒருமொழி யொழி தன்னினங் கொளற் குரித்தே என்பதனால் ஐம்பாலுங் கொள்க)

வ–று.:–

'வனைந்தான்' என்கிறவிடத்தே குசவனாகிய செய்பவனும், மண்ணாகிய முதற்காரணமும், தண்டசக்கர முதலாகிய துணைக்காரணங்களும், வனைந்தவிடமும், வனைதற்குச் செயலும், இறந்தகாலமும், குடமுதலிய செயப்படுபொருளுந் தோன்றுதல் காண்க. 'ஆறும்' என்ற உம்மையை 'உயர்வு சிறப்பும்மை'யாக்கி இழிந்தன சிலவுள அவை வேண்டுமேற் கொள்க வெனப் பொருளுரைத்து, இன்னதற்கு, இதுபயன், என்பவைகளுங் கூட்டிக்கொள்க. அவையாவன: பிறர்க்கு வனைந்தான், பொருள் கருதி வனைந்தான், என வரும். இவ்விரண்டும் கருவியில் அடங்கவும் பெறுமாதலால் இழிந்தனவாயின. இன்னும், ஆறுந்தருவது வினை என்றதற்கு முற்றும்மை யொரோவழி யெச்சமுமாகும், என்கிற சூத்திரத்தால் இத்தொகையிற் சில குறைந்துவரவும்

பெறுமெனப் பொருளுரைத்துக் கொள்க. 'கொடியாடிற்று' என்கிறவிடத்தே ஆடுதல் வினைக்குச் செயப்படுபொருள் குறைந்து வருதல் காண்க.

முற்றுவினைகளிலே பகுதியாற்செயலும், விகுதியாற் செய்பவனும், இடைநிலை முதலியவற்றாற் காலமும், பெயரெச்ச வினையெச்சங்களிலே இம்முறையே செயலுங் காலமும் வெளிப்படையாகத் தோன்றுதலால் மற்றவை குறிப்பாற்றோன்றுமெனக் கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வினையியல் என்பதன் பொருள் யாது?

வினையிலக்கணம் உணர்த்தும் பகுதியென்பது அதன் பொருள்.

வினைச்சொல் எத்தனை வகைப்படும்?

வினைச்சொல் தெரிநிலைவினை குறிப்புவினையெ்ன இருவகைப்படும்.

அவற்றுள் தெரிநிலைவினைச்சொற்கெல்லாம் பொதுவிலக்கணங்கூறுஞ் சூத்திரம் யாது?

செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொரு ளாறுந் தருவது வினையே.
(செய்பவன் கருவி நிலம் செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே.

**இ–ள்.:–** கருத்தாவுங் காரணமும் இடமுஞ் செயலுங் காலமுஞ் செயப்படுபொருளுமாகிய அறுவகைப்பொருளையும் தருவது தெரிநிலைவினைச்சொல்லாம், **எ–று.**

வினையென்றது வினைச்சொல்லை யுணர்த்தலின் ஆகுபெயர்.

வினையென்றது நடவாமுதலிய வினைப்பகுதியை.

தெரிநிலைவினையென்பதன் பொருள் யாது?

தொழிலையுங் காலத்தையும் தெற்றெனத்தெரிவிக்கும் வினை என்பது.

இச்சூத்திரம் வினையெனப் பொதுப்படக்கூறவும் அது தெரிநிலைவினை யிலக்கணங் கூறிற்றென்பது எதனாற் பெறப்பட்டது?

மேல்வருஞ் சூத்திரம் குறிப்புவினை யிலக்கணங் கூறுதலின் இச்சூத்திரம் தெரிநிலைவினையே கூறிற்றென்பது பெறப்பட்டது.

செய்பவனென ஆண்பாலிலே சொன்னாரேனும், "ஒருமொழியொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால் ஐம்பாலுங்கொள்க.

**வ–று.:–**

வனைந்தான் என்புழிக், குயவனாகிய செய்பவனும், அதற்குக் கருவியாகிய மண் தண்டசக்கர முதலியனவும், வனைதற்காதாரமாகிய இடமும், வனைதற்றொழிலாகிய செயலும், அத்தொழில் நிகழுங் காலமும், குடமுதலிய செயப்படுபொருளுங் கருதப்படுதல் காண்க.

இவ்வாறுமேயன்றி, இன்னதற்கு, இதுபயன் என்னும் பொருளுந்தருதல் வினைக்கியல்பாயினும், அவையிரண்டும் அருகி வருவனவாதலாலும், ஏதுவின்பாற்பட்டுக் கருவியுள் அடங்குதலாலும் அவை எடுத்துக் கூறப்பட்டில. அவை பிறர்க்குவனைந்தான், பொருளுக்கு வனைந்தான் எனவரும். இன்னும் ஆறுந்தருவது வினை என்றதற்கு “முற்றும்மையொரோ வழியெச்சமுமாகும்” என்னுஞ் சூத்திரத்தால் இத்தொகையிற்சில குறைந்து வரவும்பெறும் எனப் பொருளுரைத்துக் கொள்க. கொடியாடிற்று என்புழி, ஆடுதல் வினைக்குச் செயப்படுபொருள் குறைந்துவந்தது.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** பெயர் வினை யென இரண்டாகுமென நிறுத்த முறையே வினையிலக்கண முணர்த்தத் தொடங்கித் தெரிநிலைவினையின் பொதுவிலக்கண முணர்த்துகின்றது.

**இ—ள்.:—** **செய்பவன்** — கருத்தாவும், **கருவி** — காரணமும், **நிலம்** — இடமும், **செயல்** — தொழிலும், **காலம்** — காலமும், **செய்பொருள்** — செயப்படுபொருளும், **ஆறுந் தருவது வினை** — ஆகிய ஆறையுந் தருவது தெரிநிலை வினைச்சொல்லாம். **எ—று.**

வினைச்சொல்லை, வினையென்றது ஆகுபெயர். வருஞ் சூத்திரத்தாற் குறிப்புவினை யெனக் கூறுதலால், இது தெரிநிலை வினை யெனக் கொள்க, நடவா முதலிய வெல்லாந் தழுவுதற்குப் பொதுமையிற் செயலென்றார், **‘செய்பவன்’** என ஒருபால் மேல் வைத்தோதினாராயினும், **‘ஒருமொழியொழி தன்னினங் கொளற்குரித்தே’** என்பதனாலைம்பாலுங் கொள்க.

**வ—று.:—**

வனைந்தான் எனின், குயவனாகிய இயற்றுதற் கருத்தாவும் (செய்பவனும்) மண்ணாகிய முதற்காரணமும், தண்டசக்கரமுதலிய துணைக்காரணங்களும் (கருவியும்), வனையும் இடமும் (நிலமும்), வனையுஞ் செயலும், இறந்த

காலமும், குடமுதலிய செயப்படுபொருளும் தோன்றுதல் காண்க. **'அரசன் ஆலையஞ் செய்தான்'** என்பதில், ஏவுதற்கருத்தா. பிறவும் இவ்வாறு காண்க. இனி **'முற்றும்மை யொரே வழி யெச்சமுமாகு'** மென்பதினால், ஆறுந் தருவது வினையென்பதற்குச் சில குறையத் தருவதும் வினையெனப் பொருளுரைத்துக் கொள்க.

**உ–ம்.:–**

**'கொடியாடிற்று'** எனின், செயப்படு பொருள் குறைந்தது, 'கொடி துஞ்சும்' எனின் செயப்படுபொருளுங் கருவியுங் குறைந்தனவெனக் காண்க. இன்னும், 'ஆறும்' என்ற முற்றும்மையை **உயர்வு சிறப்பும்மை**யாக்கி, இழிந்தனவுஞ் சிலவுளவெனப் பொருளுரைத்துக் கொள்க. அவை இன்னதற்கு என்பதும், இது பயன் என்பதும்.

**உ–ம்.:–**

குடத்தைத் தனக்கு வனைந்தான்–பிறர்க்கு வனைந்தான் எனவும் (வனைதல்–செய்தல்)தருமமுதலிய பயன் கருதி வனைந்தான் எனவும் வரும். இவை யிரண்டுங் கருவியுள் அடங்கப் பெறுமாதலால் இழிந்தனவாயின.

முற்றுவினைகளுள், பகுதியாற் செயலும், விகுதியாற் கருத்தாவும், இடைநிலை முதலியவற்றாற் காலமும், பெயரெச்ச வினை யெச்சங்களில் செயலுங் காலமுந் தோன்று மாதலால், முற்றுச் சொல்லால் மூன்றும் எச்சச் சொல்லால் இரண்டும் என்னாமல், ஆறுந் தருவது வினை யென்றது என்னெனின், இந்த ஆறுங் காரணமாகக் கூடுங் கூட்டத்தில் செயலென்னும் முதற்காரணத்தில் நின்றும் ஓர் வினையாகிய காரியந் தோன்றும் . ஆதலால், அந்த ஆறுகாரணத்தையுந் தருங் காரியமாகிய வினையின் புடைபெயர்ச்சியை ஒருமைப்பாடுபற்றி அதன் சொல் மேலேற்றப்பட்டதாதலால் செய்பவன் முதலிய ஆறினுள்ளே முற்றுச்சொல்லில் மூன்றும் எச்சச் சொல்லில் இரண்டும் வெளிப்படையாகவும், மற்றைய குறிப்பாகவுந் தோன்றுமென்க. ஆயின், காரணத்தைக் காரியந் தருமோ எனின், தராது; புகைதன் ஆதியாகிய அனலைக் காட்டுதல் போலக் காட்டுமென்க. இவற்றுள் செயலென்றது காரணமாகிய செய் என்ற வினையடியெனவுங் காரியமாகிய வினையடி நட வா முதலிய வெனவுங் காண்க. இனி – ஆசிரியர் தொல்காப்பியனார்.

**"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது**

நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"

எனக் கூறியதும்; வினையென்பது உண், தின், கரு, செய், என்னுந் தொடக்கத்து முதனிலை யெனவும், உணல், தினல், கருமை, செம்மை, என்றாற் போல்வன அம்முதனிலைகளாற் பிறந்த தொழிற்பெயரெனவும், உண்டான், தின்றான், கரியன், செய்பன் என்றாற் போல்வன அம்முதனிலைகளாற் பிறந்த வினைச் சொல்லெனவும் உரைகாரர் எடுத்துக்காட்டியதும்.

"கால மறிதொழில் கருத்தனோ டியையப்
பால்வகை தோறும் படுமொழி வேறே"

என ஆசிரியர் அவினயனார் கூறியதும் உய்த்துணர்ந்து கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– செய்பவன்** – கருத்தாவும், **கருவி**–காரணமும், **நிலம்** –இடமும், **செயல்** –தொழிலும், **காலம்** –காலமும், **செய் பொருள்** – செயப் படுபொருளும் (ஆகிய), **ஆறும்** – அறுவகைப் பொருளையும், **தருவது** – காட்டுவது, **வினை** – தெரிநிலை வினைச்சொல்லாம்.

குறிப்பு ;–

வருஞ் சூத்திரத்தாற் குறிப்புவினைக்கு விதி கூறலால், இது தெரிநிலைவினைக்கென்க. 'செய்பவன்' என ஆண்பாலிற் சொன்னா ராயினும், **"ஒருமொழியொழிதன் னினங்கொளற் குரித்தே"** என்பதனால் மற்றைப்பால்களுக்கும் கொள்க.

**வனைந்தான்:–** இதில் குயவனாகிய செய்பவனும், மண்ணாகிய முதற் காரணமும், (தண்டம் சக்கரம் ஆகிய துணைக்காரணங்களும்), வனைந்த இடமும், வனைதற்றொழிலும், இறந்தகாலமும், குடம் முதலிய செயப்படுபொருளுந் தோன்றுதல் காண்க. 'ஆறுந்தருவது' என்னும் எச்ச உம்மையால், சில குறைந்துவரவும் பெறுமெனக் கொள்க; **உ–ம்:–** வந்தது; இதில் – செயப்படுபொருள் குறைந்தது.

(ஆறு பொருளையுந்தருவது செயப்படுபொருள் குன்றாதவினை; செயப் படுபொருள் குன்றியவினையாயின் அஃது ஒழிந்தவற்றைக் காட்டுமென்க.)

முற்றுவினைச்சொல்லில் பகுதியாற்செயலும்

விகுதியாற்கருத்தாவும் இடைநிலைமுதலியவற்றாற்காலமும், பெயரெச்சவினையெச்சங்களில் இம்முறையே செயலும் காலமும் வெளிப்படையாகத் தோன்றுதலால் மற்றவை குறிப்பாகத்தோன்றுமென்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: **செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் ஆறும்**–கருத்தாவுங் காரணமும் இடமுஞ் செயலுங் காலமுஞ் செயப்படுபொருளுமாகிய அறுவகைப் பொருளையும், **தருவது வினை** – தருவது தெரிநிலை வினைச்சொல்லாம், எ–று.

வினையென்றது ஆகுபெயர்.

நட வா முதலிய எல்லாந் தழுவுதற்குச் செய்யென்றார்.

செய்பவனென ஆண்பாலிலே சொன்னாரேனும், **"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே"** என்பதனால் ஐம்பாலுங், கொள்க.

வ–று.:–

**வனைந்தான்** என்புழிக், குயவனாகிய செய்பவனும், மண்ணாகிய முதற்காரணமும், தண்டசக்கர முதலிய துணைக் காரணங்களும், வனைதற்காதாரமாகிய இடமும், வனைதற்கு முதற்காரணமாகிய செயலும், இறந்தகாலமும் குடமுதலிய செயப்படுபொருளுந் தோன்றுதல் காண்க.

'ஆறும்' என்னு முற்றும்மையை உயர்வு சிறப்பும்மையாக்கி, இழிந்தன சிலவுள அவையும் வேண்டுமேற் கொள்க எனப் பொருளுரைத்து, இன்னதற்கு, இதுபயன், என்பவைகளுங் கூட்டிக்கொள்க. அவை: பிறர்க்கு வனைந்தான்; பொருள் கருதி வனைந்தான் எனவரும். இவ்விரண்டும், ஏதுவின்பாற்பட்டுக் கருவியுள் அடங்கவும் பெறுமாதலால், இழிந்தனவாயின.

இன்னும் ஆறுந்தருவது வினையென்றதற்கு **"முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்"** என்னுஞ் சூத்திரத்தால் இத்தொகையிற் சில குறைந்து வரவும்பெறும் எனப் பொருளுரைத்துக் கொள்க. 'கொடியாடிற்று' என்புழி, ஆடுதல் வினைக்குச் செயப்படுபொருள் குறைந்து வந்தது.

முற்றுவினைகளிலே பகுதியாற் செயலும், விகுதியாற் செய்பவனும், இடைநிலை முதலியவற்றாற் காலமும், பெயரெச்ச வினையெச்சங்களிலே இம்முறையே செயலுங் காலமும் வெளிப்படையாகவும், மற்றவை குறிப்பாகவுந்

தோன்றுமெனக் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் ஆறும்** – கருத்தாவுங் காரணமும் இடமுஞ் செயலுங் காலமுஞ் செயப்படுபொருளுமாகிய அறுவகைப் பொருளையும், **தருவது வினை** – தருவது தெரிநிலைவினைச் சொல்லாம். எ–று.

வினையென்றது ஆகுபெயர். வருஞ்சூத்திரத்தில் "வினைக்குறிப்பே" என்னுதலால் இச்சூத்திரத்தாற் கூறப்பட்டது தெரிநிலைவினையெனக் கொள்க.

நடவா முதலிய எல்லாந் தழுவுதற்குச் செய்யென்றார்.

செய்பவனென ஆண்பாலினாலே சொன்னாரேனும், "ஒருமொழி யொழி தன் னினங்கொளற் குறித்தே" என்பதனால் ஐம்பாலுங் கொள்க.

வ–று.:–

வனைந்தான் என்புழிக் குயவனாகிய செய்பவனும், மண்ணாகிய முதற்காரணமும், தண்டசக்கர முதலிய துணைக்காரணங்களும், வனைதற்காதாரமாகிய இடமும், வனைதலாகிய செயலும் இறந்தகாலமும், குடமுதலிய செயப்படுபொருளுந் தோன்றுதல்காண்க.

ஆறும் என்னு முற்றும்மையை உயர்வு சிறப்பும்மையாக்கி, இழிந்தன சிலவுள அவையும் வேண்டுமேற் கொள்க எனப் பொருளுரைத்து, இன்னதற்கு, இதுபயன், என்பவைகளுள் கூட்டிக் கொள்க. அவை பிறர்க்கு வனைந்தான், பொருள்கருதி வனைந்தான் என வரும். இவ்விரண்டும் ஏதுவின்பாற்பட்டுக் கருவியுள் அடங்கவும் பெறுமாதலால், இழிந்தனவாயின.
இன்னும் ஆறுந்தருவது வினை என்றதற்கு 'முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்' என்னுஞ் சூத்திரத்தால் இத்தொகையிற் சிலகுறைந்து வரவும் பெறும் எனப் பொருளுரைத்துக் கொள்க. கொடியாடிற்று என்புழி, ஆடுதல் வினைக்குச் செயப்படுபொருள் குறைந்தது.

முற்றுவினைகளிலே பகுதியாற் செயலும், விகுதியாற் செய்பவனும், இடைநிலை முதலியவற்றாற் காலமும், பெயரெச்ச வினையெச்சங்களிலே இம்முறையே செயலுங் காலமும் வெளிப்படையாகவும், மற்றவை குறிப்பாகவுந் தோன்றுமெனக்கொள்க.

"வினையெனப்படுவது வேற்றுமைகொள்ளாது

நினையுங் காலைக் காலமொடுதோன்றும்"

என்றார் தொல்காப்பியர்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

வினைச்சொல்லின் இலக்கணத்தைச் சொல்லும் இயல்.

**இ–ள்.:** **செய்பவன்** – கருத்தாவும், **கருவி** – கருவியும், **நிலம்** – இடமும், **செயல்** – தொழிலும், **காலம்** – காலமும், **செய்பொருள்** – செயப்படு பொருளும் ஆகிய, **ஆறும்** –அறுவகைப் பொருளையும், **தருவது** – காட்டுவது, **வினை** – தெரிநிலை வினைச்சொல்லாம், **எ–று.**

'**வினை**' எனப் பொதுப்படக் கூறினாராயினும், வருஞ் சூத்திரத்தாற் குறிப்புவினை கூறுதலால், இது தெரிநிலைவினை என்பது பெறப்பட்டது. தெரிநிலைவினை – செயலையும் காலத்தையும் வெளிப்படையாகக் காட்டும் வினை; அங்ஙனமன்றி அவற்றைக் குறிப்பாகக் காட்டுவது, குறிப்புவினை.

'**செய்பவன்**' என ஒருபாலிற் சொன்னாராயினும், '**ஒருமொழியொழி தன்னினங் கொளற் குரித்தே**' என்பதனால் ஐம்பாலும் கொள்க.

**உ–ம்.:–**

'**வனைந்தான்**' என்றால், அதில் – குயவனாகிய கருத்தாவும், மண்ணாகிய முதற்காரணமும், தண்டம் சக்கரம் முதலிய துணைக் காரணங்களும், வனைந்த இடமும், வனைதல் தொழிலும், இறந்தகாலமும், குடம் முதலிய செயப்படுபொருளும் தோன்றுதல் காண்க.

இந்த ஆறையும் தருவது – செயப்படுபொருள் குன்றாத (உள்ள) வினை; செயப்படுபொருள் குன்றிய (இல்லாத) வினை, அச்செயப்படுபொருள் ஒழிந்த ஐந்தையுமே காட்டும்; **உ–ம்.:** வந்தது.

முற்றுவினைகளில் பகுதியால் செயலும், விகுதியால் கருத்தாவும், இடைநிலை முதலியவற்றால் காலமும், பெயரெச்ச வினையெச்சங்களில் இம்முறையே செயலும் காலமும் வெளிப்படையாகத் தோன்றுவதால், மற்றவை கருத்தாகத் தோன்றுமென்று கொள்க.

## பவானந்தம் பிள்ளை

வினைச் சொல்லின் இலக்கணத்தை உயர்த்தும் இயல்.

**இ-ள்.:- செய்பவன்** - கருத்தாவும், கருவி - காரணமும், **நிலம்** - இடமும், **செயல்** - தொழிலும், **காலம்** - காலமும், **செய்பொருள்** - செயப்படு பொருளுமாகிய, **ஆறும்** - அறுவகைப்பொருளையும், **தருவது வினை** - தருவது தெரிநிலை வினைச்சொல்லாம். **எ-று.**

வினைச்சொல்லை வினையென்றது ஆகுபெயர். வரும் சூத்திரத்தாற் குறிப்புவினை எனக் கூறுதலால் இது தெரிநிலை வினை என்பதும் பெறப்படும்.

நட வா முதலிய எல்லாந் தழுவுதற்குச் செய்யென்றார்.

செய்பவனென ஆண்பாலிலே சொன்னாரேனும், "ஒருமொழியொழிதன் னினங்கொளற் குரித்தே" (பொதுவியல் சூ-7) என்பதனால் ஐம்பாலுங் கொள்க.

**உ-ம்.:-**

வனைந்தான். இதில் குயவனாகிய (1) செய்பவனும், மண்ணாகிய (2ய) முதற்காரணமும், தண்டசக்கர முதலிய (2ெ) துணைக்காரணங்களும், வனைதற் காதாரமாகிய (3) இடமும், வனைதற்கு முதற்காரணமாகிய (4) செயலும், இறந்த (5) காலமும், குடமுதலிய 96) செயப்படுபொருளுந் தோன்றுதல் காண்க.

'ஆறும்' என்னும் முற்றும்மையை உயர்வுசிறப்பும்மையாக்கி, இழிந்தன சிலவுள அவையும் வேண்டுமேற் கொள்க எனப் பொருளுரைத்து, இன்னதற்கு, இதுபயன், என்பவைகளுங் கூட்டிக்கொள்க. அவை : பிறர்க்கு வனைந்தான்; பொருள் கருதி வனைந்தான் என வரும். இவ்விரண்டும், ஏதவின் பாற்பட்டுக் கருவியுள் அடங்கவும் ''பெறுமாதலால், இழிந்தனவாயின.

இன்னும், ஆறுந்தருவது வினை யென்றதற்கு "முற்றுமமை யொரோவழி யெச்சமு மாகும்" (சூ-358) என்னுஞ் சூத்திரத்தால் இத்தொகையிற் சில குறைந்து வரவும் பெறும் எனப் பொருளுரைத்துக் கொள்க. 'கொடியாடிற்று' என்புழி, ஆடுதல் வினைக்குச் செயப்படுபொருள் குறைந்து வந்தது. 'கொடி துஞ்சும்' என்புழித் துஞ்சுதல் வினைக்குச் செயப்படுபொருளும் கருவியும் குறைந்துவந்தமை காண்க.

ஆறும் தரும் சொல்லை அவற்றுள் வினை ஒன்றுமே பற்றி

வினைச்சொல் என்பதென்னை யெனின் 'வினையும் கருத்தாவும் ஒழிந்த நான்கும் உளவழி வினையுளதாம் என்னும் நியதியில்லை; யாண்டு ஓர் வினையுண்டு, ஆண்டு அவ்வேனை யைந்தும் உளவாதல் ஒருதலை அதனான் அச் சிறப்பு நோக்கி வினைச்சொல் லெனவே படுமெனக் கொள்க.'

முற்றுவினைகளிலே பகுதியாற் செயலும், விகுதியாற் செயப்வனும், இடைநிலை முதலியவற்றாற் காலமும்; பெயரெச்ச வினையெச்சங்களிலே இம்முறையே செயலுங் காலமும் வெளிப்படையாகவும், மற்றவை குறிப்பாகவுந் தோன்றுமெனக் கொள்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:–** **செய்பவன்** – கருத்தாவும், **கருவி** – காரணமும், **நிலம்** – இடமும், **செயல்** – செயலும், **காலம்** – காலமும், **செய்பொருள்** – செயப்படுபொருளும் ஆகிய, **ஆறும் தருவது** – அறுவகைப் பொருளையும் கொடுப்பது, **வினை** – தெரிநிலைவினைச் சொல்லாம். **எ–று**

**பொ–ரை.:–** கருத்தாவும், கருவியும், இடமும் செயலும், செயப்படு பொருளுமாகிய அறுவகைப் பொரளையும் கொடுப்பது தெரிநிலைவினைச் சொல்லாம்.

'வினை' எனப் பொதுப்படக் கூறினாராயினும்வருஞ் சூத்திரத் தாற் குறிப்பு வினை கூறுகலால், இது தெரிநிலைவினை எனப் பெறப்பட்டது. தெரிநிலை வினை என்பது செயலையும், காலத்தையும் வெளிப்படையாகக் காட்டும் வினை. அங்ஙன மன்றி அவற்றைக் குறிப்பாகக் காட்டுவது குறிப்புவினை.

நடவா முதலியவெல்லாம் தழுவுதற்குச் 'செய்' என்றார். 'செய்பவன்' என ஆண்பாலிலே சொன்னாரேனும், 'ஒரு மொழி யொழிதன்னினங் கொடற் குரித்தே' என்னும் பொதுவியற் சூத்திரத்தினால் ஐம்பாலும் கொள்க.

**உ–ம்.:–**

வனைந்தான்– இதில் செய்பவன் குயவன்; கருவி – மண் (முதற்கருவு); தண்டம் சக்கரம் முதலியன (துணைக்கருவி); நிலம் – வனையும் இடம்; செயல் – வனையும் தொழில்; காலம் – இறந்த காலம்; செய்பொருள் – குடம் முதலிபபாண்டங்கள்.

ஆறும் என்ற உம்மையை உயர்வுசிறப்பும்மை யாக்கி இழிந்தன சிலவுள, அவை வேண்டுமேற் கொள்க எனப் பொருளுரைத்து,

இன்னதற்கு இதுபயன் என்பவைகளையும் கூட்டிக் கொள்க. அவை, பிறர்க்கு வனைந்தான், பொருள் கருதி வனைந்தான் என வரும். இவ்விரண்டும் கருவியல் அடங்கவும் பெறு மாதலால் இழிந்தனவாயின.

இன்னும் ஆறு:ம தருவது வினை என்றதற்கு 'முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்' என்கிற இடையியற் சூத்திரத்தால் இத் தொகையிற் சில குறைந்துவரவும் பெறுமெனப் பொருளுரைத்துக் கொள்க.

உ-ம்.:-

கொடி ஆடிற்று - இதில் ஆடுதுல் வினைக்குச் செயப்படு பொருள் குறைந்து வருதல் காண்க.

(செயப்படுபொருள் குன்றாத வினை ஆறையுந் தரும்; செயப்படுபொருள் குனிறிய வினை அச் செயப்படு பொருளொழிந்த ஐந்தையுமே காட்டு மென்க. குன்றாதவினை - உள்ளாவினை. குன்றிய வினை - இல்லாதவினை)

முற்று வினைகளிலே பகுதியாற் செயலும், விகுதியாற் செய்பவனும், இடைநிலை முதலியவற்றாற் காலமும், பெயரெச்ச வினை யெச்சங்களிலே இம்முறையே செயலும் காலமும் வெளிப்படையாகத் தோன்றுதலால் மற்றவை குறிப்பால் தோன்று மென்க. (குறிப்பு - கருத்து.)

## கா. நமசிவாய முதலியார்

செய்பவன் - கருத்தாவும், கருவி - காரணமும், நிலம் - இடமும், செயல் - செயலும், காலம் - காலமும், செய்பொருள் - செயப்படுபொருளும் ஆகிய, ஆறும் - அறுவகைப் பொருளையும், தருவது - கொடுப்பது, வினை - தெரிநிலை வினைச்சொல்லாம்.

நட, வா முதலியனவெல்லாம் தழுவுதற்குச் 'செய்' என்றார். செய்பவன் என ஆண்பாலில் சொன்னாரேனும், 'ஒரு மொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே' (பொதுவியல் - 7) என்னும் சூத்திர விதியினால் ஐம்பாலுங் கொள்க.

உதாரணம்

வனைந்தான் - இதில், செய்பவன் - குயவன்; கருவி (முதற்கருவி) - மண், (துணைக்கருவி) தண்ட சக்கரம் முதலியன; நிலம் - வனையும் இடம்; செயல் - வனையுந் தொழில்; காலம் - இறந்த காலம்; செய்பொருள் - குடம்முதலிய பாண்டங்கள்.

ஆறும் என்ற உம்மையை உயர்வு சிறப்பும்மை யாக்கி இழிந்தன சிலவுள, அவை வேண்டுமேற்கொள்க எனப் பொருளுரைத்து, இன்னதற்கு, இது பயன் என்பவைகளுங் கூட்டிக்கொள்க. அவை, பிறர்க்கு வனைந்தான், பொருள் கருதி வனைந்தான் எனவரும். இவ்விரண்டும் கருவியில் அடங்கவும் பெறுமாதலால் இழிந்தன ஆயின.

இன்னும், ஆறும்தருவது வினை என்றதற்கு, 'முற்றும்மை ஒரோவழி யெச்சமு மாகும்' என்னும் இடையியல் (7) சூத்திரத்தால், இத்தொகையிற் சில குறைந்து வரவும் பெறும் எனப் பொருளுரைத்துக் கொள்க.

கொடி ஆடிற்று – இதில், ஆடுதல் ஆகிய வினைக்குச் செயப்படு பொருள் குறைந்து வருதல் காண்க.

முற்றவினைகளில் பகுதியாற் செயலும், விகுதியாற் செய்பவனும், இடைநிலை முதலியவற்றாற் காலமும்; பெயரெச்ச வினையெச்சங்களில் இம்முறையே செயலுங் காலமும் வெளிப்படையாகத் தோன்றுதலால், மற்றவை குறிப்பால் தோன்றும் எனக் கொள்க.

## மோசசு பொன்னையா

கருத்தாவும், கருவியும், இடமும், செயலும், காலமும், செயப்படுபொருளும் ஆகிய ஆறுவகைப் பொருட்களையுங் கொண்டு நிற்பது தொழில்வினைச் சொல்லாகும் எ–று.

தொழிற்குறிப்பை உணர்த்திநிற்கும் தொழில்வினைச் சொல்லை வினை என்றார். தொழில்வினைச் சொற்களின் பகுதிகளைச் செய் என்னும் வாய்பாட்டு ஏவல், வினைப்பகாப் பதங்கள் என வகைப்படுத்தி ஓதியவாறே,1 தொழில்வினைச் சொல்லின் இலக்கணத்தை உணர்த்தும் இந்நூற்பாவில், செய்பவன் எனக் கருத்தாவை வாய்பாட்டு மாத்திரையானே குறிப்பிட்டு ஐம்பாற் கருத்தாக்களையும் பெறவைத்தார். தருவது என்றது, கொண்டது என்னும் பொருட்டு எனக் கொள்க. செய்பவன் என்றதனால், ஏவுதல் இயற்றுதல் கருத்தாக் களையும், கருவி என்றதனால், முதல், துணைக் கருவிகளையும் அடக்கிக் கூறினார்.

எ–டு.:–

**வனைந்தான், பாடுகிறான், தொடுப்பார்.**

வனைந்தால் என்னுந் தொழில்வினைச்சொல். குலாலனாகிய

கருத்தாவையும், மண்ணாகிய முதற்கருவியையும், தண்டம், சக்கரம் முதலிய துணைக்கருவிகளையும், வனைந்த இடத்தையும், வனைதலாகிய தொழிலையும், இறந்த காலத்தையும், குடம் முதலிய செயப்படு பொருட்களையும் கொண்டு நிற்பதைக் காண்க.

**'முற்றும்மை ஒரோவழி எச்சமு மாகும்'2**

என்றதனால், வந்தது. ஆடிற்று என இவ்வாறு செயப்படு பொருள் குன்றி வரும் தொழில்வினைச் சொற்களையும் அமைக்க.

தொல்காப்பியர், தொழில்வினைச்சொல் எழுவாய்நிலை எய்தின், அது உணர்த்துவன இவை என்பதை,

**வினையே செய்வது செயப்படு பொருளே**

**நிலலனே காலம் கருவி யென்றா**

**இன்னதற் கிதுபய னாக வென்னும்**

**அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ**

**ஆயெட் டென்ப தொழின்முத நிலையே,1**

என்ற நூற்பாவால் தெளிவுபடக் கூறியுள்ளார். அதனால் வனைதலைச் செய்தவன்–குலாலன் இவன்; வனைதல்–செயல் இது; வனையப்பட்டது–பானை / குடம் இது; வனைந்த இடம்–களம் / மேடை இது; வனைந்த காலம்–வேனில் / பகல் இது; வனைந்த கருவி–தண்டம் / சக்கரம் இது; வனைந்தது இன்னதற்கு–விழாவுக்கு / ஊருக்கு வனையப்பட்டது; வனைந்ததாற் பயன்–பாராட்டு / கூலி இது என இவ்வாறு தொழில் நிகழ்ச்சிக்கு அடிப்படையாவன எட்டையும் தொழில் முதனிலைகளாகிய எழுவாய்ச் சொற்கள் தம்மகத்தே அடக்கி நிற்கும் என்பதையும், அந்நிலையில் அவை எழுவாய்ப் பொருளவாக நிற்பினும், செயப்படுபொருளும் பிறவுமான பொருட்களைத் தம்மகத்தே கொண்டு நிற்பன வாதலின் எழுவாய் மயக்கப் பொருளவாகவேபடும் என்பதையும் உணர்த்துவான் அந்நூற்பாவைத் தொல்காப்பியர் வேற்றுமை மயங்கியலிற் கூறிவைத்தார். ஆகுபெபரும் எழுவாய் மயக்கச் சொல்லே என்பதைஅறிவுறுத்தவே அவர் அதனையும் அவ்வியலிற் கூறினார் என்பது பெயரியலில் உரைக்கப்பட்டது. இவ்வாசிரியர், அந்நூற்பாவில். இன்னதற்கு இதுபயன் என்னும் இரண்டையும் விடுத்து, ஏனை ஆறையும் கூறிவைத்து, ஆறுந்தருவது வினையே என அதனைத்

தொழில்வினைச் சொல்லின் பொது இலக்கணமாக அமைத்துப் போந்தார்.

1.தொல்; சொல். 112; 2. இந்நூற்பாவில் வினை என்றது தொழில், குறிப்பு வினைகள் இரண்டையும்.

தொழில்வினைச் சொல்லின் பொது இலக்கணமாவது, ஏவல்வினை, தொழில்வினைமுற்று, தொழில்வினையெச்சம் ஆகிய மூன்றிற்கும் பொதுவான இலக்கணத்தை முற்ற உணர்த்துந் தன்மையதாக இருத்தல் இன்றியமையாதது. ஆயின், பால் விகுதி பெற்றும், செயப்படு பொருளை ஏற்குந் தகுதியுடையவுமான தொழில்வினைச் சொற்களுக்கேயன்றி, அனைத்துத் தொழில்வினைச் சொற்களுக்கும் பொது இலக்கணமாகும் தகுதி இந்நூற்பாவிற்கு இல்லை என்பது புலனாகும். தொல்காப்பியர்,

**வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது**

**நினையுங் காலை காலமொடு தோன்றும்,**

என வினைச்சொல்லின் பொது இலக்கணத்தைச் சுருக்கியுரைத்தார். நேமிநாதமுடையார்,

**இறப்பு நிகழ்வெதிர்வாங் காலங்கள் ஏற்றும்**

**குறிப்பும் உருபேற்றல் கூடாத் திறத்தவுமாய்**

**முற்றெச்ச மென்றிரண்டாய் மூவகைத்தாய் மூன்றிடத்து**

**நிற்கும் வினைச்சொற்கள் நேர்ந்து**

எனச் சிறிது விரித்துக் கூறினார். தமிழ்மொழியின் மரபினுக்கேற்பப் பொது இலக்கணங் கூறப் புகுந்த இவ்வாசிரியர் முன்னர், தொழிலல காலந் தோற்ற3 எனப் பெயரிலக்கணம் ஓதியவாறே ஈண்டு வேற்றுமை கொள்ளாது எனக் கூறியிருக்க வேண்டியது இன்றியமையாதது. ஒரே விகுதியைப் பெற்று, பெரும்பாலும் ஒத்த உருவினவாக வழங்கும் வினைப்பெயர்களையும் வினைமுற்றுக்களையும் வேறு பிரித்து அறியப் பொது இலக்கணம் கருவியாக அமைதல் ஏற்புடைத்தாம். இலக்கண விளக்க ஆசிரியர், தொல்காப்பியர் நூற்பாவோடு.

**'பொருட்புடை பெயர்ச்சி புலப்படுப் பதுவே'**

எனக் கூட்டியுரைத் துள்ளமையின், அவர் நூற்பா தொழில் வினைச் சொல்லின் பொது இலக்கணத்தை ஒருவாறு உணர்த்துகின்றமை அறியப்படும்.

ஒரு பொருளின் தொழிலாகிய புடைபெயர்ச்சிக்கும் குணக்குறிப்பாக நிலைக்கும் முதலாவது எதுவோ, அதுவினை எனப்படும். ஆயின், புடைபெயர்ச்சிக்கும், குணக் குறிப்புக்கும் காரணமாக அமைந்து நிற்கும் வினையாது, அவ்விரண்டின் உண்மையைப் புலப்படுத்தும் காலக் குறிப்பைப் பெற்றே உருப்பெறுகின்றது என்பது போதரும். எனவே, தொழிலுக்கும் குறிப்புக்கும் காரணமான வினையானது, தொழில்வினை எனவும், குறிப்புவினை எனவும் இரண்டாக இலக்கண ஆசிரியர்களாற் பகுத்துரைக்கப்பட்டுள்ளது. அவற்றுள், தொழில்வினையின் இயல்பாகிய புடைபெயர்ச்சி, காலத்தின் கண் ஒருகணமல்லது இரண்டு கணம் நில்லாமையின், திட்டவட்டமாக இறப்பு, நிகழ்வு, எதிர்வு என வரையறைப்பட்டு நிற்கும் தன்மையது. எனவே இலக்கண நூலார் தொழிற் குறிப்பால் வழங்கும் வினைச்சொற்களை இறப்பு நிகழ்வு எதிர்வு என மூன்றற்கும் தனித்தனியே ஓராற்றான் உரிமைப்படுத்தியுள்ளனர். பொருட்குப் பின்தோன்றி நிலவும் குறிப்பானது, புடைபெயர்ச்சி போல் கணத்தே கழியுந்தன்மைய தன்று. பொருட்கண் சிறுவரை நிற்கும் நிலைத்து ஆதலின், குறிப்பு வினைச்சொற்களைத் தொழில்வினைச் சொற்களைப் போல் மூன்றெனப் பகுத்து வரையறுத்தல் சாலாமை அறிக. தத்துவமேதைகளிடையே, காலம் மூன்று என்பாரும், நிகழ்காலம் என்னும் ஒன்று இல்லவே இல்லை, இறப்பும் எதிர்வுமே உண்டு என்பாரும், நிகழ்காலம் ஒன்றே காலம் என்பாருமாக மூவேறு கொள்கையர் உள்ளவாறே போல், குறிப்புவினை உணர்த்தும் காலம் பற்றியும் இலக்கண மேதைகளிடையே அத்தகைய மூவேறு கொள்கைகள் நிலவுகின்றன.

தொழில்நிலையும், குணநிலையும் பெற்றுள்ளமையால் உண்டு என உணரப்படுவதாகிய காலத்தைப் பெற்றுவரும் வினைச் சொற்களை முறையே தொழில்வினைச் சொற்கள் எனவும், குறிப்புவினைச் சொற்கள் எனவும் குறியிட்டு வழங்குதலே பொருந்துவதாகும். தொல்காப்பியர்.

**குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்**

**காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம்,**

எனப் பிராமண வசிட்ட நியாயத்தால் தொழில்வினையை வினை என்ற பெயரால் வழங்கினார். உரைகாரர், 'குறிப்புப் பொருண்மைக் கண்ணும், தொழிற்பொருண்மைக் கண்ணும் தோன்றிக் காலத்தோடு வரும் எல்லா வினைச் சொல்லும்' என

உரை வகுத்துள்ளனர். இவ்வாசிரியரும் இந்நூற்பாவில் வினை என்ற சொல்லை அவ்வாறே ஆண்டார் எனக் கொள்க.

தொல்காப்பிய உரையாசிரியர்களும் பிற்கால இலக்கண ஆசிரியர்களும் தொழில்வினையைத் தெரிநிலைவினை எனக் குறியிட்டாண்டனர். தொழில்வினை காலத்தைத் தெளிவாக விளக்கும் தன்மையது எனவும், குறிப்புவினை ஒன்றுமே காலத்தைக் குறிப்பாக உணர்த்தும் எனவும் அவர்கள் கொண்டதே அதற்குக் காரணம் எனலாம்.3 காலம் என்பது வரையறை இல்லாத ஒன்றாய் யாண்டும் ஒன்றேயாக நிலவி, மக்கள் தம் மனவுணர்வாற் குறித்துக் காணவல்லதே யன்றித் தெரியப் புலப்படும் ஒன்று அன்று என்பதுவும், அக்குறிப்புத் தானும் கருப்பொருட்களின் புடைபெயர்ச்சியும், நிலையுமாகிய நிகழ்ச்சிகளால் உண்டென்று உணரப்படுவதன்றி, இவ்விள விது என வரையறுத்து உணரப்படுமாறு தானே விளங்கி நிற்கும் தன்மைய தன்று என்பதும் தெளிவாகப் புலப்படுமாறு தொல்காப்பியர்,

**இறப்பே நிகழ்வே யெதிர தென்னுந்**
**திறத்தியன் மருங்கிற் றெரிந்தன ருள்ளப்**
**பொருணிகழ் வுரைப்பது காலமாகும்,**

என நூற்பா செய்தளித்தார். இவ்வாறு தெரிந்தனர் உள்ளுங்கால் குறிப்பாகப் புலப்படும் காலத்தைக் குறியீடு தெள்ளத் தெளிய அறிவுறுத்தி நிற்குமெனல் தத்துவநூற் கொள்கைக்கு முரணாம் ஆதலின், பண்டை இலக்கண நூலார் காலக் குறியீடு செய்திலராக, தொல்காப்பியரும் கால எழுத்துக்கள் இவையிவையென

(1.தொல். சொல். 201; 2. தமிழ் மொழி நூல் ஞ.ளு.ளு. பக். 79; 3. தொல். சொல். 429. சேனா. உரை; 4. தொல். செய். 202.)

வரையறுத்து ஓதாராயினமையின், தொழில் வினையைத் தெரிநிலைவினை எனல் பொருந்தாமை அறிக.

தொல்காப்பியர், காலம் மூன்று என்னும் கொள்கையர். அது மூன்றெனத் தோன்றுமாறு எங்ஙனம் என்பதையும் அவர் தெளிவுபடுத்தியுள்ளார். இறப்பினது எனவும், நிகழ்வினது எனவும், எதிர்வினது எனவும் அம் மூன்று காலமும் கருப்பொருளின் தொழிற்பொருண்மையும், நிலைப்பொருண்மை மயும் குறித்துணரவல்லர்க்கு, அவர்தம் மனக்குறிப்பு நிகழுங் கால் அதனோடு அமைந்து கிடக்கும் உண்மைநிலை

உடைமையே அது வெளிப்படும் நிலையாகும் என்பதை,

**காலந் தாமே மூன்றென மொழிப,**

**இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா**

**அம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளும்**

**மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே,**

என அவர் இரு நூற்பாக்களிற் கூறினார். அவற்றுள் பின்னதற்கு இளம்பூரணர், சேனாவரையர், தெய்வச்சிலையார் என்பார் மூவரும், வினைச் சொல்லானவை தோன்று நெறிக்கண்.... முக்காலமும் குறிப்பு வினையோடு பொருந்தும் மெய்நிலையுடைய' எனவும் நச்சினார்க்கினியர், வினைச்சொல்லான் அக்காலங்கள் தோன்றும் நெறிக்கண் மூன்று காலமும், வினைக் குறிப்போடும் பொருந்தும் உண்மை நிலையை உடைய' எனவும் உரைவகுத்தனர். இவ்வுரைகளுள், 'வினைச்சொல்லானவை தோன்றும் நெறிக்கண் முக்காலமும் குறிப்பு வினையோடும் பொருந்தும்; என்பது தருக்கமுறைக்கும் வாக்கிய முறைக்கும் மாறனாது; வினைச்சொல்லான் காலங்கள் தோன்றும்' என்பது உண்மைநிலைக்கு மாறானது. அவர்கள் ஒருவினை ஒடுச்சொல்லை எண்ணோடு வாக்கியமயங்கினர். குறிப்பு என்பதை மனக்குறிப்பு எனக் கொள்ளாது குறிப்புவினை என அவர்கள் கொண்டது தெரிநிலைவினை, குறிப்புவினை எனக் குறியிட்டு வழங்கும் முறையைத் தோன்றுவித்ததா, அன்றி, அப்பிழை வழக்கு முன்னரே உண்மையின், அவர்கள் அதற்கேற்பப் பொருள்

(1.தொல். சொல். 199; 2. தொல். சொல். 200.)

கண்டு இடர்ப்பட்டனரா எனத் தெளிபக் கூற முடியவில்லை. அவர்தம் உரை வழிநின்று ஆராய்ந்து உரை வகுத்த பிற்கால அறிஞரான டாக்டர் சுப்பிரமணிய சாத்திரியார், 'அவ்வாறயின், இச்சூத்திரம் தெரிநிலை, குறிப்பு என வினை இரண்டு வகைப்படும் என்று விதிக்கின்றதாகும்' எனக் கூறி அவர்வழி நின்றார்.

(1)

**320. பொருண்முத லாறினுந் தோற்றிமுன் னாறனுள்**
**வினைமுதன் மாத்திரை**
**விளக்கல்வினைக்குறிப்பே.**

பொருள் முதல் ஆறினும் தோற்றி முன் ஆறனுள்
வினை முதன் மாத்திரை விளக்கல் வினைக் குறிப்பே.

porul̲muṭal āṟiṉum ṭōṟṟi muṉ āṟaṉul̲
viṉai muṭaṉ māṭṭirai vil̲akkal viṉaik kuṟippē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Indefinite verbs defined**

An indefinite verb is that which is derived from one of the six kinds of Nouns, such as names of 'objects' &c., and signifies the Agent alone among the six particulars mentioned above.

## ஒப்புமைப் பகுதி

அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்
கண்ணென் வேற்றுமை நிலத்தினானும்
ஒப்பினானும் பண்பி னானுமென்று
அப்பாற் காலம் குறிப்பொடு தோன்றும்

(தொல். சொல்.: 213)

இறப்பு நிகழ்வு மெதிர்வு மென்று
சொல்லப்படு மூன்று காலமுங் குறிப்பு
வினையொடு பொருந்து மெய்நிலை யுடைய
வினைமொழி பிறக்கும் விழுமிய நெறியே

(மு.வீ.: 596)

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
அம்முக் காலமும் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்நிலை யுடைய தோன்ற லாறே

(தொல். சொல்.: 200)

## மயிலை நாதர்

எ–ன், வினைச்சொலென்பது வினையும் வினைக்குறிப்புமென இரண்டு;
அவற்றுள், வினையாவது உணர்த்தினார், இது வினைக்குறிப்பாவது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– பொருள் இடம் காலம் சினை குணம் தொழிலென்னுமாறும் இடமாகத் தோன்றி மேற் கருத்தா முதலாகச் சொன்ன ஆறனுட் கருத்தா

ஒருவனையுமே காட்டிநிற்றல், வினைக்குறிப்பிற்கு இயல்பாவது, எ—று.

வினையைக் குறிப்பாக உடைமையின், வினைக்குறிப்பு.

வ—று.:—

குழையினன், குழையினள், குழையினர், குழையிற்று, குழையின ; குழையினேன், குழையினேம்; குழையினை, குழையினீர் எனவும், அகத்தினன், அகத்தினள், அகத்தினர், [1]அகத்தது, அகத்தன; அகத்தினேன், அகத்தினேம்; அகத்தினை, அகத்தினீர் எனவும், நாளினன், நாளினள், நாளினர் நாளிற்று, நாளின; நாளினேன், நாளினேம்; நாளினை நாளினீர் எனவும், கண்ணினன், கண்ணினள், கண்ணினர், கண்ணிற்று, கண்ணின; கண்ணினேன், கண்ணினேம்; கண்ணினை, கண்ணினீர் எனவும், கரியன், கரியள், கரியர், கரியது, கரியன; கரியேன், கரியேம்; கரியை, கரியீர் எனவும், செலவினன், செலவினள், செலவினர், செலவிற்று, செலவின; செலவினேன், செலவினேம்; செலவினை, செலவினீர் எனவும் முறையே காண்க.

பாடவேறுபாடு.:—

1. அகத்திற்று

## சங்கர நமச்சிவாயர்
## சிவஞான முனிவர்

எ—னின், குறிப்பு வினைச்சொல்லினது பொதுவிலக்கணம் உணர்—ற்று.

இ — ள்.:— பொருளாதி ஆறும் அடியாக அவற்றின்கண் தோன்றி, மேல் கருத்தா முதலாகச் சொன்ன ஆறனுள் கருத்தா ஒன்றையுமே விளக்குதல் வினைக்குறிப்புச் சொல்லினது இலக்கணமாம், எ—று.

> மேலையதிகாரத்துப் பகுபதவுறுப்புக் கூறியவழித் தெரிநிலைவினைக்கு வினையடிகள் விளங்கிக் கிடந்தமைபோலக் குறிப்பு வினையடி அங்ஙனம் வகைப்பட விளங்காமையின் ஈண்டு விளங்கப் 'பொருள் முதலாறினும் தோற்றி' என்றும், தெரிநிலை வினைபோல் இக் குறிப்புவினைக்கண்ணும் செய்பவன் முதலிய ஆறும் உள என்பார் 'முன்னாறனுள்' என்றும், அவற்றுள் செய்பவனை இச் சொல்லினது விகுதி விளக்கும் மற்றுள்ளனவற்றுள் ஒன்றேனும் விளக்குதற்கு உரிய உறுப்பு இதனகத்து இன்று என்பார் 'வினைமுதல்மாத்திரை' என்றும், இது குறிப்புவினை யாதலின் இதற்குக் கருத்தாவாக விகுதிப்பொருளைக் கோடலும் குறிப்பாம் என்பார் 'தருதல்' என்னாது 'விளக்கல்' என்றும் கூறினார்.

வ–று.:–

குழையினன், குழையினள், குழையினர், குழையிற்று, குழையின, குழையினென், குழையினெம், குழையினை, குழையினீர் எனவும்; அகத்தினன், புறத்தினன் எனவும்; ஆதிரையான், ஓணத்தான் எனவும்; குறுந்தாளன், செங் கண்ணன் எனவும்; கரியன், நெடியன், நல்லன், உண்மையன், உடையன் எனவும்; கடுநடையன், இன்சொல்லன் எனவும்;

**"மதிபாய் சடைமுடித்து மாசுணப்பைம் பூட்டுச் சதிபாய் குறுந்தாட்டுத் தான – நதிபாய் இருகவுட்டு முக்கட்டு நால்வாய்த்தென் னுள்ளம் உருகவிட்டு நின்ற ஒளி"**

எனவும் வரும். பிறவும் அன்ன.

இவை பொருளாதி ஆறான் ஒருபொருளை வழங்குவதற்கு வரும் பெயராய் நில்லாது இவன் குழையை உடையனாயினான் என ஆறாம் வேற்றுமையினது உடைமைப்பொருட்கண்ணும், அகத்தின்கண் இருந்தனன் புறத்தின்கண் இருந்தனன் என ஏழாம் வேற்றுமையது நிலப்பொருட்கண்ணும், ஆதிரைநாளில் பிறந்தான் ஓணநாளில் உதித்தான் என அவ்வேழாம் வேற்றுமையது காலப்பொருட்கண்ணும், குறுந்தாளை உடையான் செங்கண்ணை உடையான் என அவ்வாறாம் வேற்றுமையது உடைமைப் பொருட்கண்ணும், கருவண்ணமா யிருப்பன் நெடுவடிவாயிருப்பன் நற்குணமாயிருப்பன் உண்மைத்தன்மையன் உடைப்பொருள் சிறந்தான் எனக் குணப்பண்பின்கண்ணும், கடுநடையாக நடப்பான் இன்சொல்லாகச் சொல்லுவான் எனத் தொழிற்பண்பின் கண்ணும் வருதலின் வினைக்குறிப்புச் சொல்லாயின. இவை முன்பு வினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்கு வதற்கு வரும் பெயராய் வரின் அவை குறிப்புவினை யாலணையும் பெயராம். இவை தம்முள் வேற்றுமை என்க.

*இவற்றுள் குணமடியாகத் தோன்றிய வினைக்குறிப்புச் சொற்கள் குணவிகற்பம் பலவாதலின் பலவிகற்பப்பட்டு வரும். அவையாவன :– பொன்னன்னன், புலிபோல்வன் என ஒப்பு உணர்த்தியும் ; எப்பொருளும் அல்லன் இறைவன், பொய்யர் நெஞ்சில் புனிதன் இலன், எவ்வுயிர்க்கண்ணும் இறைவனுளன், மெய்வலியன் எனப் பண்புணர்த்தியும்; ஆவுண்டு என உண்மை உணர்த்தியும் ; அவைதாம் இவையல்ல, மாற்றரும் துப்பின் மாற்றோர், பாசறையிலன், சொலல்வல்லன் எனக்*

*குறிப்புணர்த்தியும்; குழையிலன், கச்சிலன் என உடைமைக்கு மறையாயும் வருவனவாம். ஒப்பாவது வினை பயன் மெய் உரு என்பன வற்றாஎல் ஒன்றனை ஒன்று ஒத்தல். பண்பாவது ஒருபொருள் தோன்றுங்காலத்து உடன்தோன்றி அது கெடுந்துணையும் நிற்பது. உண்மையாவது ஒருபொருட்குக் கேடு பிறந்தாலும் தனக்குக் கேடு இன்றித் தானொன்றே யாய்ப் பலவகைப்பட்ட பொருள்தோறும் நிற்பது. குறிப்பாவது பொருட்குப் பின்தோன்றிச் சிறிது பொழுது நிகழ்வது. இவையெல்லாம் தொல்காப்பியக் கடலில் தோன்ற விளங்கும்.இந்நூல் சுருங்கிய நூலாதலின் இன்றியமையாதன வற்றைச் சிலவிடங்களில் விரித் தெழுதுகின்றனவும் உள; அவை ஆராய்ந்து அறிந்து கொள்க.*

குழையினன் என்புழிக் குழையையுடையான் வினைமுதல் ; இது விகுதியான் விளங்கிற்று. குடத்தின்கண் மண்போல் இவ்வினையாகிய காரியத்தின்கண் முதற்காரணமாகிய செயலுண்டு எனவும், காலமின்றேல் இது வினையன்றாமா தலானும் முக்காலங்களுள் ஒன்றன்பாற் சார்தற்குரிய இடைநிலை இதற்கு வேண்டாமையானும் முக்காலமும் உண்டு எனவும், வினைமுதற்கு ஓர் ஆதாரம் வேண்டுதலின் இடனுண்டு எனவும், ஒன்றை வனைந்தான் ஒன்றால் வனைந்தான் என்றாற்போல இரண்டாவதற்கும் மூன்றாவ தற்கும் இது பயனிலையாக ஒன்றைக் குழையினன் ஒன்றாற்குழையினன் என இயையாமையின் இதன்கண் செயப்படுபொருளும் கருவியும் இல எனவும் உயர்த்துணர்க. ஒன்றாற் குழையினன் என ஒரோவழியியையின் அங்ஙனம் கருவியுளதென்றுகொள்க. உடையன் என்னும் குறிப்புவினை ஒன்றை உடையன் ஒன்றினால் உடையன் என வருதலின் இதன்கண் ஆறும் உண்டு என்க. இவ்வாறே தெரிநிலை வினைபோலக் குறிப்புவினை பிறவற்றுள்ளும் செய்பவன் முதலிய ஆறும் வருதலும் சில குன்றி வருதலும் உய்த்துணர்க.

வினை, தெரிநிலை, குறிப்பு என இருகூற்றதாம் என இவ்விரு சூத்திரத்தானும் கூறினார்; இவற்றுள் தெரிநிலையின்பாற்படும் செய்யான் என்றற்றொடக்கத்து எதிர்மறைக்கண்ணும், குறிப்பின்பாற்படும் இலன் என்றற்றொடக்கத்து எதிர்மறைக் கண்ணும் வினை இல்லையாம். அங்ஙனமாகவும் இவற்றை

வினை என்பதூஉம், இவை செய்பவன் முதலிய ஆறுந் தரும் என்பதூஉம் என்னையெனின்:– இவற்றை வினை என்பது முயற்கோடு ஆகாயப்பூ என்றாற்போல இன்மையை உண்மைபோல வைத்துக் கூறுவதோர் இலக்கணை. இவை செய்பவன் முதலிய ஆறும் தரும் என்பது "சீதம் இன்மை பனியின்மை காட்டல்" போல வினையின்மை செய்பவன் முதலியவற்றின் இன்மைகளைக் காட்டி நிற்றலையாம்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், குறிப்பு வினைச் சொல்லாவது இன்னதென அதன் இலக்கணம் கூறுகின்றது.

இ–ள்.:– **பொருண்முதல் ஆறினும் தோற்றி** – பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் எனும் ஆறும், **முன்னாறனுள்** – மேற்செய்பவன் முதலாகச் சொன்ன ஆறனுள், **வினைமுதன் மாத்திரை விளக்கல்** – கருத்தா ஒருத்தனையே காட்டி நிற்றல், **வினைக்குறிப்பே** – வினைக்குறிப்பிற்கு இயல்பாவது, எ–று.

உ–ம்.:–

**குழையினன், அகத்தினன், நாளினன், கண்ணினன், கரியன், சொல்லினன்** என முறையே காண்க.

வினையைக் குறிப்பாக உடைமையின் வினைக்குறிப்பு என்றாயிற்று.

**"பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலே**
**குறிப்பு வினையின் நெறிப்படு முதனிலை."**

## விசாகப் பெருமாளையர்

இது, குறிப்பு வினைச்சொல்லின் பொது விலக்கணம் உணர்த்துகின்றது.

இ–ள்.:– பொருண்முதலாறினும் – பொருளாதியாறுங் காரணமாக, தோற்றி – அவற்றினிடத்தே பிறந்து, முன்னாறனுள் –முன்சொல்லப்பட்ட செய்பவன் முதலாகிய ஆறனுள், வினை முதன் மாத்திரை – கருத்தாவொன்றையே, விளக்கல் – விளக்குதல், வினைக்குறிப்பு– வினைக்குறிப்புச் சொல்லிலக்கணமாம், எ–று. பொருண் முதலாறும் பதவியலிலே ஐந்தாவது சூத்திரத்திலே சொல்லப்பட்டன.

வ–று.:–

குழையினன், பொன்னினன் எனவும், அகத்தினன், புறத்தினன் எனவும், ஆதிரையான், ஓணத்தான் எனவும்,

குறுந்தாளன், செங்கண்ணன் எனவும், கரியன், நல்லன் எனவும், கடுநடையன், இன்சொல்லன் எனவும், வரும் இவற்றுள் விகுதியாற் செய்பவன் விளங்கிற்று. மற்றவைகள் குறிப்பாக உண்டெனக் கொள்க. ஒன்றைக் குழையினன், ஒன்றாற் குழையினன், என வாராமையால், குழையினன் என்கிறதற்குக் கருவியுஞ் செயப்படுபொருளு மில்லையென்றும் ஒன்றையுடையன், ஒன்றாலுடையன், என வருதலால் உடையன் என்கிறதற்கு ஆறும் உண்டெனவுங் கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

குறிப்புவினை யிலக்கணங் கூறுஞ் சூத்திரம் யாது?

பொருண்முத லாறினுந் தோற்றிமுன் னாறனுள்

வினைமுதன் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே.

(பொருள் முதல் ஆறினும் தோற்றி முன் ஆறனுள் வினைமுதல் மாத்திரை விளக்கல் வினைக் குறிப்பு எ.)

இ–ள்.:– பொருளாதியாறும் முதனிலையடியாக அவற்றினிடத்தே பிறந்து, முன்சொல்லப்பட்ட செய்பவன்முதலாகிய ஆறனுட் கருத்தாவொன்றையுமே விளக்குதல் வினைக்குறிப்புச் சொல்லிலக்கணமாம், எ–று.

குறிப்புவினையென்பதன் பொருள் யாது?

தொழிலுங் காலமுந் தெற்றென விளங்காது குறித்துக் கொள்ளக்கிடப்பது என்பது அதன்பொருள்.

வ–று.;–

குழையன், பொன்னினன் எனவும், அகத்தினன், புறத்தினன் எனவும், ஆதிரையான், ஓணத்தான் எனவும், குறுந்தாளன், செங்கண்ணன் எனவும், கரியன், நல்லன் எனவும், கடுநடையன், இன்சொல்லன் எனவும் வரும். இவற்றுள் விகுதியாற் செய்பவன் விளங்கிற்று. மற்றவைகள் குறிப்பாக உண்டெனக் கொள்க.

குழையன் என்புழி வினைமுதற்பெயரைத் தோற்றுவித்து நிற்கும் அன் என்னும் பால் காட்டும் ஈறு நின்று உடைமைப் பொருளைத் தனக்கு உரிமைசெய்யும் உடைமையை விரித்துக் குழையையுடையன் என நிற்கும்.

இவை, பொருளாதியாறால் ஒரு பொருளை வழங்குதற்கு

வரும்பெயராய் நில்லாது, குழையையுடையனாயினான், ஆகின்றான், ஆவான் எனவும், அகத்தின்கணிருந்தான். இருக்கின்றான், இருப்பான் எனவும், ஆதிரைநாளிற் பிறந்தான், பிறக்கின்றான், பிறப்பான் எனவும், குறுந்தாளை யுடையனாயினான், ஆகின்றான், ஆவான் எனவும், கரும்வண்ணமாயிருந்தான், இருக்கின்றான், இருப்பான் எனவும், கடுநடையாக நடந்தான், நடக்கின்றான், நடப்பான் எனவும், வருதலால், வினைக்குறிப்புச் சொல்லாயின. இவை, முன்பு வினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்குதற்குரிய பெயராய் வரின், அவை குறிப்புவினை யாலணையும் பெயராம். இவை தம்முள் வேற்றுமையென்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, குறிப்புவினையின் பொதுவிலக்கண முணர்த்திற்று

**இ–ள்.:– பொருண் முத லாறினுந் தோற்றி** – பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் ஆகிய ஆறும் முதனிலையாக அவற்றின் கண்ணே தோன்றி, **முன்னாறனுள்** – மேற்கூறிய செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் என்ற ஆறினுள், **வினைமுதன் மாத்திரை விளக்கல்** – கருத்தா வொன்றையும் விளக்குவது, **வினைக்குறிப்பு** – குறிப்புவினைச் சொல் லிலக்கணமாம், **எ–று.**

மேலையதிகாரத்திற் பகுபதவுறுப்புக் கூறியபோது, தெரிநிலை வினைக்கு முதனிலைகள் விளங்கிக் கிடந்தது போலக் குறிப்புவினைக்கு முதனிலைகள் வகைப்பட விளங்காததினாலே இங்கே '**பொருண் முதலாறினுந் தோற்றி**'யென்றும், இதன் அகத்தும் செய்பவன் முதலிய ஆறுமுண்டென்று சொல்ல வந்தவர், '**முன்னாறனுள்**' என்றும், அவற்றுள் செய்பவனை இதன் விகுதி விளக்கும்; ஒழிந்தனவற்றை விளக்குதற்குப் பொருந்திய உறுப்பு இதனகத்தில்லை யென்று சொல்லவந்தவர், '**வினைமுதன் மாத்திரை**' யென்றுஞ் சொன்னார்.

**வ–று.:–**

குழையன், அகத்தன், ஆதிரையான், குறுந்தாளன், கரியன், ஊணன், என முறையே பொருளாதி யாறும் பகுதியாக வந்தமை காண்க. மற்றப் பாலிடங்கள்தோறு மொட்டிக்கொள்க. பிறவுமன்ன. பகுதி, முதனிலை, வினையடி, அடிப்பாடு, தாது என்பனவெல்லாம் ஒருபொருள். வினைமுதல், கருத்தா,

செப்பவன், தொழின்முதல், செய்வது என்பன ஒருபொருள். இவை பெயராய் நில்லாமல், குழையை யுடையனாயினான், அகத்தின்கண்ணிருந்தான், ஆதிரை நாளிற் பிறந்தான், குறுந்தாளை யுடையனாயினான், கரிய நிறமாயிருப்பான், மிகவுமுண்பான் என வருதலால் வினைக் குறிப்புச் சொல்லாயின. குழையன் என்றால், அக் குழையை யுடையவன் வினைமுதல், இது விகுதியால் விளங்கிற்று. குடத்தின்கண் மண்போல இவ்வினையாகிய காரியத்தின்கண் முதற்காரண மாகிய செயலுண்டெனவும், காலமில்லாவிட்டால் அது வினையாகாமையாலும், முக்காலங்களுள் ஒன்றிற்குரிய இடைநிலை யிதற்கு வேண்டாமையாலும், மூன்றுகாலமும் உண்டெனவும், வினைமுதல் நிற்க ஓராதாரம் வேண்டுதலால் நிலம் உண்டெனவும், ஒன்றை வனைந்தான், ஒன்றால் வனைந்தான் என்றாற்போல ஒன்றைக் குழையன், ஒன்றாற் குழையன் என இரண்டாவதற்கும் மூன்றாவதற்கு மிது பயனிலையாக இயையாததினாலே, இதனகத்துச் செயப்படுபொருளுங் கருவியுமில்லை யெனவும், ஒன்றை யுடையன் ஒன்றாலுடையன் என வருதலால் உடையன் என்னுங் குறிப்புமுற்றில் ஆறுமுண்டெனவும் உய்த்துணர்க.

இனித் தெரிநிலை வினையின்பாற்பட்ட செய்யான் என்னுந் தொடக்கத்து எதிர்மறை வினையிலும், குறிப்பின்பாற்பட்ட இலன் என்னுந் தொடக்கத்து எதிர்மறை வினையிலும் புடை பெயர்ச்சி வினையில்லையாம். இங்ஙனமாகவும், இவற்றை வினையென்பதும், செப்பவன் முதலிய ஆறுந் தருமென்பதும்; முயற்கோடு, ஆகாயப்பூ என்றாற்போல இன்மையையுண்மை போல வைத்துக் கூறுவதோரிலக்கணை. இலக்கணை யென்பது இத்தன்மையதென மேற்காட்டப்பட்டது. இவை செப்பவன் முதலிய ஆறுந் தருமென்பது, சீதமின்மை பனியின்மையைக் காட்டல் போல இந்த வினையின்மையானது செப்பவன் முதலியவற்றின் இன்மைகளைக் காட்டி நிற்பதை யாம். இதனுள் விளக்கல் என்னுந் தொழிற் பெயரெழுவாயாய் நின்று வினைக்குறிப்பென்னும் பயனிலை கொண்டு முடிந்தது.

"அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானுங்
கண்ணென் வேற்றுமை நிலத்தி னானு
மொப்பி னானும் பண்பி னானுமென்,
றப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும்"

எனவும்.

"அன்மையி னின்மையி னுண்மையின் வன்மையி
னன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளு
மென்ன கிளவியுங் குறிப்பே காலம்"

எனவும்,

"பன்மையு மொருமையும் பாலறி வந்த
வன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி யுயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபாடி லவே"

எனவும், வருமிவை யுயர்திணை வினைக் குறிப்பென்றும்,

"இனறில வுடைய வென்னுங் கிளவியு
மன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்
பண்பு கொள் கிளவியு முளவென் கிளவியும் பண்பி
னாகிய சினைமுதற் கிளவியு மொப்பொடு வரூ உங்
கிளவியொடு தொகைஇ யப்பாற் பத்துங் குறிப்பொடு
கொள்ளும்"

எனவும்,

"பன்மையுமொருமையும் பாலறி வந்த
வன்ன மரபிற் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி யஃறினை மருங்கின் மேலைக்கிள
வியொடு வேறுபா டிலவே"

எனவும் வருமிவையஃறிணைவினைக் குறிப்பென்றும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– பொருள் முதல் ஆறினும் – பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்னும் ஆறையும் அடியாகக் கொண்டு, தோற்றி – பிறந்து, முன் ஆறனுள் – முற்சூத்திரத்திற்சொல்லப்பட்ட செய்பவன் முதலிய ஆறனுள், வினைமுதல்மாத்திரை – கருத்தா ஒன்றையே, விளக்கல் – காட்டுதல், வினைக்குறிப்பு – குறிப்புவினையின் இலக்கணமாம்.

உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| குழையன், பொன்னன் | – பொருள் | காதன், கண்ணன் | – சினை |
| அகத்தினன், ஊரன் | – இடம். | கரியன், நல்லன் | – குணம். |
| ஆதிரையான், வேனிலான் | – காலம் | நடையன், சொல்லன் | – தொழில். |

**குறிப்பு :-**

இவற்றுள் விகுதியாற்செய்பவன் விளங்கிற்று. மற்றவை குறிப்பாக உண்டெனக் கொள்க. 'உடைமை' என்னும் பண்பிற்றோன்றிய குறிப்புவினையொழிந்த மற்றைய குறிப்பு வினைகள் செயப்படுபொருளைக் காட்டாவென்க.

## ஆறுமுக நாவலர்

**இ-ள்.: பொருள் முதல் ஆறினும் தோற்றி** - பொருளாதியாறும் முதனிலையடியாக அவற்றினிடத்தே பிறந்து, **முன் ஆறனுள் வினைமுதல் மாத்திரை விளக்கல்** - முன்சொல்லப்பட்ட செய்யவன் முதலாகிய ஆறனுட் கருத்தா வொன்றையுமே விளக்குதல், **வினைக்குறிப்பு** - வினைக்குறிப்புச் சொல்லிலக்கணமாம், **எ-று.**

**வ-று.:-**

**குழையினன்,** பொன்னினன் எனவும், **அகத்தினன், புறத்தினன்** எனவும், **ஆதிரையான், ஓணத்தான்** எனவும், **குறுந்தாளன், செங்கண்ணன்** எனவும், **கரியன், நல்லன்** எனவும், **கடுநடையன், இன்சொல்லன்** எனவும் வரும். இவற்றுள் விகுதியாற் செய்பவன் விளங்கிற்று; மற்றவைகள் குறிப்பாக உண்டெனக் கொள்க. ஒன்றைக் குழையினன், ஒன்றாற் குழையினன் என வாராமையால், குழையினன் என்பதற்குச் செயப்படுபொருளுங் கருவியுமில்லை எனவும், ஒன்றையுடையன் ஒன்றாலுடையன் என வருதலால், உடையன் என்பதற்கு ஆறும் உண்டெனவுங் கொள்க.

இவை, பொருளாதியாறால் ஒருபொருளை வழங்குதற்கு வரும் பெயராய் நில்லாது; குழையை யுடையனாயினான், ஆகின்றான், ஆவான் எனவும், அகத்தின்கணிருந்தான், இருக்கின்றான், இருப்பான் எனவும், ஆதிரைநாளிற்பிறந்தான், பிறக்கின்றான், பிறப்பான் எனவும், குறுந்தாளை யுடையனாயினான், ஆகின்றான், ஆவான் எனவும், கருவண்ணமாயிருந்தான், இருக்கின்றான், இருப்பான் எனவும், கடுநடையாக நடந்தான், நடக்கின்றான், நடப்பான் எனவும் வருதலால், வினைக் குறிப்புச் சொல்லாயின. இவை, முன்பு வினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்குதற்குரிய பெயராய் வரின் அவை குறிப்புவினையாலணையும் பெயராம். இவை தம்முள் வேற்றுமையென்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– பொருள் முதல் ஆறினும் தோற்றி** – பொருளாதியாறும் முதனிலையடியாக அவற்றினிடத்தே பிறந்து, **முன் ஆறனுள் வினைமுதல் மாத்திரை விளக்கல்** – முன் சொல்லப்பட்ட செய்பவன் முதலாகிய ஆறனுள் கருத்தா வொன்றையுமே விளக்குதல், – **வினைக்குறிப்பு** – வினைக் குறிப்புச் சொல்லிலக்கணமாம். எ–று.

வ–று.:–

குழையினன், பொன்னினன். எ–ம். அகத்தினன், புறத்தினன். எ–ம். ஆதிரையான், ஓணத்தான், எ–ம். குறுந்தாளன், செங்கண்ணன். எ–ம். கரியன், நல்லன், எ–ம். கடுநடையன், இன்சொல்லன், எ–ம். வரும். இவற்றுள், விகுதியாற் செய்பவன் விளங்கிற்று; மற்றவைகள் குறிப்பாக உண்டெனக் கொள்க. ஒன்றைக் குழையினன், ஒன்றாற்குழையினன் எனவாராமை யால், குழையினன் என்பதற்குக் கருவியுஞ் செயப்படு பொருளுமில்லை எனவும், ஒன்றையுடையன் ஒன்றாலுடையன் என வருதலால், உடையன் என்பதற்கு ஆறும் உண்டெனவுங் கொள்க. இவை, பொருளாதியாறால் ஒரு பொருளை வழங்கு தற்கு வரும் பெயராய் நில்லாது,குழையை யுடையனாயினான், ஆகின்றான், ஆவான். எ–ம். அகத்தின் கணிருந்தான், இருக்கின்றான், இருப்பான், எ–ம். குறுத்தாளையுடைய னாயினான், ஆகின்றான், ஆவான் எ– கருவண்ணமா யிருந்தான், இருக்கின்றான், இருப்பான், எ–ம். கடுநடையாக நடந்தான், நடக்கின்றான், நடப்பான், எ–ம். வருதலால், வினைக் குறிப்புச் சொல்லாயின. இவை, முன்பு வினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்குதற்குரிய பெயராய்வரின், அவை குறிப்புவினையாலணையும் பெயராம். இவை தம்முள் வேற்றுமை யென்க.

நெடியன், நிலத்தன், இளையன், துடியன், சிலம்பன், எ–ம். "காலிற் கட்டிய கழலன் கச்சினன், மாலைத் தோளினன் வரிவில் வாளியன், நீலக்குஞ்சியன் நெடியன்" எ–ம். இளையள், தொடியள், உடையள். எ–ம். நெடியர், உடையர், குறியர், எ–ம். உயர்திணை வினைக்குறிப்பு வந்தன.

"கரிதரிது தீது கடிது நெடிது
பெரிதுடைத்து வெய்து பிறிது – பரிதென
ஆயிழாய் பன்மையிலுஞ் சொல்க வஃறிணையின்
மேய வினைக் குறிப்பா மிக்கு".

என நேமிநாதவெண்பாவிற் குறிக்கப்பட்ட கரிது, அரிது முதலியனவும், கரியன, அரியன, தீயன, கடியன, நெடியன, பெரிய, உடையன, வெய்யன, பரியன. எ-ம். அஃறிணை வினைக்குறிப்பு வந்தன.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ-ள்.:** **பொருள் முதல் ஆறினும்** - பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்னும் ஆறையும் அடியாகக் கொண்டு, **தோற்றி** - பிறந்து, **முன் ஆறனுள்** - முன் சூத்திரத்திற் சொல்லப்பட்ட (செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் என்ற) ஆறனுள், **வினை முதல் மாத்திரை** - கருத்தா ஒன்றையே, **விளக்கல்** - காட்டுதல், **வினைக்குறிப்பு** - குறிப்பிவினையின் இலக்கணமாம், எ-று.

உ-ம்.:-

**குழையன், பொன்னன்** - பொருள்.
**அகத்தினன், ஊரன்** - இடம்
**ஆதிரையான், ஓணத்தான்** - காலம்
**காலன், கண்ணன்** - சினை
**கரியன், நல்லன்** - குணம்.
**நடையன், சொல்லன்** - தொழில்
இவற்றில், விகுதியால் செய்பவன் விளங்கிற்று. மற்றவை குறிப்பாக உண்டெனக் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

**இ-ள்.:-** **பொருள் முதல் ஆறினும் தோற்றி** - பொருளாதியாறும் முதனிலையாக அவற்றினிடத்தே பிறந்து, **முன் ஆறனுள்** - முன் சொல்லப்பட்ட செய்பவன் முதலாகிய ஆறனுள், **வினைமுதல் மாத்திரை விளக்கல்** - கருத்தாவொன்றையுமே விளக்குதல், **வினைக்குறிப்பு** - வினைக் குறிப்புச்சொல்லி னிலக்கணமாம். எ-று.

பொருளாதி ஆறாவன : பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில். 132-வது சூத்திரம் பார்க்க.

மேலை யதிகாரத்திற் பகுபதவுறுப்புக் கூறியபோது, தெரிநிலைவினைக்கு முதனிலைகள் (சூ.137) விளங்கிக் கிடந்ததுபோலக் குறிப்புவினைக்கு முதனிலைகள் வகைப்பட விளங்காததினாலே, இங்கே 'பொருள் முதலாறினும் தோற்றி'

என்றும்; இதன் அகத்தும் செய்பவன் முதலிய ஆறும் உண்டென்று சொல்லவந்தவர் 'முன்னாறனுள்' என்றும்; அவற்றுள் செய்பவனை இதன் விகுதி விளக்கும், ஒழிந்தனவற்றை விளக்குதற்குப் பொருந்திய உறுப்பு இதனகத்தில்லை யென்று சொல்லவந்தவர் 'வினைமுதன் மாத்திரை' என்றும் சொன்னார்.

பகுதி, முதனிலை, வினையடி, அடிப்பாடு, தாது என்பன ஒரு பொருளன. வினைமுதல், கருத்தா, செய்பவன், தொழின் முதல், செய்வது என்பன ஒரு பொருளன.

ட–ம்:–

குழையினன், பொன்னினன் – பொருள்.

அகத்தினன், புறத்தினன் – இடம்.

ஆதிரையான், ஓணத்தான் – காலம்.

குறுந்தாளன் – செங்கண்ணன் – சிவன்.

கரியன், நல்லன் – குணம்.

கடுநடையன், இன்சொல்லன் – தொழில்.

இவற்றுள், விகுதியாற் செய்பவன் விளங்கிற்று; மற்றவைகள் குறிப்பாக உண்டெனக் கொள்க. ஒன்றைக் குழையினன், ஒன்றற் குழையினன் என வாராமையால், குழையினன் என்பதற்குச் செயப்படுபொருளுங் கருவியுமில்லை எனவும், ஒன்றையுடையன் ஒன்றாலுடையன் என வருதலால், உடையன் என்னும் குறிப்புவினைக்கு ஆறும் உண்டெனவுங் கொள்க.

இவை, பொருளாதியாறால் ஒரு பொருளை வழங்குதற்கு வரும் பெயராய் நில்லாது, குழையையுடையனாயினான், ஆகின்றான், ஆவான்; அகத்தின்கணிருந்தான், இருக்கின்றான், இருப்பான்; ஆதிரை நாளிற் பிறந்தான், பிறக்கின்றான், பிறப்பான்; குறுந்தாளையுடையனாயினான், ஆகின்றான், ஆவான்; கருவண்ணமாயிருந்தான், இருக்கின்றான், இருப்பான்; கடுநடையாக நடந்தான், நடக்கின்றான், நடப்பான் – என வருதலால், வினைக்குறிப்புச் சொல்லாயின. இவை, முன்பு வினைக்குறிப்பாய்ப் பின்பு பொருள்களை வழங்குதற்குரிய பெயராய்வரின், அவை குறிப்புவினையாலணைம் பெயராம். இவை தம்முள் வேற்றுமையென்க.

தெரிநிலை வினையின்பாற்பட்ட செய்யான் என்னும் தொடக்கத்து எதிர்மறை வினையிலும், குறிப்பின்பாற்பட்ட

இலன் என்னும் தொடக்கத்து எதிர்மறை வினையிலும் வினைநிகழ்ச்சியில்லை யாகவும், இவற்றை வினையென்பதும். செய்பவன் முதலிப ஆறும தருமென்பதும், 'முயற்கொம்பு' 'ஆகாயப்பூ' என்றாற்போல இன்மையை உண்மைபோல வைத்துக் கூறுவதோர் இலக்கணை.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ—ள்.:–** **பொருள் முதல் ஆறினும்** – பொருளாதி யாறுங்காரணமாக, **தோற்றி** – (அவற்றினிடத்தே) பிறந்து, **முன் ஆறனுள்** – முன் சொல்லப்பட்ட செய்பவன் முதலிய ஆறனுள், **வினை முதல் மாத்திரை விளக்கல்** – கருத்தா ஒன்றையே விளக்குதல், **வினைக் குறிப்பு** – குறிப்புவினைச் சொல்லின் இலக்கணமாம்.

**பொ—ரை.:–** பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும்ஆறையிம் அடியாகக்கொண்டு பிறந்து, முன் சொல்லிய செய்பவன் முதலிய ஆறனுள் கருத்தாவாகிய ஒன்றை மாத்திரம் தெரிவித்து நிற்பது குறிப்புவினைச் சொல்லின் இலக்கணமாம்.

பொருள் முதலாறும் பதவியலில் 'பொருளிடங்காலம்' என்னும் சூத்திரத்திலே சொல்லப்பட்டன.

**உ—ம்.:–**

குழையினன்
பொன்னினன்
பொருள்.
தாளன்
கண்ணன்
சினை
அகத்தியன்
புறத்தினன்
இடம்.
கரியன்
நல்லன்
குணம்
ஆதிரையான்
ஒணத்தான்
காலம்
நடையன்
சொல்லன்
தொழில்

இவற்றுள் விகுதியாற் செய்பவன் விளங்கிற்று, மற்றவைகள்

குறிப்பாக உண்டேனக் கொள்க.

ஒன்றைக் குழைபினன், ஒன்றாற் குழையினன் என வாராமையால் குழையினன் என்பதற்குக் கருவியும் செயப்படு பொருளும் இல்லை என்றும், ஒன்றையுடையன், ஒன்றாலுடையன் என வருதலால், உடையன் என்பதற்கு ஆறும் உண்டெனவும் கொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**பொருள் முதல் ஆறினும்** – பொருளாதி ஆறுங் காரணமாக, **தோற்றி** – அவ்விடத்தே பிறந்து, **முன் ஆறனுள்** – முன் சொல்லப்பட்ட செய்பவன் முதலாகிய ஆறனுள், **வினைமுதல் மாத்திரை** – கருத்தா ஒன்றையே, **விளக்கல்** – விளக்குதல், **வினைக் குறிப்பு** – வினைக்குறிப்புச்சொல்லின் இலக்கணமாம்.

பொருள் முதல் ஆறும் பதவியலில் ஐந்தாம் சூத்திரத்தில் சொல்லப்பட்டன.

**உதாரணம்**

| | | | |
|---|---|---|---|
| குழையினன்<br>பொன்னினன் | பொருள் | ஆதிரையான்<br>ஓணத்தான் | காலம் |
| அகத்தினன்<br>புறத்தினன் | இடம். | குறுந்தாளன்<br>செங் கண்ணன் | சினை |
| கரியன்<br>நல்லன் | குணம் | கடுநடையன்<br>இன்சொல்லன் | தொழில் |

இவற்றுள் விகுதியால் செய்பவன் விளங்கிற்று. மற்றவைகள் குறிப்பாக உள எனக்கொள்க. ஒன்றைக் குழையினன், ஒன்றாற் குழையினன் என வாராமையால், குழையினன் என்பதற்குக் கருவியும் செயப்படுபொருளும் இல்லை என்றும், ஒன்றை உடையன், ஒன்றாலுடையன் என வருதலால், உடையன் என்பதற்கு ஆறும் உண்டு என்றுங் கொள்க.

இவை, பொருளாதி ஆறு என்னும் பெயர்களின் அடியாகப் பிறந்தாலும் ஒரு பொருளைக் காட்டும் பெயர் ஆகாமல், குழையையுடையனாயினான், ஆகின்றான், ஆவான் எனவும், அகத்திண்கண் இருந்தான், இருக்கின்றான், இருப்பான் எனவும் வருதலால் குறிப்புவினை ஆயின.

## மோசசு பொன்னையா

பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறும்

இடமாகத் தோன்றி, முன்னர்ச் சொல்லப்பட்ட செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படு பொருள் என்னும் ஆறனுள் கருத்தா ஒன்றையே விளக்கி நிற்றல் குறிப்பு வினைச்சொல்லின் இயல்பாகும் எ–று.

தோன்றி எனற்பாலது தோற்றிஎன வலித்துநின்றது.

எ–டு

குழையன், பொன்னன் – பொருள்

அகத்தன், ஊரன் – இடம்

ஆதிரையன், ஓணத்தன் – காலம்விகுதி செய்பவனை விளக்கி நின்றது.

குறுந்தாளன், செங்கண்ணன் – சினை

கரியன், உண்மையன், இல்லன் உடையன் – குணம்

நடையன், சொல்லன்– தொழில்

தொல்காப்பியர், குறிப்புவினைகளின் தோற்றம் பற்றி,

**அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்**
**கண்ணென் வேற்றுமை நிலத்தி னானும்**
**ஒப்பி னானும் பண்பி னானுமென்**
**றப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும்,1**

எனவும்

**அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்**
**அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்**
**என்ன கிளவியும் குறிப்பே காலம்,1**

எனவும் உயர்திணைக் குறிப்புவினை அதிகாரப்பட்டு நின்றவிடத்தும்,

**இன்றில உடைய என்னும் கிளவியும்**
**அன்றுடைத் தல்ல வென்னும் கிளவியும்**
**பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்**
**பண்பின் ஆகிய சினைமுதற் கிளவியும்**
**ஒப்பொடு வருஉங் கிளவியொடு தொகைஇ**
**அப்பாற் பத்துங் குறிப்பொடு கொள்ளும்,2**

என அஃறிணைக் குறிப்புவினை அதிகாரப்பட்டு நின்ற

விடத்தும் கூறி, நிலைப்பொருண்மைக் குறிப்போடு காலந்தோன்று மாற்றையும், இன்னின்ன சொற்கள் நிலைப்பொருண்மைக்கு உரியன என்பதையும் கூறியுள்ளார். இருதிணைக் குறிப்புவினை இலக்கண முணர்த்தும் இம்மூன்று நூற்பாக்களின் வழிநின்று ஏற்ற பெற்றி ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்பவற்றாலும், இலேசாலும் கொள்ளத்தக்கவற்றைக் கூட்டி முடிப்பின், குறிப்புவினைகள் அமையுமாற்றை,

குழையினர்/யினன்/யினள்/யின/யிற்று
குழையர்/யன்/யள்/ய/யது ஆறாம் வேற்றுமைப் பெயரடி உடைமைப்பொருள்

அல்லர்/லன்/லள்/ல/லது; அன்று

இல்லர்/லன்/லள்/ல/லது; இன்று

உளர்/ளன்/ளள்/ள/ளது; உண்டு

வல்லர்/லன்/லள்/ல/லது ஆறாம் வேற்றுமைக் குறிப்படி உடைமைப் பொருள்

கரியர்/யன்/யள்/ய/யது ஆறாம் வேற்றுமைப் பண்புடைப்பொருள்

இல்லத்தார்/தன்/தள்/த/தது ஏழாம் வேற்றுமை இடப்பொருள்

புலியன்னர்/னன்/னள்/ன/னது ஒப்புப்பொருள்

பெருந்தோளர் /ளன்/ளள்/ள/ளது சினை முதற்பொருள்

என வரையறுத்துக் காட்டலாம்.

உரையாசிரியர்கள், ஐயாட்டையன், துணங்கையன் என முறையே ஏழாம் வேற்றுமைக் காலப்பொருள் பற்றயும், வினை செய்யிடம் பற்றியும் குறிப்புவினைகள் தோன்றும் எனத் தன்னினம் முடித்தலாற் கூட்டிமுடித்தனர்.

இவ்வாசிரியர், உரையாசிரியர்கள் கொண்ட காலப்பொருளை ஏற்றும்; ஆறாம் வேற்றுமைப் பெயரடி உடைமைப் பொருளையும், ஆறாம் வேற்றுமைக் குறிப்படி உடைமைப் பொருளையும் குணம் என்ற ஒன்றனுள் அடக்கியும்; புதுமையாகத், தொழில் என்ற ஒன்றைக் கூட்டியும், ஒப்புப்பொருளை விடுத்தும் குறிப்புவினையின் தோற்றத்திற்கு நிலைக்களன் அமைத்தார். ஒப்புப்பொருளை விடுத்தது குன்றக் கூறலேயாம் என்க.

தொழிலடியாகவும் குறிப்புவினை பிறக்கும் என இவ்வாசிரியர் கூறியதனால் அதற்கு நடையன், சொல்லன் என்பன எடுத்துக்காட்டப்பட்டன. அவை ஆறாம் வேற்றுமை குறிப்படி உடைமைப்பொருள் ஆதலின், இவ்வாசிரியர் அமைத்த குணத்துள் அடங்கும். நடை, சொல் என்பவற்றுள் தொழிற்பொருண்மையாகிய புடைபெயர்ச்சி இல்லை, தொழிற்குக் காரணமான வினையே உளது ஆதலின், அவற்றைத் தொழிற் பொருண்மைக்கு உரியன எனல் மெய்ம்மை நிலையாகாது எனக் கொள்க.

நடை, சொல் என்பவற்றில் வினை உண்டு என்பதே போல், அல், இல், உள், உடை, அன் என்பவற்றிலும் வினை உண்டு. 'யாம் எந்தை இலம்', 'யாம் எந்தை உடையம்', 'அவன் புலியன்னான்' என இவ்வாறு அவை செயப்படு பொருளை ஏற்று நிற்பதாலும்; அவன் அல்லன், அது அன்று, அவர் அல்லர் என இவ்வாறு பயனிலைகளாகவே வருதலாலும்; பெற்றுடையன், கொடுத்துளன் என இவ்வாறு வினையெச்சங்களால் தழுவப்பட்டு நிற்பதாலும்; அன்றி இன்றி என இவ்வாறு வினையெச்சங்களைப் பிறப்பிப்பதாலும், அவன் வந்திலன்/பொருளுடையன்/நல்லனல்லன் என இவ்வாறு வரும் வாக்கியங்களில் வரும் குறிப்புவினைகளின் இடத்தில் முறையே சென்றான், தந்தான், நல்லனாயினான் ஆகிய தொழில்வினைகளைப் பொருத்திக் காணின் வாக்கிய அமைப்புச் சிதையாமலிருக்கிறதேயன்றிப் பெயரைப் பொருத்திக் காணின் வாக்கிய அமைப்புச் சிதைந்தொழியும் ஆதலானும்; தொழில் நிகழ்ச்சியும், குறிப்புநிலையும் காலத்தைத் தோற்றுவிப்பதால், அவற்றிற்குக் காரணமான வினை இரண்டிலும் அமைந்து கிடப்பதாம் என்பது முன்னைய நூற்பா உரையாற் போதரும் ஆதலானும் அது நன்கு புலனாகும்.

நன்னூலார் போன்ற இலக்கணப் புலவர் வினை பற்றிய உண்மையைத் தெளிவுபட உணர்த்தாததன் விளைவால், நங்காலத் தமிழறிஞர் பலர் குறிப்பு வினையில் காலக்குறிப்பு இல்லை எனவும்;1 பயனிலைகளாக வரும் பெயர்களே குறிப்பு வினைகள் எனப்படுகின்றன, அவற்றை எளிதிற் பெயர்ப் பயனிலைகள் எனலாம் எனவும்;2 குறிப்பு வினை என்ற ஒன்றே இல்லை. சில பெயர்கள் வழங்கும் முறைமையிற் குறிப்புவினை ஆகின்றன எனவும்3 முடிவு கூறுவாராயினர். வீரமாமுனிவர் பெயர்ச் சொற்கள் வினையாகப் பயன்படும் பொழுது குறிப்பு

வினைகள் எனப்படுகின்றன4 எனவும்; டாக்டர் கால்டுவெல், குறிப்புவினை ஐம்பால் மூவிடங்களில் வழங்கும்; அதை நிகழ்காலம் ஒன்றிற்கே உரியதாகவோ, காலமில்லாததாகவோ கொள்ளலாம் எனவும்5 கூறியுள்ளதில் வியப்பில்லை.

இவ்வாசிரியர், 'வினைமுதல் மாத்திரை விளக்கல் வினைக் குறிப்பே' என்றார். தொல்காப்பியர், செயப்படு பொருளின் தோற்றம் பற்றி,

(1.History of Grammatical Theories in Tamil-Dr. P.S.S.-P. 145. 2/ The origin and Development of verb in Tamil-Dr.M. Varadarajan-p.52. 3. Tamil Culture (1959)-p.92, 4. A. Grammar of High Tamil-p. 45; 5. Caldwell's Comparative Grammar-p. 475. )

**எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்**

**பவ்விரு முதலில் தோன்று மதுவே,1**

எனக் கூறியுள்ளமையானும்,

**யாம் எந்தை இலமே,2**

**இவ்வென அறியும் அந்தந்தமக் கிலவே,3**

என இவ்வாறு செய்யுள் வழக்கு உளதாலும் குறிப்புவினை செய்யப்படுபொருளை விளக்கிநிற்றல் தள்ளமுடியாத உண்மையாகும். குறிப்புவினை காலத்தை விளக்கிநிற்றல் பற்றி முன்னர் உரைத்தாம். அது கருவி நிலம் என்பன பற்றித் தொழில்வினை விளக்கிநிற்குமாறே விளக்கிநிற்கு மென்பது, நச்சினார்க்கினியர் "வனைந்தான் என்னுந் தெரிநிலை முற்றுச்சொல் 'செய்தான்' என்னும் காரியத்தினை நிகழ்த்தும் காரணங்கள் எட்டினையும் உள்ளடக்கி வினை முதலோடு அமைந்து மாறிநின்று அவாய்நிலை தோன்றிய காலத்துச் செயப்படுபொருள் முதலிய ஏழினையும் விரித்துநிற்குமாறு போல 'உடையன்' என்னும் வினைக்குறிப்பு முற்றுச்சொல்லும், 'உடையனாய் இருந்தான்' என விரிந்துழி உணரப்படும் காரியத்தினை நிகழ்த்தும் காரணங்கள் எட்டினையும் உள்ளடக்கி வினைமுதலோடு அமைந்து மாறி நின்று அவாய்நிலை தோன்றிய காலத்துச் செயப்படுபொருள் முதலிய ஏழினையும் விரித்துநிற்கும்" எனக் கூறியுள்ளமையால் நன்கு தெளிவுறும். சங்கரநமச்சிவாயரும் இக்கொள்கை யினரே என்பது அவருரையாற் புலனகாநிற்கும். அவர் 'ஆறும் உண்டென்க' என்றதைத் தொழிலொழியக் கொள்க.

(2)

**321. அவைதாம்,**
**முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி**
**ஒன்றற் குரியவும் பொதுவு மாகும்.**

அவை தாம்,
முற்றும் பெயர் வினை எச்சமும் ஆகி
ஒன்றற்கு உரியவும் பொதுவும் ஆகும்.

avaiṭām,
muṟṟum peyarviṉai essamum āki
oṉṟaṟku uriyavum poṭuvum ākum.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**sub-division of verbs into finite verbs and participles**

These (verbs) are classified into those which are Finite and those which are Relative and Verbal Participles; they possess either one or all the distinctions of class, Gender and persons.

## ஒப்புமைப் பகுதி

குறிப்பினும் வினையினும் நெறிபடத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம்
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்குமோ ரன்ன உரிமையும்
அம்மூ வுருபின தோன்ற லாறே
(தொல். சொல்.: 201)

அவைதாம்
முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி
ஒன்றற்கு உரியவும் பொதுவும் ஆகும்
(இ.வி.: 229)

---

பாடவேறுபாடு.:-

1. பல திணைக்கும்

**குறிப்பினும் வினையினும் தோன்றி காலமொடு**
**வரும்வினைச் சொல்லெலாம் உயர்திணைக்கு உரிமையும்**
**அஃறிணைக்கு உரிமையும் ஆமிரு திணைக்கும்**
**ஒப்ப உரிமையும் எனமுக் கூற்றன**

(மு.வீ.: 597)

## மயிலை நாதர்

எ–ன், மேற்சொன்ன வினை வினைக்குறிப்புகட்கு எய்தியதோர் விதி உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– மேல் வினையும் வினைக்குறிப்புமென்று சொல்லப்பட்ட இரண்டும், முற்றென்றும் பெயரெச்சமென்றும் வினையெச்சமென்றுமாகி, ஒருதிணைக்கே உரியவும் [1]இருதிணைக்குமுரியவும் ஒருபாற்கே உரியவும் பலபாற்குரியவும் ஓரிடத்திற்கேயுரியவும், பலவிடத்திற்குரியவுமாம், எ–று.

உதாரணம் தத்தம் சிறப்புவிதிச் சூத்திரங்களுட் காண்க.

## சங்கர நமச்சிவாயர்
## சிவஞான முனிவர்

எ–னின், மேல் தெரிநிலை குறிப்பு எனத் தொகுத்து உணர்த்திய வினைச்சொற்களை வகுத்து உணர்–ற்று.

இ–ள்.:– மேல் இரண்டு சூத்திரத்தானும் கூறிய தெரிநிலையாயும் குறிப்பாயும் வரும் வினைச்சொற்கள்தாம் முற்று வினைச்சொற்களும் பெயரெச்ச வினைச்சொற்களும் வினையெச்ச வினைச்சொற்களுமாகித் திணை பால் இடங்களின் ஒன்றற்கு உரியனவும் பொதுமையின் நிற்பனவும் ஆகும், எ–று.

> திணை பால் இடங்களின் என்பது இசையெச்சம். முக்காலங்களின் ஒன்றற்கு உரியவும் பொதுவுமாமாறு பதவியலுள் போந்தமையின் அஃதொழித்துத் திணைபாலிடங்களின் என்றாம். உதாரணம் தத்தம் சிறப்புச் சூத்திரங்களான் உணர்க.
>
> *இனி 'ஒருமொழி ஒழிதன் னினம்கொளற்கு உரித்தே' என்பதனான் இங்ஙனம் திணை பால் இடம் பொழுது இவை தீண்டி, ஒன்றற்கு உரியவும் பொதுவுமாய் நிற்பன அன்றிப் பிறவாற்றான் ஒன்றற்கு உரியவும் பொதுவுமாய் வருவனவும் சிலவுள எனக் கொள்க. அவையாவன :– பிரிவர், ஆடுவர் : இவை தன் வினையொன்றற்கே உரியன. பிரிப்பர், ஆட்டுவர் : இவை பிற*

*வினையொன்றற்கே உரியன. "தேற்றா ஒழுக்கம் ஒருவன்கண் உண்டாயின்" [1]"நட்பாடல் தேற்றாதவர்" எனவும், அவனைத் தேற்றிக் கெடுத்தான், அவளைத் தேற்றிப் பிரிந்தான் எனவும் இவை சொல்லொன்றே தன்வினையும் பிறவினையும் ஆயின. [2]"தொல்காப்பியன் எனத் தன்பெயர்தோற்றி", இவன் வெளுத்தான் இவைபோல்வனவும் அது. உண்பான், உண்ணான்: இவை விதிவினை மறைவினை. செய்யாய், செய்யீர், [3]"மகன் எனல் மக்கட்பதடி எனல்", அல்லும்பகலும் அருச்சிக்க யாமந்தோறும் வல்லார், வல்லார் மாட்டாதார், வல்லார் திறைகொள்வர், வல்லார் திறைகொடுப்பர், அகல்விசும்பிலார், அருளான், வெகுளான் : இவை சொல்லொன்றே விதிவினையும் மறைவினையும் ஆயின. உண்ட சாத்தன், உண்டசோறு : இவை செய்வினை செயப்பாட்டுவினை. புலிகொன்ற யானை, மீன்விழுங்கினவன், ஒன்னார் வணங்கினான், அவள் விரும்பினவன் இவன், அறிந்துவந்தான், தவரடிபுனைந்த தலைமையோன்; இவை சொல்லொன்றே செய்வினையும் செயப்பாட்டுவினையும் ஆயின. சாத்தன் நடந்தான், கால் நடந்தது: இவை முதல்வினை சினவினை. வனம் பொலிந்தது, படை பொருதிற்று, அவன் பருத்தான் அருக்கன் உருக்கினான்: இவை போல்வன எல்லாம் முதல்வினையும் சினைவினையுமாயின. தேடிய பொருள், தேடிய வந்தான், ஓடிய புரவி, ஓடிய விழுந்தான் எனவும்; பாங்கனொடு கூடிய தலைவன், தலைவியொடு கூடிய வந்தான் எனவும் இவை சொல்லொன்றே ஈரெச்சமாயின என அறிக. இவைபோல்வன பிறவும் அன்ன.*

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், மேற்சொன்ன தெரிநிலை வினை, குறிப்பு வினைக்கு எய்தியதோர் இயல்பு கூறுகின்றது.

இ-ள்.:- அவைதாம் - மேல் தெரிநிலை வினைச்சொல் குறிப்பு வினைச்சொல் என்று சொல்லப்பட்ட இரண்டும், முற்றும் - தெரிநிலை முற்றென்றும் குறிப்புவினை முற்றென்றும், **பெயர்வினை எச்சமுமாகி** - தெரிநிலைவினைப் பெயரெச்சமென்றும் குறிப்பு வினைப் பெயரெச்சமென்றும்

தெரிநிலை வினையெச்சமென்றும் குறிப்பு வினையெச்சமென்றும் ஆகி, **ஒன்றற்குரியவும்** – ஒரு திணை ஓர் பால் ஓர் இடத்திற்கு உரியவும், **பொதுவுமாகும்** – இரு திணைக்கும் பல பாற்கும் பல இடத்திற்கே உரியவுமாம், எ – று.

## விசாகப் பெருமாளையர்

இது, முன்னே தெரிநிலை குறிப்பெனத் தொகுத்துணர்த்திய வினைச்சொற்களை வகுத்துணர்த்துகின்றது.

**இ–ள்.:–** **அவைதாம்**–முன்னிரண்டு சூத்திரங்களாலுந் தெரிநிலையாயுங், குறிப்பாயும் வருமென்ற வினைச்சொற்கள், **முற்றும்**– முற்றுவினைச்சொற்களும், **பெய (ரெச்சமும்)** – பெயரெச்ச வினைச்சொற்களும், **வினையெச்சமும்** – வினையெச்ச வினைச்சொற்களும், **ஆகி** – ஆகி, **ஒன்றற்குரியவும்**–திணை பாலிடங்களுள், ஒன்றற்குச் சிறப்பாய் வருவனவும், **பொதுவும்**–பலவற்றிற்குப் பொதுமையினிற்பனவும், **ஆகும்** – ஆகும், எ–று. இவற்றிற்கு உதாரணம் தத்தஞ்சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

> இனி **"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே"** என்பதனால், பிறவழியால் ஒன்றற்குரியவும் பொதுவுமாய் நிற்பனவுஞ் சிலவுளவெனக் கொள்க. அவைவருமாறு: நடந்தான் – தன்வினை, நடத்தினான்–பிறவினை, வெளுத்தான், நடத்தல்செய்தான் – அவ்விரண்டிற்கும் பொதுவினை, நடந்தான்–விதிவினை, நடவான் – மறைவினை, சாவான், வேவான்– அவ்விரண்டற்கும் பொதுவினை, உண்பான்–செய்வினை, உண்ணப்பட்டது– செயப்பாட்டுவினை, இவற்றிற்குப் பொதுவினை வந்தவிடத்திற் காண்க. இன்னும், தேடிய சாத்தன் தேடியவந்தான், எனச் சொல்லொன்றே ஈரெச்சங்களுக்கும் பொதுவாகுகை முதலானவையுங் கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

முற்கூறிய இருவகைவினையும் இத்தனை பகுதியவெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

அவைதாம்,

முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி

ஒன்றற் குரியவும் பொதுவு மாகும்.

(அவை தாம்

முற்றும் பெயர்வினை யெச்சமும் ஆகி

ஒன்றற்கு உரியவும் பொதுவும் ஆகும்.)

**இ–ள்.:** முன்னிரண்டு சூத்திரங்களாலுந் தெரிநிலையாயுங் குறிப்பாயும் வருமென்ற வினைச்சொற்கள், முற்றுவினைச்சொற்களும் பெயரெச்சவினைச் சொற்களும், வினையெச்சவினைச் சொற்களுமாகித் திணைபாலிடங்களுள் ஒன்றற்குச் சிறப்பாய்வருவனவும் பலவற்றற்குப்பொதுமையினிற்பனவுமாகும்.

9. முற்றுக்கும் எச்சத்திற்கு தம்முள் வேற்றுமை என்ன?

பிறிதொரு சொல்லோடு இயைபாது தாமே தொடராதற்கு ஏற்கும் வினைச்சொல் முற்றாம். பிறிதோர் சொற்பற்றியல்லது நிற்றலாற்றா வினைச்சொல் எச்சமாம்.

இவற்றிற்கு உதாரணந் தத்தஞ் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க. இனி ''ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே'' என்பதனால், பிறவழியால் ஒன்றற்குரியவும் பொதுவுமாய் நிற்பனவுஞ் சிலவுளவெனக் கொள்க.

வ–று.;–

(1) நடந்தான் தன்வினை; நடத்தினான் பிறவினை; வெளுத்தான் தன்வினை பிறவினையிரண்டற்கும் பொதுவினை.

(2) நடந்தான் விதிவினை; நடவான் மறைவினை; சாவான், வேவான் விதிவினை மறைவினையிரண்டற்கும் பொதுவினை.

(3) உண்டான் செய்வினை; உண்ணப்பட்டது செயப்பாட்டு வினை; புலிகொன்றயானை, முன் விழுங்கினவன் செய்வினை செயப்பாட்டுவினை யிரண்டற்கும் பொதுவினை.

(4) தேடியசாத்தன், தேடியவந்தான் எனச் சொல்லொன்றே பெயரெச்சம் வினையெச்சமிரண்டற்கும் பொதுவாயின. இவைபோல்வன. பிறவுமன்ன.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மேலே தொகுத்துச் சொன்ன வினைச் சொற்களை வகுத்துணர்த்துகின்றது.

**இ–ள்.:–** அவைதாம் – மேலே தெரிநிலை குறிப்பெனத் தொகுத்துச் சொல்லிய வினைச்சொற்கள்தாம், **முற்றும் பெயர் வினை யெச்சமுமாகி** – முற்று வினைச்சொற்களும் பெயரெச்ச வினை வினையெச்சவினைச் சொற்களுமென மூன்று வகையாகி, **ஒன்றற்குரியவும்** – திணை பால் இடங்களில் ஒன்றற்குரியனவும், **பொதுவு மாகும்** – அவற்றிற்கெல்லாம் பொதுமையில் நிற்பனவுமாம், எ–று.

முக்காலங்களில் ஒன்றற்கு உரியவும் பொதுவுமாந் தன்மை பதவியலுள்ளே கூறினமையால் இங்கே திணை பாலிடங்களி னென்றார், உதாரணந் தத்தஞ் சிறப்புச் சூத்திரங்களுட் காண்க.

இனி, 'ஒரு மொழியொழி தன்னினங் கொளற்குரித்தே' என்பதனால் இவ்வாறு திணைபால் இடங் காலங்களில் ஒன்றற்குரியவும் பொதுவுமாய் நிற்பனவன்றிப் பிற வழியா லொன்றற்குரியவும் பொதுவ்மாய் வருவனவுஞ் சிலவுள வெனக் கொள்க. அவை வருமாறு: பிரிவர், ஆடுவர் என்றாற் போல்வன தன்வினைக்கே யுரியன; பிரிப்பர், ஆட்டுவர் என்றாற் போல்வன பிறவினைக்கேயுரியன; தேற்றா வொழுக்கம், நட்பாடறேற்றாதவர் எனவும் அவனைத் தேற்றிக் கொடுத்தான், அவனைத் தேற்றிப் பிரித்தான் எனவும் வரும். தேற்றென்பதும்; தொல்காப்பியனெனத்தன் பெயர் தோற்றி, இவன் வெளுத்தான் என வரும்.

இவை போல்வனவும் தன்வினை பிறவினை யிரண்டிற்கும் பொது. உண்பான் உறங்குவான் என்றாற்போல்வன விதிவினை; உண்ணான் உறங்கான் என்றாற் போல்வன மறைவினை. இந்த விதிவினை மறைவினைகளை முறையே உடன்பாட்டு வினை எதிர்மறை வினையெனவும் வழங்குவர், செய்யாய், செய்யீர், மகனெனல், மக்கட்பதடியெனல், அர்ச்சிக்க வல்லார், மாட்டார், வல்லார் திறைகொள்வர், வல்லார்திறைகொடுப்பர், விசும்பிலார், காவலார், அருளார் என்றாற் போல்வன விதி மறை யிரண்டிற்கும் பொதுவாயின.

உண்டான், உண்ட சாத்தன், உண்டு போனான் என்றாற் போல்வன செய்வினை வீடுகட்டினது, அவனேறினது குதிரை, அவனெ ழுதினது இவ்வெழுத்து, உண்டசோறு என்றாற் போல்வன செயப்பாட்டுவினை; புலிகொன்றயானை, மீன்விழுங்கினவன், ஒன்னார் வணங்கினானவன், அவள் விரும்பினவனிவன், அறிந்து வந்தான், தவரடிபுனைந்த தலைமையோன், என்றாற் போல்வன செய்வினை, செயப்பாட்டுவினை யிரண்டிற்கும் பொது. அவன் நடந்தான், கால்நடந்தது, அவன்பார்த்தான், கண்பார்த்தது, காடு பொலிந்தது, படைபொருதிற்று, அவன் பருத்தான், அருக்கன் உருக்கினான், என்றாற் போல்வன முதல் சினை யிரண்டிற்கும் பொது.

தேடியபொருள், தேடியவந்தான், ஓடியபுரவி, ஓடியவிழுந்தான்,

கூடியதலைவன், கூடியவந்தான், என்றாற் போல்வன சொல்லொன்றே பெயரெச்சமும் வினையெச்சமுமாயின.

யானுண்டு, யானுண்டு வந்தேன், யான்வந்து, யான் வந்து போனேன், யான்சென்று, யான் சென்று மீண்டேன் என்றாற் போல்வன சொல்லொன்றே முற்றுவினையும், வினையெச்சமுமாயின. யானுண்டு, வந்து, சென்று என்பன யானுண்டேன், வந்தேன், சென்றேன் என்பது படநின்ற தன்மை பொருமை யிறந்தகால வினைமுற்றுக்களெனக் காண்க.

அவைதாம் ஆகி, உரியவும் பொதுவுமா மென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :-** **அவை தாம்** -(மன் தெரிநிலை குறிப்பு என்ற) அவ்வினைச் சொற்கள், **முற்றும்**- வினைமுற்றும், பெயர்வினை **எச்சமும்** - பெயரெச்சமும் வினையெச்சமும், **ஆகி** - என்ற மூன்று வகையாகி, **ஒன்றற்கு உரியவும்** - (திணைபால் இடங்களுள்) ஒன்றற்குச் சிறப்பாய் வருவனவும், **பொதுவும்** (பலவற்றிற்குப்) பொதுவாய் நிற்பனவும், **ஆகும்** -

உதாரணம்

| | | |
|---|---|---|
| நடந்தான், பொன்னன் | - | இவை ஆண்பாலுக்கே உரியன. |
| செய்க, இல்லை | - | இவை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொது. |
| செய்த, பெரிய | | இப்பெயரெச்ச வினையெச்சங்களும் ஐம்பால் |
| செய்து, பைய | | மூவிடங்களுக்குப் பொதுவாதல் காண்க. |

குறிப்பு :-

இனி, பிறவழிகளால் ஒன்றற்கு உரியவும் பொதுவுமாய் வருவனவும் சில உளவாம்.

**உ-ம்:-**

**1.தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவினை :-** 'வெளுத்தான்', 'தேற்றாதவர்'- இவை 'தான் வெளுத்தான்', 'அறியாதவர்' எனப் பொருள்படும்போது தன்வினை; 'ஒன்றை வெளுக்கச் செய்தான்', 'அறிவியாதவர்' எனப் பொருள்படும்போது பிறவினை.

**2. உடன்பாட்டுக்கும் எதிர்மறைக்கும் பொதுவினை :-** 'சாவான்' 'செய்யாய்' - இவை, 'இறப்பான்', 'செய்' எனப்

பொருள்படும்போது உடன்பாட்டு வினை; 'இறவான்', 'செய்யமாட்டாய்' எனப் பொருள்படும் போது எதிர்மறைவினை. (உடன் பாட்டுவினை, விதிவினை என்பன ஒன்றே)

**3. செய்வினைக்கும் செயப்பாட்டு வினைக்கும் பொதுவினை:-** 'கொன்ற யானை', 'விழுங்கின மீன்' - இவை 'கொல்லுதலைச் செய்த', 'விழுங்குதலைச் செய்த' எனப் பொருள் படும்போது செய்வினை; 'கொல்லப் பட்ட', 'விழுங்கப்பட்ட' எனப் பொருள் படும்போது செயப்பாட்டு வினை.

**இன்னும் பலவகையால் வரும் பொதுவினை:-**

| | | | |
|---|---|---|---|
| 1. உண்டு | - | தன்மை ஒருமை வினைமுற்று | (உண்டேன்) |
| | | இறந்தகால வினையெச்சம் | (புசித்து) |
| | | குறிப்பு வினைமுற்று | (உளது) |
| 2. ஓதவான் | - | தொழிற்பெயர் | (படித்தல்) |
| | | எதிர்கால வினைமுற்று | (படிப்பான்) |
| | | எதிர்கால வினையெச்சம் | (படிக்க) |
| 3. நிறைப்ப | - | பலர்பால் வினைமுற்று | (நிறைப்பார்) |
| | | பலவின்பால் வினைமுற்று | (நிறைப்பன்) |
| | | செயவெனெச்சம் | (நிறைக்க) |

(பிறவும் இவ்வாறே வருதல் காண்க.)

## ஆறுமுக நாவலர்

**இ-ள்.: அவை தாம் :-** முன்னிரண்டு சூத்திரங்களாலுந் தெரிநிலையாயுங் குறிப்பாயும் வருமென்ற வினைச்சொற்கள், **முற்றும் பெய(ரெச்சமும்) வினையெச்சமும் ஆகி** - முற்றுவினைச் சொற்களும் பெயரெச்ச வினைச்சொற்களும் வினையெச்ச வினைச் சொற்களுமாகி, **ஒன்றற்கு உரியவும் பொதுவும் ஆகும்** - திணைபாலிடங்களுள் ஒன்றற்குச் சிறப்பாய் வருவனவும் பலவற்றிற்குப் பொதுமையி னிற்பனவுமாகும், எ-று.

இவற்றிற்கு உதாரணந் தத்தஞ்சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

இனி **"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே"** என்பதனால், பிறவழியால் ஒன்றற்குரியவும் பொதுவுமாய் நிற்பனவுஞ் சிலவுளவெனக் கொள்க.

வ-று.:-

(1) நடந்தான் - தன்வினை; நடத்தினான் - பிறவினை; வெளுத்தான்- தன்வினை, பிறவினை யிரண்டற்கும்

பொதுவினை.

(2) **நடந்தான்** – விதிவினை; **நடவான்** – மறைவினை; **சாவான், வேவான்** – விதிவினை, மறைவினை யிரண்டற்கும் பொதுவினை.

(3) **உண்டான்** – செய்வினை; **உண்ணப்பட்டது** – செயப்பாட்டு வினை; **'புலிகொன்ற யானை', 'மீன் விழுங்கினவன்'** – செய்வினை செயப்பாட்டுவினை யிரண்டற்கும் பொதுவினை.

(4) **'தேடிய சாத்தன்', 'தேடிய வந்தான்'** எனச் சொல்லொன்றே பெயரெச்சம் வினையெச்ச மிரண்டற்கும் பொதுவாயின. இவை போல்வன பிறவுமன்ன.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– அவைதாம்** – முன்னிரண்டு சூத்திரங்களாலுந் தெரிநிலையாயுங் குறிப்பாயும் வருமென்ற வினைச்சொற்கள், **முற்றும்**( பெய ரெச்சமும்), **வினையெச்சமும் ஆகி** – முற்றுவினைச்சொற்களும் பெயரெச்ச வினைச்சொற்களும் வினையெச்ச வினைச்சொற்களுமாகி, **ஒன்றற்கு உரியவும் பொதுவும் ஆகும்** – திணைபாலிடங்களுள் ஒன்றற்குச் சிறப்பாய் வருவனவும் பலவற்றிக்குப் பொதுமையி னிற்பனவுமாகும். எ–று.

இவற்றிற்கு உதாரணந் தத்தஞ் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

இனி 'ஒருமொழி யொழிதன் னினங் கொளற் குரித்தே' என்பதனால் பிறவழியால் ஒன்றற்குரியவும் பொதுவுமாய் நிற்பனவுஞ் சிலவுளவெனக் கொள்க.

**வ–று:–**

(1)நடந்தான் தன்வினை; நடத்தினான் பிறவினை; வெளுத்தான் தன்வினை பிறவினையிரண்டற்கும் பொதுவினை.

(2)நடந்தான் விதிவினை; நடவான் மறைவினை; சாவான், விதிவினை மறைவினை யிரண்டற்கும் பொதுவினை.

(3)உண்டான் செய்வினை; உண்ணப்பட்டது செயல்பாட்டுவினை; புலிகொன்ற யானை, மீன் விழுங்கினவன் செய்வினை செயப்பட்டுவினை யிரண்டற்கும் பொதுவினை. (புலியைக் கொன்ற யானை, புலியாற் கொல்லப்பட்ட யானை என்று பொருள்). (மீனை விழுங்கின்வன், மீனால் விழுங்கப்பட்டவன் என்று பொருள்).

(4)தேடிய சாத்தன். தேடிய வந்தான் எனச் சொல்லொன்றே பெயரெச்சம் வினையெச்சமிரண்டிற்கும் பொதுவாயின. இவை

போல்வன பிறவுமன்ன.

உண்டு, வந்து, சென்று என்பன முற்று வினையாயும் எச்சவினையாயும் வந்தன. (உண்டேன், வந்தேன், சென்றேன் என்று பொருள் தரும்போது முற்றுவினை; எச்சவினைப் பொருள் வெளிப்படை.)

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– அவை தாம்** – (முன் இரண்டு சூத்திரங்களாலும் தெரிநிலை குறிப்பு என்ற) அவ்வினைச்சொற்கள், **முற்றும்** – வினைமுற்றும், **பெயர் வினை எச்சமும்** – பெயரெச்சமும் வினையெச்சமும், **ஆகி** – என்று மூன்று வகையாகி, **ஒன்றற்கு உரியவும்,** – (திணை பால் இடங்களுள்) ஒவ்வொன்றற்குச் சிறப்பாக வருவனவும், **பொதுவும்** – (பலவற்றிற்குப்) பொதுவாக நிற்பனவும், **ஆகும்** – ; எ – று.

இவற்றிற்கு உதாரணம், பின் வருஞ் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

இனி, பிறவழிகளால் ஒன்றற்கு உரியவும் பொதுவுமாக நிற்பனவும் சில உண்டென்று கொள்க.

உ–ம்.:–

தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவினை:– **வெளுத்தான், தேற்றாதவர்.** இவை – தான் வெளுத்தான், அறியாதவர் என்று பொருள் படும்போது, தன்வினை; ஒன்றை வெளுக்கச் செய்தான், அறிவியாதவர் என்று பொருள்படும் போது, பிறவினை. (இவையே செயப்படுபொருள் குன்றிய வினைக்கும் செயப்படுபொருள் குன்றாவினைக்கும் பொதுவினைக்கும் உதாரணமாம்)

உடன்பாட்டுக்கும் எதிர்மறைக்கும் பொதுவினை:– சாவான் செய்யாய். இவை இறப்பான, செய் என்று பொருள்படும்போது உடன்பாட்டு வினை. இறவான், செய்யமாட்டாய் என்று பொருள்படும்போது எதிர்மறை வினை. உடன்பாட்டு வினை எனினும் விதிவினை எனினும் ஒக்கும். எதிர்மறை வினையெனினும் மறைவினை எனினும் ஒக்கும்.

செய்வினைக்கும் செயப்பாட்டு வினைக்கும் பொதுவினை:–

**கொன்றயானை, விழுங்கியு மீன்.** இவை – கொல்லுதலைச் செய்த, விழுங்குதலைச் செய்த எனப் பொருள்படும்போது, செய்வினை; கொல்லப்பட்ட விழுங்கப்பட்ட எனப்

பொருள்படும்போது, செயப்பாட்டுவினை.

இன்னும் பலவகையால் வரும் பொதுவினை:–

**உண்டு** (1) தன்மை யொருமை வினைமுற்று (உண்டேன்), (2) இறந்தகாலவினையெச்சம் (புசித்து), (3) குறிப்பு வினைமுற்று (உளது).

**ஓதுவான்**– (1) தொழிற்பெயர் (படித்தல்), (2) எதிர்காலவினை முற்று (படிப்பான்), (3) எதிர்காலவினையெச்சம் (படிக்க.)

தழைப்ப–(1) பலர்பால் வினைமுற்று (தழைப்பர்), (2) பலவின்பால் வினைமுற்று (தழைப்பன), (3) செயவெனெச்சம் (தழைக்க.)

**தேடிய**–(1) இறந்தகாலவினைமுற்று (அவைதேடின), (2) வியங்கோள் வினைமுற்று (தேடுக), (3) இறந்தகாலப் பெயரெச்சம் (தேடினசாத்தன்), (4) எதிர்காலவினையெச்சம் (தேடுதற்கு). பிறவும் இவ்வாறே காண்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:–** அவை தாம் – முன்னிரண்டு சூத்திரங்களாலுந் தெரிநிலையாயுங் குறிப்பாயும் வருமென்ற வினைச்சொற்கள், **முற்றும் பெயர் (எச்சமும்) வினையெச்சமும் ஆகி** – முற்றுவினைச் சொற்களும் பெயரெச்ச வினைச் சொற்களும் வினையெச்ச வினைச் சொற்களுமாகி, **ஒன்றற்கு உரியவும் பொதுவும் ஆகும்** – திணைபாலிடங்களுள் ஒன்றற்குச் சிறப்பாய் வருவனவும் பலவற்றிற்குப் பொதுமையினிற்பனவுமாகும். எ–று.

இவற்றிற்கு உதாரணந் தத்தஞ் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

இனி "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" (பொதுவியல் சூ–7.) என்பதனால், பிறவழியால் ஒன்றற்குரியவும் பொதுவுமாய் நிற்பனவுஞ் சிலவுளவெனக் கொள்க.

உ–ம்.:–

(1) நடந்தான் – தன்வினை; நடத்தினான் – பிறவினை; வெளுத்தான் – (தான் வெளுத்தான் எனவும் பிறனை வெளுக்கச் செய்தான் எனவும் பொருள்படுதலால்) தன்வினை பிறவினை யிரண்டற்கும் பொதுவினை.

(2) நடந்தான் – விதிவினை; நடவான் – மறைவினை; காவான், வேவான் – (செத்துப்போவான் வெந்து போவான் எனவும்,

காசமாட்டான் வேகமாட்டான் எனவும் பொருள்படுதலால்) விதிவினை மறைவினையிரண்டற்கும் பொதுவினை. (விதிவினை = உடன்பாட்டுவினை; மறைவினை = எதிர்மறைவினை.)

(3) உண்டான் – செய்வினை; உண்ணப்பட்டது – செயப்பாட்டுவினை; புலிகொன்ற யானை, மீன் விழுங்கினவன் – (புலியைக் கொன்ற யானை புலியாற் கொல்லப்பட்ட யானை எனவும், மீனை விழுங்கினவன் மீனால் விழுங்கப்பட்டவன் எனவும் பொருள்படுதலால்) செய்வினை செயப்பாட்டுவினை யிரண்டற்கும் பொதுவினை.

(4) அவன் பார்த்தான், கண்பார்த்தது; அவன் பருத்தான், உடல் பருத்தது– பார்த்தலும் பருத்தலும் முதலுக்கும் சினை (உறுப்பு)க்கும் ஒப்ப உரியவாதலின் இவை போல்வன முதல் சினை இரண்டற்கும் பொது.

(5) தேடிய சாத்தன், தேடிய வந்தான் – எனச் சொல்லொன்றே பெயரெச்சம் வினையெச்ச மிரண்டற்கும் பொதுவாயின. இவை போல்வன பிறவு மன்ன.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:– அவைதாம் –** (முன்னிரண்டு சூத்திரங்களாலும் தெரிநிலையாயும் குறிப்பாயும் வருமென்ற) வினைச்சொற்கள், **முற்றும் –** முற்றுவினைச் சொற்களும், **பெயர் வினை எச்சமும் ஆகி –** பெயரெச்ச வினைச்சொற்களும் வினையெச்ச வினைச்சொற்களுமாகி, **ஒன்றற்கு உரியவும் –** (திணைபால் இடங்களுள்) ஒன்றற்குச் சிறப்பாய் வருவனவும், **பொதுவும் –** (பலவற்றிற்குப்) பொதுமையில் நிற்பனவும், **ஆகும் –** ஆகும். எ–று

**பொ–ரை:–** மேற்கூறிய வினைச்சொற்கள் தாம் முற்றுவினைச் சொற்களும், பெயரெச்ச வினைச்சொற்களும். வுனையெச்ச வினைச் சொற்களுமாகி, (திணைபால் இடங்களின்) ஒன்றற் குரியனவும் பொதுமையில் நிற்பனவும் ஆகும்.

இவற்றிற்கு உதாரணம் பின் வரும் தத்தம் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

இனி, 'ஒரு மொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே' என்னும் பொதுவியற் சூத்திரத்தினால் பிறவழியால் ஒன்றற்குரியவும் பொதுவுமாய் நிற்பனவும் சிலவுள வெனக்கொள்க.

தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுவினை:–

உ-ம்.;-

(1) வெளுத்தான். தேர்றாதவர்.

இவை தான்வெளுத்தான், அறியாதவர் என்று பொருள் படும்போது தன்வினை; ஒன்றை வெளுக்கச் செய்தான், அறியாதவர் என்று பொருள் படும்போது பிறவினை. (இவையே, செயப்படு பொருள் குன்றிய வினைக்கும், செயப்படுபொருள் குன்றாவினைக்கும் பொது வினைக்கும் உதாரணமாம்.)

உடன்பாட்டுக்கும் எதிர்மறைக்கும் பொதுவினை:-

(2) சாவான். செய்யாய்.

இவை இறப்பான், செய் என்று பொருள் படும்போது உடன்பாட்டுவினை; இறவான், செய்யமாட்டாய் என்று பொருள் படும் போது எதிர்மறை வினை. (உடன்பாட்டுவினை யெனினும் விதிவினை யெனினும் ஒக்கும். எதிர் மறைவினை யெனினும், மறைவினை யெனினும் ஒக்கும்.)

செய்வினைக்கும் செயப்பாட்டுவினைக்கும் பொதுவினை:-

(3) கொன்றயானை விழுங்கியமீன்.

இவை கொல்லுதலைச் செய்த, விழுங்குதலைச்செய்த எனப் பொருள்படும் போது செய்வினை; கொல்லப்பட்ட, விழுங்கப்பட்ட எனப் பொருள் படும்போது செயப்பாட்டுவினை.

இன்னும் பலவகையால் வரும் பொதுவினை;-

(1) உண்டு.

தன்மை ஒருமை வினைமுற்றாகவும், இறந்த கால வினையெச்சமாகவும், குறிப்புவினை முற்றாகவும் வரும்.

(2) ஓதுவான்.

தொழிற் பெயராகவும், எதிர்கால வினைமுற்றாகயும், எதிர்கால வினையெச்சமாவும் வரும்.

(3) தழைப்ப.

பலர்பால் வினைமுற்றாகவும், பலவின்பால் வினைமுற்றாகவும், செயவெ னெச்மாகவும் வரும்.

(4) தேடிய.

இறந்தகால வினைமுற்றாகவும், வியங்கோள் வினைமுற்றாகவும் இறந்தகாலம் பெயரெச்ச மாகவும், எதிர்கால விமையெச்சமாகவும் வரும்.

பிறவும் இவ்வாறே வருதல் காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**அவைதாம்** – (முன் இரண்டு சூத்திரங்களாலுந் தெரிநிலையாயும் குறிப்பாயும் வரும் என்ற) அவ்வினைச் சொற்கள், **முற்றும்** – முற்றுவினைச் சொற்களும், **வினையெச்சமும்** – வினையெச்ச வினைச்சொற்களும், ஆகி– ஆகி, **ஒன்றற்கு உரியவும்** – திணைபால் இடங்களுள் ஒன்றற்குச் சிறப்பாய் வருவனவும், **பொதுவும்** – பலவற்றிற்குப் பொதுமையில் நிற்பனவும், **ஆகும்** – ஆகும்.

இவற்றிற்கு உதாரணம், பின்வரும் சிறப்புச் சூத்திரங்களிற் காண்க.

இனி, 'ஒருமொழி ஒழி தன் இனங்கொளற் குரித்தே' என்பதனால், பிறவழியால் ஒன்றற்கு உரியவும் பொதுவுமாய் நிற்பனவும் சில உள எனக் கொள்க.

**உதாரணம்**

| | | |
|---|---|---|
| 1. நடந்தான் | – | தன்வினை |
| நடத்தினான் | – | பிறவினை |
| வெளுத்தான் | – | (தன்வினைபிறவினைகட்குப்) பொதுவினை |
| 2. நடந்தான் | – | உடன்பாட்டுவினை |
| நடவான் | – | எதிர்மறைவினை |
| சாவான் | – | (உடன்பாடு, எதிர்மறை இரண்டிற்கும்) பொதுவினை. |
| 3. உண்டான் | – | செய்வினை |
| உண்ணப்பட்டது | – | செயப்பாட்டுவினை |
| புலிகொன்றயானை | – | 'கொன்ற' என்பது செய்வினை செயப்பாட்டு வினை இரண்டிற்கும் பொதுவினை. |
| 4. தேடிய சாத்தன் தேடிய வந்தான் | – | ஒரு சொல்லே பெயரெச்சம் வினையெச்சங் களுக்குப் பொதுவாய் வந்தது. |

## மோசசு பொன்னையா

முன்னர் இரு நூற்பாக்களிற் சொல்லப்பட்ட தொழில் வினைச்சொற்களும், குறிப்புவினைச் சொற்களும், வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம் என்னும் மூவகையாகி, திணைபால், இடங்களுள் ஒன்றினுக்கே சிறப்பாக உரிமைப்பட்டும், பலவற்றிற்குப் பொதுவாக உரிமைப்பட்டும்

நிற்பனவாம். எ–று.

திணைபால் இடங்களுள் என்பதை இசையெச்சமாகக் கொள்க. காலத்தால் ஒன்றிற்கே உரிமைப்பட்டு நிற்றலும்,1 பொதுவாக உரிமைப்பட்டு நிற்றலும் 2 முன்னர்க் கூறப்பட்டன. திணை, பால் இடங்களில் ஒன்றிற்கே உரிமைப்பட்டு நிற்பவற்றையும், பொதுவாக உரிமைப்பட்டு நிற்பவற்றையும் சிறப்பு நூற்பாக்களாற் பின்னர்க் கூறியுள்ளார். 'ஒருமொழி யொழிதன் னினங்கொளற்குரித்தே'3 என்றதனால், பிறவழியால் பொதுவாய் உரிமைப்பட்டு வழங்குவனவுங் கொள்ளப்படும். அதனானே, ஒரே சொல் வெவ்வேறு வினைவகைகளுக்குப் பொதுவாக உரிமைப்பட்டு வழங்குவனவற்றையுங் கொள்க. எ-று.

ை. பிறவழியால் பொதுவாய் உரிமைப்பட்டு வழங்குவன

1.வெளுத்தான், தேற்றதவர் – தன்வினைக்கும் பிறவினைக்கும் பொது

2.சாவான், செய்யாய் – எனல் உடன்பாட்டிற்கும் எதிர்மறைக்கும் பொது

3.கொன்றயானை, விழுங்கிய மீன் செய்வினைக்கும் செயப்பாட்டுவினைக்கும் பொது வினை. ஒரே சொல் வெவ்வேறு வினைவகைகளுக்குப் பொதுவாக வழங்குகின்றன

1.உண்டு வந்தேன், யான் உண்டு தொழில் வினை எச்சத்திற்கும் குறிப்பு வினைமுற்றுக்கும் பொது

2.அவன் ஓதுவான், செல்வான் தொழில் வினை முற்றுக்கும் தொழில் வினைஎச்சத்திற்கும் பொது

3. அவை தேடிய, தேடிய வந்தான், தேடிய பொருள் தொழில் வினைமுற்றுக்கும். தொழில் வினைஎச்சத்திற்கும், பெயரெச்சத்திற்கும் பொது

1. நன். 142–144; நன். 145; 3. நன். 358.

இவ்வாறே உள்ளவாய பிற சொற்களையும் வகைப்படுத்திக் காண்க.

(3)

## முற்றுவினை

## 322. பொதுவியல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர் முதலறு பெயரல தேற்பில முற்றே.

பொது இயல்பு ஆறையும் தோற்றிப் பொருள் பெயர்
முதல் அறு பெயர் அலது ஏற்பு இல முற்றே.

poṭu iyalpu āṟaiyum ṭōṟṟip poruḻpeyar
muṭal aṟu peyar aṭu ēṟpu ila muṟṟē.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Finite verb**

**Finite verbs defined**

Finite verbs are those which indicates the six general characteristics (of a verb) and require none but the six kinds of Nouns such as objects, &c., (to complete their meanings).

### ஒப்புமைப் பகுதி

மற்றுச் சொன் நோக்கா மரபின அனைத்தும்
முற்றி நிற்பன முற்றியன் மொழியவை
எத்திறத் தானும் பெயர்முடி பினவே

(இ.வி.: 230)

### மயிலை நாதர்

எ-ன், நிறுத்த முறையானே [1]இருமுற்றுக்கும் இலக்கண முணர்த்துதல்

---

பாட வேறுபாடு.:-

1.முற்றுக்கு
2.செய்தனேன்யான், செய்தனேம்யாம்
3.செய்கின்றேன்யான், செய்கின்றேம்யாம்
4.வேறொன்றை
5.தில்லை யாலெனின்
6.அஃதேலதுவும்.

நுதலிற்று.

**இ—ள்.:—** மேல் வினைக்கெல்லாம் பொதுவாகச் சொன்ன கருத்தன் முதல் ஆறு பொருளையுங் காட்டிப் பொருட்பெயர் முதலான ஆறுபெயரையுமேற்றுப் பின்னர் வேறொன்றையும் வேண்டாது நிற்பன, முற்றுவினைச் சொல், **எ—று.**

**வ—று.:—**

செய்தனனவன், செய்தனளவள், செய்தனரவர், செய்தது அது, செய்தன அவை; [2]செய்தனன்யான், செய்தனம்யாம்; செய்தன்னைநீ செய்தனிர்நீயிர் எனவும், செய்கின்றனனவன், செய்கின்றனளவள், செய்கின்றனரவர், செய்கின்றது அது, செய்கின்றன அவை; [3]செய்கின்றனன் யான், செய்கின்றனம் யாம் ; செய்கின்றனைநீ, செய்கின்றனிர் நீவிர் எனவும், செய்குவனவன், செய்குவளவள், செய்குவரவர், செய்குவது அது, செய்குவ அவை ; செய்குவேன்யான், செய்குவேம்யாம் ; செய்குவை நீ, செய்குவிர் நீயிர் எனவும் வினைமுற்று மூவிடத்தும் முக்காலத்தும் வந்தவாறு. வினைக்குறிப்புமுற்று; குழையினனவன், குழையினளவள், குழையினரவர், குழையிற்று அது, குழையின அவை; குழையினேன் யான், குழையினேம் யாம்; குழையினை நீ, குழையினீர் நீவிர், செலவினீர் நீவிர் என மேற்காட்டினவே கொள்க.

செய்தனனெனவே திணையும் பாலும் இடமும் கருத்தன் முதலாறும் தோற்றி, அவனென்னும் பெயரேற்றவாறும், [4]பெயர்ப்பின் வேறொன்றையும் வேண்டாதவாறும் காண்க.

குளிர்ந்தது நிலம், வந்தது கார், இற்றது கை, பரந்தது பசப்பு, வந்தது போக்கென இடமுதற்பெயரேற்றவாறு காண்க.

இதனுள் திணைபாலிடங்கள் தோன்றுமென்ற [5]தில்லையாலோ வெனின், அவை கருத்தாத் தோன்றவே தோன்றுமாதலின், அமையுமென்க. அஃதேல், தன்மை முன்னிலை வினைமுற்றுக்களில் திணைபால் தோன்றாமையின், விதந்தோதல் வேண்டும் பிறவெனின், [6]அஃதே! அதுவும், போனவோத்தினுள்,

"படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்

பெறப்படுந் திணைபா லனைத்து மேனை

இடத்தவற் றொருமை பன்மைப் பாலே"

எனச் சொன்னாரென்க.

முற்றி நிற்றலான் முற்று;

"மற்றுச்சொன் னோக்கா மரபின வனைத்து,

முற்றி நிற்பன முற்றியன் மொழியே”

என்றார், அகத்தியனார்.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், மேற்கூறிய முற்றாமாறு உணர்–ற்று.

இ–ள்:–தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் பெயரெச்சமும் பெயரெச்சக்குறிப்பும் வினையெச்சமும் வினையெச்சக் குறிப்பும் ஆகிய அறுவகை வினைக்கும் பொதுவிலக்கணமாகிய செய்பவன் முதலிய ஆறினையும் தோற்றுவித்து, பொருட்பெயர் முதலிய அறுவகைப் பெயரையும் பயனிலையாக ஏற்பனவாகி, அல்லது ஒன்றனையும் ஏலாதன முற்றுவினை வினைக் குறிப்புக்களாம் எ–று.

ஐம்பாலவாகிய வினைமுதலைத் தரும் விகுதியுறுப்புக் குறைந்த குறைச் சொல்லாகிய எச்சங்களைப் போலாது, அவ்வுறுப்போடு கூடி நிறைந்து நிற்றலின் முற்றெனப்படும் என்பார் 'ஆறையும்' என்றும், பெயரன்றி வினைச்சொல் முதலியவற்றுள் ஒன்றனையும் ஏலாதன முற்று எனவும் பெயரன்றிப் பெயர்ப் பின் வேறொன்றனையும் ஏலாதன முற்று எனவும் இருபொருள் தோன்றப் 'பெயரலது' என்றும் கூறினார்.

வ–று.:–

செய்தான் அவன், நல்லன் அவன், குளிர்ந்தது நிலம், வந்தது கார், குவிந்தது கை, பரந்தது பசப்பு, ஒழிந்தது பிறப்பு என வரும். ஏனைத் திணை பால் இடம் காலங்கள் தோறும் ஒட்டுக.

இவற்றுள் ஐம்பாலவாகிய வினைமுதலைத் தரும் விகுதி யுறுப்புக் குறையாது முற்றி நிற்றலும், பொருளாதி ஆறு பெயரையன்றி வினைமுதலியவற்றைப் பயனிலையாக ஏலாமையும், பெயர்ப்பின் வேறொன்றையும் ஏலாமையும் காண்க.

“மற்றுச்சொல் நோக்கா மரபின் அனைத்தும்
முற்றி நிற்பது முற்றியல் மொழியே”

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், நிறுத்த முறையானே தெரிநிலை வினைமுற்று, குறிப்பு வினை முற்றுக்கு இலக்கணம் கூறுகின்றது.

**இ–ள்.:–** பொதுவியல்பு ஆறையும் தோற்றி – மேல் வினைக்கெல்லாம் பொதுவாகச் சொன்ன செய்பவன் முதல் ஆறு பொருளையும் காட்டி, பொருட்பெயர் முதலறு பெயரலது – பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் எனும் அறுவகைப் பெயரையுமல்லது, ஏற்பில முற்றே – வேறொன்றையும் வேண்டாது நிற்பனவே தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம், எ–று.

உ–ம்.:–

நடந்தனன் அவன், நடந்தனள் அவள், நடந்தனர் அவர், நடந்தது அது, நடந்தன அவை, நடந்தேன் யான், நடந்தேம் யாம், நடந்தாய் நீ, நடந்தனிர் நீர், குழையினன் அவன், குழையினள் அவள், குழையினர் அவர், குழையினது அது, குழையின அவை, குழையினேன் யான், குழையினேம் யாம், குழையினை நீ, குழையினர் நீர் எனப் பெயர்ப்பின் வேறொன்றையும் வேண்டாதவாறு காண்க.

குளிர்ந்தது பொன், பரந்தது நிலம், வந்தது கார், இற்றது கை, பரந்தது பசப்பு, வந்தது போக்கு எனப் பொருட்பெயர் முதலாறும் ஏற்றவாறு காண்க.

முற்றி நிற்றலான் முற்று.

"மற்றுச்சொன் னோக்கா மரபின வனைத்து
முற்றி நிற்பன முற்றியன் மொழியே"

என்றார் அகத்தியனார்.

## விசாகப் பெருமாளையர்

இது, முற்றுவினையாமாறுணர்த்துகின்றது.

**இ–ள்.:** பொதுவியல்பாறையும் – பலவகை வினைகளுக்கும் பொதுவிலக்கணமாகிய செய்பவன் முதலாறையும், தோற்றி – தோன்றச்செய்து, பொருட்பெயர்முதல் – பொருட்பெயர் முதலாகிய, அறுபெயரலது–அறுவகைப் பெயரல்லாத மற்றொன்றையும், ஏற்பில–ஏலாதன, முற்று – முற்றுவினைக் குறிப்புகளாம், எ–று.

வ–று.:–

செய்தானவன், நல்லனவன், குளிர்ந்தது நிலம், வந்தது கார், குவிந்தது கை, பரந்தது பசப்பு, ஒழிந்தது பிறப்பு, இவை பொருண் முதலிய வாறையுங்கொண்டு முடிந்தது காண்க.

பிறவுமன்ன.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

அவற்றுள் முற்றுவினை யிலக்கணம் கூறுஞ் சூத்திரம் யாது?

பொதுவியல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர்
முதலறு பெயரல தேற்பில முற்றே.
(பொது இயல்பு ஆறையும் தோற்றி பொருட்பெயர்
முதல் அறுபெயர் அலது ஏற்பு இல முற்று ஏ.)

**இ–ள்.:** பலவகை வினைகளுக்கும் பொதுவிலக்கணமாகிய செய்பவன் முதலிய, ஆறையுந் தோன்றச்செய்து பொருட்பெயர் முதலிய அறுவகைப் பெயரையும் பயனிலையாக ஏற்பனவாகி மற்றொன்றையுமேலாதன முற்றுவினைச்சொற்களாம்.

பொதுவியல்பு ஆறுமாவன யாவை?

செய்பவன் முதலிய வாறுமாம்.

அம் முற்றுவினைகள் எவற்றோடு முடியும்?

"பொருட்பெயர் முதலறு பெயரல தேற்பில முற்றே."

**வரலாறு.:–**

**(1) தெரிநிலைவினைமுற்று:–**

செய்தான்அவன்............................பொருட்பெயர் கொண்டது.
குளிர்ந்ததுநிலம்...............................இடப்பெயர் கொண்டது.
வந்தது கார்..................................காலப்பெயர் கொண்டது.
குவிந்ததுகை.............................சினைப்பெயர் கொண்டது.
பரந்ததுபசப்பு............................குணப்பெயர் கொண்டது.
ஒழிந்ததுபிறப்பு..................................தொழிற்பெயர் கொண்டது.

**(2) குறிப்புவினைமுற்று:–**

நல்லன் அவன்..................................பொருட்பெயர் கொண்டது.
நல்லதுநிலம்...........................................இடப்பெயர் கொண்டது.
நல்லதுகார்.............................................காலப்பெயர் கொண்டது.
நல்லதுகை.....................................சினைப்பெயர் கொண்டது.
நல்லதுகருமை..............................குணப்பெயர் கொண்டது.
நல்லதுபிறப்பு................................தொழிற்பெயர் கொண்டது.

மற்றைத் திணைபாலிடங் காலங்கடோறும் ஒட்டுக.

தெரிநிலைவினைமுற்றுச் சொற்களிலே செய்பவன்முதலிய ஆறனுள் எத்தனை எவற்றால் வெளிப்படையாகத் தோன்றும்?

பகுதியாற் செயலும், விகுதியாற் செய்பவனும், இடைநிலை முதலியவற்றாற் காலமும் வெளிப்படையாகத் தோன்றும். மற்றவை குறிப்பாகத் தோன்றும்.

குறிப்புவினைமுற்றுச்சொற்களிலே செய்பவன் முதலிய ஆறனுள் எத்தனை எதனால் வெளிப்படையாகத் தோன்றும்?

குறிப்புவினைமுற்றுக்களிலே விகுதியாற் செய்பவ னொன்றுமே வெளிப்படையாகத் தோன்றும். மற்றவை யெல்லாம் குறிப்பாகவே தோன்றும்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, முற்றுவினை இலக்கண முணர்த்திற்று.

**இ—ள்.:— பொதுவியல் பாறையுந் தோற்றி** — தெரிநிலையுங் குறிப்புமாகிய முற்றுவினை எச்சவினைகளுக்குப் பொதுவிலக்கண மாகிய செய்பவன் முதலிய ஆறையுந் தோன்றச்செய்து, **பொருட்பெயர் முதலறுபெயர்** — பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்னும் அறுவகைப் பெயர்களையும் பயனிலையாக ஏற்பனவாகி, **அலது** — அல்ல தொன்றையும், **ஏற்பில முற்று** — ஏலாதன தெரிநிலையுங் குறிப்புமாகிய முற்றுவினைகளாம், **எ — று.**

எச்ச வினைகளைப் போற் குறைந்து நில்லாமல் விகுதி யுறுப்பொடு கூடி நிற்றலால் முற்றெனப்பட்டது, வினைச்சொல் முதலியவற்றுள், ஒன்றையும் கொள்ளாதன வென்பதும் பெயரன்றி அதன் பின் மற்றொன்றையுங் கொள்ளாதன முற்றுவினைகளென்பதுந் தோன்றப் '**பெயரலதேற்பில** முற்'றென்றார்.

**வ — று.:—**

செய்தான் அவன், நல்லன் அவன், வளர்ந்தது மலை, கரியது குதிரை—இவை பொருட்பெயர் கொண்டன. குளிர்ந்தது நிலம் என்பது இடம் வந்தது கார் என்பது காலம். சிவந்தது கண் என்பது சினை. பரந்தது பசப்பு என்பது குணம். ஒழிந்தது பிறப்பு என்பது தொழில் கொண்டு முடிந்தது. ஒழிந்த திணை பால் இடங் காலங்கள் தோறுமொட்டுக.

**"மற்றுச்சொன் னோக்கா மரபி னனைத்து — முற்றி**

நிற்பன முற்றியன் மொழியே”

என்றார் ஆசிரியர் அகத்தியனார். அவை,

“எத்திறத் தானும் பெயர்முடி பினவே”

என்றார் பிறரும். ‘ஏற்பிலமுற்’றென முற்றுப் பயனிலை கொண்டது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– பொது இயல்பு ஆறையும் – (பலவகைவினைகளுக்கும்) பொதுவாகிய (செய்பவன் முதலிய) ஆறையும், தோற்றி – தோன்றச்செய்து, பொருள்பெயர்முதல் – பொருள் முதலிய, ஆறுபெயர் அலது– ஆறுவகைப் பெயரல்லாத மற்றொன்றையும், ஏற்பில – ஏற்காதன, முற்று – தெரிநிலையும் குறிப்புமாகிய முற்றுக்களாம்.

குறிப்பு :–

எனவே, அவ்வினைமுற்றுக்கள் அவ்வாறு பெயர்களையுங் கொண்டுமுடியுஞ் சொல்லாகப் பெற்றுவரும் என்றதாயிற்று. எச்சவினைகளைப் போலக் குறைந்துநில்லாமல் முடிந்துநிற்றலால் ‘முற்று’ எனப்பட்டது.

உ–ம்:–

| தெரிநிலை | குறிப்பு | அறுபெயர் |
|---|---|---|
| செய்தான் இராமன். | பெரியன் இராமன். | – பொருள் |
| குளிர்ந்தது நிலம். | வலியது நிலம். | – இடம். |
| வந்தது கார். | கரியது கார். | – காலம். |
| குவிந்தது கை. | சிறிது கை. | – சினை. |
| வந்தது நன்மை. | உள்ளதுநன்மை | – குணம். |
| ஒழிந்தது பிறப்பு | கொடியதுபிறப்பு | – தொழில் |

(மற்றைப் பாலிடங்களிலும் இவ்வாறே ஒட்டிக் காண்க)

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– பொது இயல்பு ஆறையும் தோற்றி – பலவகை வினைகளுக்கும் பொதுவிலக்கணமாகிய செய்பவன் முதலிய ஆறையுந் தோன்றச் செய்து, பொருட்பெயர் முதல் அறுபெயர் – பொருட்பெயர் முதலிய அறுவகைப் பெயரையும் பயனிலையாக ஏற்பனவாகி, அலது ஏற்பு இல – மற்றொன்றையுமேலாதன, முற்று – முற்றுவினை வினைக்குறிப்புக்களாம், எ– று.

வ-று.:-

(1) தெரிநிலைவினைமுற்று :-

'செய்தானவன்' ... ... ... ... பொருட்பெயர் கொண்டது.

'குளிர்ந்தது நிலம்' ... ... ... இடப்பெயர் கொண்டது.

'வந்தது கார்' ... ... ... ... காலப்பெயர் கொண்டது.

'குவிந்தது கை' ... ... ... ...சினைப்பெயர் கொண்டது.

'பரந்தது பசப்பு' ... ... ... ... குணப்பெயர் கொண்டது.

'ஒழிந்தது பிறப்பு' ... ... ... தொழிற்பெயர் கொண்டது.

(2) குறிப்பு வினைமுற்று :-

'நல்லனவன்' ... ... ... ... பொருட்பெயர் கொண்டது.

'நல்லது நிலம்' ... ... ... ...இடப்பெயர் கொண்டது.

'நல்லது கார்' ... ... ... ... காலப்பெயர் கொண்டது.

'நல்லது கை' ... ... ... ... சினைப்பெயர் கொண்டது.

'நல்லது பசப்பு' ... ... ... ...குணப்பெயர் கொண்டது.

'நல்லது பிறப்பு' ... ... ... ..தொழிற்பெயர் கொண்டது.

மற்றைத் திணை பாலிடங் காலங்கடோறும் ஒட்டுக.

## வ. குமாரசாமிப் புலவர்

இ-ள்.:- பொது இயல்பு ஆறையும் தோற்றி - பலவகை வினைகளுக்கும், பொதுவிலக்கணமாகிய செய்பவன் முதலிய ஆறையுந் தோன்றச் செய்து, பொருட்பெயர் முதல் அறுபெயர் - பொருட்பெயர் முதலிய அறுவகைப் பெயரையும் பயனிலையாக ஏற்பனவாகி, அலது ஏற்பு இல - மற்றொன்றையுமேலாதன, - முற்று - முற்றுவினை வினைக்குறிப்புக்களாம். எ-று.

பெரும்பான்மை பற்றிப் பெயரைக்கொண்டு முடியுமென்றாரேனும் வினையைக் கொண்டு முடியும் முற்றுவினையுஞ் சிறுபான்மையுண்டு. "மார்வினையொடுமுடிமே". 'செய்கெனொருமையுஞ் செய்குமென் பன்மையும் வினையொடு முடியினும் விளம்பியமுற்றே'. என்பவற்றாலறிக.

வரலாறு

தெரிநிலை வினைமுற்று :-

செய்தானவன்....உண்கின்றான் சோறு.........

– பொருட்பெயர் கொண்டது.

குளிர்ந்ததுநிலம்..........சுடுகின்றது வானம் ...........

– இடப்பெயர் கொண்டது.

வந்ததுகார்......... நிற்கின்றது பூனை ...........

– காலப்பெயர் கொண்டது.

குவிந்ததுகை ...........நடக்கின்றது கால்...........

– சினைப்பெயர் கொண்டது.

பரந்ததுபசப்பு.........ஓங்குகின்றது புண்ணியம் ......

– குணப்பெயர் கொண்டது.

ஒழிந்ததுபிறப்பு ............ஓய்ந்தது நடை ................
– தொழிற்பெயர் கொண்டது.

குறிப்பு வினைமுற்று :–

நல்லனவன் கரியன குதிரைகள் .........
–பொருட்பெயர் கொண்டது.

நல்லதுநிலம்.பெரியது வீடு........
– இடப்பெயர் கொண்டது.

நல்லதுகார்..தீயது வேனில் ..................
– – காலட்பெயர் கொண்டது.

நல்லது கை....நெடியது கால்..................
– சினைப்பெயர் கொண்டது.

நல்லதுபசப்பு.வெய்யது செம்மை ...............
–குணப்பெயர் கொண்டது.

நல்லதுபிறப்பு. எளியது இரப்பு ..............
– தொழிற்பெயர் கொண்டது

மற்றைத் திணைபாலிடங்காலங்கடோறும் ஒட்டுக.

(சூத்) "மற்றுச் சொன்னோக்கா மரபினனைத்து, முற்றி நிற்பன முற்றியன் மொழியே". என்றார் ஆசிரியர் அகத்தியனார்.

முற்றாகவேனும் எச்சமாகவேனும் வருகின்ற தெரிநிலை

வினைகளுக்குங் குறிப்பு வினைகளுக்கும் மாணாக்கர் வேறுபாடறியின்; பகுத்துப் பார்க்கும் போது தெரிநிலை வினையின் பகுதிகள் ஏவல் போலிருக்கும். குறிப்புவினைப் பகுதிகளோ அப்படி ஏவல் போலிருக்க மாட்டா என்று ஒருவாறு சோதனையாலறிக.

வ—று:—

நடந்தான் என்னுந் தெரிநிலை வினையைப் பகுத்துப் பார்க்குமிடத்துப் பகுதியாகிய நட என்பது ஏவல்போலிருத்தல் காண்க. வெய்து, கரிது என்னுங் குறிப்பு வினைகளைப் பகுத்துப் பார்க்குமிடத்து, வெம், கரு என்னும் பகுதிகள் ஏவல்போல் வாராமை காண்க. ஏனைபவுமன்ன.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:— பொது இயல்பு ஆறையும் — (பலவகை வினைகளுக்கும்) பொதுவாகிய (செப்பவன் முதலிய) ஆறையும், தோற்றி — தோன்றச் செய்து, பொருள்பெயர் முதல் — பொருள் முதலிய, அறு பெயர் அலது — ஆறுவகைப் பெயரல்லாத மற்றொன்றையும், ஏற்பில — ஏற்காதன, முற்று — (தெரிநிலையும் குறிப்புமாகிய) வினைமுற்றுக்களாம் ; எ— று.

எனவே, அவ்வினைமுற்றுக்கள் அந்த ஆறு பெயர்களையும் கொண்டு முடியுஞ் சொல்லாகப் பெற்று வேறொன்றையும் வேண்டாது வரும் என்றதாயிற்று.

எச்சவினைகள் போலக் குறைந்து நில்லாமல் முடிந்து நிற்றலால், 'முற்று' எனப்பட்டது.

உ—ம்.:—

| தெரிநிலை. | குறிப்பு. அறுபெயர். |
|---|---|
| செய்தான் மகன் | பெரியன் மகன் —மகன்—பொருள். |
| குளிர்ந்தது நிலம் | வலியது நிலம் —நிலம் — இடம். |
| வந்தது கார் | கரியது கார் — கார் காலம். |
| குவிந்தது கை | சிறியது கை — கை —சினை. |
| வந்தது நன்மை | உள்ளது நன்மை — நன்மை — குணம். |
| ஒழிந்தது பிறப்பு | கொடியது பிறப்பு — பிறப்பு—தொழில். |

மற்றைத் திணை பால் இடம் காலங்கள்தோறும் இவ்வாறே ஒட்டுக.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– பொது இயல்பு ஆறையும் தோற்றி** – பலவகை வினைகளுக்கும் பொதுவிலக்கணமாகிய செய்பவன் முதலிய ஆறையுந் தோன்றச் செய்து, **பொருட்பெயர் முதல் அறுபெயர்** – பொருட்பெயர் முதலிய அறுவகைப் பெயரையும் பயனிலையாக ஏற்பனவாகி, **அலது ஏற்பு இல** – மற்றொன்றையு மேலாதன, **முற்று** – தெரிநிலையும் குறிப்புமாகிய முற்றுவினைகளாம். எ–று.

**உ–ம்.:–**

**தெரிநிலை வினைமுற்று :–**

செய்தானவன்..........பொருட்பெயர் கொண்டது.

குளிர்ந்தது நிலம்...........இடப்பெயர் கொண்டது.

வந்தது கார்..........காலப்பெயர் கொண்டது.

குவிந்தது கை..........சினைப்பெயர் கொண்டது.

பரந்தது பசப்பு..........குணப்பெயர் கொண்டது.

ஒழிந்தது பிறப்பு..........தொழிற்பெயர் கொண்டது.

**குறிப்பு வினைமுற்று :–**

நல்ல னவன்..........பொருட்பெயர் கொண்டது.

நல்லது நிலம்..........இடப்பெயர் கொண்டது.

நல்லது கார்..........காலப்பெயர் கொண்டது.

நல்லது கை..........சிநைப்பெயர் கொண்டது.

நல்லது பசப்பு..........குணப்பெயர் கொண்டது.

நல்லது பிறப்பு..........தொழிற்பெயர் கொண்டது.

மற்றைத் திணைபா லிடங் காலங்கடோறும் இவ்வாறே ஒட்டுக.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்:– பொது இயல்பு ஆறையும்**–(பலவகை வினைகளுக்கும் பொது இலக்கணமாகிய செய்பவன் முதல் ஆறையு, **தோற்றி** – தோன்றச்செய்து, **பொருட்பெயர் முதல் அறுபெயர் அலது** – பொருட்பெயர் முதலாகிய அறுவகைப் பெயரல்லலாக மற்றொன்ளையும், **ஏற்பில** – ஏலாதன, **முற்று** – முற்றுவினைகளும் வினைக் குறிப்பு முற்றுக்களுமாம். **எ–று**

(பொ–ரை.) பலவினைகளுக்கும் பொது இலக்கணமாகிய செய்பவன் முதலிய ஆறையும் தோற்றுவித்து, பொருட்பெயர் முதலாகிய அறுவகைப் பெயர் அல்லாத வேறு ஒம்றையும் கொண்டு முடியாதன, தெரிநிலை

வினைமுற்றுக்களும் குறிப்பு வினைமுற்றுக்களுமாம்.

எனவே, அவ் வினைமுற்றுக்கள் அந்த ஆறு பெயர்களையும் கொண்டு முடியுஞ் சொல்லாகப் பெற்று வேறொன்றையும் வேண்டாது வரும் என்றதாயிற்று.

பொருட்பெயர்முதல் அறுபெயர் என்றது பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்பனவற்றை.

எச்சவினைகள் போலக் குறைந்து நில்லாமல் பால்காட்டும் விகுதிபெற்று முடிந்து நிற்றலால், 'முற்று' எனப்பட்டது.

**உ-ம்.:-**

செய்தான்
நல்லன்
அவன்
அவன்
தெரிநிலை
குறிப்பு
பொருட்பெயர் கொண்டன.
குளிர்ந்தது
நல்லது
நிலம்
நிலம்
தெரிநிலை
குறிப்பு
இடப்பெயர் கொண்டன.
வந்தது
நல்லது
கார்
கார்
தெரிநிலை
குறிப்பு
காலப்பெயர் கொண்டன.
குவிந்தது
நல்லது
கை
கை
தெரிநிலை
குறிப்பு

சினைப்பெயர் கொண்டன.

பரந்தது

நல்லது

பசப்பு

பசப்பு

தெரிநிலை குறிப்பு

குணப்பெயர் கெண்டன.

ஒழிந்தது

நல்லது

பிறப்பு

பிறப்பு

தெரிநிலை

குறிப்பு

தெரிநிலை குறிப்பு

தொழிற்பெயர் கொண்டன.

மற்றைத் திணைபால் இடம்காலங்கள் தோறும் இவ்வாறே ஒட்டுக.

## கா. நமச்சிவாய முதலியார்

பொது இயல்பு ஆறையும் – பலவகை வினைகளுக்கும் பொது இலக்கணமாகிய செய்பவன் முதல் ஆறையும், தோற்றி – தோன்றச் செய்து; பொருட்பெயர் முதல் – பொருட் பெயர் முதலாகிய, அறு பெயர் அலது – அறுவகைப் பெயரல்லாத மற்றொன்றையும், ஏற்பில – ஏலாதன, முற்று – தெரிநிலை வினைமுற்றும் குறிப்புவினை முற்றுமாம்.

உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| செய்தான் அவன் | – | தெரிநிலை | பொருட்பெயர் கொண்டன. |
| நல்லன் அவன் | – | குறிப்பு | |
| குளிர்ந்தது நிலம் | – | தெரிநிலை | இடப்பெயர் கொண்டன. |
| நல்லது நிலம் | – | குறிப்பு | |
| வந்தது கார் | – | தெரிநிலை | காலப்பெயர் கொண்டன. |
| நல்லது கார் | – | குறிப்பு | |
| குவிந்தது கை | – | தெரிநிலை | சினைப்பெயர் கொண்டன. |
| நல்லது கை | – | குறிப்பு | |
| பரந்தது பசப்பு | – | தெரிநிலை | குணப்பெயர் கொண்டன. |
| நல்லது பசப்பு | – | குறிப்பு | |

ஒழிந்தது பிறப்பு - தெரிநிலை
நல்லது பிறப்பு - குறிப்பு
தொழிற்பெயர் கொண்டன.

## மோசகு பொன்னையா

வினைசொற்களுக்குப் பொதுவாக ஓதப்பட்ட ஆறு இயல்புகளையும்,1 தோற்றுவித்துப் பொருட்பெயர் முதலிய அறுவகைப் பெயர்களுள் ஒன்றையே யன்றி, மற்றையொன்றையும் ஏலாதன இருவகை முற்றுக்களுமாம். எ–று.

எ–டு.:–

| தொழில்முற்று | குறிப்புமுற்று | பெயர்கள் |
|---|---|---|
| வந்தான் அவன் | நல்லன் அவன் | பொருள் |
| காய்ந்தது நிலம் | வலிது நிலம் | இடம் |
| பிறந்தது தை | இனியது வேனில் | காலம் |
| குவிந்தது கை | நெடிய துகை | சினை |
| வந்தது தீமை | இல்லது நன்மை | குணம் |
| ஒழிந்தது பிறப்பு | உள்ளது வாழ்வு | தொழில் |

மற்றைத் திணை, பால், இடம், காலந்தோறும் இவ்வாறே ஒட்டிக் கொள்க.

தொல்காப்பியர்;,

**இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்**
**சிறப்புடை மரபின் அம்முக் காலமும்**
**தன்மை முன்னிலை படர்க்கை என்னும்**
**அம்மூ விடத்தான் வினையினுங் குறிப்பினும்**
**மெய்ம்மை யானனும் ஈரிரண் டாகும்2**
**அவ்வா றென்ப முற்றியன் மொழியே,3**

(1.நன். 320; 2. இவ்விரண்டாகும் என்பது சேனாவரையர் கொண்ட பாடம்; 3. தொல், சொல். 427. )

எனவும்,

**எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்,1**

எனவும்,

**அவைதாம்,**
**தத்தம் கிளவி அடுக்குந வரினும்**
**எத்திறத் தானும் பெயர்முடி பினவே**

எனவும் வினைமுற்றுக்களின் பொது இலக்கணத்தை விளங்கக் கூறியுள்ளார். அவ்வாற்றால், இறப்பு, நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலத்தாலும்; தன்மை, முன்னிலை படர்க்கை என்னும் மூவிடத்தாலும்; தொழில்வினை, குறிப்புவினை என இரு பொருண்மையாலும் வகைப்படுத்தப்படின்,

ஒருமைக்கூற்று வினைமுற்று பன்னிரண்டும், பன்மைக்கூற்று வினைமுற்று பன்னிரண்டுமாக இருபத்து நான்காகும் என்பதும்; காலம், இடம் என்பவற்றை முற்றிலுமாக ஏற்காது, பொதுவாக ஏற்று வழங்கும் வினைகளும் முற்றுக்கள் எனவே படும் என்பதும்; அவை அடுக்கி நிற்பினும், அன்றிப் பிறவாறு வழங்கினும் பெயரைக் கொண்டே முடியுந் தன்மைய என்பதும் புலனாகும். இவ்வாசிரியர், வினைமுற்றின் பொதுஇலக்கணம் உணர்த்துவான் அமைத்த இந்நூற்பாவில் இருவகை வினைமுற்றுக்களின் பொதுஇலக்கணத்தையெல்லாம் தொல்காப்பியர் கூறியவாறே முற்ற உணர்த்தினாரல்லர்.

தொல்காப்பியரும், இவ்வாசிரியரும் வினைமுற்றுக்கள் பெயரைக் கொண்டு முடிதலை அவற்றின் பொதுஇயல்பெனக் கூறினர். இவ்விரு ஆசிரியர் தந்த ஆணைப்படி நின்று உணர்வார்க்கு, வினைமுற்றைத் தொடர்ந்து பெயர் நிற்க இறுவதே தமிழ் வாக்கிய அமைதியாகும் என்பது புலனாகும். அவ்வாறாயின் செய்து யான், செய்தும் யாம், செய்கு யான், செய்கும் யாம் என இவ்வாறு அமைவது தமிழ்மொழியின் வாக்கிய மரபு என்பது போதரும். டாக்டர் கிரால் என்னும் அறிஞர், செய்து, செய்தும் என்னும் வாய்பாட்டு வடிவங்கள் பழந்தமிழில் மூவிட வினைகளுக்கும் வேறுபாடின்றிப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

(1, 2, தொல். சொல். 428; 429.)

எனவும், பாலுணர்த்தும் விகுதிகள் செய்து+ஏன், செய்கு+ஏன் என இவ்வாறு பிற்காலத்தில் சேர்க்கப்பட்டிருக்கலாம் எனவும் கருதுகின்றார்1. அவ்வாறாயின், செய்து, செய்கு என்னும் வாய்பாட்டு வினைமுற்றுக்களே பழைய தொழில் வினைமுற்றுக்கள் எனவும்2, அவற்றுடன் விகுதிகள் சேர்க்கப்பட்டு ஒரு சொன்னிலைப்பட்டு வழங்கும் விகுதிபெற்ற வினைமுற்றுக்கள் அனைத்தும் பழந்தமிழ் வாக்கியத்தின் திரிபுகளே எனவும் கொள்வது பிழையாகாது எனலாம். காலமுன்னாக வினைச்சொல்லை வழங்கிவந்த பழைய தமிழ் வாக்கியத்தின் திரிபாகிய முற்றுச்சொல்லோடு இடமுன்னாகப் பெயர்ச்சொல்லை அமைத்து வாக்கியமாக வழங்கும் மரபு வடமொழியின் செல்வாக்கால் நேர்ந்த ஒன்றாகும் என்பர்.3

இளம்பூரணர், 'முற்றுச்சொல் என்றது, செய்கையும், பாலும், காலமும், செயப்படுபொருளும் தோற்றி நிற்றலின், முற்றுச்சொல் என்பாரும்; மற்றோர் சொல் நோக்காது முடிந்து நிற்றலின் முற்றுச்சொல் என்பாரும்; எக்கால் அவை தம்

எச்சம் பெற்றுநின்றன. அக்கால் பின் யாதும் நோக்காவாய்ச் செப்பு மூயிற்றுப் போல அமைந்து மாறுதலின் முற்றுச்சொல் என்பாருமென இப்பகுதியினர் ஆசிரியர் என்பது'4 எனவும், சேனாவரையர், 'பிறிதோர் சொல்லோ டியையாது தாமே தொடராதற்கேற்கும் வினைச்சொல் முற்றும்'5 எனவும், தெய்வச்சிலையார் 'முற்றுச்சொல் எனவே முடிந்த சொல் என்பது பெறுதும், அது பின்னும் மற்றொரு சொல்லை அவாவிநிற்கும் என்றல் பொருந்தாமையானும்,

**மற்றுச்சொ னோக்கா மரபின் அனைத்தும்**
**முற்றி நிற்பது முற்றியன் மொழியே,**

(1.Outline of Tamil Grammar-P.42; டாக்டர் P.S.S. நேர்மாறான கொள்கையர். தமிழ்மொழி நூல், பக். 88;2. மலையாள மொழியில் வினைமுற்றுக்கள் பாலுணர்த்தும் விகுதிகளின்றியே இன்னும் வழங்குகின்றன என்பது ஈண்டு நோக்கத்தக்கது; 3. தமிழ் வரலாற்றிலக்கணம்–டாக்டர். ஆ. வேலுப்பிள்ளை, பக். 172; 4. தொல். சொல். 421–உரை; 5. தொல். சொல். 235 உரை. )

என அகத்தியர் ஓதுதலானும்'1 எனவும் கூறுமாற்றான் முற்று வினைச்சொல் பற்றிய பல்வேறு கருத்துக்கள் உரையாசிரியர்களின் காலத்தில் இருந்தமை புலனாகும்.

இவ்வாசிரியர் பொது இயல்பு ஆறையும் தோற்றுவித்தலும், பெயரொன்றையுமே கொண்டு முடிதலும் வினைமுற்றின் இலக்கணம் என்றார். பொது இயல்புகள் ஆறனுள் செயலைக் குறிப்பு வினைமுற்று உணர்த்தாது என்பது முன்னர் உரைக்கப்பட்டது; ஆண்டுக் கண்டுகொள்க. அது பெயரல்லாத சொற்கொண்டும் முடியும் என்பது,

**செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும்**
**வினையொடு முடியினும் விளம்பிய முற்றே,**

எனவும்,

மார் **வினையொடு முடிமே,**

எனவும் இவ்வாசிரியரே எடுத்தோதுவதாலும்,

அவற்றுள்
**செய்கென் கிளவி வினையொடு முடியினும்**
**அவ்வியல் திரியா தென்மனார் புலவர்,**

எனவும்,

**மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை**
**காலக் கிளவியொடு முடியும் என்ப,**

எனவும் தொல்காப்பியர் விதிப்பதாலும் புலனாவதால், பெயரலதேற்பில என்பதைப் பெரும்பான்மை வழக்குப் பற்றி

எழுந்த கூற்றாகக் கொள்க.

(4)

**323.** **ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்**
**ஒருமை பன்மையைத் தன்மைமுன் னிலையினும்**
**முக்கா லத்தினு முரண முறையே**
**மூவைந் திருமூன் றாறாய் முற்று**
**வினைப்பத மொன்றே மூவொன் பானாம்.**

ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கை இடத்தும்
ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும்
முக் காலத்தினும் முரண முறையே
மூ ஐந்து இரு மூன்று ஆறாய் முற்று
வினைப்பதம் ஒன்றே மூ ஒன்பான் ஆம்.

oruvaṉ muṭal aintaiyum patarkkai itaṭṭum
orumai paṉmaiyaiṭ ṭaṉmai muṉṉilaiyiṉum
mukkālaṭṭiṉum muraṇa muṟaiyē
mū aintu iru mūṉṟu āṟāy muṟṟu
viṉaippaṭam oṉṟē mū oṉpāṉām.

இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Verbs by inflection on account of person, tense, number and gender (pal)**

By carrying a Finite verb, with its three Tenses, through the five Genders of the 3rd person, and the two numbers of the 1st and 2nd persons, and obtaining respectively fifteen variations (for the 3rd person), six (for the 1st) and six (for the 2nd), (it will be found that) there are altogether twenty-seven inflections of a single (definite) finite verb.

ஒப்புமைப் பகுதி

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ இடத்தான் வினையினும் குறிப்பினும்
மெய்ம்மை யானும் இவ்விரண் டாகும்
அவ்வா றென்ப முற்றியன் மொழியே

(தொல். சொல்.: 427)

ஒருவன்முத லைந்தையும் படர்க்கை இடத்து
ஒருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையினு
முக்காலத்தினு முரண முறையே
மூவைந் திருமூன் றாறாய் முற்று
வினைப்பத மொன்றே மூவொன் பானாம்

(இ.வி.: 231)

## மயிலை நாதர்

எ-ன், முற்றுவினையின் வகையும் தொகையுமுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்.:- ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பலவென்னும் ஐம்பாலையும் படர்க்கையிடத்தும், ஒருமை பன்மைப் பால்களைத் தன்மையிடத்தும் முன்னிலையிடத்தும் முக்காலங்களாலுமாற முறையே படர்க்கை வினைமுற்றுப் பதினைந்தும் தன்மை வினைமுற்று ஆறும் முன்னிலை வினைமுற்று ஆறும் ஆக வினைமுற்றொன்றே இருபத்தேழுகூறாம், எ-று.

எனவே இதனாலும் தன்மை முன்னிலைகளில் ஒருமை பன்மைப்பால்களல்லது ஏனைப்பால்கள் இல்லையென்பது மாயிற்று.

## சங்கர நமச்சிவாயர்

எ-னின், மேற்கூறிய தெரிநிலை குறிப்பு என்னும் இருவகை முற்றுள் தெரிநிலைமுற்று ஒன்றுமே இறப்பு எதிர்வு நிகழ்வு என்னும் காலவிகற்பங்களைப் பெறும் என்பதூஉம், அவற்றான் இத்துணையாம் என்பதூஉம், உணர்-ற்று.

இ-ள்.:- ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐம்பாலவாகிய வினைமுற்றுக்களைப் படர்க்கைக்கண்ணும், ஒருமை பன்மை என்னும் இருபாலவாகிய வினைமுற்றுக்களைத் தன்மைக்கண்ணும் முன்னிலைக் கண்ணும் வைத்து, முக்காலங்களானும் மாற, முறையே படர்க்கை வினைமுற்றுப் பதினைந்தும் தன்மைவினைமுற்று ஆறும் முன்னிலைவினைமுற்று ஆறுமாகிய முற்றுவினைச்சொல் ஒன்றுமே இருபத்தேழாம், எ-று.

ஈண்டு ஒருவன் என்பது பெயரை அன்று; உயர்திணையாண்பால் வினையை உணர்த்தி நின்றதோர் குறிப்புச்சொல்.

ஒருமைப் பன்மை என்புழி இடையே தோன்றிய பகரம் சந்த இன்பப்பொருட்டு விரித்தல் விகாரமாய் வந்தது.

ஒன்றே என்னும் ஏகாரம் முற்றுவினைப்பதம் முற்றுவினைக் குறிப்புப்பதம் என்னும் இரண்டனுள் முற்றுவினைப்பதம் ஒன்றுமே மூவொன்பானாம் என்னும் பொருள் தந்து நிற்றலின் பிரிநிலை. இங்ஙனம் கூறவே இவற்குச் செல்வம் முன்னுண்டு, இப்பொழுது உண்டு, பின்னுண்டு என வினைக்குறிப்புப்பதம் முக்காலமும் ஏற்குமேனும் காலங்காட்டும் இடைநிலை முதலிய வேண்டாது பொதுமையின் நிற்றலின் அதனை இவ்வாறு விரிக்கப்படாது என்பது பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், முற்றுவினை வகையும் தொகையும் கூறுகின்றது.

இ–ள்.:– **ஒருவன் முதல் ஐந்தையும்** – ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பலவென்றும் ஐம்பாலையும், **படர்க்கையிடத்தும்** – படர்க்கை இடத்தினும் ... **தன்மை முன்னிலையினும்** – தன்மையிடத்தும் முன்னிலையிடத்தும், **முக்காலத்தினு முரண** – முக்காலங்களினாலும் மாற, **முறையே மூவைந்து** – முறையே படர்க்கை வினைமுற்றுப் பதினைந்தும், **இருமூன்று** – தன்மை வினைமுற்று ஆறுமாக, ... **முற்று வினைப்பதம் ஒன்றே** – தெரிநிலை முற்றுப்பதம் ஒன்றே, **மூவொன்பானாம்** – இருபத்தேழு கூறாம், **எ–று.**

## விசாகப்பெருமாளையர்

இது, தெரிநிலை வினைமுற்றுப் பாலிடங் காலங்களின் வேறுபாட்டால் இத்தனையாமென்று உணர்த்துகின்றது.

இ–ள்.:– **ஒருவன்முதலைந்தையும்** – ஆண்பான் முதலாகிய ஐம்பால் வினைமுற்றுக்களையும், **படர்க்கையிடத்தும்** – படர்க்கையிடத்திலும், **ஒருமை** – ஒருமை வினைமுற்றையும், **பன்மையை** – பன்மைவினை முற்றையும், **தன்மை** – தன்மையிடத்திலும், **முன்னிலையினும்** – முன்னிலையிடத்திலும் வைத்து, **முக்காலத்தினும்** – முக்காலங்களாலும், **முரண** – மாற, **முறையே** – சொல்லப்பட்ட முறையே, **மூவைந்து** – படர்க்கைவினை முற்றுக்கள் பதினைந்தும், **இருமூன்று** – தன்மை வினைமுற்றுக்கள் ஆறும், **ஆறு** – முன்னிலைவினை முற்றுகள் ஆறும், **ஆய்** – ஆகி, **முற்று வினைப்பதமொன்று** – தெரிநிலைவினை முற்றுப்பதமொன்றுமே, **மூவொன்பானாம்** – இருபத்தேழாகும், **எ–று.**

வ—று.:—

| | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம். |
|---|---|---|---|
| படர்க்கை. ஆண்பால் :— | நடந்தான் | நடக்கின்றான் | நடப்பான் |
| பெண்பால் :— | நடந்தாள் | நடக்கின்றாள் | நடப்பாள் |
| பலர்பால் :— | நடந்தார் | நடக்கின்றார் | நடப்பார் |
| ஒன்றன்பால் :— | நடந்தது | நடக்கின்றது | நடப்பது |
| பலவின்பால் :— | நடந்தன | நடக்கின்றன | நடப்பன |
| தன்மை. ஒருமை:— | நடந்தேன் | நடக்கின்றேன் | நடப்பேன் |
| பன்மை:— | நடந்தேம் | நடக்கின்றேம் | நடப்பேம் |
| முன்னிலை. ஒருமை :— | நடந்தாய் | நடக்கின்றாய் | நடப்பாய் |
| பன்மை :— | நடந்தீர் | நடக்கின்றீர் | நடப்பீர் |

எனத் தெரிநிலை வினைமுற்று ஒருபகுதிமே லிருபத்தேழாய வாறு காண்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வினைமுற்றுச்சொற்கு வகையும் விரியுங்கூறுஞ் சூத்திரம் யாது?

ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்தும்
ஒருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையினு
முக்கா லத்திலு முரண முறையே
மூவைந் திருமூன் றாறாய் முற்று
வினைப்பத மொன்றே மூவொன் பானாம்.
(ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கை இடத்தும்
ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும்
முக்காலத்தினும் முரண முறையே
மூவைந்து இருமூன்று ஆறு ஆய் முற்று
வினைப்பதம் ஒன்றே மூவொன்பான் ஆம்.)

இ—ள்.:— ஆண்பான் முதலாகிய ஐம்பால் வினைமுற்றுக்களையும் படர்க்கையிடத்திலும் ஒருமைவினை முற்றையும் பன்மைவினைமுற்றையுந் தன்மையிடத்திலும் முன்னிலையிடத்திலும் வைத்து முக்காலங்களாலும் பெருக்க, சொல்லப்பட்ட முறையே படர்க்கைவினைமுற்றுக்கள் பதினைந்தும் தன்மைவினைமுற்றுக்கள் ஆறும் முன்னிலை வினைமுற்றுக்கள் ஆறும் ஆகிய

தெரிநிலை வினைமுற்றுப்பதமொன்றுமே இருபத்தேழாகும்.

படர்க்கைவினைமுற்று எவ்வாறு பதினைந்தாம்?

"ஒருவன்முதலைந்தையும் படர்க்கையிடத்து முக்காலத்தினு முரணமுவைந்தாம்."

வரலாறு.:–

(1) நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன இவை இறந்தகாலவினைமுற்று–5. நடக்கின்றான். நடக்கின்றாள், நடக்கின்றார், நடக்கின்றது, நடக்கின்றன. இவை நிகழ்கால வினைமுற்று–5. நடப்பான், நடப்பான், நடப்பார், நடப்பது, நடப்பன. இவை எதிர்கால வினைமுற்று–5. ஆகப்படர்க்கை வினைமுற்று–15.

தன்மைவினைமுற்று எவ்வாறு ஆறாம்?

"ஒருமை பன்மையைத் தன்மையிடத்தின் முக்காலடத்தினு முரண இருமூன்றாம்."

வரலாறு.:–

(2) நடந்தேன், நடந்தேம் இவை இறந்தகாலவினைமுற்று–2. நடக்கின்றேன், நடக்கின்றேம் இவை நிகழ்கால வினைமுற்று–2. நடப்பேன், நடப்பேட் இவை எதிர்கால வினைமுற்று–2. ஆகத்தன்மைவினைமுற்று 6.

முன்னிலைவினைமுற்று எவ்வாறு ஆறாம்?

"ஒருமை பன்மையை முன்னிலையிடத்து முக்காலத்திலு முரண ஆறாம்.

வரலாறு:–

(3) நடந்தாய், நடந்தீர் இவை இறந்தகால வினைமுற்று–2. நடக்கின்றாய், நடக்கின்றீர் இவை நிகழ்காலவினை முற்று–2. நடப்பாய், நடப்பீர் இவை எதிர்காலவினைமுற்று–2. ஆக முன்னிலைவினைமுற்று–6.

ஆக வகைமூன்றுக்கும் முற்றுவினை–27.

ஆகவினைமுற்று எத்தனையாம்?

"முற்றுவினைப்பதமொன்றே மூவொன்பானாம்"

முக்காலத்தின் பெயருமுறையு மென்ன?

"இறப்பு நிகழ்வெதிர் காலமூன்றே"

இறப்பாவது தொழிலது கழிவு. நிகழ்வாவது தொழில் தொடங்கப்பட்டு முற்றுப்பெறாத நிலைமை. எதிர்வாவது தொழில் பிறவாமை.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மேற்கூறிய இருவகை முற்றுகளுள் தெரிநிலைவினை முற்று ஒன்றுமே காலவிகற்பங்களைப் பெறுமென்பதும், அக்காலம் பற்றியந்த வினைச்சொற்கள் இவ்வளவா மென்பதுங் கூறுகின்றது.

**இ-ள்.:- ஒருவன் முதலைந்தையும் படர்க்கை யிடத்தும்** - ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐம்பால் வினை முற்றுக்களையும் படர்க்கை யிடத்திலும், **ஒருமைப் பன்மையை** - ஒருமைப்பாலையும் பன்மைப் பாலையுமுடைய வினைமுற்றுக்களை, தன்மையிடத்தும் முன்னிலையிடத்தும், **முக்காலத்தினுமுரண**-மூன்று காலங்களாலும் மாற, **முறையே** - வரிசை யாகவே, **மூவைந்து**-படர்க்கை வினைமுற்றுப் பதினைந்தும், **இருமூன்று**- தன்மைவினை முற்று ஆறும், **ஆறாய்** - முன்னிலை வினைமுற்று ஆறுமாகி, **முற்று வினைப்பத மொன்றே மூவொன்பானாம்** - முற்று வினைச்சொல் ஒன்றுதானே இருபத்தேழாம், எ-று.

வ-று.:-

நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன: இவை இறந்தகால வினைமுற்று -5, நடக்கின்றான், நடக்கின்றாள், நடக்கின்றார், நடக்கின்றது, நடக்கின்றன: இவை நிகழ்கால வினைமுற்று -5, நடப்பான், நடப்பாள், நடப்பார், நடப்பது, நடப்பன: இவை எதிர்கால வினைமுற்று-5, ஆகப் படர்க்கை வினைமுற்று-15, நடந்தேன்,

நடந்தேன்: இறந்தகாலம்; நடக்கின்றேன், நடக்கின்றேம்: நிகழ்காலம்; நடப்பேன்; நடப்பேம்: எதிர்காலம்; இவை தன்மைமுற்று-6. நடந்தாய், நடந்தீர்: இறந்த காலம்; நடக்கின்றாய், நடக்கின்றீர்: நிகழ்காலம்; நடப்பாய், நடப்பீர்: எதிர்காலம்; இவை முன்னிலை வினைமுற்று -6. ஆக வகை மூன்றுக்கு முற்றுவினைச்சொல்- 27 ஆயினவாறு காண்க.

இங்கே ஒருவன் என்றது பெயரன்று; உயர்திணை யாண்பால் வினையையுணர்த்தி நின்றதோர் குறிப்புச்சொல், ஒருமைப்பன்மை என இடையிலே தோன்றிய பகர ஒற்று, சந்த இன்பப் பொருட்டு விரித்தல் விகாரமாய் நின்றது. 'ஒன்றே' என்ற ஏகாரம் தெரிநிலை குறிப்பென்னும் இரண்டினுள் தெரிநிலைமுற்று வினைப்பதமொன்றே என நிற்றலால், பிரிநிலையேகாரம். இவ்வாறு கூறவே, இவனுக்குச் செல்வம் முன்னுண்டு, இப்பொழுது உண்டு, பின்னுண்டு என வினைக்குறிப்புச் சொல் முக்காலமுங் கொள்ளுமாயினும், கால இடைநிலை முதலிய வேண்டாது பொதுப்பட நிற்பதினாலே,

அதை இவ்வாறு விரிக்கப்படாதென்பது பெறப்பட்டது.

முற்று வினைப்பத மூவொன்பானா மென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– ஒருவன் முதல் ஐந்தையும்** –ஆண்பால்முதலிய ஐம்பால் வினைமுற்றுக்களையும், **படர்க்கை இடத்தும்** – படர்க்கை யிடத்திலும்,

**ஒருமை பன்மை** – ஒருமைபன்மை வினைமுற்றுக்களை, **தன்மை முன்னிலையினும்** – தன்மையிடத்தும் முன்னிலை யிடத்தும் (வைத்து), **முக்காலத்தினும்** – மூன்றுகாலங்களாலும், **முரண** – பெருக்கிக்கணக்கிட, **முறையே** – (சொல்லப்பட்ட) முறைப்படி, **மூஐந்து** – (படர்க்கை வினைமுற்றுப்) பதினைந்தும், **இருமூன்று** – (தன்மை வினைமுற்று) ஆறும், **ஆறு** – (முன்னிலைவினைமுற்று) ஆறும், **ஆய்** – ஆகி, **முற்றுவினைப் பதம் ஒன்றே** – தெரிநிலை வினைமுற்றுச் சொல் ஒன்றுதானே, **மூ ஒன்பான் ஆம்** – இருபத்தேழாகும்.

| | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| | (படர்க்கை – 15) | | |
| ஆண்பால் | – நடந்தான். | நடக்கிறான். | நடப்பான். |
| பெண்பால் | – நடந்தாள். | நடக்கிறாள். | நடப்பாள். |
| பலர்பால் | – நடந்தார். | நடக்கிறார். | நடப்பார். |
| ஒன்றன்பால் | – நடந்தது. | நடக்கிறது. | நடப்பது. |
| பலவின்பால் | – நடந்தன. | நடக்கின்றன | நடப்பன. |
| | (தன்மை–6) | | |
| ஒருமை | – நடந்தேன். | நடக்கிறேன். | நடப்பேன். |
| பன்மை | – நடந்தோம். | நடக்கிறோம். | நடப்போம். |
| | (முன்னிலை–6) | | |
| ஒருமை | – நடந்தாய். | நடக்கிறாய். | நடப்பாய் |
| பன்மை | – நடந்தாய். | நடக்கிறாய். | நடப்பாய். |

குறிப்பு :–

ஆகத் தெரிநிலைவினை இருபத்தேழாம் எனவே, குறிப்பு வினைமுற்றுக் காலம் விளங்காததனால் ஒன்பதாம் என்பது பெறப்பட்டது.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– **ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கையிடத்தும்** – ஆண்பான்

முதலாகிய ஐம்பால் வினைமுற்றுக்களையும் படர்க்கையிடத்திலும், **ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும்** – ஒருமை வினைமுற்றையும் பன்மை வினைமுற்றையும் தன்மையிடத்திலும் முன்னிலையிடத்திலும் வைத்து, **முக்காலத்தினும் முரண** – முக்காலங்களாலும் மாற, **முறையே**–சொல்லப்பட்ட முறையே, **மூவைந்து**–படர்க்கை வினைமுற்றுக்கள் பதினைந்தும், **இருமூன்று** – தன்மை வினைமுற்றுக்கள் ஆறும், **ஆறு ஆய்** – முன்னிலை வினைமுற்றுக்கள் ஆறும் ஆகி, **முற்றுவினைப்பதம் ஒன்றே மூவொன்பான் ஆம்** – தெரிநிலை வினைமுற்றுப் பதமொன்றுமே இருபத்தேழாகும், எ–று.

வ–று.:–

(1) நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன இவை இறந்தகால வினைமுற்று–5. நடக்கின்றான், நடக்கின்றாள், நடக்கின்றார், நடக்கின்றது, நடக்கின்றன இவை நிகழ்கால வினைமுற்று – 5. நடப்பான், நடப்பாள், நடப்பார், நடப்பது, நடப்பன இவை எதிர்கால வினைமுற்று–5, ஆகப் படர்க்கை வினைமுற்று–15.

(2) நடந்தேன், நடந்தேம் இவை இறந்தகால வினைமுற்று – 2. நடக்கின்றேன், நடக்கின்றேம் இவை நிகழ்கால வினைமுற்று–2. நடப்பேன், நடப்பேம் இவை எதிர்கால வினைமுற்று – 2. ஆகத் தன்மை வினைமுற்று–6.

(3) நடந்தாய், நடந்தீர் இவை இறந்தகால வினைமுற்று–2. நடக்கின்றாய், நடக்கின்றீர் இவை நிகழ்கால வினைமுற்று – 2. நடப்பாய், நடப்பீர் இவை எதிர்காலவினைமுற்று – 2. ஆக முன்னிலை வினைமுற்று – 6.

ஆக வகை மூன்றுக்கும் முற்றுவினை –27.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கையிடத்தும் – ஆண்பான் முதலாகிய ஐம்பால் வினை முற்றுக்களையும் படர்க்கையிடத்திலும், – **ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும்** – ஒருமை வினைமுற்றையும் பன்மை வினைமுற்றையுந் தன்மையிடத்திலும் முன்னிலையிடத்திலும் வைத்து, – **முக்காலத்தினும் முரண** – முக்காலங்களாலும் மாற, – **முறையே** – சொல்லப்பட்டமுறையே, – **மூவைந்து** – படர்க்கை வினைமுற்றுக்கள் பதினைந்தும், – **இருமூன்று** – தன்மை வினைமுற்றுக்கள் ஆறும், – **ஆறு ஆய்** – முன்னிலை வினைமுற்றுக்கள் ஆறும் ஆகி, – **முற்று வினைப் பதம் ஒன்றே மூவொன்பான் ஆம்** – தெரிநிலை வினைமுற்றுப்பதமொன்றுமே இருபத்தேழாகும். எ–று.

வ–று.:–

(1)நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன. இவை இறந்தகால வினைமற்று – 5. நடக்கின்றான், நடக்கின்றாள், நடக்கின்றார், நடக்கின்றது, நடக்கின்றன. இவை நிகழ்கால வினைமுற்று – 5. நடப்பான், நடப்பாள், நடப்பார், நடப்பது, நடப்பன இவை எதிர்கால வினைமுற்று – 5. ஆக படர்க்கை வினைமுற்ற – 15.

(2)நடந்தேன், நடந்தேம் இவை இறந்தகால வினைமுற்று – 2. நடக்கின்றேன், நடக்கின்றோம், இவை நிகழ்கால வினைமுற்று – 2. நடப்பேன், நடப்பேம் இவை எதிர்கால வினைமுற்று – 2. ஆகத் தன்மை வினைமுற்று – 6.

(3)நடந்தாய், நடந்தீர் இவை இறந்தகால வினைமுற்று – 2. நடக்கின்றாய், நடக்கின்றீர் இவை நிகழ்கால வினைமுற்று – 2. நடப்பாய், நடப்பீர் இவை எதிர்கால வினைமுற்று – 2. ஆக முன்னிலை வினைமுற்று – 6.

ஆக வகை மூன்றுக்கும் முற்றுவினை – 27.

'முற்றும் பெயர்வினைசெய்யமுமாகி' என்று பகுக்கப்பட்ட வற்றுள் எச்சவினைகளல்ல முற்றுக்களே இருபத்தேழாகு மென்பார் முற்றுவினைப் பதமொன்றே மூவொன்பானாமென்று பிரிநிலையேகாரங் கொடுத்தோதினார். முக்காலத்தான் முரணப்பட்டு வெவ்வேறுருவமாகுதல் குறிப்பு வினைக் கியையாமையால் இருபத்தேழாகுதல் தெரிநிலை வினைமுற் றென்றும், ஏற்புழிக்கோடலால் முக்காலப் பகுப்பொழித்துக் குறிப்பு வினை முற்றுக்கள் ஒன்பதென்னுமளவாகப் பல்குமென்றுங் கொள்ளுக.

சிறியன், சிறியள், சிறியர், சிறிது, சிறியன; சிறியேன், சிறியேம்; சிறியை, சிறியீர், என்று முக்காலந்தவிர ஐம்பான் மூவிட ஒருமை பன்மைகளாற் குறிப்புவினை முற்றுப் பல்கிவந்தவாறு காண்க.

இன்னும் முற்றுவினைப்பதமொன்றே என்பதற்கு ஒருபகுதி யிற்றோன் றிய முற்றேயென்றுங் கொள்ளுக. குறிப்பு வினைமுற்றுந் தனக்கியைந்த மட்டிற் பல்குதலை ஈண்டுங் கொள்ளுங் கருத்துப் புதிதாயினும் பின் வகுக்குஞ் சிறப்புச் சூத்திர வுரைகளோடிணங்கி நிற்றல் காண்க.

ஒருவன் என்ற தீண்டு அப்பெயரையன்று ஆண்பாலை யுணர்த்தி நின்றது. தெரிநிலை வினைமுற்று மேற்சுட்டிய வகையால் இருபத்தேழாகு மெனவே; விதிவினை, மறைவினை.

எ-ம். தன்வினை பிறவினை எனவும் செய்வினை செயப்பாட்டு வினை எனவும் வரும் இவ்வகைகளாலுந் தாக்க மிகப் பெருகிவருமென்று கொள்ளுக.

வ-று.:-

உண்டான், உண்டிலன் – விதிவினை, மறைவினை
உண்டான், உண்பித்தான் – தன்வினை, பிறவினை
உண்டான், உண்ணப்பட்டது – செய்வினை, செயப்பாட்டு வினை

இப்படியே தெரிநிலை வினைமுற்றை யாராயுமிடத்து ஒரு வினை முற்றே விதிவினை மறைவினைகளுள் யாதாயினும் ஒன்றாயிருக்கும்; அதுவே தன்வினை பிறவினைகளுள்ளும் யாதாயினும் ஒன்றாயிருக்கும்; மேலும் அதுவே செய்வினை செயப்பாட்டுவினைகளுள்ளும் யாதாயினும் ஒன்றாயிருக்குமென்று கருதுக.

விதிவினையெனினும் உடன்பாட்டு வினையெனினும் ஒக்கும். மறைவினையெனினும் எதிர்மறைவினையெனினும் ஒக்கும். சூட்டுவிக்கப்படுகின்றில–என்பது எதிமறைச் செயப்பாட்டுப் பிறைவினைமுற்று. சூடுகின்றான் – என்பது உடன்பாட்டுச் செய்வினைத் தன்வினைமுற்று. சூடப்பட்டது – என்பது உடன்பாட்டுச் செயப்பாட்டுத் தன்வினைமுற்று. சூட்டுவித்திலன் – என்பது எதிர்மறைச்செய்வினைப் பிறவினைமுற்று. சூட்டுவித்தான் – என்பது உடன் பாட்டுப் பிறவினைச் செய்வினைமுற்று. சூட்டப்படுகின்றில – என்பது எதிர் மறைச் செயப்பாட்டுத் தன்வினைமுற்று.

இப்படியே அவ்விகற்பங்களைச் சொற்சோதனையாற் கண்டுகண்டு தெளிக.

விதிவினை மறைவினைகளில், விதிவினையாயிருந்தால் அதுமறைவினையாகாது. மறையானால் விதியாகாது. (இவ்விரண்டற்கும் பொதுவாய் அருகிவருதலுமுண்டு. உ-ம். சொல்லாய்) (அருகுதல் – சிறுபான்மையினுஞ் சிறுபான்மையாதல்)

தன்வினை பிறவினைகளில் – தன்வினையாயிருந்தால் அது பிறவினையாகாது. பிறிதாயிற் றனதாகாது. (இவ்விரண்டற்கும் பொதுவாய் அருகிவருதலுமுண்டு. உ-ம். வெளுத்தான்.) செய்வினை செயப்பாடுவினைகளில் செய்வினையாயிருந்தால் அதுசெயப்பாட்டு வினையாகாது. செயப்பாடானால்

செய்யாகாது. (இவ்விரண்டற்கும் பொதுவாய்அருகி வருதலுமுண்டு. உ-ம். உண்டது) ஒருவனால் உண்ணப்பட்டது. மாடு உண்டது என்று பொருள் வகுப்புக்காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ-ள்.:- ஒருவன் முதல் ஐந்தையும் – ஆண்பால் முதலிய ஐந்துபால் வினைமுற்றுக்களையும், படர்க்கை இடத்தும் – படர்க்கையிடத்திலும், ஒருமை பன்மையை – ஒருமை பன்மை வினைமுற்றுக்களை, தன்மை முன்னிலையிலும் – தன்மையிடத்திலும் முன்னிலையிடத்திலும் (வைத்து), முக்காலத்தினும் – மூன்று காலங்களாலும், முரண – பெருக்கிக் கணக்கிட, முறையே – (சொல்லப்பட்ட) முறைப்படி, மூ ஐந்து – (படர்க்கை வினைமுற்றுப்) பதினைந்தும், இரு மூன்று – (தன்மை வினைமுற்று) ஆறும், ஆறு – (முன்னிலை வினைமுற்று) ஆறும், ஆய் – ஆகி, முற்றுவினை பதம் ஒன்றே – தெரிநிலை வினைமுற்றுச் சொல் ஒன்றுதானே, மூ ஒன்பான் ஆம் – இருபத்தேழாகும்; எ – று.

| | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம். |
|---|---|---|---|
| ஆண்பால் | நடந்தான் | நடக்கின்றான் | நடப்பான் |
| பெண்பால் | நடந்தாள் | நடக்கின்றாள் | நடப்பாள் |
| பலர்பால் | நடந்தார் | நடக்கின்றார் | நடப்பார் |
| ஒன்றன்பால் | நடந்தது | நடக்கின்றது | நடப்பது |
| பலவின்பால் | நடந்தன | நடக்கின்றன | நடப்பன |
| | | | – படர்க்கை 15. |
| ஒருமை | நடந்தேன் | நடக்கின்றேன் | நடப்பேன் |
| பன்மை | நடந்தேம் | நடக்கின்றேம் | நடப்பேம். |
| | | | – தன்மை–6 |
| ஒருமை | நடந்தாய் | நடக்கின்றாய் | நடப்பாய். |
| பன்மை | நடந்தீர் | நடக்கின்றீர் | நடப்பீர். |
| | | | – முன்னிலை 6. |

ஆகத் தெரிநிலை வினைமுற்று இருபத்தேழாம் எனவே, குறிப்புவினை முற்று, காலம் விளங்காததனால் ஒன்பதாம் என்றதாயிற்று.

ஆண்பால்படர்க்கை வினைமுற்று.

## பவானந்தம் பிள்ளை

**இ-ள்.:- ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கையிடத்தும்** - ஆண்பான்முதலாகிய ஐம்பால்வினைமுற்றுக்களையும் படர்க்கையிடத்திலும், **ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும்** - ஒருமைவினைமுற்றையும் பன்மைவினைமுற்றையுந் தன்மையிடத்திலும் முன்னிலையிடத்திலும் வைத்து, **முக்காலத்தினும் முரண** - முக்காலங்களாலும் மாற, முறையே - சொல்லப்பட்ட முறையே, **மூவைந்து** - (படர்க்கைவினை முற்றுக்கள்) பதினைந்தும், **இருமூன்று** - (தன்மைவினைமுற்றுக்கள்) ஆறும், **ஆறு ஆய்** - (முன்னிலைவினைமுற்றுக்கள்) ஆறும் ஆகி, **முற்று வினைப்பதம் ஒன்றே மூவொன்பான் ஆம்** - தெரிநிலைவினைமுற்றுப் பதமொன்றுமே இருபத்தேழாகும். **எ-று.**

இங்கே 'ஒருவன்' என்றது பெயரன்று; ஆண்பால் வினையை உணர்த்தி நின்றதோர் குறிப்புச்சொல். 'ஒருமைப்பன்மை' என இடையிலே தோன்றிய பகரஒற்று, சந்த இன்பப் பொருட்டு விரித்தல் விகாரமாய் நின்றது. 'ஒன்றே' என்ற ஏகாரம், தெரிநிலை குறிப்பு என்னும் இரண்டனுள் தெரிநிலை ஒன்றுமே எனப் பொருள்தருதலால் பிரிநிலை ஏகாரம். குறிப்புவினை கால இடைநிலை முதலிய வேண்டாது பொதுப்பட நிற்றலால் அதை இவ்வாறு விரிக்கப்படாதென்பதறிக.

தன்மை முன்னிலைகளில் ஒருமைப்பாலும் பன்மைப்பாலுமல்லது ஏனைப்பால்கள் இல்லை என்பது முன்னர் 265-வது சூத்திரத்தாற் பெறப்பட்டதன்றி இச் சூத்திரத்தானும் பெறப்பட்டது காண்க.

உ-ம்.:-

இறப்பு - நிகழ்வு - எதிர்வு

நடந்தான் - நடக்கின்றான் - நடப்பான் (ஆண்)

நடந்தாள் - நடக்கின்றாள் - நடப்பாள் (பெண்)

நடந்தார் - நடக்கின்றார் - நடப்பார் (பலர்)

நடந்தது - நடக்கின்றது - நப்பது (ஒன்றன்)

நடந்தன - நடக்கின்றன - நடப்பன (பலவின்)

- படர்க்கை வினைமுற்று - 15.

நடந்தேன் - நடக்கின்றேன் - நடப்பேன் (ஒருமை)

நடந்தேம் – நடக்கின்றேம் – நடப்பேம் (பன்மை)

– தன்மை வினைமுற்று – 6.

நடந்தாய் – நடக்கின்றாய் – நடப்பாய் (ஒருமை)

நடந்தீர் – நடக்கின்றீர் – நடப்பீர் (பன்மை)

– முன்னிலை வினைமுற்று – 6.

ஆக வகை மூன்றுக்கும் முற்றுவினை – 27

## கா. நமச்சிவாய முதலியார்

**ஒருவன் முதல் ஐந்தையும்** – ஆண்பால் முதலாகிய ஐம்பால் வினைமுற்றுக்களையும், **படர்க்கை இடத்தும்** – படர்க்கையிடத்திலும், **ஒருமை** – ஒருமை வினைமுற்றையும், **பன்மையை** – பன்மை வினைமுற்றையும், **தன்மை** – தன்மையிடத்திலும், **முன்னிலையிலும்** – முன்னிலையிடத்திலும் வைத்து, **முக்காலத்திலும்** – முக்காலங்களாலும், – **முரண**– மாற, **முறையே** – சொல்லப்பட்ட முறையே, **மூ ஐந்து** – படர்க்கை வினைமுற்றுக்கள் பதினைந்தும், **இரு மூன்று** – தன்மை வினைமுற்றுக்கள் ஆறும் ஆகி, **முற்று வினைப்பதம் ஒன்று** – தெரிநிலை வினைமுற்றுப் பதம் ஒன்றுமே, –**மூ ஒன்பான் ஆம்** – இருபத்தேழு ஆகும்.

**உதாரணம்**

| | | இறந்தகாலம் | | நிகழ்காலம் | | எதிர்காலம் |
|---|---|---|---|---|---|---|
| | ஆண் | நடந்தான் | – | நடக்கின்றான் | – | நடப்பான் |
| | பெண் | நடந்தாள் | – | நடக்கின்றாள் | – | நடிப்பாள் |
| படர்க்கை | பலர் | நடந்தார் | – | நடக்கின்றார் | – | நடிப்பார் |
| | ஒன்று | நடந்தது | – | நடக்கின்றது | – | நடப்பது |
| | பல | நடந்தன | – | நடக்கின்றன | – | நடப்பன. |
| தன்மை | ஒருமை | நடந்தேன் | – | நடக்கின்றேன் | – | நடப்பேன் |
| | பன்மை | நடந்தேம் | – | நடக்கின்றேம் | – | நடப்பேம் |
| முன்னிலை | ஒருமை | நடந்தாய் | – | நடக்கின்றாய் | – | நடப்பாய் |
| | பன்மை | நடந்தீர் | – | நடக்கின்றீர் | – | நடப்பீர் |

எனத் தெரிநிலை வினைமுற்று ஒரு பகுதியே இருபத்தேழாகியவாறு காண்க.

## மோசசு பொன்னையா

பால்விகுதி பெற்றுவரும் ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் தொழில்வினை முற்றுக்களைப் படர்க்கை இடத்திலும், ஒருமை, பன்மை வினைமுற்றுக்களைத் தன்மை, முன்னிலை ஆகிய ஈரிடங்களிலும் வைத்து மூன்று காலங்களாலும் பெருக்கிக் கணக்கிட, படர்க்கைத் தொழில்வினைமுற்றுப் பதினைந்தும் தன்மைத் தொழில் வினைமுற்று ஆறும் ஆகி, விகுதி பெற்ற தொழில் வினைமுற்றுச் சொல் ஒன்றே இருபத்தேழாகும், எ – று.

ஈண்டு ஒருவன் என்றது உயர்திணை ஆண்பாலை எனக் கொள்க. ஒருமைப் பன்மை எனச் சந்த வின்பங் கருதி விரித்தல் விகாரம் கொள்ளப்பட்டது. ஒன்றே மூவொன்பானாம் எனத் தொழில் வினைமுற்றுச் சொல்லைப் பிரிவிலை ஏகாரத்தாற் பிரித்துக் கூறிபதனால், பால் விகுதி பெறாத தொழில்வினை முற்றுக்களும், கால எழுத்துக்களைப் பெறும் இயல்பில்லாத குறிப்புவினை முற்றுக்களும் இந்நூற்பாவால் தழுவப்படவில்லை என்பதாயிற்று. எடுத்துக்காட்டுக்கள் சிறப்பு நூற்பாக்களிற் காட்டப்படும்.

**சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்**
**தெற்றென வுணர்தல் தெள்ளியோர் திறனே,1**

என்ற புறனடை நூற்பாவால். குறிப்புவினைமுற்றுச்சொல் ஒன்றே, நல்லர், நல்லன், நல்லள், நல்ல, நல்லது (நன்று) என இவ்வாறு படர்க்கை இடத்திற்கு ஐந்தும்; நல்லெம், நல்லென்; நல்லை, நல்லிர் என இவ்வாறு தன்மை, முன்னிலை இடங்கட்கு நான்குமாக,ஒன்பதாகும் எனக் கொள்க. இன்னும் அதனானே, விகுதி பெறாத தொழில் வினைமுற்றுக்களையும் ஏற்ற பெற்றி எண்ணி அமைத்துக் கொள்க.

(5)

## 324. அன்னா னிறுமொழி யாண்பாற் படர்க்கை

அன் ஆன் இறு மொழி ஆண்பால் படர்க்கை

a<u>n</u> ā<u>n</u> iṛumoḷi āṇpāl paṭarkkai

**இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)**

## Masculine finite verbs

Words ending in an and an belong to the 3rd person (singular) Masculine Gender.

### ஒப்புமைப் பகுதி

னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்

(தொல். சொல்.: 5)

அன் ஆனும்........

(வீர.: 29: 1)

அன்னா னிறுமொழி யாண்பாற் படர்க்கையும்

(இ.வி.: 232:1)

னகார விறுதி குடிநிலங் குழூஉவினை
திணைநிலை சினைநிலை பண்புகொள் பெயரே
எண்ணுப் பெயரொடு சுட்டுவினாப் பெயர்
உயர்திணை ஆண்பாற் படர்க்கைப் பெயரே

(மு.வீ.: 477)

அன் ஆன்........

(தொ.வி.: 84)

அன் ஆன் ஈறு ஆண்..........

(சுவாமி.: 50:1)

### மயிலை நாதர்

எ—ன், நிறுத்தமுறையானே முற்றை விரித்துணர்த்துவான் தொடங்கினார், இச்சூத்திரம் ஆண்பாற் படர்க்கை முற்றாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.:— இவ்விரு விகுதியையும் ஈறாகவுடைய மொழிகள் ஆண்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம், எ—று.

---

பாட வேறுபாடு.:—

1. வருவானவன்
2. வரவினானவன்

பொதுவாக வைத்தமையான், வினையும் குறிப்புங் கொள்க.

எச்சங்களை மேலே விதந்தோதலின், விதவாது வருவன வெல்லாம் ஈண்டு முற்றென்றே கொள்க.

வ–று.:–

வந்தனன், வந்தான்; வாரா நின்றனன், வாரா நின்றான்; வருவன், [1]வருவான் எனவும், பூணினன், பூணினான்; புறத்தன், புறத்தான்; ஆதிரையன், ''ஆதிரையான்'' (முத். கட.) கண்ணினன், கண்ணினான்; பொன்னன்னன், பொன்னன்னான், வரவினன், [2]வரவினான் எனவும் வினையும் குறிப்பும் வந்தன; அவனென்னும் பெயர் தந்து முடிக்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், மேல் கூறிப்போந்த இருவகை முற்றுள் திணை பால் இடங்களின் ஒன்றற்கு உரியன உணர்–ற்று.

இ–ள்.:– அன் ஆன் என்னும் இரு விகுதியும் இறுதியாகிய மொழிகள் உயர்திணை ஆண்பால் படர்க்கை வினைமுற்றும் வினைக்குறிப்பு முற்றுமாம், எ – று.

ஆண் பெண் என்னும் விகற்பம் அஃறிணைப் பெயர்க்கண் அன்றி அவ் வினைக்கண் இன்மையின், 'ஆண்' என்றமையான் உயர்திணை என்பதூஉம், 'பால்' என்றமையான் முற்று என்பதூஉம் மேலைச் சூத்திரத்து 'முற்றுவினைப் பதம் ஒன்றே' என விதந்தாற் போல இதனுள் விதவாமையின் இருவகை முற்றிற்கும் பொதுவாகக் கூறினார் என்பதூஉம் பெற்றாம். மேல் வரும் சூத்திரங்களும் அன்ன.

வ – று.:–

நடந்தனன், நடந்தான், நடவா நின்றனன், நடவாநின்றான், நடப்பன், நடப்பான் : நம்பி என உயர்திணை ஆண்பால் படர்க்கை இறந்தகால வினைமுற்றும் நிகழ்கால வினைமுற்றும் எதிர்கால வினைமுற்றும் முறையே வந்தன. குழையினன், குழையான்; நம்பி என உயர்திணை ஆண்பால் படர்க்கை வினைக் குறிப்புமுற்று வந்தன.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், நிறுத்த முறையானே உயர்திணை ஆண்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றும் கூறுகின்றது.

இ–ள்.: அன் ஆன் இறுமொழி – அன் ஆன் என்னும் இவ்விரு

விகுதிகளை ஈறாகவுடைய மொழிகள், **ஆண்பாற் படர்க்கை** –உயர்திணை ஆண்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம், எ–று.

உ – ம்.:–

வந்தனன், வந்தான், வாராநின்றனன், வாராநின்றான், வருவன், வருவான்: அவன் எனவும் தெரிநிலை வினைமுற்று வந்தன. பூணினன், பூணினான்; புறத்தன்; புறத்தான்; ஆதிரையன், ஆதிரையான், கண்ணினன், கண்ணினான்; பொன்னினன், பொன்னினான்; விரைவினன், விரைவினான்: அவன் எனக் குறிப்பு வினைமுற்று வந்தன.

## விசாகப் பெருமாளையர்

இது, முன்சொல்லப்பட்ட விருவகைமுற்றுகளுள் திணைபா லிடங்களில் ஒன்றற்குரியன உணர்த்துகின்றது.

**இ–ள்.:– அன் ஆனிறுமொழி** – அன் ஆன் என்கிற விருவிகுதியையும் இறுதியிலுடையமொழிகள், **ஆண்பாற்படர்க்கை** – உயர்திணையாண் பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், **எ–று.**

வ – று.:–

விகுதி – தெரிநிலை இறந்தகாலம், தெரிநிலை – நிகழ்காலம், தெரிநிலை – எதிர்காலம் – குறிப்பு.

ஆன் – நடந்தனன்–நடக்கின்றனன் – நடப்பான்–குழையன் அவன்

ஆன்–நடந்தான்–நடக்கின்றான் –நடப்பான்–குழையான் எனவரும், மற்றவைளுமிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

உயர்திணை ஆண்பாற்படர்க்கை ஒருமைவினைமுற்று இவை எனக் கூறுஞ் சூத்திரம் யாது?

அன் ஆ னிறுமொழி யாண்பாற் படர்க்கை.

(அன் ஆன் இறு மொழி ஆண்பாற் படர்க்கை)

**இ–ள்.:** அன் ஆன் என்னும் இருவிகுதியையும் இதியிலுடைய மொழிகள் உயர்திணை யாண்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், எ–று.

**வரலாறு:–**

| இறந்தகாலத்தெரிநிலை வினைமுற்று | நிகழ்காலத் தெரிநிலை வினைமுற்று |
|---|---|
| நடந்தனன் | நடக்கின்றனன் |
| நடந்தான் | நடக்கின்றான் |
| உண்டனன் | உண்ணாநின்றனன் |

| எதிர்காலத்தெரிநிலை வினைமுற்று | குறிப்பு வினைமுற்று |
|---|---|
| நடப்பன் | குழையன் |
| நடப்பான் | குழையான் |
| உண்பன் | ஊணன் |

**இவற்றெதிர்மறை;-**

நடந்திலன் நடக்கின்றிலன் நடவான் குழையனல்லன்

மற்றவைகளும் இப்படியே வரும்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மேற்கூறிய இருவகை முற்றுக்கள் திணை பாலிடங்களில் ஒன்றிற்கு உரியனவாமாறு உணர்த்திற்று.

**இ-ள்.:- அன்னா னிறுமொழி** - அன் ஆன் என்னும் இரண்டு விகுதிகளும் ஈறாகிய மொழிகள், **ஆண்பாற் படர்க்கை** - ஆண்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ-று.

வ-று.:-

நடந்தனன், நடந்தான், நடவா நின்றனன், நடவாநின்றான், நடப்பன், நடப்பான், அவன் என உயர்திணை யாண்பாற் படர்க்கை முக்கால வினை முற்றுக்கள் முறையே வந்தன. குழையினன், குழையான் அவன் என அத்திணை யாண்பாற் படர்க்கைக் குறிப்புவினை முற்று வந்தன. பிறவுமன்ன.

இவை முன்குறிப்பு வினைமுற்றாய்ப் பின் பொருள்களை வழங்குதற்கு வரும் பெயராயின், அவை குறிப்புவினை யாலணையும் பெயர்களாம். தம்முள் வேற்றுமை யாதோவெனின், பெயராயின் குழையன்வந்தான், குழையனைக் கண்டேன், குழையனால் முடியும், குழையா என உருபேற்பதும்: வினையாயின், குழையையுடைய னாயினான், குழையைத்தரித்தான்: சாத்தன் என உருபேலாது பெயர்ப் பயனிலை கொண்டு முடிந்து நிற்பதுந்தான் தம்முள் வேற்றுமை யென்க. இவை தெரிநிலைவினைக்குந் தெரிநிலை வினையாலணையும் பெயர்க்கும் ஒக்கும், மொழிபடர்க்கை என

முடிந்து நின்றது.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** அன் ஆன் இறுமொழி – அன் ஆன் என்கிற இரண்டு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், **ஆண்பால் படர்க்கை** – உயர்திணை ஆண்பாற்படர்க்கைத் தெரிநிலைமுற்றுங் குறிப்பு முற்றுமாம்.

**உம்:–**

| | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு | |
|---|---|---|---|---|---|
| அன் – | நடந்தனன். | நடக்கின்றனன். | நடப்பன். | குழையன். | அவன். |
| ஆன் – | நடந்தான். | நடக்கின்றான். | நடப்பான் | குழையான் | |

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: அன் ஆன் இறு மொழி** – அன் ஆன் என்னும் இரு விகுதியையும் இறுதியிலுடையமொழிகள், **ஆண்பாற் படர்க்கை** – உயர்திணை யாண்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ–று.

வ–று.:–

இ. தெரி. நி.தெரி. எ.தெரி. குறி.

நடந்தனன்–நடக்கின்றனன் – நடப்பன்–குழையன்

நடந்தான்–நடக்கின்றான் –நடப்பான்–குழையான் – அவன்

மற்றவைகளும் இப்படியே வரும்

**இ–ள்.: அள் ஆள் இறுமொழி** – அள் ஆள் என்னும் இரண்டு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், **பெண்பாற் படர்க்கை** – உயர்திணைப் பெண்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், எ– று.

வ–று.:

இ. தெரி. நி.தெரி. எ.தெரி. குறி.

நடந்தனள்–நடக்கின்றனள்– நடப்பள்–குழையள்

நடந்தாள்–நடக்கின்றாள் –நடப்பாள்–குழையாள் – அவள்

மற்றவைகளும் இப்படியே வரும்

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். அன் ஆன் இறுமொழி — அன் ஆன் என்னும் இருவிகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், — ஆண்பாற்படர்க்கை.** உயர்திணையாண்பாற் படர்க்கைவினை முற்றுங் குறிப்புமுற்றாம். எ—று.

(வரலாறு)

| இ.தெரி | நி. தெரி | எ.தெரி | குறி | |
|---|---|---|---|---|
| நடந்தனன் | நடக்கின்றனன் | நடப்பன் | குழையன் | அவன் |
| நடந்தான் | நடக்கின்றான் | நடப்பான் | குழையான் | |

மற்றவைகளும் இப்படியே வரும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.: அன் ஆன் இறு மொழி — அன் ஆன் என்கிற இரண்டு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், **ஆண்பால் படர்க்கை** — உயர்திணை யாண்பாற் படர்க்கைத் தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம்; எ—று.

உ—ம்.:

| | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. |
|---|---|---|---|---|

அன் — நடந்தனன்—நடக்கின்றனன் — நடப்பன்—குழையன்

ஆன் — நடந்தான்—நடக்கின்றான் —நடப்பான்—குழையான் —அவன்

## பவானந்தம் பிள்ளை

இ—ள்.:— அன் ஆன் இறு மொழி — அன் ஆன் என்னும இருவிகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், **ஆண்பாற் படர்க்கை** — உயர்திணையாண்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ—று.

உ—ம்.:—

தெரிநிலை குறிப்பு

| இறப்பு | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|
| அள்—நடந்தனள் | நடக்கின்றனள் | நடப்பள் குழையள் |
| ஆள்—நடந்தாள் | நடக்கின்றாள் | நடப்பாள் குழையாள் — அவள் |

மற்றவைகளும் இப்படியே வரும். (7)

அற்று, இற்று, எற்று என்பவை, சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்பு முற்றுக்கள். இவை, முறையே அத்தன்மைத்து, இத்தன்மைத்து, எத்தன்மைத்து எனப் பொரள்படும். இவை 'பொருண்முத லாறினும் தோற்றி' (சூ—321) என்றவற்றுள்

எப்பொருளை யுடையனவெனின், பொருளாதி ஆறனுள் யாதாயினும் ஒன்றைச் சுட்டியும் வினாவியும் வருதலால் அந்தந்தப் பொருளை யுடையனவா மென்க.

ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே, (சூ–399) என்பதனால் அது இது என்னுந் தொடக்கத்து முற்றுகர ஈற்றுச் சொற்களும் குறிப்பு வினையாம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:– அன் ஆன் இறுமொழி** – அள் ஆள் என்கிற இரண்டு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், **பெண்பால் படர்க்கை** – உயர்திணைப் பெண்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்பு முற்றுமாம். எ–று.

**பொ–ரை.:–** அள், ஆள் என்னும் இருவிகுதியையும் இறுதியிலுடைய மொழிய உயர்திணைப் பெண்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்புவினை முற்றுமாம்.

**உ–ம்.:–**

இறந்தகாலம். நடந்தனன்.

நிகழ்காலம். நடந்தாள்.

நடக்கின்றனன்.

நடக்கின்றான்.

எதிர்காலம்.

நடப்பன்.

நடப்பான்.

அவன்.

அன்.

ஆன்.

குறிப்பு. தெரிநிலை.

எனவரும்; மற்றவைகளும் இப்படியே.

## கா. நமச்சிவாய முதலியார்

அன்ஆன் இறுமொழி ஆண்பாற் படர்க்கை

**அன் ஆன் இறுமொழி** – அன் ஆன் என்கின்ற இரு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், **ஆண்பாற் படர்க்கை** – உயர்திணை ஆண்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம்.

உதாரணம்

| | | | | |
|---|---|---|---|---|
| | | இறந்தகாலம் | நடந்தனன்<br>நடந்தான் | |
| | தெரிநிலை | நிகழ்காலம் | நடக்கின்றனன்<br>நடக்கின்றான் | |
| அன் - ஆன் | | எதிர்காலம் | நடப்பன்<br>நடப்பான் | அவன் |
| | குறிப்பு | ---- | குழையுன்<br>குழையான் | |

மற்றவைகளும் இப்படியே.

## மோசசு பொன்னையா

அன் ஆன் என்னும் இரு விகுதிகளையும் ஈற்றிற் பெற்றுவரும் வினைச்சொற்கள் உயர்திணை ஆண்பாற் படர்க்கையையும், ஆள், ஆள் என்னும் இரு விகுதிகளையும் ஈற்றிற் பெற்று வரும் வினைச்சொற்கள் உயர்திணைப் பெண்பாற் படர்க்கையையும் உணர்த்தும் தொழில், குறிப்பு வினைமுற்றுக்களாம் எ-று.

எ-டு.:-

| | தொழில்வினைமுற்று | குறிப்பு வினைமுற்று |
|---|---|---|
| ஆண்: | அன்-நடந்தனன்-நடக்கின்றனன்-நடப்பன்- | குழையன் |
| | ஆன்-நடந்தான்-நடக்கின்றான்-நடப்பான்- | குழையான் |
| பெண்: | அள்-நடந்தனள்-நடக்கின்றனள்-நடப்பள்- | குழையள் |
| | ஆள்-நடந்தாள்-நடக்கின்றாள்-நடப்பாள்- | குழையாள் |

குறிலொற்றும், நெடிலொற்றுமாக வழங்கும் உயர்திணைப் பால்விகுதிகள் தம்முள் சிறிதும் வேற்றுமை இன்றியே வழிவழியாக இலக்கண அமைதி கூறப்பட்டு வருகிறது.1

தொல்காப்பியரும்,

அன்ஆன் அள்ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே,2

எனக் கூறிந் போந்தர். இக்கால மொழிநூலார் இவற்றை மாற்றுப்பொருளசைகள்3 என்பர்.

சேனாவரையர். 'முன்னின்ற நான்கீறும் (அம், ஆம். எம்.ஏம்) இறந்த காலம் பற்றி வருங்கால் அம்ம் எம்மும் கடதறவென்னும் நான்கன் முன் அன்பெற்று வரும், ஏம் அன் பெற்றும் பெறாதும் வரும். ஆம் அன் பெறாது வரும்'4 எனவும் காலத்துக்கேற்ற

எழுத்துப் பெறுங்கால் அன்னும் அள்ளும் அம்மீற்றோடும், ஆனும் ஆளும் ஆமிற்றோடும் ஒக்கும்'5 எனவும் ஒரு விளக்கம் உரைத்துள்ளார். அவர் கருத்துப்படி,

(1.பலர்பால் விகுதியும் உட்பட; 2. தொல். சொல். 205; 3. Allomorphs; 4. தொல். சொல். 202–உரை; 5. தொல். சொல். 205–உரை.)

பெற்றனன், தந்தனன் என்பவற்றிலுள்ள அன் காலத்திற்கேற்ற எழுத்து எனத் தெரிகிறது. இக்காலத்தில் அதனை பாரியை என்கின்றனர். அவர் கடதற என்னும் நான்கன் முன் அன் வருவதைக் குறிப்பிட்டவாறே, போஇ>போய்+இன் என்றிவ்வாறு இகரத்தின் முன்வரும் இன் பற்றிக் குறிப்பிட்டிலர். பெற்றவற்றியலான் மற்றைய பிறவும் உணர்ந்து உணர்த்தப்படல் ஏற்புடைத்தே யாம் ஆதலின், இன்னையும் காலத்திற்கேற்ற எழுத்தெனக் கொள்ளுதலே நேரிதாம். நச்சினார்க்கினியர், என்மனார் என்னுஞ் சொல்லின் மன் என்பது, வினை பற்றிய அசைநிலை இடைச்சொல்லாய் நின்றது'1 என்ற விடத்து மன் காலத்திற்கேற்ற அசைநிலை இடைச்சொல் என்றாரேனும், என்மனார் என்பது என்உம்>என்ம்அன்+அ+அர்2 எனப் பிரிக்கப்படுவதே முறை ஆதலின் அவர், உம் என்ற கால இடைச்சொல்லுக் கேற்ப அன் வந்தது எனக் கொண்டார் என்பதே பொருளாகும் எனக் கொள்க. எனவே, வினையடியை அடுத்துக் கால விகற்பத்தை உண்டாக்கி நிற்கும் கடதற; உம்; கு, கும் என்பனவே முறையே முக்காலத்துக்கும் உரிய கால இடைச்சொற்களாகக் கருதப்பட்டன என்பதும். அவற்றிற்கேற்ப வந்து கூடும் இடைச்சொற்கள் பல இருந்தன என்பதும் போதரும், என்ப, கூறுப என்பவற்றில் வரும் ஈற்று அகரமும், என்பல் என்பதில் வரும் அல்லும் எதிர்காலத்தில் வந்த காலத்திற்கேற்ற எழுத்துக்கள் எனக்கோடலும் பிழையாகாது. இறந்த, நிகழ்கால வினைகளில் வரும் அன் காலத்தினால் முற்பட்ட வழக்குடையது ஆதலின், பால் வேறுபாடின்றி வழங்கிற்று எனவும், எதிர்காலத்தில் வரும் அகரமும் அல்லும் காலத்தினால் பிற்பட்ட வழக்குடையன ஆதலின் எண் வேறுபாடுணர்த்தி நின்றன எனவும் கோடல் ஏற்புடையதேயாகும். எனவே, இவற்றைச் சாரியை எனக் கொள்வதைவிட வினைவிகுதிகள் எனக்கோடலே பொருத்தமுடையதாகும்.

(1.தொல். சொல். 1–உரை; 2. அகரமும் அர்ரும் இரட்டைப் பன்மை விகுதிகள்.)

அவ்வாறு காலத்திற்கேற்ப நின்ற அன், இன், என்னும்

பாலுணர்த்தா விகுதிகளுடன், பின்தோன்றிய பாலுணர்த்தும் அன், அள் முதலிய படர்க்கை விகுதிகள் புணர்ந்து இறந்த காலத்தில், நடந்தனன், நடந்தனள் என இவ்வாறு விகுதிமேல் விகுதியாக அமைந்து வழங்குவனவாயின. படர்க்கை வினைப் பெயர்களோ வெனின், எச்சப்பொருள்தரும் அகரத்தைப்பெற்ற பின்னர் பாலுணர்த்தும் விகுதிகளைப் பெற்று, பெயரெச்சத் தொடர்த்திரிபாக, சென்று+ அ+அன்= சென்றான்; நடந்து + அ + அள் = நடந்தாள்; போஇ>போயி+(ன்)1+அ+அன்=போயினான் என இவ்வாறு இரு குறில்கள் ஒரு நெடிலாகும் ஒலி முறைப்படி அகரமும் அன் அல்லது அள்ளின் அகரமும் கூடி ஆகாரமாகி முடிந்து நின்றன எனக் கொள்வது அமையும்.

நடந்து+அ+அன்=நடந்தான் எனப் புணர்ந்து நிற்பதோடு, இரண்டு உயிர்களுக்கும் இடையே உடம்படுமெய் தோன்றி, நடந்தவன் எனப்புணர்ந்து நிற்பதும் வழக்கேயாம். கல்லாடர் 'உண்டவன், தின்றவன், உண்ணுமது, தின்னுமது என்பன ஓசை வேற்றுமையான் அன்றித் தாமே பெயராய்க் காலம் காட்டி நின்றன. இவை, வினை முதற்பாகுபாடு2 எனக் கூறியுள்ளதை நோக்கின், இவ்வாறு வழங்குவன தொழில் முதனிலைகளாம் வினையாலணையும் பெயர்களாகவே வருவன என்பதே அவர் கொள்கை என்பது புலப்படும். நல்லான், நல்லவன் என்னும் குறிப்பு வினைப்பெயர்களின் வேறுபாட்டையும் கல்லாடனார் கருந்தோடொட்டப் பாகுபடுத்தி உணர்க. பிற்காலத்தில் இவ்வகை வேறுபாடுகள் கருதப்பட்டில.

(6)

## 325. அள்ளா ளிறுமொழி பெண்பாற் படர்க்கை.

அள் ஆள் இறு மொழி பெண்பால் படர்க்கை.

a<u>l</u> ā<u>l</u> iṛumoḷi peṇpāl patarkkai.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### Femenine finite verbs

Words ending in al and al belong to the 3rd person (singular) Feminine Gender.

## ஒப்புமைப் பகுதி

ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்

(தொல். சொல்.:6)

........... அள் ஆளும் ...........

(நேமி.: 29:1)

அள்ளா ளிறுமொழி பெண்பாற் படர்க்கையும்

(இ.வி.: 232:2)

.......... அள் ஆள்......

(தொ.வி.: 84 :1)

உரைத்த குடிமுத லுற்ற ளகார
ஈற்றவு மிகார விறுதிக் கிளவியும்
அத்திணைப் பெண்பாற் படர்க்கை யாகும்

(மு.வி.: 479)

............. அள் ஆள் பெண்.......

(சுவாமி.: 50:1)

## மயிலை நாதர்

எ–ன், பெண்பாற் படர்க்கை முற்றாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: இவ்விரு விகுதியையும் ஈறாகவுடைய மொழிகள் பெண்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம், எ –று.

வ–று.:–

வந்தனள், வந்தாள், வாராநின்றனள், வாராநின்றாள்; வருவள், வருவாளென வினைமுற்று வந்தவாறு. மேலனவற்றை ளகாரமாகத் திரித்துக் குறிப்புமுற்று வந்தவாறுங் காண்க; அவளென்னும் பெயர் தந்துமுடிக்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், இதுவும் அது.

இ–ள்.: அள் ஆள் என்னும் இருவிகுதியும் இறுதியாகிய மொழிகள் உயர்திணைப் பெண்பால் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம், எ–று.

வ–று.:–

நடந்தனள், நடந்தாள், நடவாநின்றனள், நடவா நின்றாள், நடப்பள், நடப்பாள், குழையினள், குழையாள்: நங்கை என

வரும்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், உயர்திணைப் பெண்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றும் கூறுகின்றது.

இ-ள்.: அள் ஆள் இறுமொழி - அள் ஆள் என்னும் இவ்விரு உயர்திணைப் பெண்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம், எ-று.

உ-ம்.: வந்தனள், வந்தாள்; வாராநின்றனள், வாராநின்றாள், வருவள், வருவாள் எனத் தெரிநிலை வினைமுற்று வந்தன. குறிப்பு வினை முற்றுக்கு மேல் வந்தவற்றை ளகாரமாகத் திரித்துக் காண்க.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

இ-ள்.: அள் ஆளிறுமொழி - அள் ஆள் என்கிற இரண்டுவிகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், பெண்பாற் படர்க்கை - உயர்திணைப் பெண்பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ-று.

வ-று.: வி, தெ, இ, தெ, நி, தெ, எ, கு

அள்-நடந்தனள், நடக்கின்றனள், நடப்பாள், குழையள்: அவள்

ஆள்-நடந்தாள், நடக்கின்றாள், நடப்பாள், குழையாள்: அவள் எனவரும். மற்றவைகளு மிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

22. உயர்திணைப் பெண்பாற்படர்க்கை ஒருமைவினைமுற்று இவை எனக் கூறுஞ் சூத்திரம் யாது?

அள் ஆ ளிறுமொழி பெண்பாற் படர்க்கை.

(அள் ஆள் இறு மொழி பெண்பாற் படர்க்கை.)

இ-ள்.: அள் ,ஆள் என்னும் இரண்டு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள் உயர்திணைப் பெண்பாற்படர்க்கை வினை முற்றுங் குறிப்புமுற்றுமாம், எ - று.

இ.தெரி. நி.தெரி. எ.தெரி குறி.

நடந்தனள் நடக்கின்றனள் நடப்பன் குழையள் அவள்

நடந்தாள் நடக்கின்றாள் நடப்பாள் குழையாள்

மற்றவைகளும் இப்படியே வரும்.

## முகவை இராமானுசக் கவிராயர்

**இதுவுமது,**

**இ–ள்.: அள் ஆள் – என்னு மிரண்டு விகுதியும் ஈறாகவுடைய மொழிகள் உயர்திணைப் பெண்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ–று.**

வ–று.: நடந்தனள், நடந்தாள் (இறந்தகாலம்); நடக்கின்றனள், நடக்கின்றாள் (நிகழ்காலம்); நடப்பள், நடப்பாள் (எதிர்காலம்); அவள் (தெரிநிலை) குழையினள்–குழையாள்– அவள் (குறிப்பு) என வரும். இனி ஆசிரியர் தொல்காப்பியனார்.

**"அன்னான் அள்ளாள் என்னுநான்கு மொருவர்**
**மருங்கிற் படர்க்கைச் சொல்லே"**

எனக் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– அள் ஆள் இறுமொழி – அள் ஆள் என்கிற இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், பெண்பால் படர்க்கை –உயர் திணைப் பெண்பாற்படர்க்கைத் தெரிநிலைமுற்றுங் குறிப்பு முற்றுமாம்.

| உம்:– | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு | |
|---|---|---|---|---|---|
| அள் – | நடந்தனள். | நடக்கின்றனள். | நடப்பள். | குழையள். | அவள். |
| ஆள் – | நடந்தாள். | நடக்கின்றாள். | நடப்பாள் | குழையாள் | |

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: அள் ஆள் இறுமொழி – அள் ஆள் என்கிற இரண்டு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், பெண்பாற் படர்க்கை – உயர்திணைப் பெண்பாற் படர்க்கைத் தெரிநிலை முற்றும் குறிப்பு முற்றும் ஆம்; எ –று.

உ– ம்.:–

இறப்பு நிகழ்வு. எதிர்வு. குறிப்பு.

அள்–நடந்தனள்–நடக்கின்றனள் – நடப்பாள்–குழையள் அவள்

ஆள்–நடந்தாள்–நடக்கின்றாள்–நடப்பாள்–குழையாள்

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். அள் ஆள் இறுமொழி – அள் ஆள் என்னும் இரண்டுவிகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், – பெண்பாற்படர்க்கை – உயர்திணைப் பெண்பாற் படர்க்கைவினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம்.

| இ.தெரி | நி. தெரி | எ.தெரி | குறி | |
|---|---|---|---|---|
| நடந்தனள் | நடக்கின்றனள் | நடப்பள் | குழையள் | அவள் |
| நடந்தாள் | நடக்கின்றாள் | நடப்பாள் | குழையாள் | |

மற்றவைகளும் இப்படியே வரும். (சூத்) "அன்னான் அன்னாள் என்னு நான்கும், ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே" என்றார் தொல்காப்பியனாரும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: அள் ஆள் இறுமொழி – அள் ஆள் என்கிற இரண்டு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், பெண்பாற் படர்க்கை – உயர்திணைப் பெண்பாற் படர்க்கைத் தெரிநிலை முற்றும் குறிப்பு முற்றும் ஆம்; எ –று.

உ– ம்.:–

இறப்பு நிகழ்வு. எதிர்வு. குறிப்பு.

அள்–நடந்தனள்–நடக்கின்றனள் – நடப்பாள்–குழையள் அவள்

ஆள்–நடந்தாள்–நடக்கின்றாள்–நடப்பாள்–குழையாள்

## பவானந்தம் பிள்ளை

இ–ள். அள் ஆள் இறு மொழி – அள் ஆள் என்னும இருவிகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், பெண்பாற் படர்க்கை – உயர்திணையாண்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ–று.

உ–ம்.:–

தெரிநிலை குறிப்பு

| | இறப்பு | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|---|
| அள்– | நடந்தனள் | நடக்கின்றனள் | நடப்பள் குழையள் |
| ஆள்– | நடந்தாள் | நடக்கின்றாள்– | நடப்பாள் குழையாள் – அவள் |

மற்றவைகளும் இப்படியே வரும்.

அற்று, இற்று, எற்று என்பவை, சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்பு முற்றுக்கள். இவை, முறையே அத்தன்மைத்து, இத்தன்மைத்து, எத்தன்மைத்து எனப் பொரள்படும். இவை 'பொருண்முத லாறினும் தோற்றி' (சூ–321) என்றவற்றுள் எப்பொருளை யுடையனவெனின், பொருளாதி ஆறனுள் யாதாயினும் ஒன்றைச் சுட்டியும் வினாவியும் வருதலால் அந்தந்தப் பொருளை யுடையனவா மென்க.

ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே, (சூ–399) என்பதனால் அது இது என்னுந் தொடக்கத்து முற்றுகர ஈற்றுச் சொற்களும் குறிப்பு வினையாம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:–** அள் ஆள் இறுமொழி – அள் ஆள் என்கிற இரண்டு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், **பெண்பால் படர்க்கை** – உயர்திணைப் பெண்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்பு முற்றுமாம். (எ–று)

**பொ–ரை.:–** அள், ஆள் என்னும் இருவிகுதியையும் இறுதியிலுடைய மொழிகள் உயர்திணைப் பெண்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்புவினை முற்றுமாம்.

**உ–ம்.:–**

இறந்தகாலம். நடந்தனள். நடந்தாள்.

நிகழ்காலம்.

நடக்கின்றனள்.

நடக்கின்றாள்.

எதிர்காலம்.

நடப்பள்.

நடப்பாள்.

அவள்.

அள்.

ஆள்.

குழையள்.

குழையாள்.

எனவரும்; மற்றவைகளும் இப்படியே.

## கா. நமச்சிவாய முதலியார்

**அள் ஆள் இறுமொழி** – அள் ஆள் என்னும் இரண்டு விகுதியையும் இறுதியிலுடைய மொழிகள், பெண்பாற் படர்க்கை – உயர்திணைப் பெண்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம்.

**உதாரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| | | இறந்தகாலம் | நடந்தனள் | |
| | | | நடந்தாள் | |
| | தெரிநிலை | நிகழ்காலம் | நடக்கின்றனள் | |
| அள்–ஆள் | | எதிர்காலம் | நடக்கின்றாள் | அவள் |
| | | எதிர்காலம் | நடப்பள் | |
| | | | நடப்பாள் | |
| | குறிப்பு | | குழையள் | |
| | | | குழையாள். | |

மற்றவைகளும் இப்படியே.

(10)

**326. அர் ஆர் பவ்வூ ரகரமா ரீற்ற**
**பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.**

அர் ஆர் பவ் ஊர் அகரம் ஆர் ஈற்ற
பல்லோர் படர்க்கை மார் வினையொடு முடிமே.

ar ār pavūr akara mār ir̤ra
pallōr patarkkai mār vinaiyotu mutimē.

---

பாட வேறுபாடு.:-

1. மொழிகளையும்
2. முடிவதுமாம்

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Plural-personal finite Verbs**

Ar, ar, pa and mar are the termination of the 3rd person plural-personal gender; (of these), mar may be added (not only to nouns but) also to verbs.

## ஒப்புமைப் பகுதி

ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே

(தொல். சொல்.:7)

............... அர்ஆர்பவ் வீறுமாம்
முன்னை உயர்திணைப்பான் மூன்றற்கும் ........

(நேமி.: 29: 1–2)

அர்ஆர் பவ்வூ ரகார மாரீற்ற
பல்லோர் படர்க்கையும் பகருமன் அவற்றுள்
மாரைக் கிளவி வினையொடு முடியினு
மேலைக் கிளவியொடு வேறுபா டின்றே

(இ.வி.: 232)

............ அர் ஆர்...............

(தொ.வி.: 84:1)

குடி முத லாகக் குறித்தவற் றிறுதி
ரகாரைப் பெயரும் மாரைக் கிளவியும்
உயர்திணைப் பலர்பாற் படர்க்கைப் பெயரே

---

பாட வேறுபாடு.:–

1. ஆர்த்தார்கொண்மார்
2. பூங்குழாய்
3. பழூஉப்பயன்

(மு.வி.: 481)

................ அர் ஆர் பம்மார்
ஆம்பலர்...............

(சுவாமி.: 50:1)

## மயிலை நாதர்

எ—ன், பல்லோர் படர்க்கை முற்றாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.: இந்நான்கு 'விகுதிகளையும் ஈறாகவுடையமொழிகள் பல்லோர்படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம்; மார் வினைகொண்டு [2]முடிவதாம், எ—று.

வ—று.:—

வந்தனர், வந்தார், வாராநின்றனர், வாராநின்றார், வருவர், வருவாரென வந்தவாறு. மேற்காட்டின னகார ளகார வீற்றை ரகாரமாகத் திரித்துக் குறிப்புமுற்று வந்தவாறு காண்க; அவரென்னும் பெயர் கொணர்ந்து முடிக்க.

ஒப்ப, உரைப்ப, சொல்லுப, புல்லுப எனவும்,[1] "ஆகொண்மார் வந்தார் [2]பூக்குழாய்" எனவும் பவ்வூர் அகரவீறும், மாரீறும் வந்தன. "விழுக்கோட்பலவின் [3]பழுப்பயன் கொண்மார், குறவ ரூன்றிய குரம்பை புதைய" என்பது குறவரென்னும் பெயர்கொள்ளாது ஊன்றியவென்னும் பெயரெச்சவினை கொண்டது.

'வினையொடும்' என்ற உம்மையான், "பெரிய வோதினுஞ் சிறியவுணராப், பீடின்று பெருகிய திருவிற், பாடின் மன்னரைப் பாடன்மாரெமரே" (புறநா.375) எனப் பெயரொடு முடிதலும் கொள்க.

ஒப்ப, உரைப்ப முதலானவை, ஒப்பவை, உரைப்பவையெனப் பெயர்ப்படின், அவை அஃறிணைப்பன்மைப் பெயராமென்க.

"காலமொடு கருத வரினு மாரை, மேலைக்
கிளவியொடு வேறுபா டின்றே"

என்பது அகத்தியம்.

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், இதுவும் அது.

இ—ள்.:— அர் ஆர் ப மார் என்னும் நான்கு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் உயர்திணைப்பன்மைப் படர்க்கை வினைமுற்றும்

குறிப்புமுற்றுமாம். இவற்றுள் மாரீற்று வினை முற்றுப் பொதுவிதியால் பெயருடன் முடிவதன்றி வினையுடனும் முடியும், எ—று.

'மார் எதிர்வும் பாந்தம் செலவொடு வரவும்' எனப் பதவியலுள் கூறினமையின் இவ்விரு விகுதியும் குறிப்புமுற்றின் கண் வாரா எனவும், மார் வினையுடனும் முடியும் என்றமையின் இதற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தார் எனவும், வினையொடு முடிமே என்புழி இறந்ததுதழீஇய வெச்சவும்மையின்று எனக் கொள்ளினும் அமையபக் கூறினமையின் வினையொடு முடிதல்போல் பெயரொடு முடிதல் பயின்று வருவது அன்று எனவும் கொள்க.

வ—று.: நடந்தனர், நடந்தார், நடக்கின்றனர், நடக்கின்றார், நடப்பர், நடப்பார், குழையினர், குழையார்; அவர் எனவும்; நடப்ப, எய்துப, செல்லுப, புல்லுப : அவர் எனவும்;

[1] "பெரிய ஓதினும் சிறிய உணராப்
பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மார் எமரே"

எனவும் வரும். பாடன்மார் என்பது மாரீற்று எதிர்மறை வினைமுற்று ஆதலின் எதிர்காலவினை ஒன்றனையும் மறுத்துப் பாடுவாரல்லர் என்னும் பொருட்டாய் நின்று எமர் என்னும் பெயர்கொண்டது. இனி வினையொடு முடியுமாறு:

"ஆர்த்தார் கொண்மார் வந்தார்"

[2]"விழுக்கோட் பலவின் பழூஉப்பயன் கொண்மார்
குறவர் ஊன்றிய குரம்பை புதைஇ"

எனவரும்.

இதனை வினைமுற்று வினையெச்சமாயிற்றென்றால் என்னை யெனின்:– வினை முற்றினவழி அதற்கு இயைந்த பெயர்ப் பயனிலை வராது இயையாத வினைவந்ததேல் அதற்கு இயைய வினைமுற்று வினையெச்சமாயிற்று எனப்படும். இம்மாரீற்று வினைமுற்றிற்குப் பெயர்போல வினையும் இயைந்து வருதலின் முற்று எச்சமாயினது அன்று முற்றேயாம் என்க. பின்வரும் 'செய்கென் ஒருமையும் செய்கும் என்பன்மையும்' என்னும் முற்றுக்களும் அன்ன.

"காலமொடு கருத வரினும் மாரை மேலைக்
கிளவியொடு வேறுபா டின்றே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ-ம்,** உயர்திணைப் பலர்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றும் கூறுகின்றது.

**இ-ள்.:-** அர் ஆர் பவ்வூர் அகரமார் ஈற்ற - அர் ஆர் என்னும் விகுதியும் பகரவொற்றை ஊர்ந்த அகரமாகிய பவ்வென்னும் பகுதியும் மாரென்னும் விகுதியும் இந்நான்கு விகுதியையும் ஈறாகவுடைய மொழிகள், **பல்லோர்படர்க்கை** - உயர்திணைப் பலர்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம்; **மார்வினையொடு முடிமே** - மார் விகுதி சேர்ந்த தெரிநிலை வினைமுற்றுப் பெயர் கொண்டு முடிவதன்றி வினை கொண்டு முடிவதுமாம், எ-று.

உ-ம்.:-

**வந்தனர், வந்தார்; வருகின்றனர், வருகின்றார்; வருவர், வருவார்:** அவர் எனத் தெரிநிலை வினைமுற்று வந்தன. குறிப்பு வினைமுற்றுக்கு மேற்காட்டின னகர ளகரவீற்றை ரகரமாகத் திர்த்து அவரென்னும் பெயர் வருவித்துக் கொள்க. ஒப்ப, உரைப்ப, சொல்லுப, புல்லுப அவர் எனவும் கொண்மார், உண்மார் அவர் வந்தார் எனவும் பவ்வூர் அகரவீறும் மாரீறும் வந்தன. ஒப்ப, உரைப்ப முதலானவை ஒப்பவை உரைப்பவை யெனப் பெயர்ப்படின் அஃறிணைப் பன்மை பெயராமென்க.

## விசாகப் பெருமாளையர்

**இதுவுமது,**

**இ-ள்.:-** அர் ஆர் பவ்வூ ரகரமாரீற்ற - அர் ஆர் ப மார் என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **பல்லோர் படர்க்கை** - உயர்திணைப் பலர்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், **மார்** - இவற்றுள்ளே மாரீற்று வினைமுற்று, **வினையொடுமுடிம்** - பொதுவிதியாற் பெயருடன் முடிவதன்றி வினையுடனுமுடியும், எ-று.

(மார் விகுதியும் பவ் விகுதியுந் தாமே காலங்காட்டு மெனப் பதவியலுட் கூறுதலால் அவை குறிப்புவினைக்கு வருதலில்லை)

வ-று.:-

வி, தெ, இ, தெ, நி, தெ, எ, கு.

அர்-நடந்தனர்-நடக்கின்றனர்-நடப்பர்-குழைபர் அவர்

ஆர்–நடந்தார்–நடக்கிறார்–நடப்பார்–குழையார்

ப நடப்ப

மார் பாடன்மார்

ஆர்த்தார் கொண்மார் வந்தார், எனவரும். மற்றவைகளு மிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

பலர்பாற் படர்க்கைவினைமுற்று இவை எனக் கூறுஞ் சூத்திரம் யாது?

அர் ஆர் பவ்வூ ரகரமா ரீற்ற

பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.

(அர் ஆர் பஊர் அகரம் மார் ஈற்ற

பல்லோர் படர்க்கை மார் வினையொடும் முடிமே)

இ–ள்.:– அர் ஆர் ப மார் என்னும் நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் உயர்திணைப் பலர்பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். இவற்றுள் மாரீற்று வினைமுற்று, பொதுவிதியாற் பெயருடன் முடிதலின்றி வினையுடன் முடியும், எ–று. ப ஊர் அகரம்ஃப் ஊர்ந்த அஃப.

பலர்பாற் படர்க்கை வினைமுற்றுக்கள் யாவை?

"அர் ஆர் பவ்வூர் அகரம் மார் ஈற்ற, பல்லோர் படர்க்கை."

மாரீற்றுவினைமுற்று யாதுகொண்டு முடியும்?

"மார் வினையொடு முடிமே."

குறிப்புவினைமுற்றிலே வராத உயர்திணைப் பலர்பாற் படர்க்கை வினைமுற்று விகுதிகள் யாவை?

மார் ப என்னுமிருவிகுதிகளுமாம்.

அவை அங்ஙனம் வராமைக்குக் காரணமென்னை?

"மாரெதிர்வும் ப அந்தஞ் செலவொடு வரவும்" எனப் பதவி யலுட் காலத்தை வெளிப்படக்காட்டும் விகுதிகள் எனக் கூறப்பட்டமையால் இவைகள் காலங்காட்டாத குறிப்புவினை முற்றுக்கண் வாராவாம்.

வரலாறு.:

| இ.தெரி. | நி.தெரி. | எ.தெரி. | குறி. |
|---|---|---|---|
| நடந்தனர் | நடக்கின்றனர் | நடப்பர் | குழைய அவர் |
| நடந்தார் | நடக்கின்றார் | நடப்பார் | குழையார் |

நடப்ப, எய்துப, மொழிப அவர் எனப் பவ் விகுதி வரும்.

"பெரிய வோதினுஞ் சிறிய வுணராப் பீடின்று பெருகிய திருவிற்பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே" என மாரீற்றச் சொல்லானது பெயர்கொண்டு முடிந்ததெனின், அது பாடுவார் என்னும் ஆரீற்று முற்றுச்சொல்லின் எதிர்மறையாய் அல் எதிர்மறையிடை நிலையும் மகரப்பேறும்பெற்று பாடு—அல்—ம்— ஆர் பாடன்மார்என நிற்பதொன்றாமாதலின் மாரீற்று முற்றுன்று. மாரீறு வினையோடல்லது பெயரோடு முடியாதன்றோ.

**"மாரைக்கிளவியும் பல்லோர் படர்க்கை, காலக்கிளவியொடு முடியுமென்ப" என்றார்** தொல்காப்பியனாரு மென்க

"எள்ளுமார் வந்தார்" என மாரீற்று வினைமுற்று வினையொடு முடிந்தது. எள்ளுமார் என்பது எள்ளுவார் எனப்பொருள்படும்.

இதுசெய்யிற் பழிப்பார் கண்டவர் என் றிக்காலத்து வழங்குதல் போல, பழிப்பார் வந்தவர் என்னும் பொருள்பட "எள்ளுமார் வந்தார்" என்பது அக்காலத்து வழக்கு.

மாரீற்று வினைமுற்று வினையோடல்லது பெயரோடு முடியாமையின் வினைமுற்று வினையெச்சமாயிற் றெனக் கொள்ளப்படாது.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது.

**இ—ள்.:—** அர் ஆர் பவ்வூ ரகர மாரீற்ற —அர் ஆர் ப மார் என்னும் நான்கு விகுதிகளையும் ஈறாக்வுடைய மொழிகள், படர்க்கை —உயர்திணைப் பண்மைப் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றுங் குறிப்புவினை முற்றுமாம், மா— வினையோடுமுடிமே. இவற்றுள் — மாரீற்றுச்சொல் பொதுவிதியாற் பெயருடன் முடிவ தன்றி வினையுடனு முடியும், எ—று.

'மாரெதிர்வும்', 'பாந்தஞ்செலவொடு வரவு'மெனப் பதவியலுட் கூறினதினாலே இந்த இரண்டு விகுதியுங் குறிப்பு முற்றிலே வாராவெனவும், மார்வினையுடனு முடியுமென்ற தினாலே இதற்குப் பொதுவிதிமேற் சிறப்புவிதி கூறினா ரெனவும், 'வினையொடுமுடிமே'—என்ற இடத்து, இறந்தது தழுவிய எச்சவும்மை இல்லையெனக் கொண்டாலும் அமையக் கூறினதினாலே வினையொடு முடிதல் போற் பெயரொடு

முடிதல் பயின்றுவாராதெனவுங் கொள்க.

வ–று.:–

நடந்தனர், நடந்தார்; நடக்கின்றனர், நடக்கின்றார், நடப்பர், நடப்பார் (தெரிநிலை) குழையினர், குழையார்: அவர் குறிப்பு எனவும் நடப்பமொழிப அவர் எனவும் ஆர்த்தார்கொண் மார்வந்தார் –பழுஉப்பயன் கொண்மார்குறவருன்றிய இவை. மார் வினையொடு முடிந்தது. பாடன்மாரெமரே– இதுஎதிர்மறைமுற்றாதலின் எதிர்கால வினையொன்றையும் மறுத்துப் பாடுவாரல்லர் என நின்று எமர் என்னும் பெயர் கொண்டது.

இம் மார் வினை கொண்டு முடிதலை வினைமுற்று வினையெச்ச மென்றால் என்னெனின், வினை முற்றியவழி அதற்கு இயைந்த பெயர்ப் பயனிலை வாராமல் இயையாத வினை வந்தால் அதற்கு இயைய வினைமுற்று வினையெச்சமாயிற்றெனப்படும். இந்த மாரீற்று வினைமுற்றிற்குப் பெயர் போல வினையும் இயைந்து வருதலால் முற்று எச்சமாயினதன்று; முற்றேயாமென்க. பின்வருஞ் 'செய்கெனொருமையுஞ் செய்குமென் பன்மையும்' என்னும் முற்றுக்களும் இவ்வாறு நின்றன வெனக் கொள்க.

**"கால மொடுகருத வரினு மாரை மேலைக்**
**கிளவியொடு வேறுபா டின்றே"**

என்றார் ஆசிரியர் அகத்தியனார். (சூ)

**"மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை காலக்**
**கிளவியொடு முடியு மென்ப"**

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும் எனக் காண்க. முடியுமே என்பது முடிமே என விகாரப்பட்டு நின்றது. ஈற்ற பல்லோர்படர்க்கை எனவும் மார்வினையொடு முடியும் எனவும் இரண்டு முடிபாக முடிந்தது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** அர் ஆர் ப ஊர் அகரம் மார் ஈற்ற – அர் ஆர் ப மார் என்கிற நான்கு விகுதியும் இறுதியிலுடைய மொழிகள், பல்லோர் படர்க்கை– உயர்திணைப் பலர்பால் தெரிநிலைமுற்றுங் குறிப்புமுற்றுமாம்; மார் – (இவற்

றுள்) மார்ஈற்று வினைமுற்று, **வினையொடு முடிமே** – (பொது விதியாற் பெயருடன் முடிவதேயன்றி) வினையுடனும் முடியும்.

| உம்:– | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு | |
|---|---|---|---|---|---|
| அர் – | நடந்தனர். | நடக்கின்றனர். | நடப்பர். | குழையர். | அவர். |
| ஆர் – | நடந்தார். | நடக்கின்றார். | நடப்பார் | குழையார் | |
| ப – | நடப்ப. | * | நடப்ப. | * | |
| மார் – | * | * | கொண்மார் | * | |

குறிப்பு :–

(கொண்மார் – கொள்வார்) 'மார்ப' விகுதிகள் தாமே காலங் காட்டுதலால், குறிப்பு வினைக்கு வாரா. 'கொண்மார் வந்தார்' என 'மார்' வினையொடு முடிந்தது. "பாந்தம் செலவொடு வரவும்" என்றதனால் 'ப' விகுதி நிகழ்காலத்துக்கு வாராமையானும், "மார் எதிர்வும்" என்றதனால் 'மார்' விகுதி இறந்தகால நிகழ்காலங்களுக்கு வாராமையானும் உடுக்குறி இடப்பட்டது; இதனை இனி வருமிடங்களிலும் இவ்வாறே கொள்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– **அர் ஆர் பவ்வூர் அகரம் மார் ஈற்ற** – அர் ஆர் ப மார் என்னும் நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **பல்லோர் படர்க்கை** – உயர்திணைப் பலர்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், **மார் வினையொடும் முடியும்** – இவற்றுள் மாரீற்று வினைமுற்றுப் பொதுவிதியாற் பெயருடன் முடிவதன்றி வினையுடனு முடியும், எ–று.

"மாரெதிர்வும் பாந்தஞ் செலவொடு வரவும்" எனப் பதவியலுட் கூறினமையால், இவ்விரு விகுதியுங் குறிப்பு வினைமுற்றிலே வாராவென்க.

வ–று.:–

இ. தெரி. நி.தெரி.எ.தெரி.குறி.

நடந்தனர் நடக்கின்றனர் நடப்பர் குழையர்

நடந்தார் நடக்கின்றார் நடப்பார் குழையார் –அவர்.

'நடப்ப, எய்துப, மொழிப – அவர்' எனப் பவ்விகுதி வரும்.

"பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்

பீடின்று பெருகிய

திருவிற் – பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே"

என மாரீற்று வினைமுற்றுப் பெயருடன் முடிந்தது. பாடன்மார் என்பது

பாடுவாரல்லர் எனப் பொருள்படும்; அல் எதிர்மறை யிடைநிலை.

"ஆர்த்தார் கொண்மார் வந்தார்" என மாரீற்று வினைமுற்று வினையொடு முடிந்தது. கொண்மார் என்பது கொள்வார் எனப்பொருள்படும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். அர் ஆர் பவ்வூர் அகரம் மார் ஈற்ற –** அர் ஆர் ப மார் என்னும் நான்கு விகுதிகளையும் இறுதியிலுடையமொழிகள், **பல்லோர் படர்க்கை –** உயர்திணைப் பலர்பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், **மார்வினையொடும் முடியும் –** இவற்றுள் மாரீற்று வினைமுற்றுப் பொதுவிதியாற் பெயருடன் முடிவதன்றி வினையுடனுமுடியும். எ–று. முடியும் என்பது முடிம் என்றாயிற்று.

"மாரெதிர்வும் பாந்தஞ் செலவோடு வரவும்" எனப் பதவியலுட் காலங்கூறினமையால் இவ்விருவிகுதியுங் குறிப்புவினைமுற்றிலே வாராவெனவும், மார்வினையுடனு முடியுமென்றதினால் இதற்குப் பொதுவிதிமேற் சிறப்புவிதி கூறினாரெனவும் கொள்க.

(வரலாறு)

| இ.தெரி | நி.தெரி | எ.தெரி | குறி. | |
|---|---|---|---|---|
| நடந்தனர் | நடக்கின்றனார் | நடப்பர் | குழையர் | அவர் |
| நடந்தார் | நடக்கின்றார் | நடப்பார் | குழையார் | |

நடப்ப, எய்துப மொழிப அவர் எனப் பகரவிகுதி வரும்.

"பெரிய வோதினுஞ் சிறியவுணராப், பீடின்று பெருகியதிருவிற், பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே" என மாரீற்று வினைமுற்றுப் பெயருடன் முடிந்தது. பாடன்மார் என்பது பாடுவாரல்லர் எனப் பொருள்படும். அல் எதிர்மறையிடைநிலை.

"ஆர்த்தார் கொண்மார் வந்தார்" என மாரீற்று வினைமுற்று வினையொடு முடிந்தது. கொண்மார் என்பது கொள்வார் எனப் பொருள்படும்.

இம்மார் வினைகொண்டு முடிதலை வினைமுற்று வினையெச்சமென்றால் என்னெனின், வினைமுற்றியவழி அதற்குஇயைந்த பெயர்ப்பயனிலை வாராமல் இயையாத வினைவந்தால் அதற்கு இயையவினைமுற்று வினையெச்ச மாயிற்றெனப்படும்; இந்த மாரீற்று வினைமுற்றிற்குப்

பெயர்போல வினையும் இயைந்துவருதலால் முற்று எச்சமாயினதன்று முற்றேயாமென்க. பின்வருஞ் "செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும்" என்னும் முற்றுக்களும் இவ்வாறு நின்றனவெனக்கொள்க (சூ) "கால மொடு கருதவரினு மாரை, மேலைக் கிளவியொடு வேறுபாடின்றே" என்றார் ஆசிரியர் அகத்தியனார். (சூ) "மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை, கா'லக் கிளவியொடு முடியுமென்ப" என்றார். ஆசிரியர் தொல்காப்பயினாரும் எனக்காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ-ள்.:- அர் ஆர் ப ஊர் அகரம் மார் ஈற்ற** – அர் ஆர் ப மார் என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **பல்லோர் படர்க்கை** – உயர்திணைப் பலர்பாற் படர்க்கைத் தெரிநிலை முற்றும் குறிப்புமுற்றும் ஆம்; **மார்** – (இவற்றுள்ளே) 'மார்' ஈற்று வினைமுற்று, **வினையொடு முடிமே** – (பொதுவிதியாற் பெயருடன் முடிவதேயன்றி) வினையுடனும் முடியும்; எ-று.

மார், ப விகுதிகள் தாமே காலங்காட்டுதலால், குறிப்புவினைக்கு வாரா.

**உ-ம்.:-**

| | இறப்பு | நிகழ்வு | எதிர்வு | குறிப்பு |
|---|---|---|---|---|
| அர் | நடந்தனர் | நடக்கின்றனர் | நடப்பர் | குழையர் |
| ஆர் | நடந்தார் | நடக்கின்றார் | நடப்பார் | |
| குழையார் | அவர் | | | |
| ப. | நடப்ப – | நடப்ப – | | |
| மார் | – – | கொண்மார் | – | |

**'கொண்மார் (கொள்வார்) வந்தார்'** என மார் – வினையொடு முடிந்தது.

இனி, **'மார் வினையொடு முடிமே'** என்பதற்கு, 'மார்' என்ற விகுதி வினைப்பகுதிக்கு மாத்திரமே வருமென்றும் மற்றைப் பெயர் இடை உரிப் பகுதிகளுக்கு வராதென்றும் உரைப்பாரும் உளர்; அது பொருத்தமுடையதே; 'மார்' என்ற விகுதி

கொண்மார் செய்ம்மார் என வினைப்பகுதியோடு மாத்திரம் வருதலும், மற்றைவிகுதிகள் குழையர் குழையார் என்ப சால்ப எனப் பெயர் இடை உரிப்பகுதிக்ளோடும் வருதல்போல மார்விகுதி வராமையுங் காண்க. குருமார் தேவிமார் என மார்விகுதி பெயரோடு கூடி வருமிடத்து வினைமுற்று விகுதி யன்றிப் பெயர்விகுதியாதல் உணர்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.;– அர் ஆர் பவ்வூர் அகரம் மார் ஈற்ற** – அர் ஆர் என்னும் நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **பல்லோர் படர்க்கை** – உயர்திணைப் பலர்பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். **மார்** – இவற்றுள் மாரீற்று வினைமுற்று,**வினையொடும் முடியும்** – பொதுவிதியாற் பெயருடன் முடிவதன்றி வினையுடனும் முடியும்,. எ–று.

'மாரெதிர்வும் பாந்தஞ் செலவொடு வரவும்' எனப் பதவியலுட் கூறினமையால்,இவ்விரு விகுதியுங் குறிப்பு வினைமுற்றிலே வாரா வென்க.

உ–ம்:–

| | இறப்பு | நிகழ்வு | எதிர்வு | |
|---|---|---|---|---|
| அர் | நடந்தனர் | நடக்கின்றனர் | நடப்பர் | குழையர் |
| ஆர் | நடந்தார் | நடக்கின்றார் | நடப்பார் | குழையார் |

நடப்ப,எய்துப,மொழிப (அவர்) எனப் பவ்விகுதி வரும்.

'பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்
பீடின்று பெருகிய திருவிற்
பாடின் மன்னரைப் பாடன்மார் எமரே' – என மாரீற்று வினைமுற்றுப் பெயருடன் முடிந்தது.பாடன்மார் என்பது பீடுவாரல்லர் எனப் பொருள்படும்;அல் எதிர்மறையிடைநிலை.

'ஆர்த்தார் கொண்மார் வந்தார்' என மாரீற்று வினைமுற்று வினையொடு முடிந்தது.கொண்மார் என்பது கொள்வார் எனப் பொருள்படும்.

இம் மார் வினைகொண்டு முடிதலை வினைமுற்று வினைமுற்று வினையெச்சமாயதென்றால் என்னெனின், வினை முற்றியவழி அதற்கு இயைந்த பெயர்ப்பயனிலை வாராபல், இயையாத வினை வந்தால் அதற்கு இயைய வினைமுற்று வினையெச்சமாயிற் றெனப்படும்.இந்த மாரீற்று வினைமுற்றிற்குப் பெயர்போல வினையும் இயைந்தெ வருதலால் முற்றுஎச்சமாயினதன்று;முற்றேயாம் என்க.

மார் வினையொடு முடிதலேயன்றிப் பெயரொடு முடிதலில்லை என்றார் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும். 'பாடன்மார் எமரே' என்பதோ வெனின் அது பாடுவார் என்னும் ஆர் ஈற்று முற்றுச்சொல்லின் எதிர்மறைபால் ஒருமொழிப் புணர்ச்சியான் மகரம் பெற்று நின்றதென்பது சேனாவரையார் உரை. தொல்காப்பியம் வினையியல் 10–வது சூத்திரம் பார்க்க.

'முடியும்மே' பகைதடன. 'முடிமே' என விகாரப்பட்டு நின்றது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:–** அர் ஆர் பவ்வூர் அகரம் மார் ஈற்ற – அர் ஆர் பமார் என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **பல்லோர் படர்க்கை** – உயர்திணைப் பலர்பாற்படர்க்கை வினைமுற்றும் குறிப்பு கமுற்றுமாம். **மார்** – (இவற்றுள்ளே) மாரீற்று வினைமுற்று, **வினையொடு முடியும்** – (பொதுவிதிபாற்பெபருடன் முடிவதன்றி) வினையுடனும் முடியும். (எ–று)

**பொ–ரை:–** அர், ஆர், ப, மார் என்னும் நான்கு விகுதிகளையும், இறுதியாகவுடைய மொழிகள் உயர்திணைப் பன்மைப் படர்க்கைத் தெரிநிலைவினைமுற்றும், குறிப்புவினை முற்றுமாம்; இவற்றுள் மாரீற்று வினைமுற்றுப் பொதுவிதியால் பெபருடன் முடிவதன்றி வினையுடனு முடியும்.

(பவ்வூர் அகரம்– ப. மார் விகுதியும் பவ் விகுதியும் தாமே காலங் காட்டு மெனப் பதவியல், ''றவ்வொடு கரவும்மை'' என்கிற சூத்திரத்துட் கூறுதலால், அவை குறிப்பு வினைக்கு வருதலில்லை.)

**(உ–ம்).**

இறந்தகாலம். நடந்தனர்.

நிகழ்காலம். நடந்தார்.

நடக்கின்றனர்.

நடக்கின்றார்.

எதிர்காலம்.

நடப்பர்.

நடப்பார்.

அவர்.

அர்.

ஆர்.

குழையர்.

குழையார்.

(பாடன்மார் – பாடுவாரல்லர்; அல் – எதிப்மநறை.)

"ஆர்த்தார் கொன்மார் வந்தார்." என மார் ஈற்று வினைமுற்று வினையோடு முடிந்தது. (கொண்மார் – கெகாள்வார்.)

இனி, 'மார்வினை யொடுமுடிமே' என்பதற்கு, மார் என்ற விகுதிவினைப் பகுதிக்கு மாத்திரமே வருமென்றும், மற்றைப்பெயர் இடை உரிப் பகுதிகளுக்கு வாராதென்றும் உரைப்பர்; என்னை, 'மார்' என்ற விகுதி, கொண்மார், செய்ம்மார் என வினைப்பகுதி யோடுமாத்திரம் வருதலானும், மற்றை விகுதிகள் குழையர், குழையார், என்ப, சால்ப எனப் பெயர் இடை உரிப் பகுதிகளோடு வருதல்போல வாராமை யானுமாம். அன்றியும், குருமார், தேவிமார் என மார் விகுதி பெயரோடு கூடி வருதல் பெயர் விகுதியாதலறிக.

## கா. நமச்சிவாய முதலியார்

**அர் ஆர் ப ஊர் அகரம் மார் ஈற்ற** – அர் ஆர் ப மார் என்னும் நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **பல்லோர் படர்க்கை** – உயர்திணைப் பலர்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம்; **மார்**– இவற்றுள்ளே மாரீற்று வினைமுற்று, **வினையொடு முடிமே** – பொதுவிதியாற் பெயருடன் முடிவதன்றி வினையுடனும் முடியும்.

மார் விகுதியும் பவ் விகுதியும் தாமே காலம் காட்டுமெனப் பதவியலுள் 18–ஆம் சூத்திரத்தில் கூறுதலால் அவை குறிப்பு வினைக்கு வருதலில்லை.

**உதாரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| | | இறந்தகாலம் | நடந்தனர் | |
| | | | நடந்தார் | |
| அர்–ஆர் | தெரிநிலை | நிகழ்காலம் | நடக்கின்றனர் | |
| ப– மார் | | | நடக்கின்றார் | அவர் |
| | | எதிர்காலம் | நடப்பர் | |
| | | | நடப்பார் | |
| | | | நடப்ப | |
| | | | பாடன்மார் | |
| அர்–ஆர் – குறிப்பு | | | குழையர் | |
| | | | குழையார். | |

'ஆர்த்தார் கொண்மார் வந்தார்' என, மார் ஈற்று வினைமுற்று, வினையொடு முடிந்தது. (கொண்மார் – கொள்வார்)

இம் மார் விகுதி, எதிர்கால வினையொன்றைமட்டும் மறுத்து எதிர்மறை முற்றிலும் வரும். 'பீடின் மன்னரைப் பாடன்மார் எமரே'.

## மோசசு பொன்னையா

அர், ஆர், ப, மார், என்னும் நான்கு விகுதிகளையும் ஈற்றிற் பெற்றுவரும் வினைச்சொற்கள் உயர்திணை பலர் பாற்

1.னகரம் அந்நிலை மரபின் வரும் மெய்யாகிய ஒலித்துணை.

2.தொல். சொல். 71–உரை.

படர்க்கையை உணர்த்தும் தொழில், குறிப்பு வினை முற்றுக்களாம்; இவற்றுள்ளே, மார்ஈற்றுத் தொழில் வினை முற்று ஒன்றும் வினையுடனும் முடியும் எ–று.

பதவியலுள், 'மார் எதிர்வும், பாந்தம் செலவொடு வரவும் ஏற்கும்'1 என்றதனால், அவ்விரண்டும் தொழில் வினைமுற்றுச் சொற்களின் விகுதிகளாகவே வரும் எனக் கொள்க. பகர ஈறும், மாரீறும் முறையே கூறுப, என்ப எனவும்; ஆர்த்தார் கொண்மார் வந்தார் எனவும் எதிர்கால முடிபெய்தி யன்றி நில்லா எனக் கொள்க. பகரவீறும், மாரீறும் இக்காலத்தில் வழக்கொழிந்தன.

மார் வினையொடு முடிமே என்றார் இவ்வாசிரியர். அது,

**மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை**
**காலக் கிளவியொடு முடியும் என்ப,2**

என்ற தொல்காப்பியத்தைத் தழுவிய கூற்றாம்.

**பெரிய வோதினுஞ் சிறிய வுணராப்**
**பீடின்று பெருகிய திருவிற்**
**பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே,3**

என வரும் இலக்கியம் நோக்கி எச்ச உம்மை புணர்தி இவ்வாசிரியர் நூற்பா யாத்தார். பாடன்மார் எனுஞ்சொல் பாடு+அல்+(ம்)அ+ஆர் என இவ்வாறு பகுக்கப்படும் என்பதும், அச்சொல்லிடைத் தோன்றிய மகரம் ஒலித்துணை எனப்படும் என்பதும் ஏற்புடையன என்பார்க்கு இவ்வெச்ச உம்மைக் கோட்பாடு இடர்ப்பாடாக அமையும்.

அர், ஆர் விகுதிகட்கு எடுத்துக்காட்டு:

தொழில்முற்று குறிப்புமுற்று

பலர்: ஆர்–நடந்தனர்–நடக்கின்றனர்–நடப்பர்–குழையர்

ஆர்–நடந்தார்–நடக்கின்றார்–நடப்பார்–குழையார் 1.
(நன். 145; 2. தொல். சொல். 207; புறம். 375.)

(8)

**327. துறுடுக் குற்றிய லுகர ஈற்ற**
**ஒன்றன் படர்க்கைடுக் குறிப்பி னாகும்.**

து று டுக் குற்றியல் உகர ஈற்ற
ஒன்றன் படர்க்கை டுக் குறிப்பின் ஆகும்.

ṭu ṟu tuk kuṟṟiyal ukara ī̇ṟṟa
oṉṟaṉ paṭarkkai ṭuk kuṟippiṉ ākum.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### Singular-impersonal finite verbs

Singular-impersonals (of the 3rd person) end in the short (vowel-consonant) tu, ru and tu; (of these, however), tu is restricted to Indefinite verbs.

## ஒப்புமைப் பகுதி

ஒன்றறி கிளவி தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்

(தொல். சொல்.: 8)

---

பாட வேறுபாடு.:–

1. நடைத்துஅது, எனவும்,
பாலிற்றுமேலிற்று

............. தன் வினை கொண்டு
ஆய்ந்த துறுடுவும்.........

(நேமி.: 29 : 2–3)

துறுடுக் குற்றிய லுகர வீற்ற
வொன்றன் படர்க்கையும்............

(இ.வி.: 234 : 1–2)

துவ்விறு சுட்டொடு சுட்டணை யாய்தமும்
யாது மொன்று மஃறிணை யொன்றன்
பாற்படர்க் கைப்பெய ரென்மனார் புலவர்

(மு.வீ.: 482)

........... துடுறு ஒன்று ............

(சுவாமி.: 50:1)

## மயிலை நாதர்

எ–ன், அஃறிணை பொருமைப்படர்க்கை முற்றாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– இம்மூன்று குற்றியலுகர வீற்றுமொழிகளும், அஃறிணை பொருமைப் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம்; அவற்றுள், டுவ்வீறு வினைக்குறிப்பின்கண்ணே வரும். எ–று.

வ–று.:–

வந்தது, வாராநின்றது, வருவது; கூயிற்று, தாயிற்று எனவும், பெயர்த்து, ஊர்த்து, கார்த்து, மயிர்த்து, கரிது, [1]நடைத்து ; பாற்று, மேற்று, வேனிற்று, கோடிற்று, சுழியிற்று, செலவிற்று எனவும் துறுக்கள் ஈரிடத்தும் வந்தவாறு. பலபொருட்டு, ஆதிரைநாட்டு, குண்டுகட்டு என டுக்குறிப்பு முற்று வந்தது; 'அது' என்னும் பெயர்தந்து முடிக்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், இதுவும் அது.

இ–ள்.:– இம்மூன்று குற்றியலுகர ஈற்று விகுதிகளையும் இறுதியாகவுடைய மொழிகள் அஃறிணைபொருமைப் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம். இவற்றுள் டுவ்விகுதி குறிப்பின்கணன்றித் தெரிநிலைக்கண் வாராது. எ–று.

றுவ்விகுதி முக்கால வினைக்கண்ணும் பயின்று வராமையானும், துவ்விகுதி தன்முன்னின்ற எழுத்து நோக்கி றுவ்விகுதியாய்த் திரிந்தது எனினும் அமையுமாதலானும், டுவ்விகுதி குறிப்பு ஒன்றற்கே வருதலானும், இதுவும் துவ்விகுதி திரிந்தது எனினும் அமையுமாதலானும் துவ்விகுதியின் பின் கூறப்பட்டன.

வ–று.:–

நடந்தது, நடக்கின்றது, நடப்பது, வந்தன்று, கூயிற்று எனவும்; அணித்து, சேய்த்து எனவும், அற்று, இற்று, எற்று எனவும்; பொருட்டு, ஆதிரைநாட்டு, குண்டுகெட்டு எனவும், அது, எது எனவும் வரும். வந்தன்று என்புழி அன் என்பது சாரியை.

சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்புக்கள் 'பொருள் முதல் ஆறினும் தோற்றி' என்றவற்றுள் எப்பொருள எனின்:– பொருளாதி ஆறனுள் யாதானும் ஒன்றனைச் சுட்டியும் வினாவியும் வருதலின் அவ்வப் பொருளவாம் என்க.

குற்றியலுகர ஈற்ற என்றமையான் எற்று என்றாற்போல ஏது யாது என்பனவும் காரணப்பெயராமன்றி வினைக்குறிப்புமாம் என்பதூஉம், அங்ஙனமாகவே 'ஒருமொழி யொழிதன் இனம் கொளற்குரித்தே' என்பதனான் அது இது என்றற்றொடக்கத்து முற்றுகர வீற்றவும் வினைக்குறிப்பாம் என்பதூஉம் பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், அஃறிணையொருமைப் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றும் கூறியது.

**இ–ள்.:– து று டுக் குற்றிய லுகர வீற்ற** – து, டு, று என்னும் இம்மூன்று குற்றியலுகரவீற்று மொழிகளும், **ஒன்றன் படர்க்கை** – அஃறிணை யொருமைப் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம், **டுக் குறிப்பினாகும்** – அவற்றுளே டுவ்வீற்று விகுதி குறிப்பு வினைக்கண் வரும், எ – று.

உ–ம்.:–

வந்தது, வாராநின்றது, வருவது; கூறிற்று, போயிற்று, ஆயிற்று: அது எனவும் தெரிநிலை முற்று வந்தன. பெயர்த்து, ஊர்த்து, கார்த்து, மயிர்த்து, நடைத்து அது எனவும் பாற்று மேற்று, வேனிற்று, கோடிற்று, செலவிற்று எனவும் வினைக்குறிப்பு முற்று வந்தன. பலபொருட்டு, ஆதிரைநாட்டு, குண்டு கட்டு: அது எனக் குறிப்பு வினைமுற்று வந்தன.

## விசாகப் பெருமாளையர்

**இதுவுமது.**

**இ—ள்.:** **துறுடுக் குற்றிய லுகரவீற்ற** – துறுடு என்கிற இம் மூன்று குற்றியலுகர விகுதிகளை யிறுதியிலுடைய மொழிகள், **ஒன்றன்படர்க்கை** – அஃறிணை யொன்றன்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், டு-இவற்றுள் டுவ் விகுதி குறிப்புவினை முற்றிற்கல்லது தெரிநிலைவினை முற்றிற்கு வருவதில்லை, **எ—று.**

(றுவ் விகுதி இறந்தகாலத்திற்கே வருமெனக் கொள்க)

**வ—று.:—**

தெ, இ, தெ, நி, எ, கு.

து—நடந்தது, நடக்கின்றது, நடப்பது, குழையது: அது

று—கூடயிற்று, அற்று,

டு— பொருட்டு,

எனவரும், மற்றவைகளுமிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

அஃறிணை யொன்றன்பாற் படர்க்கை வினைமுற்று இவை எனக்கூறுஞ் சூத்திரம் யாது?

துறுடுக் குற்றிய லுகர வீற்ற

ஒன்றன் படர்க்கைடுக் குறிப்பி னாகும்.

(துறுடுக் குற்றிய லுகர ஈற்ற ஒன்றன் படர்க்கை டுக் குறிப்பின் ஆகும்.)

**இ—ள்.:—** துறுடு என்னு மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய குற்றியலுகர வீற்று மொழிகள் அஃறிணையொன்றன் பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். இவற்றுள் டுவ் விகுதி குறிப்புவினைமுற்றிலன்றித் தெரிநிலைவினைமுற்றில் வாராது.

ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்றுச் சொற்கள் யாவை?

"து று டு க்குற்றிய லுகரணாவீற்ற ஒன்றன்படர்க்கை"

30. அவற்றுள் டுவ்விகுதி எங்கே வரும்?

"டுக்குறிப்பி னாகும்."

டுக் குறிப்பினாகு மென்றதனாற் பெறப்படுவது யாது?

டுவ் விகுதியைப் பிரித்தெடுத்துக் கூறினமையால் மற்றைத்து வ் விகுதியும் றுவ் விகுதியும் தெரிநிலைவினை குறிப்புவினை யிரண்டிலும் வருமென்பது.

றுவ்விகுதி இறந்தகால விடைநிலையோடு மாத்திரங் கூடிவரும். துவ் விகுதி முக்காலத்திற்கு முரித்து. டுவ்விகுதி முக்காலத்திற்கு முரிய வினைக்குறிப்பிற்கல்லாது வராது.

வரலாறு.:–

| இ.தெரி. | நி.தெரி. | எ.தெரி. |
|---|---|---|
| (1) நடந்தது | நடக்கின்றது | நடப்பது அது |
| கூயிற்று | | அது |

றுவ்விகுதி, வந்தன்று, உண்டன்று, சென்றன்று எனத் தடறவொற்றிடைநிலைகளின் முன்னும், புக்கன்று, விட்டன்று, பெற்றன்று என விகாரப்பட்டிறந்தகாலங் காட்டுங் குடுறு வீற்றுப் பகுதிகளின் முன்னும், அன்சாரியை பெற்று வரும். இவை முறையே வந்தது, உண்டது, சென்றது, புக்கது, விட்டது, பெற்றது எனப் பொருள்படும். றுவ்விகுதி, கூயின் று கூயிற்று, போயின்று போயிற்று என இன்னிடைநிலையின் முன் மாத்திரஞ் சாரியை பெறாது வரும். தந்தின்று என றுவ்விகுதி தகர விடைநிலையின் முன் இன்சாரியை பெற்றதன்றோ எனின்; அன்று. அது தந்தன்று என்னும் உடன்பாட்டுவினையை மறுத்தற்குத் தகரவிடைநிலைக்கும றுவ்விகுதிக்கும் இடையே இல்லென்னும் எதிர்மறையிடைநிலை ஏற்று வந்த மறைவினை யென்றறிக. தந்தின்று தந்ததில்லை யெனப் பொருள்படும்.

(2) கோட்டது, குழையது, நெடுஞ்செவித்து, வடிவிற்று, வரவிற்று, குறுந்தாட்டு, குண்டுகட்டு, அற்று, இற்று, ஏற்று என்பன குறிப்பு வினைமுற்றுக்கள்.

தாட்டு–தாளையுடையது. கட்டு–கண்ணையுடையது. அற்று–அத்தன்மைத்து. இற்று–இத்தன்மைத்து. எற்று–எத்தன்மைத்து.

# முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது,

**இ—ள்.: து று டுக் குற்றிய லுகர வீற்ற** – இந்த மூன்று விகுதிகளையும் ஈறாகவுடைய குற்றியலுகரமொழிகள், **ஒன்றன் படர்க்கை** – அஃறிணை யொருமைப் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், **டுக்குறிப்பினாகும்** – இவற்றுள் டுவ் விகுதி குறிப்பிலன்றித் தெரிநிலையில் வாராது, **எ—று.**

**வ—று.:—**

நடந்தது, நடக்கின்றது, நடப்பது எனவும்; வந்தன்று, கூயிற்று; அது, எனவும் இவை தெரிநிலை எனவும்; அணித்து, சேய்த்து எனவும்; அற்று, இற்று, எற்று எனவும் பொருட்டு, ஆதிரைநாட்டு, குண்டுக்கட்டு, அது எனவும் வரும். இவை, குறிப்பு எனவும் முறையே காண்க. வந்தன்று என்பதில் அன் சாரியை.

சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்புக்கள் பொருண்முதலாறினுந் தோற்றி என்றவற்றுள் எப்பொருளை யுடையன வெனின், பொருளாதி யாறினுள் யாதாயினு மொன்றைச் சுட்டியும் வினாவியும் வருதலால் அந்தந்தப் பொருளையுடையனவா மென்க. குற்றியலுகர வீற்ற வென்றதினாலே, ஏது, யாது என்பனவுங் காரணப்பெயராவனவுமன்றி வினைக்குறிப்புமாம் என்பதும்; ஒருமொழி யொழி தன்னினங்கொளற்குரித்தே, என்பதனால், அது, இது, என்னுந் தொடக்கத்து முற்றுகர ஈற்றுச்சொற்களும், குறிப்புவினையாமென்பதும் பெறப்பட்டன. றுவ்விகுதி முக்காலத்தும் பயின்று வாராததினாலும், துவ்விகுதி தன்முன்னின்ற எழுத்துநோக்கி றுவ் விகுதியாய்த் திரிந்ததெனினும் அமையுமாதலாலும், டுவ் விகுதி குறிப்பிற்கே வருதலாலும், இதுவுந் துவ்விகுதி திரிந்ததெனினும் அமையுமாதலாலும் இச்சூத்திரத்தில் துறு டு என இம்முறை வைக்கப்பட்டன. இதுவு மேலைச்சூத்திரம் போலவே யிரண்டு முடிபாக முடிந்தது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– துறுடு குற்றியலுகரம் ஈற்ற – துறுடு என்கிற குற்றியலுகர வீற்று மூன்று விகுதிகளையும் இறுதியிலுடையமொழிகள், ஒன்றன்படர்க்கை – அஃறிணை ஒன்றன் பாற்படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றுங் குறிப்புழுற்றுமாம்; டு – (இவற்றுள்)டு என்கிற விகுதி, குறிப்பின் ஆகும் – குறிப்பு வினைமுற்றில்வரும் : (தெரிநிலைவினை முற்றிற்கு வாராது)

குறிப்பு :– (று விகுதி தெரிநிலையில் இறந்தகால இடைநிலையோடு மாத்திரம் கூடிவரும் என்றறிக)

உ–ம் :–

| | இறப்பு | நிகழ்வு | எதிர்வு | குறிப்பு |
|---|---|---|---|---|
| து – | நடந்தது | நடக்கின்றது | நடப்பது | குழையது |
| று – | கூயிற்று | * | * | குழையிற்று அது. |
| டு – | * | * | * | பொருட்டு |

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– து று டுக் குற்றியலுகர ஈற்ற – து று டு என்னு மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய குற்றியலுகர வீற்றுமொழிகள், ஒன்றன் படர்க்கை – அஃறிணை யொன்றன்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், டுக் குறிப்பின் ஆகும் – இவற்றுள் டுவ் விகுதி குறிப்புவினைமுற்றிலன்றித் தெரிநிலைவினை முற்றில் வாராது, எ–று.

றுவ் விகுதி இறந்தகால விடைநிலையோடு மாத்திரங் கூடி வருமெனக் கொள்க.

வ–று.:–

| இ.தெரி | நி. தெரி. | எ.தெரி. | குறி. |
|---|---|---|---|
| நடந்தது | நடக்கின்றது | நடப்பது | குழையது |
| கூயிற்று | – | | அற்று |
| பொருட்டு. | | | அது. |

றுவ்விகுதி, வந்தன்று, உண்டன்று, சென்றன்று எனத் தடற வொற்றிடைநிலைகளின் முன்னும், புக்கன்று,

விட்டன்று, பெற்றன்று என விகாரப்பட்டிறந்த காலங்காட்டும் கு டு று வீற்றுப் பகுதிகளின் முன்னும், அன்சாரியை பெற்று வரும். இவை, முறையே வந்தது, உண்டது, சென்றது, புக்கது, விட்டது, பெற்றது எனப் பொருள்படும். றுவ்விகுதி, கூறிற்று, ஓடிற்று என இன்னிடைநிலையின் முன் மாத்திரஞ் சாரியை பெறாது வரும். தந்தின்று என றுவ்விகுதி தகரவிடை நிலையின் முன் இன்சாரியை பெற்றதன்றோ எனின்; அன்று. அது தந்தன்று என்னும் உடன்பாட்டு வினையை மறுத்தற்குத் தகரவிடைநிலைக்கும் றுவ் விகுதிக்கும் இடையே இல்லென்னும் எதிர்மறையிடைநிலை ஏற்று வந்த மறைவினை யென்றறிக. தந்தின்று; தந்ததில்லை யெனப் பொருள்படும்.

அற்று, இற்று, எற்று என்பவை, சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்பு முற்றுக்கள். இவை முறையே அத்தன்மைத்து இத்தன்மைத்து எத்தன்மைத்து எனப் பொருள்படும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ-ள்.:- து றுடுக் குற்றியலுகர ஈற்ற** – துறுடு என்னுமூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய குற்றியலுகரவீற்றுமொழிகள், **ஒன்றன் படர்க்கை** – அஃறிணையொன்றன் பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், **டுக் குறிப்பின் ஆகும்** – இவற்றுள் டுவ் விகுதி குறிப்புவினை முற்றிலன்றித் தெரிநிலைவினை முற்றில் வாராது. **எ—று.**

றுவ் விகுதி இறந்தகால விடைநிலையோடு மாத்திரங் கூடி வருமெனக் கொள்க.

| **இ.தெரி** | **நி.தெரி** | **எ.தெரி** | **குறி** | |
|---|---|---|---|---|
| நடந்தது | நடக்கின்றது | நடப்பது | குழையது | அது |
| கூயிற்று | ------ | ------ அற்று | | |
| ----- ------ | ------ பொருட்டு | | | |

றுவ்விகுதி, வந்தன்று, உண்டன்று, சென்றன்று எனத் தடறவொற்றிடை நிலைகளின் முன்னும், புக்கன்று, விட்டன்று, பெற்றன்று என விகாரப் பட்டிறந்காலங்காட்டும் குடுவீற்றுப் பகுதிகளின் முன்னும், அன்சாரியைபெற்றுவரும். இவை, முறையே வந்தது, உண்டது, சென்றது, புக்கது, விட்டது, பெற்றது எனப் பொருள்படும். றுவ்விகுதி, கூறிற்று, ஒடிற்றுஎன இன்னிடைநிலையின்முன் மாத்திரஞ் சாரியை

பெறாதுவரும். தந்தின்று என றுவ்விகுதி தகர விடைநிலையின்முன் இன் சாரியை பெற்றதன்றோ எனின்; அன்று. அது தந்தன்று என்னும் உடன்பாட்டு வினையை மறுத்தற்குத் தகரவிடைநிலைக்கும் றுவ் விகுதிக்கும் இடையே இல்லென்னும் எதிர்மறை யிடைநிலை ஏற்றுவந்த மறைவினையென்றறிக, தந்தின்று – தந்ததில்லையெனப் பொருள்படும்.

அற்று, இற்று, எற்று என்பவை சுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்புமுற்றுக்கள். அத்தன்மைத்து, இத்தன்மைத்து, எத்தன்மைத்து எனப் பொருள்படும்.

பதவியலில் 'டவ்வொடு கழிவும்' என்றதினால் டுகரவிகுதி காலங்காட்டுமெனக் கூறியிருக்கவும் டுக்குறிப்பினாகுமென்று இங்கே டுகரவிகுதியைக் குறிப்புவினைக் குபயோகித்த தென்னையெனின்; அப்படியன்று. டவ்வொடுகழிவுமெனக் கூறிய டுகரம் காலங்காட்டித் தன்மைவினைமுற்றில்வந்தது. இது காலங்காட்டாமற் படர்க்கையிலே வந்த டுகரமென்க. இவை தம்முள்வேற்றுமை.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:** து று டு குற்றியலுகரம் ஈற்ற – து று டு என்கிற குற்றிய லுகரவீற்று மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **ஒன்றன் படர்க்கை** – அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கைத் தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம் ; டு – (இவற்றுள்) டு என்கிற விகுதி, குறிப்பின் ஆகும் – குறிப்புவினைமுற்றில் வரும் (தெரிநிலை வினைமுற்றிற்கு வராது), எ–று.

'று' விகுதி – தெரிநிலையில் நிகழ்கால எதிர்காலங்களுக்கு வராது.

| உ–ம்.: | இறப்பு | நிகழ்வு | எதிர்வு | குறிப்பு |
|---|---|---|---|---|
| து | நடந்தது | நடக்கின்றது | நடப்பது | குழையது |
| று | ஆயிற்று | – | – | குழையிற்று அது |
| டு– | – | – | – | பொருட்டு |

(பொருட்டு – பொருளையுடையது)

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– து று டு என்னும் குன்றியலுகமோடு –** கு டு து று என்னுங் மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய குற்றியலுகரவீற்று மொழிகள், **ஒன்றன் படர்க்கை –** அஃறிணையொன்றன் பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு புற்றுமாம், **டுக் குறிப்பின் ஆகும் –** இவற்றுள் டுவ்விகுதி குறிப்பு வினைமுற்றிலன்றித் தெரிநிலை வினைமுற்றில் வாராது,**எ–று.**

றுவ் விகுதி இறந்தகாலத்தில் மாத்திரம் வருமெனக் கொள்க.

**உ–ம்.:–**

**தெரிநிலை**

| | இறப்பு. | நிகழ்வு | எதிர்வு. | |
|---|---|---|---|---|
| து | நடந்தது | நடக்கின்றது | நடப்பது | குழையது |
| று | கூயிற்று | | | அற்று |
| டு | | | | பொருட்டு |

றுவ் விகுதி வந்தன்று,உண்டன்று,சென்றன்று,எனத் தடற வொற்றிடை நிலைகளின் முன்னும் புக்கன்று, விட்டன்று,பெற்றன்று என விகாரப்பட்டு இறந்த காலங் காட்டும் கு டு று ஊற்றுப் பகுதிகளின் முன்னும் அன்சாரியை பெற்று வரும்.இவை முறையே வந்தது,உண்டது,சென்றது, புக்கது,விட்டது,பெற்றது எனப் பொருள்படும். றுவ் விகுத் கூறிற்று,ஒடிற்று என இன்னிடைநிலையின் முன் மாத்திரஞ் சாரியை பெறாது வரும். ஆண்டு இன்னின் னகரம் கூயின்று,கூயிற்று, போயின்று, போயிற்று, எய்தின்று,எய்திற்று எனத் திரிந்தும் திரியாமலும் வரும்.தந்தின்று என றுவ் விகுதி தகரவிடைநிலையின் முன் இன் சாரியை பெற்றதன்றோ எனின் அன்று.அது தந்தன்று என்னும் உடன்பாட்டு வினையை மறுத்தற்குத் தகரவிடைநிலைக்கும் றுவ்விகுதிக்கும் றுவ் விகுதிக்கும் இடையே இல்லென்னும் எதிர்மறையிடைநிலை ஏற்று வந்த மறைவினை யென்றறிக.தந்தின்று தந்ததில்லையெனப் பொருள்படும். அற்று,இற்று,எற்று என்பவைசுட்டினும் வினாவினும் வந்த வினைக்குறிப்பு முற்றுக்கள். இவை முறையே அத் தன்மைத்து,இத்தன்மைத்து,எத்தன்மைத்து, எனப் பொருள் படும். இவை,

'பொருண்முத லாறினுந் தோற்றி' என்றவற்றுள் எப்பொருளை யுடையனவெனின். பொருளாதி ஆறனுள் யாதாயினும்

ஒன்றைச் சுட்டியும் வினாவியும் வருதலால் அந்தந்தப் பொருளை யுடையனவா மென்க.

ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே,என்பதனால் அது இது என்னுந் தொடக்கத்து முற்றுகர ஊற்றுச் சொற்களும் குறிப்பு வினையாம்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:– துறுடு குற்றியலுகர ஈற்ற** – கு று டு என்கிற இம் மூன்று குற்றியலுகர விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள், **ஒன்றன் படர்க்கை** – அஃறிணை யொன்றன்பாற் படர்க்கை வினை முற்றுங் குறிப்பு முற்றுமாம்; டு – (இவற்றுள்) டுவ் விகுதி, **குறிப்பின் ஆகும்** – குறிப்புவினை முற்றிற்கே யல்லது தெரிநிலை வினைமுற்றிற்கு வருவதில்லை. எ–று

**பொ–ரை.:–** து, று, டு என்னும் இம் மூன்று குற்றியலுகர ஈற்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், அஃறிணை யொன்றன்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினை முற்றுமாம்; (இவற்றுள்) டுவ் விகுதி குறிப்பு வினைமுற்றிற்கே யல்லது தெரிநிலை வினைமுற்றிற்கு வருவதில்லை. (எ–று)

(றுவ் விகுதி இறந்தகாலத்திற்கே வருமெனக் கொள்க.)

(உ–ம்). இறந்தகாலம். நடந்தது.

கூவிற்று

நிகழ்காலம்.

நடக்கின்றது.

எதிர்காலம்.

நடப்பது.

அது.

து.

று.

டு.

குழையது.

அற்று

பொருட்டு

எனவரும்; மற்றவைகளுமிப்படியே. (பொருட்டு – பொருளை யுடையது.)

## கா. நமச்சிவாய முதலியார்

**து று டு குற்றியலுகர ஈற்ற** – து று டு என்னும் இம் மூன்று குற்றியலுகர விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள், **ஒன்றன் படர்க்கை** – அஃறிணை ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம்; **டு குறிப்பின் ஆகும்** – இவற்றுள் டுவ் விகுதி குறிப்புவினைமுற்றிற் கல்லது தெரிநிலை வினைமுற்றிற்கு வருவதில்லை.

றுவ் விகுதி இறந்த கால இடை நிலையோடுமாத்திரங் கூடிவரும் எனக் கொள்க.

உதாரணம்

| | | | | |
|---|---|---|---|---|
| | இறந்தகாலம் | – | நடந்தது | |
| து–று – தெரிநிலை | | | கூயிற்று | அது |
| | நிகழ்காலம் | – | நடக்கின்றது | |
| | எதிர்காலம் | – | நடப்பது. | |
| | | | குழையது | |
| து–று–டு. – குறிப்பு | | – | அற்று | அது |
| | | | பொருட்டு) | |

(பொருட்டு – பொருளது)

மற்றவைகளும் இப்படியே.

## மோசகு பொன்னையா

து, று, டு என்னும் மூன்று குற்றியலுகரங்களையும் ஈற்றிற் பெற்ற வினைமுற்றுக்கள், அஃறிணை ஒருமைப் படர்க்கையை உணர்த்துவனவாம்; அவற்றுள் டுவ்வீறு ஒன்றும் குறிப்புவினை முற்று ஒன்றிற்கே ஈறாகி வரும் எ–று.

தகர ஒற்றின் திரிபுகளே றகர, டகர ஒற்றுக்கள் ஆதலின் துவ்வீறு முதற்கண் கூறப்பட்டது.

எ–டு.:–

| | |
|---|---|
| தொழில்வினைமுற்று | குறிப்புவினைமுற்று |
| து–நடந்தது நடக்கின்றது–நடப்பது | குழையது நல்லது |
| று–நடந்தன்று போயிற்று | கூயிற்று நன்று |
| டு– | (குண்டு) கட்டு உண்டு |

இக்காலத்தில் செய்யும் என்னும் வாய்ப்பாட்டு உம் மீற்றுச் சொற்களே அஃறிணை எதிர்கால ஒன்றன்பால், பலவின்பால் தொழில்வினைமுற்றுக்களாக வழங்குகின்றன. நடப்பது, நடப்ப

என்பன நிகழ்காலப் பொருளையே பெரும்பாலும் உணர்த்துகின்றன. நாளை நடப்பது, நாளை நடப்ப என எதிர்காலத்தை முன்நிற்கும் சொற்களின் ஆற்றலாலேயே உணர்த்தி நிற்கின்றன. உண்டு என்பது உளர், உளன், உளள், உள என்பவற்றோடு பொருந்த அஃறிணை ஒன்றன்பாற்கே உரிமைப்பட்டு நிற்றற்குரிய சொல். தொல்காப்பியர் காலத்திலும் அது தன் இயற்பொருளிலே வழங்கிற்கு என்பது அவர் 'இன்மை செப்பல் வேறென் கிளவி,1 (இல்லை, வேறு) என்னும் இரண்டையும்

1. தொல். சொல். 222.

இருதிணைப் பொதுவினை எனக்கூறி உண்டு என்பதை அவற்றுடன் வைத்துக் கூறாது விடுத்ததாற் புலனகாநிற்கும். இவ்வாசிரியர்,

**பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்1**

எனவும்,

**நாவுண்டு நீயுண்டு நாமந் தரித்தோதப்**

**பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ–பூவுண்டு**

**வண்டுறங்கு சோலை மதிலரங்கத் தேயுலகை**

**யுண்டுறங்கு வானொருவ னுண்டு**

**எனவும் வரும் இலக்கிய வழக்கு நோக்கி,**

**வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன2**

என விதித்தார். இக்காலத்தில் உண்டு என்பதும் இருதிணைப் பொதுவினையாக வழங்கி வருருகின்றது,3

மா என்று / எது / யாது / இது / அது என இவ்வாறு வினவியுஞ் சுட்டியும் வழங்கும் சொற்களின்கண்வினைநிகழ்ச்சியோ, நிலையோ இல்லையாயினும், அவை வினாவவும், சுட்டவும் படும் பொருட்களின் நிலைமையைக் குறித்து நிற்பன ஆதலின் வினைநிலைப் பொருண்மைக்கே உரியனவாகிக் குறிப்புவினை முற்றுக்கள் எனப்படும் எனக் கொள்க.

தொல்காப்பியர்,

**ஒன்றன் படர்க்கை தடற வர்ந்த**

**குன்றிய லுகரத் திறுதி யாகும்,4**

என்று மட்டும் ஓதினராக, 'டகரமூர்ந்த குற்றியலுகரம் தெரிநிலை வினைக்கீறகாது' எனச் சேனாவரையரும், நச்சினார்க்கினியரும் உரைத்தனர். இவ்வாசிரியரின்

இந்நூற்பா அவ்விதப்பையும் ஏற்று மொழிந்தது.

(9)

**328. அஆ வீற்ற பலவின் படர்க்கை**
**ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்.**

அ ஆ ஈற்ற பலவின் படர்க்கை
ஆவே எதிர்மறைக் கண்ணது ஆகும்.

a ā īṛṛa palavin̲ paṭarkkai
āvē eṭirmaṛaikkaṇṇaṭu ākum.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Plural-impersonal finite verbs**

Plural-impersonal (of the 3rd person) end in a and â but the latter (a) is affixed to negatives only.

## ஒப்புமைப் பகுதி

அ ஆ வ என வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே

(தொல். சொல்.: 9)

............ அஆவவ் வீறுமாம்
ஏய்ந்த அஃறிணைப்பாற் கீங்கு

(நேமி.: 29: 3–4)

........................... அஆ வீற்ற

---

பாட வேறுபாடு.:– 1. வாரா அவை

2. வாராமலானும்

3. 1) பெரீநதனவண்கை ;

(2) பெரிதீததவண்மை பெரிய

பலவின் படர்க்கையும் பகருமன் அவற்றுள்
டுவ்விறு கிளவி குறிப்பிற் கேற்றலும்
ஆவீறு எதிர்மறைக்கு ஆகலும் உரிய

(இ.வி.: 234 : 2–5)

வகார இறுதியும் வையிறு மொழியும்
கள்என் இறுதியும் கணக்கும் பிறவும்
அத்திணைப் பலவின் படர்க்கைப் பெயரே

(மு.வீ.: 483)

........................ ஐ
அ பிறவும் ஐம்பால் பெயர்ப் பகுபத விகுதியே

(தொ. வி.: 84: 1–2)

.................. அ ஆ பலபால் படர்க்கை

(சுவாமி.: 50:1)

## மயிலை நாதர்

எ–ன், அஃறிணைப் பன்மைப் படர்க்கை முற்றாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– அகர ஆகாரங்களை விகுதியாகவுடைய மொழிகள் அஃறிணைப் படர்க்கைப்பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம் ; அவற்றுள், ஆகாரவீறு எதிர்மறுத்துரைக்கு மிடத்தே வரும், எ–று.

வ–று.:–

வந்தன, வாராநின்றன, வருவன ; [1]வாரா எனவும், பொருள, மேல, நாள, கண்ண, கடிய, செயல எனவும் வரும்; அவை யென்னும் பெயர் த்ந்துமுடிக்க.

வவ்வீறு அகரவீறாயடங்குதலானும், கள்ளீறு தானேநின்று ஒருவினைக்கீறாய் [2] வாராமையானும் ஈண்டுக் கொண்டில ரென்க. அஃதென்னை? உண்டார்கள், உண்மின்கள், உண்டேங்கள், "கற்றனங்கள் யாமுமுடன் கற்பனக ளெல்லாம்" எனவும், உண்ணுங்கள், உறங்குங்கள், "கழல் களார்க் குங்களே கலக்கிமே கக்குழாம், பொழில்கள் வெள்ளத்திடைப் புரள நூ றுங்களே" எனவும் "பெயரீய்ந்த வண்கை பெரிய பழுக்குங்களே" எனவும் இரு திணைக் கண்ணும் கள்ளீறு ஈரிடத்தும் வருமாலோவெனின், உயர் திணைக்கண் முன்னின்ற அர் ஆர்

முதலானவையே பால் விளக்கும்; அஃறிணைக்கட் செய்புமென்னு நிகழ்கால வினைமுற்று ஒருமை பன்மைகட்குப் பொதுவாதலான், அதனாலே விளங்காத ஒருமை பன்மை "பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கு, மேல் வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே" என்பதனான் விளங்குமென்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** இதுவும் அது.

**இ–ள்.:** இவ்விரு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் அஃறிணைப் பன்மைப் படர்க்கை வினைமுற்றும் குறிப்பு முற்றுமாம். இவற்றுள் ஆகாரம் எதிர்மறை வினைக்கண்ணதாமன்றி உடன்பாட்டு வினைக்கண் வாராது, **எ–று.**

**'ஆவே எதிர்மறைக்கண்ணதாகும்'** என்றமையான், ஏனை விகுதிகள் உடன்பாட்டினும் எதிர்மறையினும் வரும் என்பது பெற்றாம்.

வ–று.:–

நடந்தன, நடந்த, நடவாநின்றன, நடவாநின்ற, நடப்பன, நடப்ப, கரியன, கரிய : அவை எனவும்; நடந்தில, நடவாநின்றில, நடவா: அவை எனவும் வரும்.

இல்லன, இல்ல என்னும் எதிர்மறை வினைக்குறிப்பு முற்றின்கண் பகுதியே மறைப்பொருள் தந்து நிற்றலின் இதற்கு எதிர்மறை ஆகாரம் வேண்டாமையின், ஏற்புழிக் கோடலான் இம்மறை விகுதி தெரிநிலைக்கே கொள்க. இங்ஙனங் காட்டிய அன்பெறா அகரவீற்றுப் பலவறி சொற்களுள், நடப்ப என்பதன் இறுதி நோக்கி உயர்திணைப் பன்மைப் படர்க்கைக்கும் அஃறிணைப் பன்மைப் படர்க்கைக்கும் பொதுவினை என்று கொள்ளற்க; இதன்கண் பகரம் எதிர்கால வினையிடைநிலையாதலின் இத் தொடக்கத்தன எல்லாம் பலபொருளொருசொல்லாம், என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** அஃறிணைப் பன்மைப் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றும் கூறியது.

**இ–ள்.:– அ ஆ** வீற்ற – அகர அகாரங்களை விகுதியாகவுடைய

மொழிகள், **பலவின் படர்க்கை** – அஃறிணைப் பன்மைப் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம் ; **ஆவே எதிர்மறைக் கண்ண தாகும்** – அவற்றுள் ஆகாரவீறு எதிர்மறுத்து உரைக்குமிடத்து வரும், எ–று.

உ – ம்.:–

வந்தன, வாராநின்றன, வருவன, வாரா; அவை யெனத் தெரிநிலை வினைமுற்று வந்தன. **பொருளல, மேல, நாள, கண்ண, கடிய, செயல:** அவை யெனக் குறிப்பு வினைமுற்று வந்தன.

## விசாகப் பெருமாளையர்

**இதுவுமது.**

**இ–ள்.: அ ஆ ஈற்ற** – அ ஆ என்கிற விகுதிகளை யிறுதிலுடைய மொழிகள், **பலவின் படர்க்கை** – பலவின்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், **ஆ**–அவற்றுள் ஆகாரம், **எதிர்மறைக் கண்ணதாகும்** – எதிர்மறையினிடத்து வருமன்றி உடன்பாட்டினிடத்து வராது, எ–று.

வ–று.:

தெ, இ, தெ, நி, எ, கு, மறை

அ– நடந்தன, நடக்கின்றன, நடப்பன, குழையன அவை

ஆ – நடவா–

எனவரும் மற்றவைகளுமிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை வினைமுற்று இவையெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

அ ஆ ஈற்ற பலவின் படர்க்கை

ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்.

(அ ஆ ஈற்ற பலவின் படர்க்கை ஆவே எதிர்மறைக் கண்ணது ஆகும்.)

**இ–ள்.:** அ ஆ என்னும் இருவிகுதிகளை யிறுதியிலுடைய மொழிகள் அஃறிணைப் பலவின்பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். அவற்றுள் ஆகாரம் எதிர்மறையினிடத்து வருமன்றி உடன்பாட்டினிடத்து வாராது, எ–று.

அவற்றுள் ஆகாரவிகுதி எப்பொருட்கண் வரும்?

"ஆவே எதிர்மறைக் கண்ண தாகும்."

'ஆவே யெதிர்மறைக்கண்ணதாகும்' என்றதனால், மற்றைவிகுதி உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வருமென்பது பெற்றாம்.

அகர விகுதி அன்சாரியை பெற்றும் பெறாதும் வரும்.

**(வரலாறு)**

| இ.தெரி. | நி.தொ. | எ.தெரி. | குறி | |
|---|---|---|---|---|
| நடந்தன | நடக்கின்றன | நடப்பன | கரியன | அவை |
| நடந்த | நடக்கின்ற | நடப்ப | கரிய | |

நடந்தில, நடவாநின்றில, நடவா – அவை.

இல்லன, இல்ல என்னும் எதிர்மறைவினைக்குறிப் புமுற்றின்கட் பகுதியே எதிர்மறைப்பொருள் தந்து நிற்றலின், இதற்கெதிர்மறை யாகாரம் வேண்டாமையின், ஏற்புழிக் கோடலென்னு முத்திபால், இவ் வெதிர்மறை விகுதி தெரிநிலைக்கேகொள்க.

இங்கே காட்டிய அன் பெறாத நடப்ப என்னும் பலவறிசொல்லின் இறுதிநோக்கி, உயர்திணைப்பன்மைப் படர்க்கைக்கும் அஃறிணைப்பன்மைப் படர்க்கைக்கும் பொதுவினையெனக் கொள்ளாதொழிக. இதனுட் பகர வொற்று எதிர்கால வினையிடைநிலை யாதலால், இத் தொடக்கத்தன வெல்லாம் பல பொருளொருசொல் லென்றுணர்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இதுவுமது,**

**இ–ள்.:– அ ஆ வீற்ற** – இந்த இரண்டு விகுதிகளையும் இறுதியாகவுடைய மொழிகள், **பலவின் படர்க்கை** – அஃறிணைப் பன்மைப் படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், **ஆவே எதிர்மறைக் கண்ணதாகும்** – இவற்றுள் ஆகார விகுதி யெதிர்மறை வினைக்கல்லது உடன்பாட்டு வினையில் வாராது, எ–று.

'**ஆவேயெதிர்மறைக்கண்**' என்றதினாலே, அகர விகுதி உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வருமெனக்கொள்க.

வ–று.:–

நடந்தன, நடந்த, நடவாநின்றன, நடவாநின்ற, நடப்பன, நடப்ப; அவை–இவை தெரிநிலையுடன்பாடு. கரியன, கரிய: அவை–இவை குறிப்பு உடன்பாடு. இவையெல்லாம் அன் பெற்றும் பெறாதும் வந்தன. நடந்தில, நடவாநின்றில: அவை– இவை தெரிநிலை எதிர்மறை. இல்லன, இல்ல: இவை

குறிப்பெதிர்மறை. இதனுள் பகுதியே எதிர்மறைப் பொருள் தந்து நிற்றலால் இதற்கு எதிர்மறை ஆகாரம் வேண்டாமையால் ஏற்புழிக் கோடலென்னும் உத்தியால் இந்த எதிர்மறை ஆகார விகுதி தெரிநிலைக்கே கொள்க.

ஈங்குக் காட்டிய அன் பெறாத அகர ஈற்று நடப்ப என்னும் பலவறி சொல்லின் இறுதி நோக்கி உயர்திணைப் பன்மைப்படர்க்கைக்கும் அஃறிணைப் பன்மைப் படர்க்கைக்கும் பொதுவினை யெனக் கொள்ளாதொழிக. இதனுள், பகர ஒற்று எதிர்கால இடைநிலை யாதலால், இத் தொடக்கத்தன வெல்லாம் பலபொருளொருசொல் லென்றுணர்க. இனி ஆசிரியர் தொல்காப்பியனார்.

**"அஆ வஎன வரூஉமிறுதி**
**யப்பான் மூன்றே பலவற்றுப் படர்க்கை"**

என வகர வுயிர்மெய்யுமுடன் கூறினார். அதையிவர் அகர ஈற்றுள் அடக்கி வகர ஒற்றை யிடைநிலையாகக் கொண்டார். இது **மறுத்தலென்னும்** மதம், **உரையிற் கோடலென்னும் உத்தியால்,** இம்மணி நல்லவென்னும் உடம்பாட்டுக்குறிப்பு வினைக்கு எதிர்மறையாக இம்மணிபொல்லா எனவும் தீரத்தீர் பொல்லாவே–எனவும் இந்த எதிர்மறை ஆகார விகுதி சிறுபான்மை குறிப்பின்கண் வருதலுங் கொள்க. இச் சூத்திரமு மவ்வாறு முடிந்தது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– அ ஆ ஈற்ற –** அ ஆ என்கிற விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள், **பலவின் படர்க்கை –** அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைத் தெரிநிலை முற்றுங் குறிப்பு முற்றுமாம்; **ஆ –** (இவற்றுள்) ஆ என்கிற விகுதி, **எதிர்மறைக் கண்ணது ஏ ஆகும் –** எதிர் மறையில் மாத்திரம் வரும்.

குறிப்பு :– அகர விகுதி அன்சாரியை பெற்றும் பெறாதும் வரும்.

| உ–ம் : | இறப்பு | நிகழ்வு | எதிர்வு | குறிப்பு | |
|---|---|---|---|---|---|
| அ – | நடந்தன<br>நடந்த | நடக்கின்றன<br>நடக்கின்ற | நடப்பன<br>நடப்ப. | கரியன்<br>கரிய | அவை |
| ஆ– | நடவா– | ஆகாரவிகுதி எதிர்மறையில் வந்தது. | | | |

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.:— அ ஆ ஈற்ற —** அ ஆ என்னும் இருவிகுதிகளை யிறுதியிலுடைய மொழிகள், **பலவின் படர்க்கை —** அஃறிணைப் பலவின்பாற் படர்க்கை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், **ஆ எதிர்மறைக் கண்ணது ஆகும் —** அவற்றுள் ஆகாரம் எதிர்மறையினிடத்து வருமன்றி உடன்பாட்டினிடத்து வாராது, எ—று.

**'ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்'** என்றதனால், மற்றை விகுதி உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வருமென்பது பெற்றாம்.

அகர விகுதி அன்சாரியை பெற்றும் பெறாதும் வரும்.

வ—று.:—

இ.தெரி நி.தெரி எ.தெரி குறி.

நடந்தன நடக்கின்றன நடப்பன கரியன அவை

நடந்த நடக்கின்ற நடப்ப கரிய

நடந்தில, நடவாநின்றில, நடவா — அவை.

இல்லன, இல்ல என்னும் எதிர்மறை வினைக்குறிப்பு முற்றின்கட் பகுதியே எதிர்மறைப்பொருள் தந்து நிற்றலின், இதற்கெதிர்மறை யாகாரம் வேண்டாமையின், **ஏற்புழிக்கோடலென்னுமுத்தியால்,** இவ்வெதிர்மறை விகுதி தெரிநிலைக்கே கொள்க.

இங்கே காட்டிய அன் பெறாத நடப்ப என்னும் பலவறிசொல்லின் இறுதி நோக்கி, உயர்திணைப் பன்மைப் படர்க்கைக்கும் அஃறிணைப்பன்மைப் படர்க்கைக்கும் பொதுவினை யெனக் கொள்ளா தொழிக. இதனுட் பகரவொற்று எதிர்கால வினை யிடைநிலை யாதலால், இத் தொடக்கத்தன வெல்லாம் பலபொருளொரு சொல்லென்றுணர்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ — ள்.:— அ ஆ ஈற்ற — அ ஆ என்னும் இருவிகுதிகளை யிறுதியிலுடைய மொழிகள். பலவின் படர்க்கை — அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைவினை முற்றுங் குறிப்புமுற்றுமாம், ஆ எதிர்மறைக்கண்ணது ஆகும் — அவற்றுள் ஆகாரம் எதிர்மறையினிடத்து வருமன்றி உடன்பாட்டினிடத்துவாராது. எ—று.

ஆவேயெதிர்மறைக் கண்ணதாகும் என்றதனால், மற்றவிகுதி உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வருமென்பது பெற்றாம்.

அகரவிகுதி அன்சாரியைபெற்றும் பெறாதும் வரும்.

| இ.தெரி | நி.தெரி | எ.தெரி | குறி. | |
|---|---|---|---|---|
| நடந்தன | நடக்கின்றன | நடப்பன | சரியன | அவை |
| நடந்த | நடக்கின்ற | நடப்ப | கரிய | |

நடந்தில, நடவாநின்றில, நடவா – அவை.

இல்லன, இல்ல என்னும் எதிர்மறைவினைக்குறிப்புமுற்றின்கட் பகுதியே எதிர்மறைப்பொருள்தந்து நிற்றலின், இதற்கெதிர்மறையாகாரம் வேண்டாமையின், ஏற்புழிக்கோடலென்னுமுத்தியால், இவ்வெதிர்மறை விகுதி தெரிநிலைக்கே கொள்க.

இங்கே காட்டிய அன்பெறாத நடப்ப என்னும் பல வறிசொல்லின் இறுதிநோக்கி, உயர்திணைப்பன்மைப்படர்க்கைக்கும் அஃறிணைப்பன்மைப் படர்க்கைக்கும் பொதுவினையெனக் கொள்ளாதொழிக. இதனுட் பகரவொற்று எதிர்காலவினை யிடைநிலையாதலால், இத்தொடக்கத் தனவெல்லாம் பலபொரு ளொருசொல்லென்றுணர்க.

இனி ஆசிரியர் தொல்காப்பியனார் (சூத்திரம்) "அ ஆ வ என வரூஉ மிறுதி, யப்பான் மூன்றே பலவற்றுப்படர்க்கை". என வகர வுயிர்மெய்யு முடன் கூறினார். அதை யிவர் அகரஈற்றுள் அடக்கி வகர ஒற்றை யிடைநிலையாகக் கொண்டார்.

## வை. மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:–** அ ஆ ஈற்ற – அ ஆ என்கிற விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள், **பலவின் படர்க்கை–** அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைத் தெரிநிலை முற்றும் குறிப்புமுற்றும் ஆம்; **ஆ–** (இவற்றுள்) ஆ என்கிற விகுதி, **எதிர்மறைக்கண்ணது ஏ ஆகும் –** எதிர்மறையில் மாத்திரமே வரும். (உடன்பாட்டில் வராது); **எ–று.** ஏகாரம், பிரித்துக் கூட்டப்பட்டது.

உ–ம்.:– இறப்பு நிகழ்வு எதிர்வு குறிப்பு

அ நடந்தன நடக்கின்றன நடப்பன குழையன – அவை

ஆ நடவா – (ஆகார விகுதி, எதிர்மறையில் வந்தது)

## பவானந்தம் பிள்ளை

**இ-ள்.:- அ ஆ ஈற்ற** - அ ஆ என்னும் இருவிகுதிகளை யிறுதியிலுடைய மொழிகள். **பலவின் படர்க்கை** - அஃறிணைப் பலவின்பாற்படர்க்கை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். **ஆ எதிர்மறைக்கண்ணது ஆகும்** - அவற்றுள் ஆகாரம் எதிர்மறையினிடத்து வருமன்றி உடன்பாட்டினிடத்து வாராது. எ-று.

'ஆவேயெதிர்மறைக்கண்ணதாகும்' என்றதனால், மற்றைவிகுதி உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வருமென்பது பெற்றாம்.

அகரவிகுதி அன்சாரியை பெற்றும பெறாதும் வரும்.

**உ-ம்.:-**

உடன்பாடு :

தெரிநிலை குறிப்பு

இறப்பு நிகழ்வு எதிர்வு

அன் + அ - நடந்தன நடக்கின்றன நடப்பன கரியன

அ-நடந்த நடக்கின்ற நடப்ப கரிய - அவை.

எதிர்மறை :

நடந்தில, நடவாநின்றில, நடக்கில இல்ல-அவை.

நடவா-அவை என ஆகாரவிகுதி எதிர்மறையில் வந்தது.

இல்லன இல்ல என்னும் எதிர்மறைவினைக்குறிப்பு முற்றின்கட் பகுதியே எதிர்மறைப் பொருள் தந்துநிற்றலின், இதற்கெதிர் மறையாகாரம் வேண்டாமையின், ஏற்புழிக்கோடலென்னும் முத்தியால், இவ்வெதிர்மறை விகுதி தெரிநிலைக்கே கொள்க.

இங்கே காட்டிய அன் பெறாத நடப்ப என்னும் பலவறிசொல்லின் இறுதி நோக்கி, உயர்திணைப் பன்மைப் படாக்கைக்கும் அஃறிணைப் பன்மைப் படாக்கைக்கும் பொதுவினையெனக் கொள்ளாதொழிக. நடப்ப என்பது உயர்திணைப் பன்மைப் படர்க்கையாயின் பகரம் விகுதியெனவும், அஃறிணைப் பன்மைப் படர்க்கையாயின் அகரம் விகுதியாகப் பரகவொற்று எதிர்கால வினையிடைநிலையெனவும் கொள்க. இத் தொடக்கத்தனவெல்லாம் பலபொரு ளொருசொல் என்று உணர்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

இ–ள். அ ஆ ஈற்ற – அ ஆ என்கிற விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள், பலவின் படர்க்கை – பலவின்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்பு முற்றுமாம்; ஆ – (அவற்றுள்) ஆகாரம், எதிர்மறைக்கண்ணது ஆகும் – எதிர்மறையினிடத்து வருமே (யன்றி உடன்பாட்டினிடத்து வாராதுகு). எ–று

பொ–ரை.:– அ, ஆ, என்னும் இவ்விரு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம்; இவற்றுள் ஆகாரம் எதிர்மறையினிடத்து வருமே (யல்லது உடன்பாட்டினிடத்து வாராது.) (ஏகாரம், பிரித்துக் கூட்டப்பட்டது.)

உ–ம்.:–

தெரிநிலை.

இறந்தகாலம் – நடந்தன

நிகழ்காலம் – நடக்கின்றன

எதிர்காலம் – நடப்பன

அவை

நடவா (எதிர்மறை)

குழையன

குறிப்பு.

(இறுதிணைப் பொதுவினை.)

## கா. நமச்சிவாய முதலியார்

அ ஆ ஈற்ற – அஆ என்னும் விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள், பலவின் படர்க்கை – பலவின்பாற் படர்க்கை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம், ஆ (அவற்றுள்) ஆகாரம், எதிர்மறைக்கண்ணது ஆகும் –

1.தொல். சொல். 216;

2. தொல். சொல் 9 உரை;

3. குகரம் கால எழுத்தில்லை என்பது அவர் கருத்து. ஆகவே காலத்திற்கேற்ற அன்கால எழுத்துக்களான வகரமோ பகரமோ இல்லாத இடத்தில் வருதலில்லை என்பது அவர் கொள்கை.

4.கலி. 48.11;

5. குறுந். 282;7; புறம். 7.10; 5. குறுந். 104.5;

6. நன். 144. உரை;

7. நன். 327–உரை;

எதிர்மறையினிடத்து வருமே யன்றி உடன்பாட்டினிடத்து வாராது.

'ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்' என்றமையால், அகரவிகுதி உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வரும் எனக் கொள்க. இந்த அகர விகுதி அன் சாரியை பெற்றும், பெறாமலும் வரும். நடப்ப – உண்ப முதலியவற்றைப் பலர்பால் வினைமுற்றாகக் கொள்ளும்போது பகர விகுதி என்றும், பலவின்பால் வினைமுற்றாகக் கொள்ளும்போது பகர இடை நிலையும் விகுதியும் என்றும் கொள்க.

உதாரணம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அ | தெரிநிலை | இறந்த காலம் | – | நடந்தன | அவை |
| | | நிகழ்காலம் | – | நடக்கின்றன | |
| | | எதிர்காலம் | – | நடப்பன | |
| | குறிப்பு | | – | குழையபன | |

ஆ – நடவா என ஆகாரம் எதிர்மறைக்கண் வந்தது.

## மோசகு பொன்னையா

அஆ என்னும் இரண்டையும் ஈற்றிற் பெற்ற வினைமுற்றுக்கள் பலவின்பாற் படர்க்கைத் தொழில், குறிப்புவினைமுற்றுக்களாம்; அவற்றுள் ஆ ஒன்றும் எதிர்மறைக்கண் மட்டுமே வரும் எ–று.

எ – டு.:–

| தொழில் வினைமுற்று | | குறிப்பு வினைமுற்று |
|---|---|---|
| அ–விதி–நடந்தன–நடக்கின்றன–நப்பன | – | கரியன |
| நடந்த–நடக்கின்ற–நடப்ப | – | கரிய |
| அ–மறை–நடந்தில–நடக்கின்றில | – | |
| ஆ–மறை–நடவா | – | |

தொல்காப்பியர்,

அஆ வஎன வரூஉம் இறுதி
அப்பான் மூன்றே பலவற்றுப் படர்க்கை,[1]

என வகர ஈறு ஒன்றையும் கூட்டி உரைத்தார். அஃது அகர

1. தொல். சொல். 107;
2. தொல். சொல். 24;
3. தொல். 283.

ஈற்றுள் அடங்கும் என்பாரும், அடங்காது என்பாருமாகச் சேனாவரையர் காலத்திலேயே இருவேறு கொள்கையர் இருந்தனர் என்பது அவர் உரையால் விளங்குகின்றது.[2] அவர், அன்பெறாது எதிர்காலத்து வரும் வகரம் முதனிலைக் கேற்பப் பகரமாகவோ, வகரமாகவோ வராமல் யாண்டும் வகரமாகவே வரும் என்பதையும், எதிர்காலத்தில் குகரம் பெற்றவிடத்து[3] அன்பெறற்கு ஏலாமையின் உண்குவ, தின்குவ என்னுந் தொடக்கத்தன வகர ஈறே யாம் என்பதையும், ஆதாரங்களாகக் கொண்டு வகர ஈறு அகர ஈற்றுள் அடங்காது என வாதிடுகிறார். சங்க இலக்கியங்களில்,

**எல்வளை உகுப,[4]**

**வெண்கூ தாளத் தந்தூம்பு புதுமலர்**

**ஆர்கழர் புஉகுவ,[5]**

**கொள்ளை மேவலை யாகலின் நல்ல**

**இல்லஆ குப,[6]**

**பிரிவு நாளும் பலஆ குவவே,[7]**

என வருதலை நோக்கின், அன்பெறாது எதிர்காலத்து வரும் வகரம் யாண்டும் வகரமாகவே வருதலில்லை, அது பகரமாகவும் வரும் என்பது தெளிவுறுவதாலும், பகர வகரங்கள் கால எழுத்துக்களில்லை என்பதும், எதிர்காலத்தை உணர்த்துவது செய்கு/செய்பு/செய்வு/செய்உ என இவ்வாறு நின்றுந் திரிந்தும் மறைந்தும் விளங்கும் ககர ஒற்றே என்பது பதவியலில்5 விளக்கப்பட்டது ஆதலினாலும், சேனாவரையர் கொள்கை பிழைபட்டது என்பது தெளிவு. இவ்வாசிரியர் வகர ஈற்றை அகர ஈற்றுள் அடக்கிக் கூறியதால் சேனாவரையர் கருத்தோடு மாறுபட்ட கொள்கையர் என்பது போதரும்.

பகரமூர்ந்த அகரம் எதிர்காலத்தில் அஃறிணைப் பலவின் பாலுக்கும் உரித்தாகும் என்பது, முன்னர்க் கட்டப்பட்ட உகுப, ஆகுப என்னும் எடுத்துக்காட்டுக்களாற் போதரும், உயர்திணைப் பலர்பாலில் அது தெளிவு கிளக்குங் குறிப்புடன் இறப்பையோ நிகழ்வையோ குறித்து நிற்கும் எனக் கொள்க.

தொல்காப்பியர், எதிர்மறைவினை பற்றித் தனியே நூற்பா

1.சிலம்பு 7:32,

2. Caldwell's comparative Grammar-p. 471.

அமையாவிடினும்,

**எதிர்மறுத்து மொழியினும் தத்தம் மரபின்**

**பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே,[1]**

எனவும்,

**வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்**

**எதிர்மறுத் துணர்தற் குரிமையு முடைத்தே,[2]**

எனவும்,

**எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையுந்**

**தத்தமுள் மயங்கும் உடனிலை யிலவே,[3]**

எனவும் கூறுவதால், அவர் காலத்தில் எதிர்மறை வழக்குண்மை புலனாகும். எழுத்ததிகாரத்தில் அவர் ஆகா, நவிலா மிகா முதலிய எதிர்மறை வினைகளை வழங்கி யுண்மையாலும் அது புலனாகாநிற்கும். தொல்காப்பியர் எதிர்மறை வினையை வினையின் ஒருவகை அமைப்பு எனவே கொண்டார் எனத் தெரிகிறது.

இறந்த நிகழ் காலங்களுக்குரிய எதிர்மறை வினை முற்றுக்கள் கால இடைச் சொற்களுடன் இல், அல் என்னும் எதிர்மறை வினையடிகளையும் பெற்றே வருகின்றன. செய்திலன், செய்கின்றிலன் எனவும், பாடன்மார் எனவும் வழங்குஞ் சொற்களை நோக்கி அஃது உணரப்படும். எதிர்கால எதிர்மறை முற்றுக்கள் கால இடைநிலைகளைப் பெறாமல் எதிர்மறைப் பொருளுணர்த்தும் இடைச்சொல்லை மட்டும் பெற்று வருகின்றன. செய்யான், செய்யேன் செய்யாய், செய்யல் என்பவற்றை நோக்கி அதனை அறிக. மாட்டு என்பது எதிர்கால வினையெச்சங்களோடு கூடி நின்று,

நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேமால்,[1]

என எதிர்கால வினைமுற்றாக வழங்கும் மரபும் உண்டு. இக்காலத்தில் மாட்டு என்பதே எதிர்கால வினைமுற்றின் எதிர்மறை உணர்த்தும் இடைச்சொல்லாகப் பெரிதும் வழங்கி வருகிறது. 'ஆவே யெர்மறைக் கண்ணதாகும்' என இவ்வாசிரியர் குறிப்பிட்டது. செய்யார். செய்யான், செய்யாள், செய்யா, செய்யாது என இவ்வாறு எதிர்கால வினைமுற்றுக் களில் வரும் ஆகாரத்தையே எனக் கொள்க.

இவ்வாறு எதிர்மறை எதிர்கால வினைமுற்றுக்களில் வரும் எதிர்மறையை உணர்த்தும் எழுத்து அகரமா, ஆகாரமா

இலாசரஸ் (ஆங்கில மொழிபெயர்ப்பு) டாக்டர் கால்டுவெல் அகரமே எதிர்மறையை உணர்த்துவதாகும் என ஆய்ந்துரைக்கின்றார்[2] படர்க்கை வினைமுற்று விகுதிகள் அனைத்தும் குறிலொற்றும் குறிலுமாகவே காணப்படுகின்றன எனவும், அவற்றின் முன்னர் ஓர் உயிர் எச்சப் பொருளிலோ, எதிர்மறைப் பொருளிலோ

நிற்க இணைக்குற்றுயிர், பின்னதன் நெடிலாய் மாறும் விதிப்படி நெடிலொற்றுக்களாகவோ நெடில்களாகவோ மாறுகின்றன எனவும், முன்னர் தெளிவுறுத்தப்பட்டன ஆதலின்,1 செய்யான், செய்யாள் முதலிய எதிர்மறை முற்றுக்களிலும் அன், அள்' என்பவற்றை விகுதிகளெனக்கொண்டு பகுத்துக் காணின், அகரமே எஞ்சுவதால், டாக்டர் கால்டுவெல் கூறுவதே போல் அகரமே எதிர்மறையை உணர்த்துவதாகும் எனக் கொள்ளலாம்.

டாக்டர் வி.ஐ.சுப்பிரமணியம், எதிர்மறை அகரம், வினையடிக்கும் பால்விகுதிக்கும் இடையில் அமைகின்றது எனவும், எ, இ என்பனவும் அகரத்தின் மாற்றுப்பொருளசைகளாக அமைகின்றன எனவும், அவற்றுள் எகரம் வினையடிக்கும் தன்மை விகுதிக்கும் இடையிலும், அகரம் வினையடிக்கும் முன்னிலை விகுதிக்கும் இடையிலும் அமைகின்றன எனவும், விகுதிகளின் உயிரே எதிர்மறை அகரமா, இகரமா, எகரமா என்பதை உறுதிப்படுத்துகின்றது எனவும் கூறும் ஆய்வுரை2 ஏற்புடையதேயாகும்.

பால் விகுதி பெறாத செய்யாமை, செய்யாது என்னுஞ் சொற்களைக் காட்டி ஆகாரமே எதிர்மறை என நிறுவ முற்படுவாரும் உண்டு. அவற்றை முறையே செய்+ஆ+மை எனவும், செய்+ஆ+து எனவும் பிழறப் பிரித்துக் கொள்வதாலேயே அவ்வாறு கருதுகின்றனர் எனலாம். இவ்வகை வினைகள் செய்ய என்னும் வினையெச்ச வாய்பாட்டுச் சொற்களோடு, எதிர்மறைப்பொருள் தரும் அகரமும் விகுதியும் கூடிப் புணர முடிவன ஆதலின், எச்சப் பொருள் தரும் அகரமும் எதிர் மறைபொருள் தரும் அகரமும் கூடி ஒரு நெடிலாகி நிற்க, அவண் வந்து கூடும் விகுதியோடு பொருந்திச் செய்யாமை, செய்யாது என இவ்வாறு முடிந்தன என்பதே உண்மைநிலை ஆதலின், எதிர்மறை, அகரமும் அதன் மாற்றுப் பொருளசைகளுமே என்பது உறுதிப்படும்.

அகர ஈறு சென்றன சென்றில, உள்ள, இல்ல என இவ்வாறு

உடன்பாடு, எதிர்மறை என்னும் இரண்டின் ஈற்றின் கண்ணும் நிற்கும் என்பதை 'ஆவே எதிர்மறைக் கண்ணதாகும்' எனப் பிரிநிலை ஏகாரத்தால் உணர்த்தினார்.

**(10)**

## 329. தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை உண்டீ ரெச்ச மிருதிணைப் பொதுவினை.

தன்மை முன்னிலை வியங்கோள் வேறு இலை
உண்டு ஈர் எச்சம் இருதிணைப் பொதுவினை.

ṭanmai munnilai viyaṅkōḷ vēṛu ilai
uṇtu īr essam iruṭiṇaip poṭuvinai.

### Forms having no distinction of class

(Finite verbs of the) 1st and 2nd persons, optatives, (the verbs) veru, illai anduntu and the two (kinds of) participles, have no distinction of class.

### ஒப்புமைப் பகுதி

முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யுஞ் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயென் கிளவியும்
திரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி
இருதிணைச் சொற்குமோ ரன்ன உரிமைய

(தொல். சொல்.: 222)

ஆறன்மேற் செல்லும் பெயரெச்சம் அன்றல்ல
வேறில்லை யுண்டு வியங்கோளுந் – தேறும்
இடமூன்றோ டெய்தி யிருதிணையைம் பாலும்
உடனொன்றிச் சேறலும் உண்டு

(நேமி.: 69)

தன்மை முன்னிலை வியங்கோள் வேறுண்டு

இன்மை செய்யும் இவற்றொடு ஈர் எச்சமும்
பிரிவு வேறுபடுஉம் செய்திய வாகி
யிருதிணைச் சொற்கும் ஓர் அன்ன உரிமைய

(இ.வி.: 236)

வியங்கோள் முன்னிலை வினையெஞ்சு கிளவி
செய்ம்மன வேறு செய்த செய்யும்
ஒருகா லுயர்திணை யுணர்த்தி யொருகால்
அஃறிணை யுணர்த்தியும் ஆயிரு திணைக்கும்
ஒத்த உரிமைய ஆகும் என்ப

(மு.வி.: 616)

உண்டு இன்மை யன்மைக்கும் படும் வேண்டும் செயும் யார்
வேறு எவனாம் குறிப்பல்லால் உம்மாரை கயர
மெய்யின் வியங்கோள் எச்சம் பொதுவாய் முற்றிடுமே

(சுவாமி.: 51: 3–4)

## மயிலை நாதர்

எ–ன், பொதுவினையைத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– தன்மைமுன்னிலை வினைமுற்றும் வினைக் குறிப்புமுற்றும், வியங்கோளும், வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்பு முற்றும், பெயரும் வினையுமெஞ்சும் இரண்டெச்சமும் ஆகிய எட்டும் இருதிணைக்கும் பொதுவான வினைகளாம், எ–று.

வியங்கோளென்பது ஏவல்.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், திணை பால் இடங்கட்குப் பொதுவினை உணர்த்துவான்தொடங்கி, அவற்றுள் இருதிணைக்கும் பொதுவினை இவை என உணர்–ற்று.

இ–ள்.:– தன்மைவினை வினைக்குறிப்புமுற்றும், முன்னிலை வினை வினைக்குறிப்புமுற்றும், வியங்கோள் வினைமுற்றும், வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்புமுற்றும், பெயரெச்ச வினை வினைக்குறிப்பும், வினையெச்சவினை வினைக்குறிப்பும் இருதிணைக்கும் பொதுவினையாம், எ – று.

'தன்மை முன்னிலை' என்றமையான் அவை முற்று என்பது பெற்றாம்.

'எச்சம்' எனப் பொதுப்படக் கூறினாரேனும், முற்றெச்சங்கள்

முற்றோடு ஒக்குமாதலின் அவை ஒழியக் கொள்க.

செய்யும் என்னும் முற்றும் இருதிணைப் பொதுவினை அன்றோ? அதனைக் கூறாதொழிந்தது என்னையெனின் :- முற்று எச்சமாயினாற் போலச் செய்யும் என்னும் பெயரெச்சம் செய்யும் என்னும் முற்றானமையின் ஈரெச்சம் இருதிணைப் பொதுவினை என்ற துணையானே அம்முற்றும் இருதிணைப் பொதுவினை என்பது தாமே போதரும் என்க. செய்யு மெனெச்சம் முற்றாமாறும், அம்முற்றிற்கு ஈண்டுப்போந்த இருதிணைப் பொதுவொழிய அஃது ஐம்பால் மூவிடங்களில் பொதுமையின் நிற்குமாறும் மேற்கூறுப.

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், பொதுவாகிய தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றும் தொகுத்துக் கூறுகின்றது.

**இ-ள்.:- தன்மை முன்னிலை வியங்கோள்** - தன்மை வினைமுற்றும், முன்னிலை வினைமுற்றும், வியங்கோள் வினைமுற்றும். **வேறிலை உண்டு** - வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்பு முற்றும், **ஈரெச்சம்** - பெயரெச்ச வினையெச்சமும், **இருதிணைப் பொதுவினை** - இவ்வெட்டும் இரு திணைக்கும் பொதுவான வினைகளாம், எ-று. வியங்கோள் என்பது ஏவல்.

## விசாகப் பெருமாளையர்

இது, திணை பாலிடங்களுக்குப் பொதுவினைகளை அறிவிக்கும் படியாகத் தொடங்கி அவற்றுள் இருதிணைக்கும் பொதுவினை இவையென உணர்த்துகின்றது.

**இ-ள்.:- தன்மை** - தன்மைவினை வினைக்குறிப்பு முற்றுகளும், **முன்னிலை**-முன்னிலைவினை வினைக்குறிப்பு முற்றுகளும், **வியங்கோள்** - வியங்கோள் வினைமுற்றுகளும், **வேறிலையுண்டு** - வேறு இல்லை உண்டு என்கிற மூன்று வினைக்குறிப்பு முற்றுகளும், **ஈரெச்சம்** - பெயரெச்சவினை வினைக்குறிப்புகளும் வினையெச்ச வினை வினைக்குறிப்புகளும், **இருதிணை** - உயர்திணை அஃறிணை என்கிற இருதிணைக்கும், **பொதுவினை**- பொதுவினைகளாம், எ-று.

(செய்யுமென்னும் பெயரெச்சமே செய்யு மென்னு முற்றாதலால் அம் முற்றும் இருதிணைப் பொதுவினையா மென்கிறது தானே தோன்றுதல் காண்க).

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

34. உயர்திணை அஃறிணை இரண்டுக்கும் பொதுவாகிய-விளைகளிவையெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை
உண்டீ ரெச்ச மிருதிணைப் பொதுவினை.
(கன்மை முன்னிலை வியங்கோள் வேறு இலை
உண்டு ஈரெச்சம் இருதிணைப் பொதுவினை.)

இ—ள்.:— தன்மைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், முன்னிலைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், வியங்கோள்வினைமுற்றுக்களும், வேறு இல்லை உண்டு என்னு மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும், பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களும், வினையெச்சவினை வினைக்குறிப்புக்களும் உயர்திணை அஃறிணை என்னும் இருதிணைக்கும் பொதுவினைகளாம், எ—று.

செய்யுமென்னும் பெயரெச்சமே செய்யுமென்னு முற்றாதலால். அம்முற்றும் இருதிணைப் பொதுவினையாமென்பது தானே தோன்றுதல் காண்க.

35. இருதிணைப்பொதுவினையென்றது யாது பற்றி?

பொதுமையிற் பிரிந்து ஒருகால் உயர்திணையை உணர்த்தியும், ஒருகால் அஃறிணையை உணர்த்தியும் வேறுபடுந் தொழிலையுடையதாய், இருதிணையும் உணர்த்துஞ் சொல்லாதலின் இருதிணைப் பொதுவினை யெனப்பட்டது.

## முகவை இராமானுச கவிராயர்

இது, திணை பாலிடங்களுக்குப் பொதுவினை யுணர்த்தத் தொடங்கி அவற்றுள் திணைப்பொதுவினை இவையென வுணர்த்திற்று.

இ—ள்.:— தன்மைவினை வினைக்குறிப்பு முற்றும், முன்னிலை வினை வினைக்குறிப்புமுற்றும், வியங்கோள் வினைமுற்றும், வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்பு முற்றும், பெயரெச்சவினை வினைக்குறிப்பும், வினையெச்சவினை வினைக் குறிப்பும், இருதிணைக்கும் பொதுவினைகளாம், எ — று.

> 'பொதுவினை'யெனப் பிற்கூறியதினாலே, முன்னே, 'தன்மை முன்னிலை' என்றது தன்மை முன்னிலை முற்றுவினைகளை யெனக் கொள்க. 'ஈரெச்ச'மெனவே, செய்யும் என்னும் முற்றும் அடங்கிற்று. என்னெனின், செய்யும் என்னும் பெயரெச்சமே முற்றானதாலென்க. வினை வினைக் குறிப்பென்ற இடங்களிலெல்லாம் தெரிநிலை வினையும் வினைக்குறிப்பும் எனப் பொருளுரைத்துக்கொள்க. தன்மையும் முன்னிலையுமென வெண்ணிப் பொதுவினையென முடித்துக்

கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :- தன்மை** – தன்மை வினைமுற்றுக்களும், **முன்னிலை** – முன்னிலை வினைமுற்றுக்களும், **வியங்கோள்** – வியங்கோள் வினைமுற்றுக்களும், வேறு இல்லை உண்டு – இம்மூன்று குறிப்பு வினைமுற்றுக்களும், ஈர் எச்சம் – பெயரெச்ச வினையெச்சங்களும், இருதிணை பொதுவினை – இர;ணடு திணைகளுக்கும் பொதுவாகிய வினைசளாம்.

குறிப்பு :-

செய்புமென்னும் பெபரெச்சமே செய்யும் என்னும் முற்றாதலால் அம்முற்று இருதிணைப் பொதுவினையாமென்பது தானே தோன்றுதல் காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:- தன்மை** – தன்மைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், **முன்னிலை**–முன்னிலைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், **வியங்கோள்**– வியங்கோள் வினைமுற்றுக்களும், **வேறு இலை உண்டு** – வேறு இல்லை உண்டு என்னு மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும், **ஈரெச்சம்** – பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களும் வினையெச்சவினை வினைக்குறிப்புக்களும், **இருதிணைப் பொதுவினை** – உயர்திணை அஃறிணை என்னும் இருதிணைக்கும் பொதுவினைகளாம், எ–று.

செய்யுமென்னும் பெயரெச்சமே செய்யுமென்னு முற்றாதலால் அம் முற்றும் இருதிணைப் பொதுவினையா மென்பது தானே தோன்றுதல் காண்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:- தன்மை** – தன்மைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், **முன்னிலை** – முன்னிலைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், **வியங்கோள்**– வியங்கோள்வினை முற்றுக்களும், **வேறு இலை உண்டு** – வேறு இல்லை உண்டு என்னு மூன்று வினைக்குறிப்புமுற்றுக்களும், **ஈரெச்சம்** – பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களும்,வினையெச்சவினை வினைக்குறிப்புகளும், **இரு திணைப் பொதுவினை**– உயர்திணை அஃறிணை என்னும் இருதிணைக்கும் பொதுவினைகளாம். எ–று.

செய்புமென்னும் பெயரெச்சமே செய்புமென்னு முற்றாதலால்

அம் முற்றும் இருதிணைப் பொதுவினையாமென்பது தோன்றுதல் காண்க. அது "பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையிற் சொல்லாதாகுஞ் செய்யுமென்முற்றே" என்பதனாற் பின் விளக்கப்படுமாயினும் ஈண்டுக் கூறிய பொது வினைகளோடு எடுத்தோதாது இருதிணையிலும் வருதற்கண் சிறிது குறைவுடைமையாலென்றும், அக்குறைவு உயர்திணைப் பன்மையில் வரமாட்டாமையென்றும் அறிக.

பொதுவினையெனப் பிறகூறியதினாலே, முன்னே தன்மைமுன்னிலை என்றது முற்றுவினைகளையெனக் கொள்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: **தன்மை** – தன்மை வினைமுற்றுக்களும், **முன்னிலை** – முன்னிலை வினைமுற்றுக்களும், **வியங்கோள்** – வியங்கோள் வினைமுற்றுக்களும், **வேறு இலை உண்டு** – இம்மூன்று குறிப்பு வினைமுற்றுக்களும், **ஈர் எச்சம்** – பெயரெச்சங்களும் வினையெச்சங்களும், **இருதிணை பொதுவினை** – இரண்டு திணைகளுக்கும் பொதுவாகிய வினைகளாம்; எ–று. இலை – இல்லை; விகாரம்.

செய்யுமென்னும் முற்று, பெயரெச்சவாய்பாடு கொண்டிருத்தலால், அதுவும் இருதிணைப்பொது வினையாதலை இங்கேயே அமைத்துக் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– **தன்மை** – தன்மைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், **முன்னிலை** – முன்னிலைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், **வியங்கோள்** – வியங்கோள் வினைமுற்றுக்களும், **வேறு இலை உண்டு** – வேறு இல்லை உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும், **ஈரெச்சம்** – பெயரெச்சவினை வினைக் குறிப்புக்களும் வினையெச்சவினை வினைக் குறிப்புக்களும், **இருதிணைப்பொதுவினை** – உணர்திணை அஃறிணை என்னும் இருதிணைக்கும் பொதுவினைகளாம். எ–று.

செய்யுமென்னும் பெயரெச்சமே செய்யுமென்னு முற்றாதலால், அம் முற்றும் இருதிணைப்பொதுவினையா மென்பது தானே தோன்றுதல் காண்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**இ–ள்.:– தன்மை** – தன்மைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், முன்னிலை – முன்னிலைவினை வினைக்குறிப்பு முற்றுக்களும், **வியங்கோள்** – வியங்கோள் வினைமுற்றுக்களும், **வேறு இல்லை உண்டு** – வேறு இல்லை உண்டு என்கிற மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும், **ஈர் எச்சம்** – பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களும் வினையெச்ச வினை வினைக்குறிப்புக்களும், **இருதிணை பொதுவினை** – (உயர்திணை அஃறிணை என்கிற) இருதிணைக்கும் பொதுவினைகளாம். **(எ–று)**

**(பொ–ரை.)**

> தன்மைத் தெரிநிலைவினை குறிப்புவினை முற்றும், முன்னிலைத் தெரிநிலைவினை குறிப்புவினை முற்றும், வியங்கோள் வினைமுற்றும், வேறு, இல்லை, உண்டு உன்ற மூன்று குறிப்புவினை முற்றும், பெயரெச்சத் தெரிநிலைவினை வினையெச்சக் குறிப்புவினையும் உயர்திணை அஃறிணை என்கிற இருதிணைக்கும் பொதுவினைகளாம்.
>
> செய்யு மென்னும் பெபரெச்சமே செய்பு மென்னு முற்றாதலால் அம் முற்றும் இருதிணைப் பொது வினையா மென்பது தானே தோன்றுதல் காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**தன்மை** – தன்மையிடத்துத் தெரிநிலை குறிப்பு வினைமுற்றுக்களும், **முன்னிலை** – முன்னிலையிடத்துத் தெரிநிலை குறிப்பு வினைமுற்றுக்களும், **வியங்கோள்** – வியங்கோள் வினைமுற்றுக்களும், **வேறு இலை உண்டு** – வேறு இல்லை உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்புமுற்றுக்களும், **ஈர் எச்சம்** – தெரிநிலையும் குறிப்புமாகிய பெயரெச்ச வினையெச்ச வினைகளும், **இருதிணை** – உயர்திணை அஃறிணை என்னும் இருதிணைக்கும், **பொதுவினை** – பொதுவினைகளாம்.

> செய்யும் என்னும் பெயரெச்சமே செய்யும் என்னும் முற்றாதலால், அம்முற்றும் இருதிணைப் பொதுவினையால் என்பது தானே தோன்றுதல் காண்க.

## மோசசு பொன்னையா

தன்மை, முன்னிலைத் தொழில்வினை முற்றுக்களும், விபங்கோள்வினை முற்றுக்களும், வேறு, இல்லை, உண்டு என்னும் குறிப்புவினை முற்றுக்களும், பெயர், வினையெச்சங்களும் உயர்திணை அஃறிணை என்னும் இருதிணை கட்கும் பொதுவான வினைகளாம், எ–று.

> முற்றெச்சத்தை முற்றுள்ளும், எச்சத்தானாய செய்யும் என்னும் முற்றை எச்சத்துள்ளும் அடக்குக.
>
> மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின் மொழியாத

தனையும் முட்டின்று முடித்தலால், தேற்றப் பொருளில் வரும் வேண்டும், தகும், படும் என்பன ஒட்டி ஒரு சொல்லாய் அமைத்து, ஓதவேண்டும், உண்ணத்தகும், அஞ்சப்படும் என இவ்வாறு ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாய் வழங்குவனவற்றையும் கொள்க.

செய்யுமென்னும் முற்றுப் பற்றிப் பின்னர் உரைக்கப்படும்.

தொல்காப்பியர்.

**முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி**
**இன்மை செப்பல் வேறென் கிளவி**
**செய்ம்மன செய்யுஞ் செய்த வென்னும்**
**அம்முறை நின்ற ஆயென் கிளவியும்**
**திரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி**
**இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமைய,**[1]

1.தொல். சொல். 222.

என ஓதியவற்றுள் இவ்வாசிரியர் கூறியுள்ள தன்மை முற்றும், உண்டு என்னுஞ் சொல்லும் இடம்பெறவில்லை. தங்காலத்தில் அஃறிணைப் பொருட்கள் கதைக்கும் நாடக மரபு வழக்குக் கண்டு அஃறிணைப் பொருட்கும் இவ்வாசிரியர் கூற்றுரிமை அளித்துள்ளார் போலும். உண்டு என்னுஞ் சொல்வழக்குப் பற்றி முன்னர் உரைக்கப்பட்டது.1 ஆண்டுக் காண்க.

(11)

**330. குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ**
**டல்ல னென்னே னாகு மீற்ற**
**இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.**

கு டு து று என்னும் குன்றியல் உகரமோடு
அல்லன் என் ஏன் ஆகும் ஈற்ற
இரு திணை முக் கூற்று ஒருமைத் தன்மை.

1. இருதிணைத்தன்மை யொருமை வினைமுற்றும் வினைக்குறிப்பு முற்றும்

2. செய்கையினேன்

ku tu ṭu ṟu eṉṉum kuṉṟiyal ukaram ōtu
al aṉ eṉ ēṉ ākum īṟṟa
iruṭiṇai mukkūṟṟu orumaiṭ ṭaṉmai.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### First person singular

(Finite verbs) ending in ku, tu, tu and ru as well as al, an, and en â belong to the 1st person singular and are common to the three (singular) Genders of the two classes.

## ஒப்புமைப் பகுதி

கடதற வென்னும்
அந்நான்கு ஊர்ந்த குன்றிய லுகரமோடு
என்ஏன் அல்என வரூஉம் ஏழும்
தன்வினை யுரைக்கும் தன்மைச் சொல்லே

(தொல்.சொல்.: 203)

குடுதுறு என்னும் குன்றிய லுகரமோடு
அல்அன் என்ஏன் ஆகும் ஈற்றது
இருதிணை முக்கூற்று ஒருமைத் தன்மையும்

(இ.வி.: 237 : 1–3)

என்ஏன் எம்ஏம் ஓம்அம் ஆம் தன்மை

(தொ.வி.: 105 : 3)

குடுதுறு என்னும் குன்றியல் உகர
இறுதியும் என்ஏன் அல்லிறு கிளவியும்
தன்வினை உரைக்கும் தன்மைச் சொல்லே

(மு.வீ.: 602)

.................. என் அல் அன் ஏன் குடுதுறு செய்குஎன்ப

1. நின்னெறி
2. பிழையலன்
3. கிடையா.

**பகர்ஒருமைத் தன்மை..........**

(சுவாமி.: 50:2)

## மயிலை நாதர்

**எ–ன்,** நிறுத்த முறையானே [1]இருதிணை முக்கூற்றொருமைத் தன்மை வினை வினைக்குறிப்பு முற்றாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:** இவ்வெட்டு விகுதிகளையும் ஈறாகவுடைய மொழிகள் இருதிணையவான ஒருவன் ஒருத்தி ஒன்றென்னும் மூன்று ஒருமைத் தன்மையை யுணர்த்தும் வினைமுற்றும் வினைக்குறிப்பு முற்றுமாம், எ–று.

**வ–று.:–**

உண்கு, கோடு, வருது, சேறு ; உண்பல்; உண்டனன், உண்ணாநின்றனன், உண்பன்; உண்டனென், உண்ணா நின்றனென், உண்குவென்; உண்டேன், உண்ணாநின்றேன், உண்பேன் எனவும், தாரினேன், ஈண்டையேன், பண்டையேன், காலினேன், சிறுமையினேன், [2] செயலினேன் எனவும் வினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றும் வந்தன; யானென்னும் பெயர் தந்துரைக்க.

தன்மைக்கண்ணும் அன் விகுதி கொள்ளாதொழியின்,

**"எழுத்தசைச்சீர், பந்த மடிதொடை பாவினங்**
**கூறுவன்"**

**"தாதிவர் தாமரைத் தடமல ரொதுங்கிய**
**ஆதியை வணங்கி யறைகுவ னெண்ணே"**

**"கல்லாப்புன் மாக்கள் கவற்ற விடுவனோ"**

"நின்னறநெறி தலைப்பட்டன[1]னிந்நெறி யிருநிலம் பிறழினும் [2]பிறழலன்" என வரும் இத்தொடக்கத்தன [3]முடியாவென்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** நிறுத்தமுறையானே தன்மை ஒருமை வினைமுற்றும் குறிப்புமுற்றும் **உணர்–ற்று.**

**இ–ள்.:–** இவ்வெட்டு விகுதிகளையும் இறுதியாக உடைய மொழிகள் இருதிணைக்கண்ணவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் முக்கூற்று ஒருமைத் தன்மை வினைமுற்றும் குறிப்பு முற்றுமாம், **எ–று.**

குவ் விகுதியை உடன்கூறினமையின் அதன் பின்னின்ற மூன்றும் காலங்காட்டும் விகுதிகள் என்பதூஉம், ஒருமை என்றமையின் இவை திணைப்பொதுவன்றிப் பாற்பொதுவாகா என்பதூஉம் பெற்றாம். ஒருமை பன்மை என மேல் விதப்பனவும் அன்ன.

வ—று.:—

உண்கு, கொண்டு, வந்து, வருது, சென்று, சேறு, உண்பல், உண்டனன், உண்ணாநின்றனன், உண்பன், உண்டனென், உண்ணாநின்றனென் உண்குவென், உண்டேன் உண்ணாநின்றேன், உண்பேன் எனவும்; தாரினென், தாரினேன் யான் எனவும் வரும். காட்டாதொழிந்தன வந்துழிக் காண்க.

தன்மைக்கண்ணும் அன்விகுதி கொள்ளாதொழியின்,

"எழுத்தசைசீர்
பந்தம் அடிதொடை பாவினம் கூறுவன்"

என்றற் றொடக்கத்தன அமைபா என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், நிறுத்த முறையானே விரவுத்திணைத் தன்மையொருமைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றும் கூறியது.

இ—ள்.:— கு டு து று வென்னுங் குன்றிய லுகரமோடு — கு டு து று என்னும் இந்நான்கு குற்றியலுகரவீற்று மொழிகளும், அல்லனென்னே னாகு மீற்ற — அல் அன் என் ஏன் என்னும் இந்நான்கு விகுதிகளையும் இறுதியாக வுடைய மொழிகளும், இருதிணைமுக்கூற்று — இரு திணைக்கும் பொதுவான, விரவுத்திணை ஒருவன், ஒருத்தி, ஒன்று என்னும் மூன்றற்கும் பொதுவான, ஒருமைத் தன்மை — ஒருமைத் தன்மைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம். எ—று.

உ—ம் .:—

உண்கு, செய்கு, கோடு, உண்டு, வந்து, வருது, சென்று, சேறு; உண்பல், உண்டனன், உண்ணாநின்றனன், உண்பன், உண்டனென், உண்கின்றனென், உண்குவேன், உண்டேன், உண்ணாநின்றேன், உண்பேன் என விரவுத் திணைத் தன்மை யொருமைத் தெரிநிலை வினைமுற்று வந்தன. குழையல், குழையன், குழையேன், தாரினேன், ஈண்டையேன், பண்டையேன், காலினேன், சிறியேன், செலவினேன் என விரவுத்திணைத் தன்மையொருமைக் குறிப்பு வினைமுற்று வந்தன. யான் என்னும் பெயர் வருவித்துக் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

இது, நிறுத்தமுறையாலே தன்மையொருமை வினைமுற்றுங் குறிப்பு முற்றும் உணர்த்துகின்றது.

**இ–ள்.:–** குடு **துறுவென்னுங்** – குன்றியலுகரமோடு கு டு து று என்கிற குற்றியலுகர விகுதிகளும், **அல்லன் னென்னேன்** – அல் அன் என் ஏன் என்கிற நான்குமெய்யீற்றுவிகுதிகளும், **ஆகும்** – ஆகிய, **ஈற்ற** – இவ்வெட்டு விகுதிகளையும் இறுதியிலேயுடைய மொழிகள், **இருதிணை** – இருதிணையிடத்தனவாகிய, **முக்கூற்று** – ஒருவன், ஒருத்தி ஒன்று என்கிற மூன்று பால்களுக்கும் பொதுவாகிய, **ஒருமைத்தன்மை** – ஒருமைத் தன்மை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், **எ–று.**

(கு டு து று என்கிற நான்கும் தாமே காலங்காட்டுதலாற் குறிப்பு வினைக்கு வாரா, அல் எதிர்காலத்திலே மாத்திரம் வரும்.)

(வரலாறு.)

வி, தெ, இ, தெ, நி, தெ, எ, கு

கு ” – ” – உண்டு – ”

டு–உண்டு ” – ” – ” –”

பான்

து–வந்து ” – ” – வருது –”

று–சென்று ” – ” – சேறு – ”

அல் ” – ” – உண்பல் – ”

அன் – உண்டனன், உண்ணாநின்றனன், உன்பன், தாரினன், என்–உண்டனென், உண்ணாநின்றனென், உண்பென், தாரினென். ஏன்–உண்டேன், உண்ணாநின்றேன், உண்பேன், தாரினேன். எனவரும், மற்றவைகளு மிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

36. இருதிணை முக்கூற்றொருமைத் தன்மைமுற்று இவை யெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ
டல்லன் னென்னே னாகு மீற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.
(கு டு து று என்னும் குன்றியலுகரமோடு
அல் அன் என் ஏன் ஆகும் ஈற்ற
இருதிணைமுக்கூற்று ஒருமைத்தன்மை.)

**இ–ள்.:** கு டு து று என்னுங் குற்றியலுகர விகுதிகளும், அல் அ ன் என் ஏன் என்னு நான்கு மெய்யீற்று விகுதிகளும் ஆகிய இவ்வெட்டு விகுதிகளையும் இறுதியிலேயுடைய மொழிகள் இருதிணையிடத்தனவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்று என்னு மூன்றுபால்களுக்கும் பொதுவாகிய ஒருமைத் தன்மைவினை முற்றுங் குறிப்புமுற்றுமாம், **எ–று.**

கு டு து று என்னு நான்குந் தாமே காலங்காட்டுதலாற் குறிப்புவினைக்கு வாரா. அவ்விகுதி எதிர்காலவிடை நிலைகளோடு மாத்திரம் வரும்.

(வரலாறு)

இ.தெரி. எ.தெரி.

உண்கு–(உண்பேன்) யான்

உண்டு – (உண்டேன்) யான்

வந்து – (வந்தேன்) வருது–(வருவேன்)யான்

சென்று – (சென்றேன்) சேறு–(செல்வேன்) யான்

உண்பல்–(உண்பேன்) யான்

இ.தெரி. நி.தெரி. எ.தெரி. குறி.

உண்டனன்உண்ணாநின்றனன் உண்பன் தாரினன் யான்

உண்டனென் உண்ணாநின்றனென் உண்பென் தாரினென் யான்

உண்டேன் உண்ணாநின்றேன் உண்பேன் தாரினேன் யான்

மேற் பதவியலுட் கூறிய ஈற்றுவகையானே உண்கு வருது சேறு எனவும் உரிஞுகு திரிமுகு எனவும் வருங் குற்றுகர ஈற்றுத் தன்மை யொருமைமுற்றுச் சொல்லும், இடைநிலைவகையானே உண்பல் வருவல் எனவரும் அல்லீற்றுத் தன்மை பொருமைமுற்றுச் சொல்லும், கூறுவன் எனவரும் அன் னீற்றுத் தன்மை பொருமைமுற்றுச் சொல்லும் எதிர்காலம்பற்றிவரும். என்னீறும் ஏனீறும் இடைநிலைவகையானனே மூன்று காலமும்பற்றிவரும். அவற்றுள் என்னீறு இறப்பும் நிகழ்வும் பற்றிவருங்காற் புக்கனென் உண்ணாநின்றனென் என உயர்திணையாண்பாற்படர்க்கை அன்னீற்றோடு ஒத்து இடைநிலைகளின் முன் அன்பெற்று வரும். ஏனையவற்றோடும் ஒட்டுக. இனி எதிர்காலம்பற்றி வருங்கால் உண்பென் உண்ருவென் வருவென் வருகுவென் என முதனிலையெழுத்தின் முன் குகரம் பெறாதும் பெற்றும் இடைநிலை பெற்றுவரும். இனி ஏனீறு இறப்பினும் நிகழ்வினும் புக்கனேன் புக்கேன் உண்ணாநின்றனேன் உண்ணாநின்றேன் என அன்பெற்றும் பெறாதும் எதிர்வின்கண் உண்பேன் உண்குவேன் உரிஞுவேன் எனக் குகரமும் உகரமும் பெறாதும் பெற்றும் இடைநிலை பெற்றுவரும். ஏனையவற்றோடும் ஒட்டுக.

உண்டு என்பது உண்பேன் என்னும் பொருளில் எதிர்காலம் பற்றியே வருமென்பது சேனாவரையர் நச்சினார்க்கினியர் முதலியோர் கொள்கை. தும் விகுதி நிகழ்காலமுணர்த்துவது முண்டு. "யாமவணின்றும் வருதும்" என வரும்.

இனி இவற்றெதிர்மறை உண்டிலென் உண்ணாநின்றிலென் உண்ணேன் உண்கிலென் உண்டிலேன் உண்பேனல்லேன் உண்கின்றிலேன் உண்கின்றிலென் என வரும்.

35. இங்கே கூறப்பட்ட எட்டு விகுதிகளுள்ளே காலவிடை நிலைபெற்று வருவன யாவை? பெறாது தாமே காலங்காட்டுவன யாவை?

கு டு து று வென்னும் குன்றியலுகர வீறுகள் தாமே காலங்காட்டுதலின் காலவிடைநிலை பெற்றுவரா. அல் பகர வகர இடைநிலைகளைப் பெற்று வரும். அன் ஏன் என் மூன்றும் முக்கால விடைநிலைகளையும் பெற்று வரும். உண்ணேன் என்னு மெதிர்மறைக்கண் ஏனீறு காலவிடைநிலை பெறாது.

38. "கு டு த று வென்னுங் குற்றியலுகரமோடு" என ஒடுக்கொடுத்து நான்கையும் பிரித்தக்கூறியது யாது பற்றி?

அவை நான்கும் பெருவழக்குடையனவல்லவென்பதும் மற்றைய வீறுகளே பெரும்பாலும் வழங்கப்படுவனவென்பதுங் காட்டுதற்கென்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, நிறுத்தமுறையே தன்மை யொருமை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாமாறுணத்திற்று.

இ–ள்.:– **குடுதுறு வென்னுங் குன்றியலுகரமோ டல்லன் என்ஏனாகு மீற்ற** – இந்த எட்டு விகுதிகளையும் இறுதியாகவுடைய மொழிகள், **இருதிணை முக்கூற்றொருமைத்தன்மை** –இருதிணைக்கும் பொதுவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் முக்கூற்றுத் தன்மையொருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ–று.

**'ஒருமை'** யென்றதனால், இந்த ஈற்றுமொழிகள் திணைப்பொதுவாவதன்றிப் பாற்பொதுவாகா வெனக் கொள்க. இனி ஒருமை பன்மை யென்பனவற்றையு மிவ்வாறு திணைப் பொதுவாவ தன்றிப் பாற் பொதுவாகா எனக் கொள்க.

வ–று.:–

உண்கு–(உண்பேன்) உண்டு–(உண்டேன்) வந்து – (வந்தேன்) வருது – (வருவேன்) சென்று – (சென்றேன்) சேறு – (செல்வேன்) உரினுகு, திருமுகு (உரினுவேன் – திருமுவேன்) எனக் கு டு து றுக்கள் எதிர்காலமும் இறந்த காலமும் பற்றி வந்தன. இனித் துவ்விகுதி.

**"கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினுந்**
**தொல்லது விளைந்தென நிலம்வளங் கரப்பினும்"**

எனச் செய்யுளகத்துப் பொழிந்து விளைந்து, என்பன பொழிந்தேன், விளைந்தேன் என இறந்தகாலம் பற்றி வருதலுங் காண்க. இனி அல் ஈறு பகர வகர இடைநிலை பெற்று எதிர்காலம்பற்றி, உண்பல் (உண்பேன்), வருவல்(வருவேன்) எனவரும்; உண்ணாநிற்பல் எனச் சிறுபான்மை நிகழ்காலத்தும் வரும். தவிர்வல் ஒழிவல் என வருமெதிர்மறை வாய்பாடுங் காண்க. அன், என், ஏன் என்பன முக்காலத்தும் வரும், அங்ஙனம் வருங்கால் அன் சாரியையுங் குச் சாரியையும் பெற்றும் பெறாதும் வரும். உண்டனன், உண்ணாநின்றனன்,

உண்பன் எனவும் உண்டனென், உண்ணாநின்றனென், உண்குவென், உண்பென் எனவும் உண்டனேன், உண்ணா நின்றனேன், உண்ணாநின்றேன், உண்குவேன், உண்பேன் எனவும் வருதல் காண்க. இனிக் குறிப்பின்கண், இன் சாரியை பெற்றே பெரும்பாலும் வரும். தாரினன், தாரினென், தாரினேன் யான் என வரும். இந்த–யான் என்னும் பயனிலையை யெல்லா வற்றொடுங் கூட்டுக. தாரேன் எனச் சிறுபான்மை இன் பெறாது வருதலுங் கொள்க. இனி இந்த மூன்று விகுதிகளும் எதிர்மறையில் உண்டிலன், உண்ணாநின்றிலன், உண்ணலன், உண்ணலென் என இல், அல் என்னும் எதிர்மறை உருபேற்று நிற்றலும்; வாழலேன், வாழேன், உண்ணலேன், உண்ணேன், என ஏன் விகுதி எதிர்மறையுருபு பெற்றும் பெறாதும் விகற்பித்து வருதலும், உண்டனனல்லன், உண்டனனல்லென்: உண்டனனல்லேன் என முன்னின்ற தெரிநிலையுடன் பாட்டுவினையைப் பின்னின்ற குறிப்புவினை மறுத்து நிற்றலும்; தாரினனல்லன், தாரினெனல்லென், தாரினே னல்லேன் எனவும் தாரினனல்லென், தாரினனல்லேன் எனவும் குறிப்பு உடன்பாட்டு வினையைக் குறிப்பு வினைமறுத்து நிற்றலும் காண்க.

இனி ஆசிரியர் தொல்காப்பியனார்

**“கடதறவென்னு**
**மந்நான்கூர்ந்த குன்றிய லுகரமோ**
**டென்னே னல்லென வரூஉ மேழுந்**
**தன் வினை யுரைக்குந் தன்மைச் சொல்லே”**

என அன் விகுதியை விலக்கிக் கூறினார். அது அக் காலத்து, வழங்காததினாலே, இக்காலத்து, ‘பந்த மடிதொடை பாவினங் கூறுவன்’ எனவழங்கி வருதலால், இவர் **அதனை எதிரதுபோற்றலென்னும் உத்தியினாலே** கூட்டிக் கூறினாரெனக் காண்க. ஈற்ற–ஒருமைத் தன்மை என முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** குடுதுறு **என்னும் குன்றிய லுகரமோடு** – குடுதுறு என்கிற நான்குவிகுதிகளையும் இறுதியிலுடைய குற்றியலுகரமாகிய மொழிகளும், **அல்அன் என்ஏன் ஆகும்** ஈற்ற – இந்நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகளும், **இருதிணைமுக்கூற்று ஒருமைத்தன்மை** – உயர்திணை ஆண்பால் பெண்பால் அஃறிணை ஒன்றன்பால் என்னும் மூன்றுக்கும்

பொதுவாகிய தன்மை ஒருமைத் தெரிநிலைமுற்றுங் குறிப்பு முற்றுமாம்.

**குறிப்பு :–**

குடுதுறு என்கிற நான்கும் தாமே காலங்காட்டுதலால் குறிப்புவினைக்குவாரா. 'அல்' விகுதி தெரிநிலையில் எதிர்காலவிடை நிலைகளோடு மாத்திரம் வரும்.

**உ–ம் :**

| | இறப்பு | நிகழ்வு | எதிர்வு | குறிப்பு | |
|---|---|---|---|---|---|
| | கு– | * | * | உண்கு | |
| டு – | உண்டு | * | * | * | |
| து – | வந்து | * | வருது | * | |
| று – | சென்று | * | சேறு | * | யான். |
| அல் – | * | * | செய்வல் | * | |

அன் – உண்டனன் உண்கின்றனன் உண்பன் குழையன்

என் – உண்டனென் உண்கின்றனென் உண்பென் குழையென்

ஏன் – உண்டேன் உண்கின்றேன் உண்பேன் குழையேன்

## ஆறுமுக நாவலர்

**இ – ள்.: கு டு து று என்னும் குன்றியலுகரமோடு** – கு டு து று என்னுங் குற்றியலுகர விகுதிகளும், **அல் அன் என் ஏன் ஆகும்**– அல் அன் என் ஏன் என்னு நான்கு மெய்யீற்று விகுதிகளும் ஆகிய, ஈற்ற–இவ்வெட்டு விகுதிகளையும் இறுதியிலேயுடைய மொழிகள், **இருதிணை முக்கூற்று ஒருமைத்தன்மை**–இருதிணை யிடத்தனவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்று என்னு மூன்று பால்களுக்கும் பொதுவாகிய ஒருமைத் தன்மைவினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ–று.

கு டு து று என்னு நான்குந் தாமே காலங்காட்டுதலாற் குறிப்பு வினைக்கு வாரா. அவ்விகுதி எதிர்கால விடைநிலைகளோடு மாத்திரம் வரும்.

வ–று.:

| இ. தெரி. | எ.தெரி. | |
|---|---|---|
| – | உண்கு | |
| உண்டு | – | |
| வந்து | வருது | யான் |
| சென்று | சேறு | – |
| – | உண்பல் | |

| இ. தெரி. | நி.தெரி. | எ.தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| உண்டனன் | உண்ணாநின்றனன் | உண்பன் | தாரினன் | |
| உண்டனென் | உண்ணாநின்றனென் | உண்பென் | தாரினென் | |
| உண்டேன் | உண்ணாநின்றேன் | உண்பேன் | தாரினேன் | – யான் |

மற்றவைகளும் இப்படியே வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

இ-ள்.:- குடுதுறு என்னும் குன்றியலுகரமோடு - குடுதுறு என்னுங் குற்றியலுகர விகுதிகளும் - அல் அன் என் ஏன் ஆகும் - அல் அன் என் ஏன் என்னும் நான்குமெய்யீற்று விகுதிகளும் ஆகிய, - ஈற்ற - இவ்வெட்டுவிகுதிகளையும் இறுதியிலேயுடைய மொழிகள் - இருதிணை முக்கூற்று ஒருமைத் தன்மை - இருதிணையிடத்தனவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்று என்னு மூன்றுபால்களுக்கும் பொதுவாகிய ஒருமைத்தன்மை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம். எ-று.

குடுதுறு என்னு நான்குந் தாமே காலங்காட்டுதலால், தன்மைக்குறிப்புவினைக்கு வாரா, அவ்விகுதி தன்மையில் நிகழ்கால எதிர்காலவிடைநிலைகளோடு மாத்திரம் வரும். குடுதுறுவை ஒடு என்பதனாற் பிரித்தது குறிப்புவினையில் வாராமைபற்றியாம்.

(வரலாறு)

| இ.தெரி | எ.தெரி | |
|---|---|---|
| ---- | உண்கு | |
| உண்டு | ----- | யான் |
| வந்து | வருது | |
| சென்று | சேறு | |
| ----- | உண்பல் | |

| இ.தெரி | நி.தெரி | எ .தெரி | குறி | |
|---|---|---|---|---|
| --- | உண்ணாநிற்பல் | உண்பல் | ----- | |
| உண்டனன் | உண்ணாநின்றனன் | உண்பன் | தாரினன் | |
| உண்டனென் | உண்ணாநின்றனென் | உண்பென் | தாரினென் | யான் |
| உண்டேன் | உண்ணாநின்றேன் | உண்பேன் | தாரினேன் | |

அவ்விகுதி பகர வகர இடைநிலைப்பெற்றுப் பெரும்பாலும் எதிர்காலத்தும், உண்ணாநிற்பல் எனச்சிறுபான்மை நிகழ்காலத்தும் வருதலறிக.

இனி ஆசிரியர் தொல்காப்பியனார் (சூத்திரம்) ''கடதறவென்னும், அந்நான் கூர்ந்தகுன்றியலுகரமோ, டென்னேனலலென வருஉமேழுந், தன் வினையுரைக்குந் தன்மைச் சொல்லே'' என அன்விகுதியின்றிக் கூறினார் அக்காலத்து வழங்காததினால்; இக்காலத்து வழங்கிவருதலால் இவரதனைக் கூட்டிக் கூறினாரென்றறிக.

## வை. மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: குறுதுறு என்னும் குன்றியலுகரமோடு – குடுதுறு என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய குற்றியலுகரமாகிய மொழிகளும், அல் அன் என் ஏன் ஆகும் ஈற்ற – அல் அன் என் ஏன் என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகளும், இருதிணை முக்கூறு ஒருமை தன்மை – உயர்திணை ஆண்பால் பெண்பால் அஃறிணை ஒன்றன்பால் என்னும் மூன்றுக்கும் பொதுவாகிய தன்மையொருமைத் தெரிநிலை முற்றும் குறிப்பு முற்றும் ஆம், எ–று.

கு டு து று என்கிற நான்கும் – தாமே காலங்காட்டுதலால், குறிப்பு வினைக்கு வாரா. அல் விகுதி, இடைநிலையோடு சேர்ந்து தெரிநிலையில் எதிர்காலத்திலே மாத்திரம் வரும்.

உ – ம்.:–

| | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| கு. | – | – | உண்கு | – | |
| டு. | உண்டு | – | – | – | |
| து. | வந்து | – | வருது | – | யான். |
| று. | சென்று | – | சேறு | – | |
| அல். | – | – | செய்வல் | – | |
| அன். | உண்டனன் | உண்கின்றனன் | உண்பன் | குழையன் | |
| என். | உண்டெனன் | உண்கின்றனென் | உண்பென் | குழையென் | |
| ஏன். | உண்டேன் | உண்கின்றேன் | உண்பேன் | குழையேன் | |

இவை ஒரு புருஷனுக்கும், ஒரு பெண்ணுக்கும், ஒரு விலங்குக்கும் தனித்தனி உரியதாதல் காண்க. முன்னிலை யொருமைமுற்றும் இத்தன்மையதே.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– கு டு து று என்னும் குன்றியலுகமோடு – கு டு து று என்னுங் குற்றியலுகர விகுதிகளும், அல் அன் என் ஏன் ஆகும் – அல் அன் என் ஏன் என்னும் நான்கு மெய்யீற்று விகுதிகளும் ஆகிய, ஈற்ற – இவ்வெட்டு விகுதிகளையும் இறுதியிலேயுடைய மொழிகள், இருதிணைமுக்கூற்று, ஒருமைத்தன்மை – இருதிணையிடத்தனவாகிய ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் மூன்று பால்களுக்கும் பொதுவாகிய ஒருமைத்தன்மை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ–று.

கு டு து று என்னும் நான்குந் தாமே காலங்காட்டுதலாற் குறிப்பு வினைக்கு வாரா. அல் விகுதி எதிர்கால விடைநிலைகளோடு மாத்திரம் வரும்.

**உ-ம்.:-**

தெரிநிலை

இறப்பு. எதிர்வு.

கு- உண்கு

டு-உண்டு -

து-வந்து வருது

று-சென்றுசேறு

அல்- உண்பல் - யான்

தெரிநிலை குறிப்பு

இறப்பு நிகழ்வு எதிர்வு

அன்-உண்டனன் உண்ணாநின்றனன் உண்பன் தாரினன்

என்-உண்டனென் உண்ணாநின்றனென் உண்பென் தாரினென்

ஏன்-உண்டேன் உண்ணாநின்றேன் உண்பேன் தானினேன் - யான்.

(உண்கு = உண்பேன். உண்டு = உண்டேன். வந்து = வந்தேன். வருது = வருவேன். சென்று = சென்றேன். சேறு = செல்வேன். உண்பல் = உண்பேன்.)

மற்றவைகளும் இப்படியே வரும்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ-ள்.)** கு டு து று என்னும் குனிறியலுகரமோடு - கு டு து று என்கிற குற்றியலுகர விகுதிகளும், **அல் அன் என் ஏன் ஆகும்** - அல் அன் என் ஏன் (என்கிற நான்கு மெய்யீற்று விகுதிகளும்) ஆகிய, **ஈற்ற** - (இவ்வெட்டு விகுதிகளையும்) இறுதியிலேயுடைய மொழிகள், **இருதிணை முக் கூற்று** - இருதிணை யிடத்தனவாகிய (ஒருவன் ஒருத்தி ஒன்று என்கிற) மூன்று பால்களுக்கும் பொதுவாகிய, **ஒருமைத் தன்மை** - ஒருமைத் தன்மை வினைமுற்றும் குறிப்பு முற்றுமாம். (எ-று)

**(பொ-ரை.)** கு டு து று என்னும் நான்கு குற்றியலுகர விகுதிகளையும், அல் அன் என் ஏன் என்னும் நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் இருதிணையில் (ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும்) மூன்று பால்களுக்கும் பொதுவான ஒருமைத் தன்மைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம்.

(கு டு து று என்கிற நான்கும் தாமே காலம் காட்டுதலால், குறிப்பு வினைக்கு வாரா; அல் விகுதி இடைநிலையோடு சேர்ந்து தெரிநிலையில்

எதிர்காலத்திலே மாத்திரம் வரும்.)

**(உ–ம்.)**

இறந்தகாலம்.

உண்டு

வந்து

சென்று

உண்டனன்

உண்டனென்

உண்டேன்

நிகழ்காலம்

உண்கின்றனன்

உண்கின்றனென்

உண்கின்றேன்

எதிர்காலம்

உண்கு

வருது

சேறு

உண்பல்

உண்பன்

உண்பென்

உண்பேன்

தாரினன்

தாரினென்

தாரினேன்

யான்.

குறிப்பு தெரிநிலை

கு.

டு.

து.

று.

அல்.

அன்.

என்.

ஏன்.

எனவரும்; மற்றவைகளும் இப்படியே.

(இவை ஒரு புருடனுக்கும், ஒரு பெண்ணுக்கும் ஒரு விலங்குக்கும் தனித்தனி உரியதாதல் காண்க. முன்னிலை ஒருமை முற்றும் இத்தன்மைத்தே. முக்கூற்று – ஒருவன், ஒருத்தி, ஒன்று.)

## கா. நமச்சிவாய முதலியார்

குடு துறு என்னும் குன்றியலுகரமோடு – குடுதுறு என்னும் குற்றியலுகர விகுதிகளும், **அல் அன் என் ஏன்** – அல் அன் என் ஏன் என்னும் நான்கு மெய்யீற்றுவிகுதிகளும், **ஆகும்** – ஆகிய, **ஈற்ற** – இந்த எட்டு விகுதிகளையும் இறுதியிலேயுடைய மொழிகள், **இருதிணை** – இருதிணையிடத்தனவாகிய, **முக்கூற்று** – ஒருவன் ஒருத்தி ஒன்று என்கின்ற மூன்று பால்களுக்கும் பொதுவாகிய, **ஒருமைத் தன்மை** – தன்மை யொருமையாகிய தெரிநிலை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம்.

குடுதுறு என்னும் நான்கும் தாமே காலங் காட்டுதலாற் குறிப்பு வினைக்கு வாரா; அல் – எதிர்காலத்தில் மாத்திரமே வரும்; பதவியல் 18–ஆம் சூத்திரத்திற் காண்க.

உதாரணம்

| | | |
|---|---|---|
| | | உண்டு (உண்டேன்) |
| | | வந்து (வந்தேன்) |
| இறந்தகாலம் | – | சென்று (சென்றேன்) |
| | | உண்டனன் |

1. தொல் சொல் 199–உரை;
2. தொல் சொல் 203–உரை;
3. தொல் சொல் 205 உரை;
4. தொல் சொல் 202–உரை.
5. சிறுபாண்; 143 4;
6. தொல் சொல் 204–உரை;
7. தொல் சொல் 195–உரை;
8. நன் 145;

| | | | | |
|---|---|---|---|---|
| | | | உண்டனென் | |
| | | | உண்டேன் | |
| | | | உண்ணா நின்றனன் | |
| தெரிநிலை | நிகழ்காலம் | – | உண்ணா நின்றனென் | |
| | | | உண்ணா நின்றேன் | |
| | | | உண்கு (உண்பேன்) | யான் |
| | | | வருது (வருவேன்) | |
| | | | சேறு (செல்வேன்) | |
| | எதிர்காலம் | – | உண்பல் | |
| | | | உண்பன் | |
| | | | உண்பென் | |
| | | | உண்பேன் | |
| | | | தாரினன் | |
| அன் – என் – ஏன் – குறிப்பு | | – | தாரினென் | |
| | | | தாரினேன் | |

மற்றவைகளும் இப்படியே வரும்.

## மோசசு பொன்னையா

கு, டு, து, று என்னும் நான்கையும் ஈற்றிற்பெற்ற குற்றியலுகர முற்றுக்களும், அல், அன், என், ஏன் என்னும் நான்கு விகுதிகளையும் ஈற்றிற் பெற்ற முற்றுக்களும் உயர்திணை, அஃறிணை ஆகிய இரு திணைகளின் ஒருமைகளான ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் என்னும் மூன்றுக்கும் உரிய தன்மை ஒருமைத் தொழில், குறிப்பு வினைமுற்றுக்களாம் எ–று.

கு, டு, து, று என்பவற்றை ஈற்றிற் பெற்று வரும் உண்கு, உண்டு, வந்து, வருது, சென்று, சேறு என்பன பற்றிய

1. புறம். 17–33;
2. புறம் 49.1;
3. சிறுபாண். 144;
4. Negatives-T. cult VIII (1959) p. 37;
5. மொழிநுல்–P.S.S. பக். 88.
6. Papers on Lignistics and Literature. p. 4;
7. History of the Tamil Language P. 31;
8. The Grammatical Stracture of Dravidan Languger-p. 72; 4. Zero morph;

ஆராய்ச்சி தொல்காப்பிய உரைகளிற் காணப்படுகிறது. இளம்பூரணர்[1], சேனாவரையர்[2], நச்சினார்க்கினியர்[3] என்போர் அவை பெரும்பாலும் எதிர்காலத்தைக் குறிப்பன என்றே குறிப்பிடுகின்றனர். சேனாவரையர், "டதற வென்பன எதிர்காலத்திற்குரிய எழுத்தன்மையால், பாலுணர்த்தும் இடைச்சொற்கு உறுப்பாய் வந்தன எனவே படும்; படவே அவற்றை உறுப்பாகவுடைய ஈறு மூன்றும் அதனான் உம்மென ஓரீறாக வடக்கலாகாமையின், 'அந்நாற் கிளவியொ' டென்றார்"[4] எனவுங் கூறுகிறார். நச்சினார்க்கினியர், 'இக்கடதக்கள் முதல்நிலையை அடுத்து வருங்கால் எதிர்வும் உணர்த்தும், இனி அவற்றுள் சிறுபான்மை நிகழ்காலம் உணர்த்துவனவும் உள. அது.

சிறுகண் யானையொடு பெருந்தேர் எய்தி

யாமவ ணின்றும் வருதும்,[5]

எனவரும்'[6] என ஒரு விளக்கமும் தந்துள்ளார். தெய்வச்சிலையார், 'உண்கும், உண்டும், வருதும், சேறும் என்பன எதிர் காலங் குறித்துழி, எதிர்காலத்திற்கு ஏற்கும்; நிகழ்காலம் குறித்துழி, நிகழ்காலத்திற்கு ஏற்கும்.... இவ்வுரை மேல் வருவன (கடதற) வற்றிற்கும் ஒக்கும்'[7] எனக் கூறியுள்ளார். அதனால், அவர் கடதற எதிர்வு, நிகழ்வு இரண்டிற்கும் உரியன எனக் கருதினார் என்பது புலனாகின்றது. இவ்வாசிரியர் று, து என்னும் இரண்டும் இறந்த எதிர்காலங்களையும், டு இறந்த காலத்தையும், கு எதிர்காலத்தையும் குறிக்கும் எனப் பதவியலுள் கூறினார்.[8] அவர் கொள்கைப்படி, சென்று, சேறு என்பன முறையே இறந்த, எதிர்காலங்களுக்கும்; வந்து, வருது என்பன முறையே இறந்த எதிர்காலங்களுக்கும்; உண்டு என்பது இறந்த காலத்திற்கும்; உண்கு என்பது எதிர்காலத்திற்கும் உரியனவாக வரையறுக்கப்படும். சங்க இலக்கியங்களில், காண்கு வந்திசின்[1] எனவும், நாடன் என்கோ (என்கு+ஓ)[2] எனவும் எதிர்காலத்திலும்; வருதுதும்[3]எனப் பன்மையில் நிகழ்காலத் திலும் வழங்குவது காணப்படுகின்றனவே யன்றி, பிறவற்றைக்

1. L..V. Ramasami Aiyar-The Morphology of old Tamil verbs-An., 33 (1938), p. 769.

2.A History of Tamil Language-p. 30;

3. Caldwells comparative grammar-p. 542;

காணமுடியவில்லை.

டாக்டர், வி.ஐ. சுப்பிரமணியம், கு, டு, து, று என்பவற்றை முறையே க்+உ, ட்+உ, த்+உ, ற்+உ எனப்பகுத்து, உ தன்மை இடத்தை உணர்த்தும் எழுத்து எனக்கூறுகிறார்.[4] படர்க்கை ஒருமையிலும் டு, து, று என்பன விகுதியாக வருமாதலின் அவர் கூற்று மேலும் ஆய்வுக்குரியது.[5]டாக்டர், தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், குன், டுன், துன், றன் என்பனவே பழைய வடிவம் எனவும், ஒருமையை உணர்த்திய னகரஒற்று வழக்கில் வீழ்ந்தது எனவும் கருதுகிறார்.[6]

அன்றியும், நின்றோர் உணர்ந்திசின், நுவன்றிசின். சென்றி முதலியவற்றிகண் கூடி நிற்கும் ஓர், இசின், இசின், இ என்பவற்றை நீக்கிக் காணின், எஞ்சி நிற்கும் நின்று, உணர்ந்து, நுவன்று, சென்று என்பனவே பழைய வினைவடிவங்கள் எனவும்; வருது, சேறு என்பன முறையே வந்து, சென்று என்பவற்றின் மாற்று வடிவங்கள் எனவும்; அவ்வடிவங்கள் இறப்பல்லாத காலத்தை உணர்த்தின எனவும் கருதுகிறார்.[7] சூல்சு பிளாாக் 'அருந்து' என்பது ஆர்–அரு+து–அருந்து என ஆவதால் அவற்றிடை ஓர் உம் வினையடிக்கும் துவ்வுக்கும் இடையே உண்டு எனக் காட்டுவதை[8] எடுத்துக்காட்டி, அத்தகைய சொற்களில் காலங்காட்டுவது து முதலியன அல்ல என அவர் நிறுவ முற்படுகின்றார். அவ்வாறாயின் கு, து, டு, று என்பன வெறும் விகுதிகளாக நிற்க வினையடிக்கும் அவற்றிற்கும் இடையே இருக்க வேண்டிய உம் என்பதே இறப்பல்லாத காலத்தை உணர்த்துவதாகும் என்பது அவர் கொள்கையாகும்.

வருது, சேறு என்பவற்றை முறையே வந்து, சென்று என்பவற்றின் மாற்று வடிவங்கள் எனக் கொள்வதை விட, உரிநுதும், திருமுதும், வருதும் என வரும் சொற்களை நோக்கி, அவை உரிஞ்குதும், திரும்குதும், வருகுதும் என்னுஞ் சொற்களின் குவ்வின் ககரஒற்றுத்திரிந்தும் கெட்டும் அவ்வாறு முடிந்து எதிர்கால முணர்த்தி வழங்கின என அறிதல் கூடும் ஆதலின், வருகுதும், செல்குதும் என்பன வருதும் சேறும் எனத் திரிந்து வழங்க, ஒற்றுமைப் போலியாக உரையாசிரியர்களால் ஒருமையில் அவ்விரு சொற்களும் எடுத்துக்காட்டப்பட்டன எனக் கோடலே பொருந்துவதாகும்.

1. வீரசோ, 80 உரை.

சங்க இலக்கியத்திற் கூட அவ்விரு சொற்களின் வழக்குக் காணப் பட்டிலது[1].

காலமுணர்த்தும் இந்நான்கீறும் குறிப்பு வினைமுற்றிற்கு ஈறகாது என்பதை உயர்த்துணர்க.

ஏனைய நான்கனுள் அல்லீறுசெய்துழூ+செய்பு/செய்வு+அல்–செய்பல்/செய்வல் என முடிந்து நிற்பது ஆகலின், இறந்தகாலத்தை உணர்த்தாது என்பது போதரும். அது எதிர்காலத்துக்குரியது என்பதே இலக்கண ஆசிரியர் அனைவருக்கும் உடன்பாடானது. டாக்டர். மீனாட்சிசுந்தரனார், இந்த அல்லீறு, செய்தல், வருதல் என இவ்வாறு வழங்கும் வினைப்பெயர்களின் ஈற்றில் வரும் அவ்விகுதிகளோடு ஒலியனியல் முறைப்படி ஒத்த தன்மையதே எனக் கருதுகிறார்.1 டாக்டர். கால்டுவெல் கருத்தும் அதுவே யாகும்.2 அவ்வாறாயின், செய்தல், செய்பல் முதலியன வினைமுற்றாந் தன்மையை இழந்து வினைப்பெயர்களாக வழங்குவன என்பது போதரும். நன்கு செய்தல் என எச்சவினையை முன்நிறுத்தின் பொருட்பொருதமுறத் தழுவிநிற்கின்றதே யன்றி, நல்ல செய்தல் எனப் பயரெச்சத்தை முன்நிறுத்தின் பொருட்பொருத்தமுறத் தழுவிநிற்கின்றதே யன்றி, நல்ல செய்தல் எனப் பெயரெச்சத்தை முன்நிறுத்தின் பொருட்பொருத்தமுறத் தழுவாமையை நோக்கின் அவர் கூற்று ஏற்புடையதாகலாம் என்ற எண்ணம் பிறக்கின்றது. வீரசோழிய உரைகாரர் அல்விகுதி துணிவுப் பொருளில் வருமென்பார்.[1]

ஏனைய விகுதிகள் மூன்றும் முக்கால வினைமுற்றுக்களுக்கும், குறிப்பு வினைமுற்றுக்களுக்கு உரிமைப்பட்டு வழங்கும்.

எ–டு.

| தொழில்வினை முற்று | குறிப்புவினைமுற்று |
|---|---|
| அன்–நடந்தனன்–நடக்கின்றனன்–நடப்பன் | குழையன் |
| என்–நடப்பென்–நடக்கின்றனென்–நடப்பென் | குழையென் |
| ஏன்–நடந்தேன்–நடக்கின்றேன்–நடப்பேன் | குழையேன் |

தொல்காப்பியர்,

**கடதற வென்னும்**

**அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோ (டு)**

**என்ஏன் அல்என வரூஉம் ஏழும்**

**தன்வினை யுரைக்கும் தன்மைச் சொல்லே,**

என ஒருமை உணர்த்தும் தன்மைச் சொற்களின் ஈறுகள் பற்றி உரைத்தவிடத்து, அன் ஈற்றைக் குறிப்பிடவில்லையெனினும்,

**உரைத்தனன் யான்,**

**யானும்..... வந்தனன்,**

**செய்குவன் தவமென,**

எனவரும் செய்யுள் வழக்கு நோக்கி அதன் பழமை உணரப்படும். வீரசோழிய ஆசிரியர்,

**தன்மைத் துணிவா மொருமைவன் பன்5**

என முதன் முதலில் அன்விகுதி பற்றி இலக்கண நூலிற் துணிவுப் பொருளிலேயே வரும் எனத் தெரிகிறது. டாக்டர். சுப்பிரமணிய சாத்திரியார், அல் என்ற தன்மை விகுதியே அன் னப் பிறழ்பிரிப்பால் மாறியிருக்கலாம் எனவும், டாக்டர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் அல், அன் என்பன இருவேறு வட்டார வழக்குமொழிகளிலிருந்து இலக்கியத்தில் ஏறினவாகலாம் எனவும் கருதுகின்றனர்.

இனி, இத்தன்மை வினைமுற்றுக்கள் தொல்காப்பியர் கூறியவாறே 'தன்வினையுரைக்கும் தன்மைச் சொற்களே' ஆதலின் பிறவினைக்கு வாரா எனக் கொள்க. பன்மைக்கும் இஃது ஒக்கும்.

(12)

**331. அம்மா மென்பன முன்னிலை யாரையும்**
**எம்மே மோமிவை படர்க்கை யாரையும்**
**உம்மூர் கடதற விருபா லாரையும்**
**தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை.**

அம் ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம் ஏம் ஓம் இவை படர்க்கை யாரையும்
உம் ஊர் க ட த ற இரு பாலாரையும்
தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை.

am ām eṉpaṉa muṉṉilaiyāraiyum
em ēm ōm ivai paṭarkkaiyāraiyum

um ūr ka ta ṭa ṟa irupālāraiyum
ṭaṉṉotu patukkun ṭaṉmaip paṉmai.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**First person plural**

Am and am, which may include (also) whose of the 2nd person,—em, ê and om, which may include (also) those of the 3rd person, and kum, tum, tum and rum which may include also both (the 2nd and 3rd person), are (all) terminations of the 1st person plural.

## ஒப்புமைப் பகுதி

அவைதாம்
அம்ஆம் எம்ஏம் என்னும் கிளவியும்
உம்மொடு வரூஉம் கடதற என்னும்
அந்நாற் கிளவியோ டாயெண் கிளவியும்
பன்மை உரைக்கும் தன்மைச் சொல்லே

(தொல். பொருள்.: 202)

அம்ஆம் எம்ஏமுங் கடதறமேல் ஆங்கணைந்த
உம்மும் உளப்பாட்டுத் தன்மையாம் – தம்மொடு
புல்லுங் குடுதுறுவும் என்ஏனும் பொற்றொடியாய்
அல்லும் தனித்தன்மை யாம்

(நேமி.: 64)

அம்ஆம் ஈற்ற முன்னிலை யாரையும்
எம்ஏம் ஓம்இவை படர்க்கை யாரையும்
உம்மூர் கடதற இருபா லாரையும்
தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மையும்

(இ.வி.: 237 : 4–7)

---

பாட வேறுபாடு.:–

1. உண்பம்
2. ஆண்டையம், நாளினம்

அம்ஆம் என்பன முன்னைலயாரையும்
எம்ஏம் ஓம்இவை படர்க்கையா ரையும்
உம்ஊர் கடதற இரு பாலாரையும்
தன்னோடு படுக்கும் தன்மைப் பன்மை

(தொ.வி.: 106)

அம்மா மென்பன விறுதிக் கிளவியும்
கும்டும் தும்றும் மிறுதிக் கிளவியும்
பன்மை யுணர்த்தும் தன்மைப் பெயரே

(மு.வீ.: 598)

............... அம் ஆம் எம்ஏம் ஓம் உம்மைத்
தன்னொடாம் கடதற செய்கும் எனலாம் பன்மைத்
தன்மை.....................

(சுவாமி.: 50:3)

## மயிலை நாதர்

எ–ன், உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினையும் வினைக்குறிப்பு முற்றுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– இவ் வொன்பது விகுதி யீற்றுமொழிகளும் இவர்களைத் தன்னொடுபடுக்கும் தன்மைப்பன்மை வினையும் வினைக்குறிப்பு முற்றுமாம், எ – று.

வ –று.:–

உண்டனம், உண்ணாநின்றனம், [1]உண்குவம்; உண்டாம், உண்ணாநின்றாம், உண்பாம்; உண்டனெம், உண்ணா நின்றனெம், உண்குவெம்; உண்டேம், உண்ணாநின்றேம், உண்பேம் ; உண்டோம், உண்ணா நின்றோம், உண்போம் ; உண்கும், உண்டும், வருதும், சேறும் எனவும், தாரினம், [2]ஊரினம், பண்டையம், காலினம், கரியம், செய்கையம் எனவும் வினை வினைக்குறிப்பு முற்றுவந்தன; யாமென்னும் பெயர் வருவித்து முடிக்க.

ஒம் விகுதியையும் வழக்குண்மையிற் கொண்டாரென்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், தன்மைப்பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்–ற்று.

இ – ள்.:– தன்னிலையின் நிற்பதன்றி அம் ஆம் என்னும் இவ்விரு விகுதியினையும் இறுதியாக உடைய மொழிகள் முன்னிலையாரையும், எம் ஏம் ஓம் என்னும் இம்மூன்று விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் படர்க்கையாரையும், கும் டும் தும் றும் என்னும் இந்நான்கு விகுதியினையும் இறுதியாகவுடைய மொழிகள் முன்னிலை படர்க்கை என்னும் ஈரிடத்தாரையும் தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம், எ–று.

'தன்னிலையின் நிற்பதன்றி...என்னும்' இறந்தது தழீஇய எச்சவும்மைகள் எண்ணும்மைகளாயும், 'இருபாலாரையும்' என்புழி இவற்றோடு முற்றும்மையாயும் நின்றன.

வ–று.:–

உண்டனம், உண்ணாநின்றனம், உண்பம், உண்டாம், உண்ணாநின்றாம், உண்பாம், தாரினம், தாரினாம்: யாம் எனவும்; யானும் நீயும் எனவும்; உண்டனெம், உண்ணா நின்றனெம், உண்பெம், உண்டேம், உண்ணாநின்றேம், உண்பேம், உண்டோம், உண்ணாநின்றோம், உண்போம், தாரினெம், தாரேம், தாரினோம்: யாம் எனவும், யானும் அவனும் எனவும்; உண்கும், உண்டும், வந்தும், வருதும், சென்றும், சேறும்: யாம் எனவும்; யானும் நீயும் அவனும் எனவும் தனித் தன்மைப்பன்மையும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மையும் முறையே வந்தன.

இன்னும் இவ்வும்மைகளை ஐயவும்மைகளாக்கி அம் ஆம் என்பன முன்னிலையாரையேனும் படர்க்கையாரையேனும் தன்னொடு படுக்கும் எனவும், ஆக்கவும்மையாக்கி அம் ஆம் என்பன முன்னிலையாரையும் படர்க்கையாரையும் ஒருங்கு தன்னொடுபடுக்கும் எனவும் பொருளுரைத்து, உண்டனம்; யானும் அவனும் எனவும்; யானும் நீயும் அவனும் எனவும் அருகி வருதல் கண்டுகொள்க. ஏனை எட்டு விகுதியும் அன்ன. இவற்றை 'ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே' என்னும் இடவழுவமைதியாகக் கோடலும் ஒன்று.

தன்மையொருமைக்கண் அன் விகுதியும் பன்மைக்கண் ஓம் விகுதியும் புதியனபுகுதல்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், உளப்பாட்டுத் தன்மைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றும் கூறியது.

**இ–ள்.:– அம்மா மென்பன** – அம் ஆம் என்னும் இவ்விரு விகுதியை ஈறாகவுடைய மொழிகள், **முன்னிலை யாரையும்** – முன்னிலையாரைத் தன்னோடு உளப்படுத்தும் விரவுத்திணைத் தன்மைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம்; **எம்மே மோமிவை** – எம் ஏம் ஓம் என்னும் இம்மூன்று விகுதியையும் ஈறாகவுடைய மொழிகள், **படர்க்கையாரையும்** – படர்க்கையாரைத் தன்னோடு உளப்படுத்தும் விரவுத் திணைத் தன்மைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம்; **உம்மூர் கடதற** – கும் டும் தும் –றும் என்னும் இந்நான்கு விகுதியையும் ஈறாகவுடைய மொழிகள், **இருபாலாரையும்** – முன்னிலையாரையும் படர்க்கையாரையும் தன்னோடு உளப்படுத்தும் விரவுத் திணைத் தன்மைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்றாம்; **தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை** – தன்னோடு உளப்படுத்தும் தன்மைப் பன்மையாம்.

இவ்வுரையென மூன்றனோடும் கூட்டுக.

**உ–ம்.:–**

உண்டனம், உண்ணாநின்றனம், உண்பம், உண்பாம், உண்ணாநின்றாம், உண்பாம், உண்டனெம், உண்ணாநின்றனெம், உண்பேம், உண்டோம், உண்ணாநின்றோம், உண்போம்,

உண்கும், உண்டும், வந்தும், வருதும், சென்றும், சேறும் என இவ்வொன்பது விகுதியும் சேர்ந்தது ; விரவுத்திணைத் தன்மைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்று வந்தன.

தாரின, ஈண்டையம், ஆண்டையம், பண்டையம், கரியம், செய்கையம் என வினைக்குறிப்பு முற்று வந்தன. யாம் என்னும் பெயர் வருவித்துக் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** தன்மைப்பன்மை வினைமுற்றுங் குறிப்புமுற்றும் உணர்த்துகின்றது.

**இ–ள்.:– அம்மாமென்பன** – அம் ஆம் என்கிற விரண்டு விகுதிகளையு மிறுதியிலுடைய மொழிகள், **முன்னிலையாரையும்** – தன்னிலை யினிற்கையன்றி முன்னிலை யிடத்தாரையும், **எம்மே மோமிவை** – எம் ஏம் ஓம் இம்மூன்று விகுதிகளையு மிறுதியிலுடைய மொழிகள், **படர்க்கையாரையும்** – தன்னிலையினிற்கையன்றிப் படர்க்கையிடத்தாரையும், **உம்மூர்கடதற** – கும் டும் தும் றும் என்கிற நான்கு விகுதிகளையு மிறுதியிலுடையமொழிகள், **இருபாலாரையும்** – தன்னிலையினிற்கையன்றி அவ்வீரிடத்தார்களையும், **தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை** – தன்னுடன் கூட்டுகிற தன்மைப்பன்மை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், **எ–று.**

கும் டும் தும் றும் என்கிற நான்குந்தாமே காலங்காட்டுதலாலே குறிப்புவினைக்கு வருவனவல்ல.

வி, தெ, இ, தெ, நி, தெ, ஏ, கு, – யாம்

அம்–உண்டனம்–உண்கின்றனம்–உண்பம்–தாரினம் – யானு

ஆம்–உண்டாம்–உண்கின்றாம்–உண்பாம்–தாரினாம் – நீயும்

எம்–உண்டனெம்–உண்கின்றனெம்–உண்பேம்–தாரினேம்–யாம்

ஏம்–உண்டேம்–உண்கின்றேம்–உண்பேம்–தாரினேம்–யானு

ஓம்–உண்டோம்–உண்கின்றோம்–உண்போம்– தாரினோம் –மவனும்

கும் '' உண்கும் '' யாம்

டும்–உண்டும் '' '' '' யானு

தும்–வந்தும் '' வருதும் '' நீயு

றும்–சென்றும் '' வேறும் '' மவனும்

எனவரும் இவை சிறுபான்மை இம்முறையின்றி மயங்கி வருதலுமுண்டு, மற்றவையுமிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

39. தன்மைப்பன்மை வினைமுற்று இவை யெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

அம்மா மென்பன முன்னிலை யாரையும்
எம்மே மோமிவை படர்க்கை யாரையும்
உம்மூர் கடதற விருபா லாரையுந்
தன்னொ படுக்குந் தன்மைப் பன்மை.

(அம் ஆம் என்பன முன்னிலையாரையும் எம் ஏம் ஓம் இவை படர்க்கையாரையும் உம் ஊர் க ட த ற இருபாலாரையும் தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை.)

இ–ள்.:– தன்னிலையின் நிற்பதன்றி அம் ஆம் என்னும் இவ்விரு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலையிடத்தாரையும், எம் ஏம் ஓம் என்னும் இம்மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் படர்க்கையிடத்தாரையும். கும் டும் தும் றும் என்னும் இந்நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலை படர்க்கை என்னும் ஈரிடத்தார்களையும் தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம்.

40. தான் என்பது ஒருமையாதலின் தனக்குஒருமையல்லது பன்மையில்லையே; அங்ஙனமாகவும் தன்மைப்பன்மை யென்பது யாது?

சொல்லுவான் தன்னொடு பிறரையுங் கூட்டி உளப்படுத்துரைக்குஞ்

சொல்லாம்.

41. அவ்வுளப்படுத்தல் எத்தனை வகைப்படும்?

முன்னின்றாரை யுளப்படுத்தலும், படர்க்கையிடத்தாரை யுளப்படுத்தலும், அவ்விருவரையு மொருங்குளப்படுத்தலுமென மூவகைப்படும்.

42. முன்னிலையாரை யுளப்படுத்தும் தன்மைப்பன்மை முற்றுவிகுதிகள் யாவை?

"அம்மா மென்பன முன்னிலையாரைத் தன்னொடு படுக்குந் தன்மைப்பன்மை."

**வரலாறு.:**

இ.தெரி. நி.தெரி. எ.தெரி. குறி.

உண்டனம் உண்கின்றனம் உண்பம் தாரினம் யானுநீயும்

உண்டாம் உண்கின்றாம் உண்பாம்தாரினாம்

43. படர்க்கையாரை யுளப்படுத்துந் தன்மைப்பன்மை முற்றுவிகுதிகள் யாவை?

"எம்மே மோமிவை படர்க்கையாரைத் தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை."

உண்டெனம் உண்கின்றனெம் உண்பெம் தாரினெம் – யானுமவனும்

உண்டேம் உண்கின்றேம் உண்பேம் தாரினேம்

உண்டோம் உண்கின்றோம் உண்போம் தாரினோம் ,,

44. முன்னிலை படர்க்கையென்னு மீரிடத்தாரையு முளப்படுக்குந் தன்மைப்பன்மை முற்றுவிகுதிகள் யாவை?

"உம்மூர் கடதற விருபா லாரையுந் தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை."

இ.தெரி. எ.தெரி.

உண்கும்–(உண்பேம்) யானுநீயுமவனும்

உண்டும்–(உண்டேம்) வருதும்–(வருவேம்) ,,

வந்தும்–(வந்தேம்) ,,

சென்றும்–(சென்றேம்) சேறும்–(செல்வேம்) ,,

மேற்கூறிய வுதாரணங்களை யாமென்னும் பெயரோடு மொட்டுக. யாமென்பது தன்மையோடு முன்னிலை படர்க்கையிடத்தாரையு முளப்படுத்தும் பெயர்.

கும் டும் தும் றும் என்னு நான்குந் தாமே காலங்காட்டுதலாற் குறிப்புவினைக்கு வாரா. இவை சிறுபான்மை இம்முறையின்றி மயங்கி வருதலுமுண்டு. மற்றவைகளும் இப்படியே வரும். உண்டிலம் உண்கின்றிலம் உண்ணேம் முதலியனவும் உண்டுமல்லேம் உண்குமல்லேம் முதலியனவும் இவற்றெதிர் மறையாம்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, தன்மைப்பன்மைவினை வினைக்குறிப்பாமாறு கூறுகின்றது.

இ—ள்.:— **அம்மா மென்பன முன்னிலையாரையும்** — (தன்னிலையில் நிற்பதன்றி) அம் ஆம் என்ற இந்த இரண்டு விகுதிகளையும் ஈறாகவுடைய மொழிகள் முன்னிலையிடத்தாரையும், **எம்மே மோமிவை படர்க்கையாரையும்** — எம் ஏம் ஓம் என்னும் இந்த மூன்று விகுதிகளை யீறாகவுடைய மொழிகள் படர்க்கை யிடத்தாரையும், **உம்மூர் கடதற விருபாலாரையும்** — உம் என்னும் இடைச்சொல்லை யூர்ந்த கடதற ஒற்றுக்களாகிய கும் டும் தும் றும் என்னும் இந்த நான்கு விகுதிகளையும் ஈறாகவுடைய மொழிகள் முன்னிலை படர்க்கை யென்னும் இரண்டிடத்தாரையும், **தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை** — தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினை வினைக்குறிப்பு முற்றுக்களாம், எ—று.

தன்னிலையில் நிற்பதன்றி என்னும் இறந்ததுதழுவிய எச்சவும்மைகள் எண்ணும்மைகளாகவும், இருபாலாரையும் என்ற இடத்து அவற்றொடு முற்றும்மையாகவும் நின்றன.

வ—று.:— உண்டனம், உண்ணாநின்றனம், உண்பம் எனவும், உண்டாம், உண்ணாநின்றாம், உண்பாம், தாரினம், தாரினாம், யாம்— எனவும், யானும் நீயும் எம், உண்டெனம், உண்டேம், உண்டோம் எனவும், தாரினெம், தாரினேம், தாரினோம், யாம் எனவும், யானும் அவனும் எனவும், உண்கும், உண்டும், வந்தும், சேறும், யாம் எனவும், யானும், நீயும், அவனும் எனவும், முறையே தனித் தன்மைப்பன்மையும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மையும் வந்தன.

இன்னும் அந்த உம்மைகளை ஐய உம்மைகளாக்கி அம், ஆம் என்பன முன்னிலையாரையாயினும் படர்க்கையாரையாயினும், உண்டனம், உண்டாம் யானும் நீயும் யானும் அவனும் எனவும், தன்னொடுபடுக்கு மெனவும், ஆக்கவும்மைகளாக்கி, அம்ஆம் என்பன முன்னிலையாரையும், படர்க்கை யாரையும் உண்டனம் உண்டாம் யானும் நீயும் அவனும் என ஒருமிக்கத் தன்னொடுபடுக்கு மெனவுங் காண்க. மற்ற விகுதிகளு மிவ்வாறு வரும். இவற்றை 'போரிடம் பிறவிடந் தழுவலு முளவே' என்னும் இடவழுவமைதியெனக் கொளினும் அமையும். இனி, ஆசிரியர் தொல்காப்பியனார்,

**"அவைதாம்**
**அம்ஆம் எம்ஏம் என் னுங் கிளவியு**
**பும்மொடு வரூ உங் கடதற வென்னு**

மந்நாற் கிளவியோ டா யெண் கிளவியும்
பன்மை யுரை குந் தன்மைச் சொல்லே”
என ஓம் விகுதி விலக்கிக் கூறியதற்கும் இவர் கூட்டிக் கூறியதற்கும் மேலேயுரைத்தவாறு உரைத்துக்கொள்க. என்பன இவை கும் டும் தும் றும் தன்மைப்பன்மை என முடித்துக்கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– அம்ஆம் என்பன** – அம் ஆம் என்கிற விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள், **முன்னிலையாரையும்** – (தன்னிலையில் நிற்பதல்லாமல்) முன்னிலையிடத்தாரையும், **எம் ஏம் ஓம் இவை** – எம் ஏம் ஓம் என்கிற விகுதிகளை யிறுதியிலுடைய மொழிகள், படர்க்கையாரையும் – (தன்னிலையில் நிற்பதல்லாமல்) படர்க்கையிடத்தாரையும், **உம் ஊர் கடதற** – கும் டும் தும் றும் என்கிற விகுதிகளை இறுதியிலுடைய மொழிகள், **இருபாலாரையும்** –(தன்னிலையில் நிற்பதல்லாமல்) முன்னிலை படர்க்கை என்னும் இரண்டிடத்தார்களையும், **தன்னொடு படுக்கும்** – தன்னுடன் கூட்டுகின்ற, **தன்மை பன்மை** – தன்மைப் பன்மை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம்.

| உ–ம் : | இறப்பு | நிகழ்வு | எதிர்வு | குறிப்பு | |
|---|---|---|---|---|---|
| அம் – | உண்டணனம் | உண்கின்றனம் | உண்பம் | குழையம் | யாம் (யா) |
| ஆம் – | உண்டாம் | உண்கின்றாம் | உண்பாம் | குழையாம் | னும் நீயும்) |
| எம் – | உண்டெனம் | உண்கின்றனெம் | உண்பெம் | குழையெம் | யாம் |
| ஏம் – | உண்டேம் | உண்கின்றேம் | உண்பேம் | குழையெம் | (யானும் |
| ஓம் – | உண்டோம் | உண்கின்றோம் | உண்போம் | குழையோம் | அவனும்) |
| கும் – | * | * | உண்கும் | * | |
| டும் – | உண்டும் | * | * | * | யாம் (யா |
| தும் – | வந்தும் | * | வருதும் | * | னும் |
| நீயும், | | | | | |
| றும் – | சென்றும் | * | சேறும் | * | அவனும் |

குறிப்பு :–

இவற்றை உளப்பாட்டுத்தன்மை என்பர். இவை சிறுபான்மை இம்முறைமாறி வருதலும் உண்டு. இனி, இயல்புபற்றிய தனித் தன்மைப் பன்மையும், உணர்வுத்தன்மைப் பன்மையும் இவ்விகுதி வரையறையை வேண்டா என்று அறிக.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:–** தன்னிலையின் நிற்பதன்றி **அம் ஆம் என்பன முன்னிலையாரையும் –** அம் ஆம் என்னும் இவ்விரு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலையிடத்தாரையும், **எம் ஏம் ஓம் இவை படர்க்கையாரையும் –** எம் ஏம் ஒம் என்னும் இம்மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் படர்க்கையிடத்தாரையும், **உம் ஊர் க ட த ற இருபாலாரையும் –** கும் டும் தும் றும் என்னும் இந்நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலைபடர்க்கை என்னும் ஈரிடத்தார்களையும், **தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை –** தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், **எ–று.**

கும் டும் தும் றும் என்னு நான்குந் தாமே காலங்காட்டுதலாற் குறிப்பு வினைக்கு வாரா.

வ–று.:–

இ.தெரி. நி.தெரி. எ.தெரி. குறி.

உண்டனம் உண்கின்றனம் உண்பம் தாரினம் யாம்.

உண்டாம் உண்ணகின்றாம் உண்பாம் தாரினாம்

உண்டனெம் உண்கின்றனெம் உண்பெம் தாரினெம் யாம்.

உண்டேம் உண்கின்றேம் உண்பேம் தாரினேம் யானு மவ

உண்டோம் உண்கின்றோம் உண்போம் தாரினோம் னும்.

இ.தெரி. எ.தெரி.

– உண்கும்

உண்டும் – யாம்

வந்தும் வருதும் யானு நீயு மவனும்.

சென்றும் சேறும்

இவை சிறுபான்மை இம்முறையின்றி மயங்கி வருதலுமுண்டு. மற்றவைகளும் இப்படியே வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ – ள்.:– தன்னிலையின் நிற்பதன்றி – அம் ஆம் என்பன முன்னிலை யாரையும் –**அம் ஆம் என்னும் இவ்விரு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலையிடத்தாரையும், – **எம் ஏம் ஓம் இவை படர்க்கையாரையும் –** எம் ஏம் ஒம் என்னும் இம்மூன்றுவிகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் படர்க்கையிடத்தாரையும் – **உம் ஊர் கடதற இருபாலாரையும் –** கும் டும் தும் றும் என்னும் இந்நான்கு விகுதிகளையும்

இறுதியிலுடைய மொழிகள் முன்னிலை படர்க்கை என்னும் ஈரிடத்தார்களையும், **– தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை –** தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைவினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். **எ–று.**

கும் டும். தும் றும் என்னுநான்கும் தாமே காலங்காட்டுதலாற் குறிப்புவினைக்கு வாரா.

| **இ.தெரி** | **நி.தெரி** | **எ .தெரி** | **குறி** | |
|---|---|---|---|---|
| உண்டனம் | உண்கின்றனம் | உண்பன் | தாரினம் | யாம் |
| உண்டாம் | உண்கின்றாம் | உண்பாம் | தாரினாம் | யானுநீயும் |
| உண்டனெம் | உண்கின்றனெம் | உண்பெம் | தாரினெம் | யாம் |
| உண்டேம் | உண்கின்றேம் | உண்பேம் | தாரினேம் | யானுமவனும் |
| உண்டோம் | உண்கின்றோம் | உண்போம் | தாரினோம் | |

| **இ.தெரி** | **எ.தெரி** | |
|---|---|---|
| ---- | உண்கும் | |
| உண்டும் | ----- | யாம் |
| வந்தும் | வருதும் | யானுநீயுமவனும். |
| சென்றும் | சேறும் | |

இவை சிறுபான்மை இந்நியதியின்றி மயங்கிவருதலுமுண்டு, மற்றவைகளும் இப்படியே வரும்.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார் (சூத்திரம்) "அவைதாம், அம் ஆம் எம் ஏம் என்னுங்கிளவியு, மும்மொடுவரூஉங் கடதறவென்னு, மந்நாற்கிளவி யோடாயெண்கிளவியும், பன்மையுரைக்குந் தன்மைச் சொல்லே", என, ஓம்விகுதியின்றிக் கூறியதற்கும் இவர் கூட்டிக் கூறியதற்கும் மேலேயுரைத்தவாறு உரைத்துக் கொள்க.

சொல்லுவோர் தன்மையிடம், கேட்போர் முன்னிலையிடம், சொல்லப்படுவோர் படர்க்கையிடம் என்று இலக்கணநூல்கள் கூறுதலாலோ, தன்னையோடு மற்ற இடங்களில் ஒன்றும் பலவுங் கலந்து தன்மைப்பன்மையுண்டாகு மன்றிக் கலப்பின்றித் தன்மைப்பன்மை யுண்டாகமாட்டாதென்றுணரல் வேண்டும்.

எங்ஙனமாயின், வந்தாம், வந்தோம், வந்தும் என்னும்போது, அச்சொல்லைக் கூறினவர் ஒருவரே. அவர் முன்னிலையிடத்தவரையேனும் படர்க்கையிடத்தவரையேனும் அவ்வீரிடத்தவரையுமேனுஞ் சேர்த்துக் கொண்டே அங்ஙனக் கூறியதென்று விளங்கல் வேண்டும். அல்லாவிடின்

தன்மையிடத்திலக்கணஞ் சிதைவுறுதலோடு உத்தி அநுபவங்களம் கியையாமையுங் காண்க. ஆதலின் இடக்கலப்புற்றே தன்மைப் பன்மையுண்டாகு மென்பது விளங்கத் தன்னொடு படுக்குந் தன்மைப்பன்மை யென்று வரலாறுதோன்றச் சூத்திரித்தனரென்றறிக. இன்னுமிதன்றிற மெல்லாம் விரிக்கிற் பெருகும். இக்கருத்து இந்நன்னூற் சூத்திரத்திற்குப் புதிதாயினும் உத்தியனுபவங்களுக் கியைந்ததோ இயையாததோ என்று விவேகிகள் உற்று நோக்கிக் கொள்ளத் தகுவதேற் கொள்ளுக. "அவைதாம், அம் ஆம் எம் ஏம் என்னுங் கிளவியும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்திற்குச் சேனாவரையர் உரைத்த விசேடஉரைப்பாகம் நோக்கியும் உணர்க. அவ்வுரைப்பாகமாவது "தனக்கு ஒருமைபல்ல தின்மையிற் றன்மைப் பன்மையாவது தன்னொடு பிறரை உளபடுத்ததேயாம். அவ்வுளப்படுத்தன் மூவகைப்படும்; முன்னின்றாரை உளப்படுத்தலும், படர்க்கையாரை உளப்படுத்தலும், அவ்விருவரையும், ஒருங்குளப்படுத்தலு மென" என்பதாம்.

## வை. மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: அம் ஆம் என்பன** – அம் ஆம் என்கிற இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **முன்னிலையாரையும்** – முன்னிலை யிடத்தாரையும்; **எம் ஏம் ஓம் இவை** – எம் ஏம் ஓம் என்கிற மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள். **படர்க்கை யாரையும்** – படர்க்கையிடத்தாரையும்; **உம் ஊர் க ட த ற** –கும் டும் தும் றும் என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **இருபாலாரையும்** – (முன்னிலை படர்க்கை என்னும் ) இரண்டிடத்தார்களையும், **தன்னொடு படுக்கும்** – தன்னுடன் கூட்டுகின்ற, **தன்மை பன்மை** – தன்மைப்பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம்; எ–று. தன்மைப்பன்மை என்பது, தன்னொடு சார்ந்தாரையும் கூட்டியல்லது தனித்து இயலாமையால், இவ்வாறு கூறினார்; இவற்றை உளப்பாட்டுத் **தன்மைப்பன்மை** யென்பர்.

உ–ம்.:–

| | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. |
|---|---|---|---|---|
| **அம்**– | உண்டனம் | உண்கின்றனம் | உண்பம் | குழையம் யாம் |
| **ஆம்**– | உண்டாம் | உண்கின்றாம் | உண்பாம் | குழையாம் யானும் நீயும் |

எம். உண்டனெம் உண்கின்றனம் உண்பெம் குழையெம்

யாம் ஏம். உண்டேம் உண்கின்றேம் உண்பேம் குழையேம்

ஓம் உண்டோம் உண்கின்றோம் உண்போம் குழையோம்

கும். – உண்கும்

டும். உண்டும் – – –

தும். வந்தும் – வருதும் –

றும். சென்றும் – சேறும் –

இவை சிறுபான்மை இம்முறையின்றி மாறிவருதலும் உண்டு. இயல்பு பற்றிய தனித்தன்மைப் பன்மையும், உயர்வுத் தன்மைப்பன்மையும் இவ்விகுதி வரையறையை வேண்டாமல் ஏற்றபடி பெற்றுவரு மென்று அறிக.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– அம் ஆம் என்பன முன்னிலையாரையும்** – (தன்னிலையின் நிற்பதன்றி) அம் ஆம் என்னும் இவ்விரு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலையிடத்தாரையும், **எம் ஏம் ஓம் இவை படர்க்கையாரையும்** – எம் ஏம் ஓம் என்னும் இம் மூன்று விகுதிகளையும் இறுதீயிலுடைய மொழிகள் படர்க்கையிடத்தாரையும், **உம் ஊர் க ட த ற இருபாலாரையும்** – கும் டும் தும் றும் என்னும் இந் நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலை படர்க்கை என்னும் ஈரிடத்தார்களையும், **தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை** – தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம். **எ–று.**

கும் டும் தும் றும் என்னும் நான்குந் தாமே காலங்காட்டுதலாற் குறிப்புவினைக்கு வாரா.

உ–ம்.:–

தெரிநிலை குறிப்பு

இறப்பு நிகழ்வு எதிர்வு

அம்–உண்டனம் உண்கின்றனம் உண்பம் தாரினம் – யாம்.

ஆம் – உண்டாம் உண்கின்றாம் உண்பாம்தாரினாம் – யானும் நீயும்.

எம்–உண்டனெம் உண்கின்றனெம் உண்பெம் தானினெம் – யாம்.

ஏம்–உண்டேம் உண்கின்றேம் உண்பேம் தானினேம் – யானும் அவனும்.

ஓம் – உண்டோம் உண்கின்றோம் உண்போம் தாரினோம்

தெரிநிலை

இறப்பு எதிர்வு

கும்— உண்கும்

டும்—உண்டும் —

தும்—வந்தும் வருதும்

றும்—சென்றும் சேறும் — யாம் யானுநீயுமவனும்.

இவை சிறுபான்மை இம் முறையின்றி மயங்கி வருதலுமுண்டு. மற்றவைகளும் இப்படியே வரும்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ—ள்.) அம் ஆம் என்பன** — அம் ஆம் என்கிற (இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய) மொழிகள், **முன்னிலையாரையும்**— (தன்னிரையில் நிற்கையன்றி) முன்னிலையிடத்தாரையும், **எம் ஏம் ஓம் இவை** — எம் ஏம் ஓம் இம்மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **படர்க்கையாரையும்** — (தன்னிலையில் நிறிகையன்றிப் படர்க்கை யிடத் தாரையும், **உம் ஊர் க ட த ற** — கும் டும் தும் றும் என்கிற நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், இருபாலாரையும் — (தன்னிலையில் நிற்கையன்றி) அவ்வீரிடத் தார்களையும், **தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை** — தன்னுடன் கூட்டுகிற தன்மைப் பன்மை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம். (எ—று)

(பொ—ரை.) (கன்னிலையில் நிற்பதன்றி) அம் ஆம் என்னும் இவ்விரு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலையாரையும், எம் ஏம் ஓம் என்னும் இம் மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் முன்னிலை படர்க்கை என்னும் ஈரிடத்தாரையும் தன்னுடன் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம்.

(உம் ஊர் க ட த ற உன்றது கும் டும் தும் றும் என்பன வற்றை.)

கும் டும் தும் றும் என்னும் இந் நான்கும் தாமே காலங் காட்டுதலாலே குறிப்பு வினைக்கு வாரா.

(உ—ம்.)

இறந்தகாலம்

உண்டனம் யாம்

உண்டாம் யானும், நீயும்.

உண்டனெம் யாம்.

உண்டேம் யானும், அவனும்.

உண்டோம்

உண்டும் யாம்.

வந்தும் யானும், நீயும், அவ

சென்றும் னும்.

நிகழ்காலம்

உண்கின்றனம் யாம்.

உண்கின்றாம் யானும், நீயும்.

உண்கின்றனெம் யாம்.

உண்கின்றேம் யானும், அவனும்.

உண்கின்றோம்

எதிர்காலம்

உண்பம் யாம்.

உண்பாம் யானும், நீயும்.

உண்பெம் யாம்.

உண்பேம் யானும், அவனும்.

உண்போம்

உண்கும் யாம்.

வருதும் யானும், நீயும்,

சேறும் அவனும்.

தாரினம் யாம்.

தாரினாம் யானும், நீயும்.

தாரினெம் யாம்.

தாரினேம் யானும், அவனும்.

தாரினோம்

இவை சிறுபான்மை இம் மறையின்றி மபங்கி வருத லுமுண்டு. மற்றவைகளு மிப்படியே வரும்.

(உளப்பாட்டு முன்னிலைப்பன்மை வினைமுற்று.)

## கா. நமச்சிவாய முதலியார்

**அம் ஆம் என்பன** – அம் ஆம் என்னும் இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **முன்னிலையாரையும்** – தன்னிலையில் நிற்கையன்றி முன்னிலை யிடத்தாரையும், **எம் ஏம் ஓம் இவை** – எம் ஏம் ஓம்

இம்மூன்று விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **படர்க்கையாரையும்** – தன்னிலையில் நிற்கையன்றிப் படர்க்கையிடத்தாரையும், **உம் ஊர் கடதற** – கும் டும் தும் றும் என்னும் நான்கு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **இருபாலாரையும்** – தன்னிலையில் நிற்கையன்றி அவ்வீரிடத்தவர்களையும், தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை – **தன்னுடன் கூட்டுகின்ற தன்மைப் பன்மை** வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம்.

கும் டும் தும் என்னும் நான்கும் தாமே காலங் காட்டுதலால், குறிப்பு வினைக்கு வருவன அல்ல; பதவியல் 18–ஆம் சூத்திரத்தால் காலமும், மேல் இரண்டு சூத்திரங்களால் இடமும் உணர்க.

**உதாரணம்**

அம், ஆம், எம், ஏம், ஓம், கும், டும், தும், றும்:

| | | | | |
|---|---|---|---|---|
| | அம் | – | உண்டனம் | யாம் |
| | ஆம் | – | உண்டாம் | யானும் நீயும் |
| | எம் | – | உண்டனெம் | யாம், யானும் |
| தெரிநிலை– இறந்தகாலம் | ஏம் | – | உண்டேம் | அவனும் |
| | ஓம் | – | உண்டோம் | |
| | டும் | – | உண்டும் | யாம், யானும் |
| | தும் | – | வந்தும் | நீயும், அவனும் |
| | றும் | – | சென்றும் | |
| | அம் | – | உண்கின்றனம் | யாம், யானும் |
| | ஆம் | – | உண்கின்றாம் | நீயும், |
| தெரிநிலை நிகழ்காலம் | எம் | – | உண்கின்றனெம் | யாம், யானும் |
| | ஏம் | – | உண்கின்றேம் | அவனும் |
| | ஓம் | – | உண்கின்றோம் | |
| | அம் | – | உண்பம் | யாம், யானும் |
| | ஆம் | – | உண்பாம் | நீயும் |
| | எம் | – | உண்பெம் | யாம், யானும் |
| | ஏம் | – | உண்பேம் | அவனும் |
| தெரிநிலை எதிர்காலம் | ஓம் | – | உண்போம் | |
| | கும் | – | உண்கும் | யாம், யானும் |
| | தும் | – | வருதும் | நீயும் அவனும் |
| | றும் | – | சேறும் | |
| | அம் | – | தாரினம் | யாம், |

1. தொல். சொல். 202.
2. தொல். சொல். 209;

| | | | | |
|---|---|---|---|---|
| | ஆம் | – | தாரினாம் | யானும் நீயும் |
| குறிப்பு | எம் | – | தாரினெம் | யாம், யானும் |
| | ஏம் | – | தாரினேம் | அவனும் |
| | ஓம் | – | தாரினோம் | |

இவை, சிறுபான்மை இம்முறையின்றி மயங்கி வருதலும் உண்டு. மற்றவைகளும் இப்படியே வரும்.

## மோசசு பொன்னையா

அம், ஆம் என்னும் இரண்டு விகுதிகளையும் ஈற்றிற்பெற்ற வினைமுற்றுக்கள் முன்னிலை இடத்தாரையும்; எம், ஏம், ஓம் என்னும் மூன்று விகுதிகளையும் ஈற்றிற் பெற்ற வினைமுற்றுக்கள் படர்க்கை இடத்தாரையும்; கும், டும், தும், றும் என்னும் நான்கையும் ஈற்றிற் பெற்ற வினைமுற்றுக்கள் முன்னிலை, படர்க்கை என்னும் ஈரிடத்தாரையும் தன்னுடன் கூட்டி முடிக்கும் தன்மைப் பன்மை தொழில், குறிப்பு வினைமுற்றுக்களாம், எ–று.

தொழில்வினைமுற்று குறிப்புவினைமுற்று

அம்–உண்டனம்–உண்கின்றனம்–உண்பம்–குழையம் யாம் (யானும் நீயும்)

ஆம்–உண்டாம்–உண்கின்றாம்–உண்பாம்–குழையாம்

எம்–உண்டெம்–உண்கின்றனெம்–உண்பெம்–குழையெம் யாம் (யானும் அவனும்)

ஏம்–உண்டேம்–உண்கின்றேம்–உண்பேம்–குழையேம்

ஓம்–உண்டோம்–உண்கின்றோம்–உண்போம்–குழையோம்

கும்– – உண்கும் – யாம் (யானும் நீயும் அவனும்)

டும்–உண்டும் – –

தும்–வந்தும் – வருதும்

றும்–சென்றும் – சேறும்

தொல்காப்பியர்,

**அவைதாம்**
**அம்ஆம் எம்ஏம் என்னுங் கிளவியும்**
**உம்மொடு வரூஉங் கடதற வென்னும்**
**அந்நாற் கிளவியொ டாயெண் கிளவியும்**
**பன்மை யுரைக்கும் தன்மைச் சொல்லே,[1]**

எனத் தன்மைப் பன்மை வினைமுற்றுக்களின் ஈறுகள் பற்றிக்

கூறியுள்ள நூற்பாவில் முன்னிலையாரையும், படர்க்கையாரையும், அவ்விரு பாலரையும் தன்னொடு இவையிவை உளப்படுப்பன என்னும் வரையறை ஏதுங் காணப்படவில்லை. அவர்,

**அவற்றுட்**

**பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி**

**யெண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே,**[2]

என உயர்திணைக்கே உரிய தன்மை பன்மை வழக்கில் அஃறிணைப் பொருட்களை உளப்படுத்தலும் உண்டு என்னும் வழக்கைக் கூறிவைத்தாராக, அதன் முன்னர் நின்ற,

**பன்மையும் ஒருமையும் பாலறி வந்த**

**அந்நா லைந்தும் மூன்றுதலை யிட்ட**

**முன்னுறக் கிளந்த உயர்திணை யவ்வே,**

என்ற நூற்பாவின் பொருளோடொன்ற அதற்குப் பொருளுரையாது, 'பன்மைத் தன்மைச் சொற்கள் ஆராயுமிடத்து அவை திரிபுடைய என்றவாறு, யாதோ திரிபு எனின், அம் ஆம் என்னும் இரண்டும் தன்னொடு முன்னின்றனை உளப்படுக்கும். எம்ஏம் என்பன இரண்டும் தன்னொடு படர்க்கையானை உளப்படுக்கும். உம்மொடு வரூஉம் கடதறக்கள் முன்னின்றானையும் படர்க்கையானையும் உளப்படுக்கும் என்பது' என இளம்பூரணர் பொருளும் விளக்கமும் எழுதினார். சேனாவரையரும், 'அம்ஆம் என்பன முன்னின்றரை உளப்படுக்கும்; தமராயவழிப் படர்க்கை யாரையும் உளப்படுக்கும். எம்ஏம் என்பன படர்க்கையாரை உளப்படுக்கும், உம்மொடு வரூஉங் கடதற அவ்விருவரையும் ஒருங்குளப்படுத்தலுந் தனித்தனி யுளப்படுத்தலுமுடைய' எனக் கூறியுள்ளார்[1]. இவ்வாசிரியர் அதனை ஏற்று இந்நூற்பாவில் கூறினார்.

கம்பர்,

**இராமன் தம்பிநீ இராவணன் தம்பிநான் இருவேம்**

**பொராநின் றேம்இது காண்ணிய வந்தனர் புலவோர்**

**பராவும் தொல்செரு முறைவலிக் குரியன பகர்ந்து**

**விராவும் நல்லமர் வினைக்குதும் யாம்என விளம்பரா**[2]

எனச் செய்புள் செய்துள்ளமையை நோக்குவோர் பழந்தமிழிலும், இடைக்காலத் தமிழிலும் அத்தகைய உளப்பாட்டு

வரையறை

இருந்திராது எனக் கருத இடமுண்டு. தெய்வச்சிலையார் இவ்வரையறை பற்றி ஏதுங் கூறினரல்லார். தமிழில் உளப்பாட்டு வரையறை உண்டு என்பாரும், இல்லை என்பாருமாக ஆராய்ச்சியாளர் தம்முள் முரண்பட்டுப் பலப்பல உரைத்துள்ளனர்.

தங்கால வழக்கு நோக்கி ஓம் என்பதையும் இவ்வாசிரியர் கூட்டியுரைத்தார். இக்காலத்தில் நாம்/யாம்/நாங்கள் வந்தோம்/வருகிறோம் வருவோம் என இவ்வாறு ஓம்ஈறு பெற்றே தன்மைப்பன்மை வினைமுற்றுக்கள் வழங்குகின்றன.

உம்மூர்கடதற பற்றிய விளக்கத்தை முந்திய நூற்பா உரையில் குடுதுறுவின் விளக்கத்தோடு ஒட்ட எண்ணி உணர்ந்து கொள்க.

(13)

1. தொல். சொல்.202–உரை;

2. கும்ப, வதைப் படலச் செய்யுள்.

## 332. செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும் வினையொடு முடியினும் விளம்பிய முற்றே.

செய்கு என் ஒருமையும் செய்கும் என் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே.

seyku eṉ orumaiyum seykum eṉ paṉmaiyum
viṉaiyotu mutiyiṉum viḻampiya muṟṟē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### The forms 'ceyku' and 'ceykum'

Though verbs of the singular (form) 'ceyku' and of the plual 'ceykum' may be supplemented by ther) verbs (instead of by nouns), still they are of the me Number and Person as the finite verbs (of these criminations) mentioned above.

## ஒப்புமைப் பகுதி

அவற்றுள்
செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியாது என்மனார் புலவர்

(தொல். சொல்.: 204)

செய்கென் ஒருமையும் செய்கும்என் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே

(இ.வி.: 237 : 9–10)

செய்கென் கிளவி வினையொடு முடியினும்
விளம்பிய முற்றுஆம் என்மனார் புலவர்

(மு.வீ.: 603)

## மயிலை நாதர்

எ–ன், எய்தியது இகந்துபடாமற் காத்தல் நுதலிற்று.

**இ–ள்.:** செய்கு, செய்குமென்னும் இவையிரண்டும் வினைகொண்டு முடியும் ; முடிந்தாலும் வினையெச்சமெனப்படா ; தன்மை முற்றே ஆம், எ–று.

வ–று.:–

உண்குவந்தேன், உண்கும்வந்தே மென வரும்.

உம்மை எண்ணின்கண்ணாதகக் கொள்க.

"முற்றுச் சொற்றாம் வினையொடு முடியினு,
முற்றுச்சொ லென்னு முறைமையிற் றிரியா"

என்பது அகத்தியம்.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், எய்தியதன்மேற் சிறப்புவிதியும், எய்தியது இகந்துபடாமற் காத்தலும் உணர்–ற்று.

வினையொடு முடியினும் என்றமையால் வினையொடு முடியும் என்னும் விதி தாமே போதருமாதலின் எய்தியதன்மேற் சிறப்பு விதி என்றாம்.

இ–ள்.:– செய்கு என்னும் தன்மை யொருமைமுற்றும் செய்கும் என்னும் தன்மைப்பன்மை முற்றும் பெயருடனேயன்றி வினையுடனேயும் முடியும்; அங்ஙனம் முடியினும் மேற்கூறிய முற்றேயாம், எ–று.

எச்சங்களைப் போலாது வினைமுதலைத் தரும் விகுதியுறுப்போடு கூடி முற்றி நிற்றலின் முற்றெனப் பட்டதன்றிப் பயனிலை கொண்டு முற்றலின் முற்றெனப்

பட்டதன்று என்பார் பெயரேயன்றி '**வினையொடு முடியினும் விளம்பிய முற்றே**' என்றார்.

வ–று.:–

**உண்கு வந்தேன், உண்கும் வந்தேம்** என வரும்.

இங்ஙனமாயின் உண்பேன் வந்தேன், உண்பேம் வந்தேம் என இவ்வொருமை பன்மையும் வினையொடு முடியும் என்றால் என்னையெனின்:–

**"எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்**
**செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே"**

என்பவாகலின் செய்கு என் ஒருமையும் செய்கும் என் பன்மையும் பெயரொடும் வினையொடும் முடிதல் மரபாயினாற்போல அவைபெயருடனன்றி வினையொடு முடிதல் மரபன்மையின் அஃது இயையாது என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், எய்தியது இகந்துபடாமற் காத்தல் கூறியது.

**இ–ள்.:– செய்கென் ஒருமையும்** – செய்கு என்னும் விரவுத் திணைத் தன்மைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்றும், **செய்குமென் பன்மையும்** – செய்கும் என்னும் விரவுத்திணை தன்மைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்றும், **வினையொடு முடியினும்** – வினைகொண்டு முடியும் ; முடிந்தாலும் வினையெச்சமெனப்படா; **விளம்பிய முற்றே** – முன் கூறிய தன்மை முற்றேயாம், எ – று.

உ–ம்.:–

**உண்கு வந்தேன், உண்கு வந்தேம்** என வரும்.

"**வினையொடு முடியினும்**" என்ற உம்மையால் முன் விதித்த பெயர் கொள்ளுதல் வலியுடைத்தென்க.

**"முற்றுச் சொற்றாம் வினையொடு முடியினு**
**முற்றுச் சொலென்னு முறைமையிற் றிரியா"**

என்பது அகத்தியம்.

## விசாகப் பெருமாளையர்

இது, சில தன்மைவினை முற்றுகளுக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதியும் எய்தியதிகந்துபடாமற் காத்தலும் உணர்த்துகின்றது.

**இ–ள்.: செய்கென்** – செய்கு என்கிற, **ஒருமையும்**–தன்மையொருமை

முற்றும், **செய்குமென்** – செய்கும் என்கிற, **பன்மையும்** – தன்மைப் பன்மைமுற்றும், **வினையொடு முடியினும்** – (பெயருடனேயன்றி) வினையுடனே முடியினும், **விளம்பிய** – முன்சொல்லப்பட்ட, **முற்றே** – முற்றுகளேயாம், எ–று.

**வ–று.:–**

உண்குவந்தேன், உண்கும்வந்தேம் என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

45. குவ்வீற்று முற்றுக்கும் கும்மீற்றுமுற்றுக்கும் முடிபுவேறுபாடு கூறுஞ் சூத்திரம் யாது?

செய்கெ னொருமைபுஞ் செய்குமென் பன்மையும்
வினைபொடு முடியினும் விளம்பிப முற்றே.
(செய்கு என் ஒருமையும் செய்கும் என் பன்மையும்
வினையொடும் முடியினும் விளம்பிய முற்றே.)

**இ–ள்.:** செய்கென்னுந் தன்மையொருமை முற்றும் செய்குமென்னுந் தன்மைப்பன்மை முற்றும் பெயருடனே முடிதலின்றி வினையொடு முடியினும் முன்சொல்லப்பட்ட முற்றுக்களேயாம், எ–று.

**வ–று.:–**

உண்குவந்தேன், உண்கும்வந்தேம் என வரும்.

46. இவை வினையெச்சமாகாவோ?

ஆகா; வினையெச்சமாய்த் திரியுமாயின், செய்தெனெச்சத்திற்கு ஏலாமையிற் செயவெனெச்சமாய்த் திரியுமெனல் வேண்டும். வேண்டவே, செயவெனச்சத்திற்கு உரிய வினைமுதல்வினையும் பிறவினையுங் கொள்வான் செல்லும். வினைமுதல்வினை அல்லது கொள்ளாமையிற் செயவெனெச்சமாய்த் திரியுமெனல் பொருந்தாது; பிறிதொராறின்மையின் முற்றுச்சொல்லாயே நின்றன வெனப்படுமென்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, வினையொடு முடிதலிதற்குமா மென வலியுறுத்துதலால் எய்தியதன்மேற் சிறப்புவிதியும், பெயரொடு முடிதல் எய்திக் கிடத்தலால் அது பிறழாமற் காத்தலுமுணர்த்திற்று.

**இ–ள்.:–** செய்கு என்னுந் தன்மையொருமை முற்றும், செய்கும் என்னுந் தன்மைப்பன்மை முற்றும் பெயரொடு முடிதலின்றி வினையொடு முடிந்து

நிற்பினும் மேற்கூறிய முற்றேயாம், எ–று.

வ–று.:–

உண்குவந்தேன், உண்கும்வந்தேம் என வரும். இங்ஙனமாயின் (இங்ஙனம்–இப்படி,) உண்பேன்வந்தேன், உண்பேம் வந்தேம் என இவையும் வினையொடு முடியுமென்றால் என்னெனின், அவை பெயரொடும் வினை யொடும் முடிதல் மரபாயினாற் போல இவை யங்ஙன முடிதல் மரபன்றென்க. (மரபு – பழமை,) ஆசிரியர் தொல்காப்பியனார்,

**"அவற்றுட்**
**செய்கென் கிளவி வினையொடு முடியினு**
**மவ்விய றிரியா தென்மனார் புலவர்"**

என ஒருமைக்கே கூறினார். இவர் பன்மைக்குங் கூறியது 'ஒருமொழி யொழி தன் னினங்கொளற் குரித்' தென்பதனாற் போலும். இவ் வழக்கு இக்காலத்தரிதாயிற்று. ஒருமையும் பன்மையும் முற்று என முடிந்தது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– **செய்கு என் ஒருமையும்** – 'செய்கு' என்னும் வாய்பாட்டுத் தன்மை யொருமை முற்றும், **செய்கும் என் பன்மையும்** – 'செய்கும்' என்னும் வாய்பாட்டுத் தன்மைப்பன்மை முற்றும், **வினையொடு முடியினும்** – (பெயருடன் முடிதலேயல்லாமல்) வினையுடன் முடிந்தாலும், **விளம்பிய**– முன் சொல்லப்பட்ட, **முற்றே** – முற்றுக்களேயாம்.

உ–ம் :– உண்கு வந்தேன்; உண்கும் வந்தேம்.

குறிப்பு :–

(உண்கு – உண்பேன்; உண்கும் – உண்பேம்) உண்கு, உண்கும் என்பன வினையொடு முடிதல் மரபானாற்போல 'உண்பேன்' 'உண்பேம்' என்பன அங்ஙனம் முடிதல் மரபன்றென்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– **செய்கு என் ஒருமையும்** – செய்கென்னுந் தன்மை யொருமை முற்றும், **செய்கும் என் பன்மையும்** – செய்குமென்னுந் தன்மைப்பன்மை முற்றும், **வினையொடும் முடியினும்** –பெயருடனே யன்றி வினையொடும் முடியினும், **விளம்பிய முற்றே** – முன் சொல்லப்பட்ட முற்றுக்களேயாம், எ– று.

வ—று.:—

உண்கு வந்தேன், உண்கும் வந்தேம் என வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள்:— **செய்கு என் ஒருமையும்** — செய்கென்னுந் தன்மையொருமை முற்றும், — **செய்கும் என் பன்மையும்** — செங்குமென்னுந் தன்மைப்பன்மை முற்றும், — **வினையொடும் முடியினும்** — பெயருடனேயன்றி வினையொடும் முடியினும், **விளம்பிய முற்றே** — முன்சொல்லப்பட்ட முற்றுக்களேயாம். எ—று.

வ—று:—.

உண்குவந்தேன், உண்கும் வந்தேம் என வரும். இங்ஙனமாயின், உண்பேன் வந்தேம். உண்பேம் வந்தேன் என இவையும் வினையொடு முடியுமென்றால், என்னெனின், அவை பெயரொடும், வினையொடும் முடிதல் மரபாயினாற்போல இவையங்ஙனமுடிதல், மரபன்றென்க. ஆசிரியர் தொல்காப்பியனார் (சூத்திரம்.) "அவற்றுட் செய்கெனொருமை வினையோடு முடியினு, மவ்வியறிரியாதென்மனார்புலவர்" என ஒருமைக்கே கூறினார். இவர் பன்மைக்குங் கூறியது ஒருமொழியொழிதன்னி னங்கொளற்குரித் தென்பதனாற் போலும். இவ்வழக்கு இக்காலத்தரிதாயிற்று.

## வை. மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:— **செய்குஎன் ஒருமையும்** — செய்கு என்கிற வாய்பாட்டுத் தன்மையொருமை முற்றும், **செய்கும் என் பன்மையும்** — செய்கும் என்கிற வாய்பாட்டுத் தன்மைப்பன்மை முற்றும், **வினையொடு முடியினும்** — (பெயருடன் முடிதலே யல்லாமல் வினைகொண்டும் முடியும்;) முடிந்தாலும், **விளம்பிய** — முன்சொல்லப்பட்ட, **முற்றே**— முற்றுக்களேயாம் (வினையெச்சமெனப்படா)

உ — ம்.:—

உண்கு வந்தேன்; உண்கும் வந்தோம்.

## பவானந்தம் பிள்ளை

---

1. தொல். சொல். 204.

2.தொல். சொல். 204. உரை;

3. பதிற் 61;

**இ–ள்.:– செய்கு என் ஒருமையும்** – செய்கென்னுந் தன்மை யொருமைமுற்றும், **செய்கும் என் பன்மையும்** – செய்குமென்னுந் தன்மைப் பன்மை முற்றும், **வினையொடும் முடியினும்** – பெயருடனேயன்றி வினையொடும் முடியினும், **விளம்பிய முற்றே** – முன்சொல்லப்பட்ட முற்றுக்களேயாம். எ–று.

**(உ–ம்.)** உண்கு வந்தேன், உண்கும் வந்தேம்.

## கா. நமச்சிவாய முதலியார்

**செய்குஎன்** – செய்கு என்னும், **ஒருமையும்** – தன்மை யொருமை முற்றும், **செய்கும்என்** – செய்கும் என்னும், **பன்மையும்** – தன்மைப் பன்மை முற்றும், **வினையொடு முடியினும்** – (பெயருடனேயன்றி) வினையுடனே முடியினும், **விளம்பிய** – முன் சொல்லப்பட்ட, **முற்றே** – முற்றுக்களேயாம்.

உதாரணம்

உண்கு வந்தேன்.
உண்கும் வந்தேம். என வரும்

## மோசசு பொன்னையா

செய்கு என்னும் வாய்ப்பாட்டுத் தன்மை ஒருமை வினைமுற்றும், செய்கும்என்னும் வாய்பாட்டுத் தன்மைப் பன்மை வினைமுற்றும் பெயருடன் முடிதலே யல்லாமல், வினையுடன் முடியினும் முன்னர்ச் சொல்லப்பட்ட1 முற்றேயாம். எ–று.

எ–டு.

**உண்கு வந்தேன்; உண்கும் வந்தேம்–வினையோடு முடிந்தன**
**காண்கு யான், காண்கும் யாம்–பெயரோடு முடிந்தன.**
**தொல்காப்பியர்,**
**அவற்றுட்**
**செய்கென் கிளவி வினையொடு முடியினு**

---

1. புறம்:17
2. இடையியலில் தொல்காப்பியர் இவ்வாறு இலக்கணங் கூறுமிடங்கள் சுட்டிக்காட்டப்படும்;
3. நன். 327 உரை பார்க்க

**மவ்விய றிரியா தென்மனார் புலவர்,**[1]

எனச் செய்கு என்னும் ஒருமை பற்றியே ஓதினாராக, இளம்பூரணர், 'செய்கென் கிளவி வினையொடு முடியினும் அமைக எனவே, செய்கும் என்னும் கிளவியும் வினையொடு முடியினும்

அமைக என்பது போந்ததாம்' என உரை கூறினார். இவ்வாசிரியர் அதனையும் கூட்டி நூற்பா செய்தார். செய்கும் வினையுடன் முடிதல் பற்றிப் பிற உரைகாரர் யாதுங் கூறவில்லை. இவை வழக்கு வீழ்ந்தன. செய்கு என்பது செய்து என்பதுபோல் முற்றாகவும் எச்சமாகவும் வழங்கும் மரபு இல்லாததால் அது வினைகொண்டு முடியுங்கால் எச்சமெனின் அது செய்து, அல்லது செய என்னும் எச்சங்களுள் ஒன்றாகத் திரிந்தது எனல் வேண்டும் ஆதலாலும், செய்து எனத் திரிந்தது எனக்கோடற்குச் செய்து இறந்த காலத்தையும், செய்கு எதிர்காலத்தையும் குறித்து வழங்குஞ் சொற்களாதலின் இடர்ப்பாடு உண்டாதலாலும், செயவென்னும் எச்சமாகத் திரிந்தது எனக்கோடற்குச் செய என்னும் எச்சம் வினைமுதல் வினையையும், பிறவினையையும் கொண்டு நிற்கும் வழக்குடையதாக, செய்கு வினைமுதல் வினைகொண்டன்றி முடியாமையும் இடர்ப்பாடு தந்து நிற்பதாலும், வேறு போக்கில்லாததால் வினைமுற்றெனவே கொள்ள வேண்டும் எனச் சேனாவரையர் கருதுகிறார்.[2] செய்கு என்னும் முற்று வினைகொண்டு முடிந்ததெனக் கூறப்படும் இடங்களை நன்கு நோக்கி ஆராயின்,

**முழவுமண் புலர விரவல ரினைய**

**வாராச் சேட்புலம் படர்ந்தே னளிக்கென**

**இரக்கு வாரேன் எஞ்சிக் கூறேன்,**[3]

எனவும்

**வேற்றரசு பணிதொடங்குநின்**

**ஆற்றலொடு புகழேந்திக்**

**காண்கு வந்திசிற் பெரும,**[1]

எனவும் வரும் இடங்கள் போன்று முதனிலைத் தொழிற்பெயர் குவ்வுருவு பெற்று வினையாலணையும் பெயராக வழங்கினவாக, சொல்லமைப்பு ஒன்றே பற்றி அவற்றிற்கு இலக்கணங் கூறினார். தொல்காப்பியர் எனக் கொள்வதும்[2], செய்கும் என்பது வினைகொண்டுமுடிந்தும் முற்றேயாக

விளங்கும் என்பது பிற்கால இலக்கணப்புலவர் சருக்கிய இடம் என்பதும் போதரும்[3]

(14)

## 333. முன்னிலை கூடிய படர்க்கையு முன்னிலை.

முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலை.

munnilai kūtiya patarkaiyum munnilai.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Third becomes the second person**

Even the 3rd person which comes together with the 2nd, is syntactically regaraded as the latter(i.e., the Predicate agrees with the 2nd person)

### மயிலை நாதர்

எ–ன், தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மையான் முடிந்தன ; முன்னிலையோடு கூடிய படர்க்கை எம்முடிபிற்றா மென்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தல் நுதலிற்று.

இ–ள்.: முன்னிலை கூடிய படர்க்கையையும் முன்னிலையால் முடிக்க, எ – று.

வ – று.:–

'அவனும் நீயும் போமின்', 'அவரும் நீரும் வம்மின்' எனவும்,

"ஒண்டூவி நாராய்நின் சேவலு நீயுமாய் வண்டூது
[1]பூங்கானல் வைகலுஞ் சேறிரால்,"

"நின்ன கண்ணியு மார்மிடைந் தன்றே நின்னொடு,
பொருவோன் கண்ணியு மார்மிடைந் தன்றே, ஒருவீர்
தோற்பினுந் தோற்பதுங் குடியே, இருவீர் வேற
லியற்கையு மன்றே"

எனவும் ஈரிடத்தும் வரும்.

### சங்கர நமச்சிவாயர்

எ-னின், உளப்பாட்டுப்பன்மை, முன்னிலைக்கண்ணும் உளது என்பது உணர்-ற்று.

இ-ள்.:- தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மையானாற்போல, முன்னிலையோடு கூடிய படர்க்கையும் முன்னிலையாம், எ-று.

விகுதிகளை விதவாது கூறினமையின் முன்னிலைப்பன்மை விகுதிகளெல்லாம் படர்க்கையை உளப்படுத்தும் என்பதூஉம், படர்க்கை என்றமையால் தன்மையை உளப்படுத்தா என்பதூஉம் பெற்றாம்.

வ -று.:-

உண்டனிர், உண்டீர், உண்மின், குழையினிர், குழையீர்: நீயும் அவனும் எனவும்;

"ஒண்டுவி நாராய்நின் சேவலும் நீயுமாய்
வண்டுதும் பூங்கானல் வைகலும் சேறீரால்"

எனவும் வரும்.

இச்சூத்திரம் முன்னிலைப் பன்மைமுற்றுக் கூறியவழிக் கூறாது ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல் என்னும் உத்தியான் ஈண்டுக் கூறப்பட்டது.

பாட வேறுபாடு.:-

1. பூங்கானம்

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், தன்மையொடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மையான் அமைந்தன என்றார் ; முன்னிலையோடு கூடிய படர்க்கை முன்னிலை யாமோவென்று ஐயுற்றார்க்கு ஐயமறுத்தல் கூறுகின்றது.

இ-ள்.:- முன்னிலை கூடிய படர்க்கையும் - தன்மையொடு கூடிய படர்க்கை தன்மையானது போல முன்னிலையோடு கூடிய படர்க்கையும், முன்னிலை - முன்னிலையான் முடிக்க, எ-று.

உ - ம்.:-

அவனும் நீயும் போமின், அவரும் நீரும் வம்மின்,
"ஒண்டுவி நாராய்நின் சேவலு நீயுமாய், வண்டுது
பூங்கானல் வைகலுஞ் சேறிரால்"

எனவும் வரும்.

## விசாகப் பெருமாளையர்

இது, உளப்பாட்டுப்பன்மை முன்னிலைக்கும் உண்டென்பது உணர்த்துகின்றது.

இ–ள்.:– **முன்னிலை** – முன்னிலையோடு, **கூடிய** – சேர்ந்த **படர்க்கையும்** – படர்க்கையும், **முன்னிலை** – முன்னிலையாம், எ–று.

உண்டனீர் குழையினீர் நீயுமவனும்

உண்டீர் குழையீர்

உண்மின் –

எனவரும். இச்சூத்திரம் முன்னிலைப்பன்மை கூறியவழியே கூறாது **ஒன்றினமுடித்த றன்னினமுடித்தல்,** என்கிற வுத்தியால் இங்கே சொல்லப்பட்டது.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

47. உளப்பாட்டுப் பன்மை முன்னிலைக் கண்ணுமுண்டெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

முன்னிலை கூடிய படர்க்கையு முன்னிலை.

(முன்னிலை கூடிய படர்க்கையு முன்னிலை.)

இ–ள்.: தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மை யானாற்போல முன்னிலையோடு கூடிய படர்க்கையும் முன்னிலையாம், எ–று.

(வரலாறு)

உண்டனிர் குழையினிர் நீயுமவனும்

உண்டீர் குழையீர் ,,

உண்மின் ,,

48. உளப்பாட்டுப் பன்மை மூவிடங்களுள் எவ்விடத்துக் குரியதாகாது?

தன்மை முன்னிலைகளுக்கே யன்றிப் படர்க்கைக் குரியதன்று.

இச் சூத்திரம் முன்னிலைப்பன்மை முற்றுக் கூறியவழியே கூறாது, இங்கே கூறப்பட்டது **ஒன்றினமுடித்த றன்னினமுடித்தல்** என்னு முத்தியால்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, உளப்பாட்டுப் பன்மை முன்னிலையிடத்து முள தென்பதுணர்த்திற்று.

**இ–ள்.:–** முன்னிலை யொடு கூடிய படர்க்கையும் முன்னிலையாம், **எ–று.**

விகுதிகளைச் சொல்லாமல் **'முன்னிலை'** யென்றதினால்

முன்னிலைப்பன்மை விகுதிகளெல்லாம் படர்க்கையை யுளப்படுத்தும் என்பதும், படர்க்கை யென்றதினால் தன்மையை யுளப்படுத்தாதென்பதும் பெறப்பட்டன.

வ–று.:–

உண்டனிர், உண்டீர், உண்மின், குழையினிர், குழையீர், நீயும் அவனும் எனவும், (செய்யுள்)

**"ஒண்டூ விநாராய் நின் சேவலு நீயுமாய் வண்டுதும் பூங்கானல் வைகலுஞ் சென்றீரால்"**

எனவும் வரும்.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை:**–(தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மையானாற்போல) **முன்னிலை**–முன்னிலையிடத்துச் சொல்லோடு, **கூடிய** – சேர்ந்த, **படர்க்கை** – படர்க்கையிடத்துச் சொல்லும், **முன்னிலை** – முன்னிலையாம்.

**உம்** :– உண்டனிர், உண்மின், குழையீர் – நீர் (நீயும் அவனும்)

குறிப்பு:–

இச்சூத்திரம், முன்னிலைப்பன்மை வினைமுற்றைக் கூறுமிடத்துக் கூறாமல் **ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்** என்னும் முத்தியால் இங்குக் கூறப்பட்டது.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:**– தன்மையோடு கூடிய முன்னிலைபடர்க்கைகள் தன்மையானாற்போல, **முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலை** – முன்னிலையோடு. கூடிய படர்க்கையும் முன்னிலையாம், எ– று.

வ–று.:–

| | | |
|---|---|---|
| உண்டனிர் | குழையினிர் | நீயுமவனும் |
| உண்டீர் | குழையீர் | |
| உண்மின் | – | |

இச்சூத்திரம் முன்னிலைப் பன்மைமுற்றுக் கூறியவழியே கூறாது, **ஒன்றினமுடித்த றன்னின முடித்தல்,** என்னுமுத்தியால் இங்கே கூறப்பட்டது.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– தன்மையோடு கூடிய முன்னிலைப்படர்க்கைகள் தன்மை யானாற்போல, முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலை – முன்னிலையோடு கூடிய படர்க்கையும் முன்னிலைப் பன்மையினை முற்றுங் குறிப்புமுற்றுமாம். (எ–று).

வரலாறு

| | | |
|---|---|---|
| உண்டனிர் | குழையினிர் | |
| உண்டீர் | குழையீர் | நீயுமவனும் |
| உண்மின் | –––––– | |

இச்சூத்திரம் முன்னிலைப் பன்மைமுற்றுக் கூறியவழியே கூறாது, ஒன்றின முடித்தறண்ணின முடித்தல் என்னுமுத்தி யால், இங்கே கூறப்பட்டது. தன்மையிடப்பொருளும் முன்னிலையிடப் பொருளுங் கலப்புறினும், தன்மையிடப் பொருளும் படர்க்கையிடப்பொருளும் கலப்புறினும், மூவிடப் பொருளுங் கலப்புறினுந் தன்மைப்பன்மையாய் முடிதல்போல; முன்னிலையிடப் பொருளொடு படர்க்கையிடப் பொருள் கலப்புறின் முன்னிலையாய் முடிவுறுமென் றறிவித்தற்கு இறந்ததுதழீஇய எச்சவும்மைகொடுத்துப் படர்க்கையும் முன்னிலையென்றார்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: (தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மையானாற்போல), முன்னிலை – முன்னிலையிடத்துச் சொல்லோடு, கூடிய – சேர்ந்த, படர்க்கையும் – படர்க்கையிடத்துச் சொல்லும், முன்னிலை முன்னிலையாம்; எ–று.

உ – ம்.:–

உண்டனிர், உண்மின், குழையீர் – நீர் (நீயும் அவனும்.)

இச்சூத்திரம், முன்னிலைப்பன்மை வினைமுற்றைக் கூறுமிடத்துக் கூறாமல் ஒன்றினமுடித்தல் தன்னினமுடித்தல் என்கிற உத்தியால் இங்கே கூறப்பட்டது.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– (தன்மையொடு கூடிய முன்னிலைபடர்க்கைகள் தன்மையானாற்

போல) **முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலை** – முன்னிலையோடு கூடிய படர்க்கையும் முன்னிலையா. எ–று.

விகுதிகளைச் சொல்லாமல் முன்னிலையென்றதினால் முன்னிலைப் பன்மை விகுதிகளெல்லாம் படர்க்கையை உளப்படுத்தும் என்பதும், படர்க்கை யென்றதினால் தன்மையை உளப்படுத்தா தென்பதும் பெறப்பட்டன.

(உ–ம்.)

இர் – உண்டனிர் குழையினிர்

ஈர் – உண்டீர் குழையீர்

மின் – உண்மின் – நீயு மவனும்.

இச் சூத்திரம் முன்னிலைப் பன்மைமுற்றுக் கூறும்வழியே கூறாது, 'ஒன்றின முடித்த றன்னின முடித்தல்' என்னும் உத்தியால் இங்கே கூறப்பட்டது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ–ள்.) முன்னிலை கூடிய** – முன்னிலையோடு சேர்ந்த, **படர்க்கையும்** – படர்க்கையும், **முன்னிலை** – முன்னிலையாம். (எ–று)

**(பொ–ரை.)** (தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள், தன்மையானற்போல) முன்னிலையோடு கூடிய படர்க்கையும் முன்னிலையாம்.

**(உ–ம்.)**

தெரிநிலை குறிப்பு.

உண்டனிர் குழையினிர்

உண்டீர் குழையீர் நீயும் அவனும்.

உண்மின்

இச் சூத்திரம் முன்னிலைப்பன்மை கூறியவழியே கூறாத, 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்கிற வுத்தியால் இங்கே சொல்லப்பட்டது.

(மின்விகுதி தானே காலங்காட்டுதலால், குறிப்புக்கு வாரா தென்க. ஒன்றினமுடித்தல் தன்னின முடித்தலென்றது ஈண்டு உளப்பாட்டுப் பன்மைகூறினவிடத்தை.)

## கா. நமச்சிவாய முதலியார்

**முன்னிலை** – முன்னிலையோடு, **கூடிய** – சேர்ந்த, **படர்க்கையும்** – படர்க்கையும், **முன்னிலை** – முன்னிலையேயாம்.

உதாரணம்

| தெரிநிலை | உண்டனிர் | குறிப்பு – | குழையினிர் | |
|---|---|---|---|---|
| | உண்டீர் | | குழையீர் | நீயும் அவனும் |
| | உண்மின் | | -------- | |

இச் சூத்திரம், முன்னிலைப் ப்ன்மை கூறியவழியே கூறாது, 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்னும் உத்தியால் இங்கே சொல்லப்பட்டது.

## மோசசு பொன்னையா

தன்மையோடு கூடிய முன்னிலை படர்க்கைகள் தன்மையானாற்போல1, முன்னிலையோடு கூடிய படர்க்கைகள் முன்னிலையாம் எ–று.

எ-டு:-

நீர் உண்டனிர்

நீர் குழையீர் (நீயும் அவன், அவள், அவர் அது அல்லது அவையும்)

*நீர் உண்மின்*

எனவும்,

ஒண்டுவீ நாராய்நின் சேவலு நீயுமாய்

வண்டூதும் பூங்கானல் வைகலுஞ் சென்றீரால்,

எனவும் வரும்.

தன்மைப்பன்மை முன்னிலையையும் படர்க்கையையும் உளப்படுத்தினும் தன்மையேயாம் எனக் கூறினார் ஆதலின், தன்மை அதிகாரப்பட்டு நிற்குமிடத்தே ஒன்றின முடித்தறன்னின முடித்த லென்னும் உத்தியால் இந்நூற்பாவை ஈண்டு வைத்தார் எனக் கொள்க. தொல்காப்பியத்தில் இக்கருத்துக் கூறப்படவில்லை.

(15)

**334. ஐயா யிகர வீற்ற மூன்றும்**
**ஏவலின் வரூஉ மெல்லா வீற்றவும்**
**முப்பா லொருமை முன்னிலை மொழியே.**

ஐய் ஆய் இகர ஈற்ற மூன்றும்

ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும்

முப்பால் ஒருமை முன்னிலை மொழியே.

ai āy ikara ī<u>r</u><u>r</u>a mū<u>n</u><u>r</u>um
ēvali<u>n</u> varūum ellā ī<u>r</u><u>r</u>avum
muppāl orumai mu<u>n</u><u>n</u>ilai moḻiyē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Second person singular**

Words ending in ai, ay and i, and the imperatives ending in all the (twenty-three) terminations, belong to the 2nd person singular, and are common to the three singular Genders (of these two classes).

## ஒப்புமைப் பகுதி

அவற்றுள்
முன்னிலைக் கிளவி
இஐ ஆயென வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்

(தொல். சொல்.: 223)

..................... சொன்ன
ஒருமைக்கண் முன்னிலையாம் இஐஆய் உண்சேர்
பொருஎன் பனவும் புகல்

(நேமி.: 67: 2–4)

ஐயா யிகர வீற்ற மூன்று
மேவலின் வரூஉ மெல்லா வீற்றோடு
அல் ஆல் ஏல்காண் என்னும் ஈற்றவும்
முப்பால் ஒருமை முன்னிலை வினை

(இ.வி.: 238 : 1–4)

ஐயா யிறுதி முன்னிலைக் கிளவி
ஒருவ னொருத்தி யொன்றற்கு முரிய

(மு.வீ.: 617)

இகர விறுதியு மவற்றோ ரற்றே

(மு.வீ.: 618)

............ ஐயாய் இம்மூன்று ஏவலில் இருபான்மூன்று

பின்ஏன் அல் லால் காண் முன்னிலை ஒருமை ..........
(சுவாமி.: 50: 3–4)

## மயிலை நாதர்

எ–ன், முன்னிலையொருமை வினையும் வினைக்குறிப்பும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– இம்மூன்று விகுதியீற்றனவானமுற்றும், ஏவலின் வரும் இருபத்துமூன்றீற்றவான மொழிகளும் ஒருமை முப்பாலையும் உணர்த்தும் முன்னிலைவினை வினைக்குறிப்புமுற்றுக்களாம், எ–று.

இவற்றுள் முன்மூன்றும் முன்னின்றானது தொழிலை யுணர்த்துவன; ஏனைய முன்னின்றானைத் தொழிற்படுத்துவனவாம்.

வ–று.:–

உண்டனை, உண்ணாநின்றனை, உண்குவை; உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய் ; உண்டி எனவும், நட வா மடி சீ விடு கூ வே வை நொ போ வெள உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகு எனவும், தாரினை, தரையினை, காரினை, காலினை, வலியினை, வரவினை எனவும் வினை வினைக்குறிப்பு முற்று வந்தன; யாண்டும் நீயென்னும் பெயர் தந்து கொள்க.

பாட வேறுபாடு.:–

1. ஏ

## சங்கர நமச்சிவாயர்
## சிவஞான முனிவர்

எ–னின், முன்னிலை ஒருமை வினைமுற்றும் குறிப்புமுற்றும் உணர்–ற்று.

இ–ள்.:– ஐ ஆய் இ என்னு மூன்று ஈற்றுமொழிகளும், *விகுதி குன்றாதும் குன்றியும் நிற்பனவாகிய* ஏவற்கண் வரும் இருபத்துமூன்று ஈற்று மொழிகளும் ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் மூன்று கூற்றவாகிய முன்னிலையொருமை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம், எ–று.

இக்ஈரீற்று மொழிகட்கு இகரம் எதிர்காலம் காட்டுவதன்றி இடைநிலை

நின்றும் காலங்காட்டும் என்பது தோன்ற ஐ ஆய் என்னும் விகுதிகளோடு இகர விகுதியை உடன் கூறினார்.

ஏவன்முற்றுத் தெரிநிலை ஒன்றற்கே உரிமையின் உம்மை கொடுத்து விதந்தோதினார்.

வ–று.:–

**உண்டனை**, உண்ணாநின்றனை, உண்பை, உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய், உண்டி , உண்ணாநின்றி, சேறி, நடவாய், வாராய், கேளாய், அஃகாய், நட, வா, கேள், **அஃகு** எனவும்; **வில்லினை, வில்லாய், வில்லி**: நீ எனவும் வரும்.

இகரவீற்று மொழிகள் எதிர்கால இடைநிலை ஏற்குமேல் காண்க. ஏவல் எனப் பொதுப்படக் கூறினமையின் செய்வி செய்விப்பி என்னும் ஏவன்மேல் ஏவல்களும், செய்யல் செய்யேல் என்றற்றொடக்கத்து எதிர்மறை யேவல்களும் இருபத்துமூன்று ஈற்றுள் அடங்கிக் கிடந்தமை காண்க. பால் காட்டி நிற்றலின் ஏவலும் முற்றேயாம் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** விரவுத் திணை, முன்னிலை யொருமைத் தெரிநிலை வினை முற்றும் குறிப்பு வினைமுற்றும் கூறியது.

**இ–ள்.:–** ஐயா யிகர **வீற்ற மூன்றும்** – ஐ, ஆய், இ என்னும் **இம்மூன்று** விகுதியும் ஈறாகவுடைய மொழிகளும், ஏவலின் **வருஉ மெல்லா வீற்றவும்** – ஏவற்கண் வரும் இருபத்துமூன்று ஈற்றவுமான மொழிகளும், **முப்பாலொருமை** – ஒருவன் ஒருத்தி, ஒன்று என்னும் மூன்றற்கும் பொதுவான ஒருமைப்பாலையுடைய, **முன்னிலை** மொழியே – முன்னிலைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம், எ–று.

உ –ம்.:–

**உண்டனை, உண்ணாநின்றனை, உண்குவை, உண்டாய், உண்ணாநின்றாய், உண்பாய்; உண்டி, சென்றி**; நட, வா, மடி, **சீ**, விடு, கூ, ஏ, ஐ முதலாயினவும் கொள்க. **தாரினை, தரையினை, காரினை, காலினை, வலியை, வரவினை தாராய்** என வினைக்குறிப்பு முற்று வந்தன. நீ என்னும் பெயர் வருவித்துக் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது**, முன்னிலை யொருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றும்

உணர்த்துகின்றது.

**இ–ள்.:–** ஐயா யிகர வீற்ற மூன்றும் – ஐ ஆய் இ என்கின்ற மூன்று விகுதி யிறுதியிலுடைய மொழிகளும், **ஏவலின் வரூஉ மெல்லா வீற்றவும்**– விகுதிகுன்றாதுங் குன்றியு நிற்பனவாகிய ஏவலிலே வருகிற இருபத்து முன்றீற்று மொழிகளும், **முப்பால்**–ஒருவன் ஒருத்தி ஒன்று என்கிற மூன்று பால்களுக்கும் பொதுவாகிய, **ஒருமை** – முன்னிலை மொழி முன்னிலை யொருமை முற்றுங் குறிப்பு முற்றுமாம், எ–று.

(இகர விகுதி எதிர்காலத்தை யிடைநிலையில்லாமற் காட்டும். ஏவல் வினைமுற்றுக்கள் குறிப்புவினையில் இல்லை என்று அறிவித்தற்கு உம்மை கொடுத்துப் பிரித்தார்.

வ–று.:–

வி, தெ, இ, தெ, நி, தெ, எ, கு

ஐ–உண்டனை–உண்ணாநின்றனை–உண்பை–வில்லை

ஆய்–உண்டாய் –உண்ணாநின்றாய்–உண்பாய்–வில்லாய்

இ–உண்டி–உண்ணாநின்றி– சேறி – வில்லி

எனவரும் ஏவல்வினைகள், நடவாய், வாராய், கேளாய் அஃகாய், நீ என் விகுதி குன்றாமலும், நட, வா, கேள், அஃகு, நீ, என விகுதி குன்றியும், வரும். ஏவலெனப் பொதுப்படச் சொல்லியதனால், செய்வி, செய்விப்பி என ஏவன்மேல் ஏவலாக வருவனவும் செய்யல், செய்யேல், மறால், நடவாதே, என எதிர்மறையில் வருவனவும் சொல்லிக்காண், நடந்திட்டு, எழுந்திரு, அருளு என வுடன்பாட்டில் வருவனவுங் கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

முன்னிலை யொருமைமுற்று இவையெனக்கூறுஞ் சூத்திரம் யாது?

ஐயா யிகர வீற்ற மூன்றும்

ஏவலின் வரூஉ மெல்லா வீற்றவும்

முப்பா லொருமை முன்னிலை மொழியே

(ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும் ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும் முப்பால் ஒருமை முன்னிலை மொழியே.)

**இ–ள்.:** ஐ ஆய் என்னு மூன்று விகுதிகளை இறுதியிலுடைய மொழிகளும், ஏவற்பொருண்மைக்கண் வரும் இருபத்துமூன்றீற்று மொழிகளும்

ஒருவன் ஒருத்தி ஒன்று என்னு மூன்று பால்களுக்கும் பொதுவாகிய முன்னிலையொருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ—று.

இகரம் த ட ற வூர்ந்து எதிர்காலம்பற்றி வரும்.

உ—ம்.:—

உரைத்தி, உண்டி, தின்றி, சேறி.

உண்டி உண்ணாநின்றி என்பனவற்றை இறந்தகாலமும் நிகழ்காலமும் பற்றி வழங்கல் பிற்காலத்து வழக்கு.

ஏவல்வினைமுற்றுத் தெரிநிலைவினை யொன்றற்கே யுரிமையின் உம்மை கொடுத்துப் பிரித்தார்.

ஏவலின் வரூஉம் எல்லாவீற்றவும் என்றது எவற்றை?

பதவியலிற் கூறிய நட வா மடி முதலியனவற்றை.

நட வா மடி முதலியனவெனச் சுட்டாது ஏவலின் வரூஉ மெல் லாவீற்றவும் என்றது யாது பற்றி?

நட வா மடி முதலியன ஏவலாயும் வினைப்பகுதியாயும் வரு மியல்புடையனவாதலின் அவை ஏவற்பொருளவாய் வருமிடத்தன்றி, முன்னிலையொருமைவினை முற்றாகாவென்பது குறித்தற்கேயாமென்க.

ஏவற்பொருட்கண் வரும் நட வா முதலியனவற்றிற்கும் வினைப்பகுதி யாக நிற்கும் நட வா முதலியனவற்றிற்கும் தம்முள் வேற்றுமை யாது?

ஏவற்பொருட்கண் வரும் நட வா முதலியன எடுத்துச்சரிக்கப்படுதலோடு ஆய்விகுதி பெறுதற்கு முரியனவாம். வினைப்பகுதியாகுமிடத்து நட வா முதலியன படுத்துச்சரிக்கப்படும். ஆய்விகுதி பெறுதற்கு உரியனவாகா. இங்ஙனம் நிற்றலே வேற்றுமையாம்.

முன்னிலையில் எத்தனைபாலும் எத்தனைதிணையு மடங்கும்?

உயர்திணை ஆண்பெண்பால்களும், அஃறிணை ஒன்றன்பா லுமாக மூன்றுபாலும் இருதிணையும் அடங்கும்.

வரலாறு.:

| இறந்தகாலத் தெரிநிலை | நிகழ்காலத் தெரிநிலை | எதிர்காலத் தெரிநிலை | குறிப்பு |
|---|---|---|---|
| உண்டனை | உண்கின்றனை | உண்பை | குழையை |
| உண்டாய் | உண்கின்றாய் | உண்பாய் | குழையாய் |
| உண்டி | உண்ணாநின்றி | சேறி | வில்லி |

நீ

இவை எதிர்மறைக்கண் உண்டிலை, உண்கிலை, உண்ணலை, உண்டி

லாய் என வரும்.

ஐ, ஆய், இ, அல், ஏல், ஆல் என்னும் விகுதிகளை இறுதியில் உடைய வினைச்சொற்களும், ஆய்விகுதி புணர்ந்து குன்றிப் பகுதிமாத்திரையாய் நிற்கும் வினைச்சொற்களும், முன்னிலை யேவலொருமைத் தெரிநிலை வினைமுற்றுக்களாம்.

வரலாறு.:–

உண்பை, உண்ணாய், உண்ணுதி, உண்.

இவற்றுள், அல், ஏல், ஆல் என்னும் மூன்று விகுதிகளும் எதிர்மறை யிடத்து வரும்.

உ–ம். உண்ணல் உண்ணேல் மறால்.

எதிர்மறை யேவலொருமை வினைமுற்றுக்கள், உண்ணாதே, உண்ணாதி என, எதிர்மறை ஆகார விடைநிலையின் முன் தகரவெழுத்துப் பேற்றோடு, ஏகார விகுதி இகர விகுதிகளுள் ஒன்றுபெற்றும் வரும்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, முன்னிலை யொருமைவினை, வினைக்குறிப்பு முற்றாமாறுணர்த்திற்று.

இ–ள்.:– **ஐயாயிகர வீற்ற மூன்றும்** – ஐ ஆய் இ என்னும் மூன்று ஈற்று மொழிகளும், **ஏவலின் வரூஉ மெல்லா வீற்றவும்** (விகுதி – குன்றியுங் குன்றாதும்.) ஏவற்கண் வரும் இருபத்து மூன்று ஈற்று மொழிகளும், **முப்பாலொருமை முன்னிலை மொழியே** – ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் மூன்று பிரிவாகிய முன்னிலை யொருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ – று.

இவற்றுள், ஏவல்வினை தெரிநிலைக்கே யுரித்தாதலால் உம்மை கொடுத்துக் கூறினார்.

வ–று.: உண்டனை உண்ணாநின்றனை, உண்பை எனவும் உண்டாய், உண்ணா நின்றாய் உண்பாய் எனவும் உண்டி, உண்ணா நிற்றி, சேறி, எனவும் வருமிவை ஐ ஆய் இகரவீற்றுத் தெரிநிலை முற்றுவினைகள். நடவாய் உண்ணாய், அஃகாய், எனவும் நட, உண், அஃகு எனவும் வரும். இவை விகுதி குன்றாதுங் குன்றியும் வந்த ஏவல்வினைகள், இவை யனைத்துந் தெரிநிலை. வில்லினை, வில்லாய், வில்லி, நீ–இவை குறிப்பு, இந்த நீ யென்னும் பயனிலையை எல்லாவற்றொடுங் கூட்டுக. இனி, உண்டிலை, உண்டிலாய், உண்டனையல்லை, உண்டாயல்லை, சூழாதி என வருமெதிர்மறை விகற்பங்களும், உண்ணல்,

உண்ணேல், மறால் என வரும் எதிர்மறை ஏவல் விகற்பங்களும், நடப்பி, வருவி எனச் செய்வி என்னேவல் முன்னிலைவினை பகர வகர இடைநிலை பெற்று எதிர்காலம் பற்றி வருதலும் பிறவும், விரிவஞ்சிக் காட்டாதொழிந்தனவுங் காண்க. மூன்றும், ஈற்றவும் முன்னிலைமொழி யென முடித்துக்கொள்க.

இவர் விகுதி குன்றிய நட வா முதலிய ஏவல்வினைகளை முன்னிலை வினைமுற்றென்றது ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு உடன்பாடன் றென்பதை

"அவற்றுண் முன்னிலைக்கிளவி இ ஐ ஆ யெனவரூஉ
மூன்று – மொப்பத்தோன்று மொருவர்க்கு
மொன்றற்கும்"

என அவர் கூறியவிச்சூத்திரத்தாற் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– ஐ ஆய் இகரம் ஈற்ற மூன்றும்** – ஐ ஆய் இ என்கிற மூன்று விகுதிகளை இறுதியிலுடைய மொழிகளும், **ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும்** – (விகுதி பெறாமலும் பெற்றும்) ஏவலில் வருகிற இருபத்து மூன்று ஈற்றுமொழிகளும், முப்பால் (ஆண்பால் பெண்பால் ஒன்றன்பால் என்னும்) மூன்றுக்கும் பொதுவாகிய, **ஒருமை முன்னிலை மொழி** – முன்னிலை யொருமைத் தெரிநிலை முற்றுங் குறிப்பு முற்றுமாம்.

குறிப்பு :–

இகர விகுதி இடைநிலையில்லாமல் தானே எதிர்காலங் காட்டும்; ஏவலும் தானே காலங்காட்டும். ஏவல் வினைமுற்றுத் தெரிநிலையில் மாத்திரமே யல்லாமல் குறிப்பில் இல்லாமையால், உம்மை கொடுத்துப் பிரித்தார். எல்லா ஈறு – "நடவா மடிசீ" என்னுஞ் சூத்திரத்திற் கூறியது.

உ–ம் :–

| | இறப்பு | நிகழ்வு | எதிர்வு | குறிப்பு | |
|---|---|---|---|---|---|
| ஐ– | உண்டனை | உண்கின்றனை | உண்பை | குழையை | |
| ஆய் – | உண்டாய் | உண்கின்றாய் | உண்பாய் | குழையாய் | நீ |
| இ – | உண்டி | உண்ணாநின்றி | சேறி | வில்லி | |

ஆய், இ, அல், ஏல், ஆல் என்கிற விகுதிகளை இறுதியிலுடைய

வினைச்சொற்களும், 'ஆய்' விகுதி புணர்ந்து கெட்டுப் பகுதி மாத்திரையாய் நின்ற ஏவல்களும் முன்னிலை யொருமை வினைமுற்றுக்களாம். இவ்விகுதிகளுள் அல் ஏல் ஆல் என்பன எதிர்மறையில் மாத்திரம் வரும்.

உ–ம் :–

உண்ணாய், உண்ணுதி, உண்
உண்ணல், உண்ணேல், மறால் நீ.

எதிர்மறை ஏவலொருமை முற்றுக்கள் – எதிர்மறை ஆகார இடை நிலையின் முன் தகர எழுத்துப் பேற்றுடன், ஏ, இ என்கிற விகுதிகளுள் ஒன்றைப் பெற்றும் வரும்; உ–ம் :– உண்ணாதே, உண்ணாதி.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும் – ஐ ஆய் இ என்னு மூன்று விகுதிகளை இறுதியிலுடைய மொழிகளும், ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும்** – விகுதி குன்றாதுங் குன்றியு நிற்பனவாகிய ஏவலிலே வரும் இருபத்து மூன்றீற்று மொழிகளும், **முப்பால் ஒருமை முன்னிலைமொழி** – ஒருவன் ஒருத்தி ஒன்று என்னு மூன்று பால்களுக்கும் பொதுவாகிய முன்னிலையொருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், எ–று.

இகர விகுதி எதிர்காலத்தை இடைநிலை யின்றித் தானே காட்டுதல் பதவியலிற் பெறப்பட்டது.

ஏவல்வினைமுற்றுத் தெரிநிலைவினை யொன்றற்கே யுரிமையின், உம்மை கொடுத்துப் பிரித்தார்.

வ–று.:

| இ.தெரி. | நி.தெரி. | எ.தெரி. | குறி. | |
|---|---|---|---|---|
| உண்டனை | உண்கின்றனை | உண்பை | குழையினை | |
| உண்டாய் | உண்கின்றாய் | உண்பாய் | குழையாய் | நீ |
| உண்டி | உண்ணாநின்றி | சேறி | வில்லி | |

ஆய், இ, அல், ஏல், ஆல் என்னும் விகுதிகளை இறுதியில் உடைய வினைச்சொற்களும், ஆய் விகுதி புணர்ந்து குன்றிப்

பகுதி மாத்திரையாய் நிற்கும் வினைச்சொற்களும், முன்னிலை யேவலொருமைத் தெரிநிலைவினை முற்றுக்களாம்.

இவற்றுள், அல், ஏல், ஆல் என்னும் மூன்று விகுதிகளும் எதிர்மறையிடத்து வரும்.

வ—று.:—

உண்ணாய் உண்ணுதி உண்

உண்ணல் உண்ணேல் மறால் நீ.

எதிர்மறை யேவலொருமை வினைமுற்றுக்கள், உண்ணாதே, உண்ணாதி என, எதிர்மறை ஆகார விடைநிலையின் முன் தகர வெழுத்துப்பேற்றோடு, ஏகார விகுதி இகர விகுதிகளுள் ஒன்று பெற்றும், வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள்:— **ஐ ஆய், இகர ஈற்ற மூன்றும்** — ஐ ஆய் இ என்னுமூன்று விகுதிகளை இறுதியிலுடை மொழிகளும், — **ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும்** — விகுதி குன்றாதுங் குன்றியு நிற்பனவாகிய ஏவலிலே வரும் இருபத்து மூன்றீற்றுமொழிகளும், **மூப்பால் ஒருமை முன்னிலைமொழி** — ஒருவன் ஒருத்தி ஒன்று என்னு மூன்றுபால்களுக்குமே பொதுவாகிய முன்னிலை யொருமை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். எ—று.

இகரவிகுதி எதிர்காலத்தை இடைநிலையின்றித் தானே காட்டுதல் பதவியலிற் பெறப்பட்டது. ஏவல்வினைமுற்றுத் தெரிநிலைவினையொன்றற்கே யுரிமையின், உம்மை கொடுத்துப் பிரித்தார்.

வரலாறு

| இ.தெரி | நி.தெரி | எ .தெரி | குறி | |
|---|---|---|---|---|
| உண்டனை | உண்கின்றனை | உண்பை | குழையினை | |
| உண்டாய் | உண்கின்றாய் | உண்பாய் | குழையாய் | நீ |
| உண்டி | உண்ணாநின்றி | சேறி | வில்லி | |

நட, வா, விடு, வை, உண், பார், செல், வாழ், கேள் நீ, (என்று ஆய் விகுதிகுன்றிவந்த) ஏவல்வினைமுற்றுக் காண்க.

அல், ஏல், ஆல் என்னும் மூன்றுவிகுதிகளும் எதிர்மறையிடத்து வரும் ஏவல் ஒருமைவினைமுற்றுக்களாம்.

வரலாறு

உண்ணல் உண்ணேல் மறால் நீ

எதிர்மறையேவலெருமை வினைமுற்றுக்கள், உண்ணாதே, உண்ணாதி என, எதிர்மறை ஆகாரவிடைநிலையின் முன் நகரவெழுத்துப் பேற்றோடு, ஏகாரவிகுதி இகரவிகுதிகளுள் ஒன்று பெற்றும்வரும்.

இவர் விகுதிகுன்றிய நடவாமுதலிய ஏவல்வினைகளை முன்னிலைவினை முற்றென்றது ஆசிரியர் தொல்காப்பி யனார்க்கு உடன்பாடன்றென்பதை (சூத்திரம்) "அவற்றுண் முன்னிலைக்கிளவி, இ, ஐ ஆ யெனவருஉமூன்று, மொப்பத் தோன்று மொருவர்க்கு மொன்றற்கும்" என அவர் கூறிய இச்சூத்திரத்தாற்காண்க.

## வை. மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:- **ஐ ஆய் இகரம் ஈற்ற மூன்றும்** - ஐ ஆய் இ என்கிற மூன்று விகுதிகளை இறுதியிலுடைய மொழிகளும், **ஏவலின் வருஉம் எல்லா ஈற்றவும்**- (விகுதிபெறாமலும் பெற்றும்) ஏவலில் வருகிற இருபத்துமூன்று ஈற்று மொழிகளும், **முப்பால்** - (ஆண்பால் பெண்பால் ஒன்றன்பால் என்னும்) மூன்றுக்கும் பொதுவாகிய, **ஒருமை முன்னிலை மொழி** - முன்னிலை யொருமைத் தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம்; எ—று.

இகரவிகுதி, எதிர்காலத்தை இடைநிலையில்லாமல் தானே காட்டும்.

ஏவல்வினைமுற்று, தெரிநிலையில் மாத்திரமே யல்லாமல் குறிப்பில் இல்லாமையால், உம்மை கொடுத்துப் பிரித்தார்.

எல்லா ஈறு "ந ட வா மடி சீ" என்னுஞ் சூத்திரத்திற் கூறியன.

உ- ம்.:-

| | இறப்பு. | நிகழ்வு. | எதிர்வு. | குறிப்பு. | |
|---|---|---|---|---|---|
| ஐ. | உண்டனை | உண்கின்றனை | உண்பை | குழையை | நீ |
| ஆய். | உண்டாய் | உண்கின்றாய் | உண்பாய் | குழையாய் | |
| இ | உண்டி | உண்ணாநின்றி | சேறி | வில்லி . | |

ஆய், இ, அல், ஏல், ஆல் என்கிற விகுதிகளை இறுதியிலுடைய வினைச் சொற்களும், 'ஆய்' விகுதி இல்லாமல் பகுதி மாத்திரமாய் நிற்கிற வினைச்சொற்களும், ஏவலொருமை முற்றுக்களாம்; இவ்விகுதிகளுள், அல், ஏல், ஆல் என்பவை எதிர்மறையில் மாத்திரமே வரும்.

உ-ம்.:-

**உண்ணாய், உண்ணுதி, உண் உண்ணல், உண்ணேல், மறால் – நீ**

எதிர்மறை ஏவலொருமை முற்றுக்கள் – எதிர்மறை ஆகார இடை நிலையின் முன் தகர எழுத்துப்பேற்றுடன் ஏ இ என்கிற விகுதிகளுள் ஒன்றைப் பெற்றும் வரும்; **உ–ம்.** உண்ணாதே, உண்ணாதி.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும்** – ஐ ஆய் இ என்னும் மூன்று விகுதிகளை இறுதியிலுடைய மொழிகளும், **ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும்** – விகுதி குன்றாதுங் குன்றியும் நிற்பனவாகிய ஏவலிலே வரும் இருபத்துமன் றீற்று மொழிகளும், **முப்பால் ஒருமை முன்னிலைமொழி** – ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் மூன்று பால்களுக்கும் பொதுவாகிய முன்னிலையொருமை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம். எ–று.

இகரவிகுதி எதிர்காலத்தை இடைநிலையின்றித் தானே காட்டுதல் பதவியலிற் பெறப்பட்டது.

ஏவல் வினைமுற்றுத் தெரிநிலைவினை யொன்றற்கே யுரிமையின், உம்மை கொடுத்துப் பிரித்தார்.

**(உ–ம்.):**

| தெரிநிலை | | | குறிப்பு |
|---|---|---|---|
| இறப்பு | நிகழ்வு | எதிர்வு | |
| ஐ – உண்டனை | உண்கின்றனை | உண்பை | குழையினை |
| ஆய் – உண்டாய் | உண்கின்றாய் | உண்பாய் | குழையாய் |
| இ – உண்டி | உண்ணாநின்றி | சேறி | வில்லி – நீ |

ஆய் இ அல் ஏல் ஆல் என்னும் விகுதிகளை இறுதியில் உடைய வினைச்சொற்களும், ஆய்விகுதி புணர்ந்து குன்றிப் பகுதிமாத்திரையாய் நிற்கும் வினைச்சொற்களும், முன்னிலையேவலொருமைத் தெரிநிலை வினைமுற்றுக்களாம்.

இவற்றுள், அல் ஏல் ஆல் என்னும் மூன்று விகுதிகளும் எதிர்மறையிடத்து வரும்.

(உ–ம்.)

உண்ணாய் – ஆய். உண்ணுதி – இ. உண் – ஆய்விகுதிகுன்றியது.

உண்ணல் – அல். உண்ணேல் – ஏல். மறால் – ஆல். – நீ

எதிர்மறை யேவலொருமை வினைமுற்றுக்கள், உண்ணாதே, உண்ணாதி என, எதிர்மறை ஆகாரவிடைநிலையின் முன் தகரவெழுத்துப்பேற்றோடு, ஏகார விகுதி இகரவிகுதிகளுள் ஒன்று பெற்றும் வரும்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ–ள்.) ஐ ஆய் இகரம் ஈற்ற மூன்றும் –** ஐ ஆய் இ என்கின்ற மூன்று விகுதிகளை இறுதியிலுடைய மொழிகளும், **ஏவலின் வரும் –** (விகுதி குன்றாதும் குன்றியும் நிற்பனவாகிய) ஏவலிலே வரகிற, **எல்லா ஈற்றவும் –** இருபத்து மூன்று ஈற்று மொழிகளும், **முப்பால் –** (ஒருவன் ஒருத்தி ஒன்று என்கிற) மூன்று பால்களுக்கும் பொதுவாகிய, **முன்னிலை ஒருமை மொழி –** முன்னிலை ஒருமை முற்றும் குறிப்பு முற்றுமாம்.(எ–று)

**(பொ–ரை.)** ஐ ஆய் இ என்னும் மூன்று விகுதிகளை யிறுதியிலுடைய மொழிகளும், (விகுதி குன்றாதும் குன்றியும் நிற்பனவாகிய) ஏவற்கண் வரும் இருபத்து மூன்றீற்று மொழிகளும், (ஒருவன் ஒருத்தி ஒன்று என்கிற) மூன்று பால்களுக்கும் பொதுவாகிய முன்னிலை ஒருமைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம்.

இதரவிகுதி எதிர்காலத்தை இடைநிலை யில்லாமல் தானே காட்டும். ஏவல்வினைமுற்றுக்கள் தெரிநிலைக்கேயன்றிக் குறிப்பு வினையில் இல்லைஎன்று அறிவித்தற்கு உம்மைகொடுத்துப்பிரித்தார். எல்லா ஈறு – 'நட, வா, மடி, சீர்' என்னுஞ் சூத்திரத்திற் கூறியன.

**(உ–ம்.)**

இறந்தகாலம்

உண்டனை

உண்டாய்

உண்டி

நிகழ்காலம்

உண்கின்றனை

உண்கின்றாய்

உண்ணாநின்றி

எதிர்காலம்

உண்பை

உண்பாய்

சேறி

வில்லினை

வில்லாய்

வில்லி

குறிப்பு. தெரிநிலை.

ஐ.

ஆய்.

இ.

ஏவல்வினைகள்,– நடவாய், வர்ராள், கேளாய், அஃநாய் என விகுதி குன்றாமலும், நட, வா, கேள், அஃகு என விகுதி குன்றியும் வரும்.

இனி, ஆய், இ, அல், ஏல், ஆல் என்கிறவிகுதிகளை இறுதியிலுடைய வினைச்சொற்களும் ஆய்விகுதி இல்லாமல் பகுதி மாத்திரமாய் நிற்கிற வினைச் சொற்களும் ஏவலொருமை முற்றுக்களாம். இவ் விகுதிகளுள் அல், ஆல், ஏல் என்பவை எதிர்மறையில் மாத்திரம் வரும்.

(உ–ம்.) உண்ணாய், உண்ணாதி, உண் நீ

உண்ணல், உண்ணேல், மறால்

எதிர்மறை ஏவலொருமை முற்றுக்கள் – எதிர்மறை ஆகார இடைநிலையின்முன் தகர எழுத்துப்பேற்றுடன் ஏ, இ என்கிற விகுதிகளுள் ஒன்றைப் பெற்றும் வரும்.

(உ–ம்.) உண்ணாதே, உண்ணாதி.

ஏவலெனப் பொதுப்படச் சொல்லியதனால் செய்வி, செய் விப்பி என ஏவன்மேலேவலாகவருவனவும், செய்யல், செய்யேல், மறால், நடவாதே என எதிர்மறையில் வருவனவும், சொல்லிக்காண், நடந்திடு, எழுந்திரு, அருளு என உடன்பாட்டில் வருவனவும் கொள்க.

---

1. கலி. 37 15;
2. கலி. 86.22;
3. கலி. 18.2; 4.

அல், ஏல், ஆல் ஏ என்னும் இவ் விகுதிகள் எதிர்மறை யிடத்தே வரும்.

ஆய், இ என்னும் இவ் விருவிகுதிகள் உடன்பாட்டிலும் எதிர்மறையிலம் வரும் என்க.

(இவற்றுள் ஐ, ஆய், இ இம் மூன்றும் முன்னின்றானது தொழிலையுணர்த்துவன; ஏவலில்வரும் இருபத்து மூன்றீற்று மொழிகளும் முன்னின்றானைத் தொழிற்படுத்துவனவாம்.

## கா. நமச்சிவாய முதலியார்

**ஐ ஆய் இகர ஈற்ற மூன்றும்** – ஐ ஆய் இ என்னும் மூன்று விகுதிகளை இறுதியிலுடைய மொழிகளும், **ஏவலின் வரூஉம் எல்லா ஈற்றவும்** – விகுதி குன்றாதுங் குன்றியும் நிற்பனவாகிய ஏவலிலே வரும் இருபத்து மூன்றீற்று மொழிகளும், **முப்பால்** – ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் மூன்று பால்களுக்கும் பொதுவாகிய, **ஒருமை முன்னிலை மொழி,** – முன்னிலை யொருமைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம்.

இகரவிகுதி, இடைநிலை யில்லாமல் தானே எதிர்காலத்தைக் காட்டும்.

ஏவல் வினைமுற்றுக்கள் தெரிநிலைக்கேயன்றி, குறிப்பு வினையில் இல்லை என்று அறிவித்தற்கு உம்மை கொடுத்துப் பிரித்தார்.

உதாரணம்

| | | | | |
|---|---|---|---|---|
| தெரிநிலை | இறந்தகாலம் | – | உண்டனை<br>உண்டாய்<br>உண்டி | |
| | நிகழ்காலம் | – | உண்ணாநின்றனை<br>உண்ணாநின்றாய்<br>உண்ணாநின்றி | நீ |
| | எதிர்காலம் | – | உண்பை<br>உண்பாய்<br>சேறி | |

---

1.நன். 137;
2. தொல். சொல். 223; 7
3. தொல். சொல். 222.
4.Indicative;
5. Imperative;

குறிப்பு — வில்லை / வில்லாய் / வில்லி

ஏவல்வினைகள், – நடவாய், வாராய், கேளாய், அஃகாய் என விகுதி குன்றாமலும், நட, வா, கேள், அஃகு என விகுதி குன்றியும் வரும்.

ஏவல் எனப் பொதுப்படச் சொல்லியதனால், செய்வி, செய்விப்பி என ஏவல்மேல் ஏவலாக வருவனவும், செய்யல், செய்யேல், மறால், நடவாதே என எதிர்மறையில் வருவனவும், சொல்லிக் காண், நடந்திடு, எழுந்திரு, அருளு என உடன்பாட்டில் வருவனவுங் கொள்க.

அல், ஆல் ஏல், விகுதிகள் எதிர்மறையிடத்தே வரும்.

எதிர்மறை ஏவலொருமை விகுதிகள், எதிர்மறை ஆகார விகுதிமுன் தகர எழுத்துப் பேற்றோடே, ஏ– இ – விகுதிகளில் ஒன்று பெற்று வரும்.

உண்ணாதே, உண்ணாதி

## மோசசு பொன்னையா

ஐ, ஆய், இ என்னும் மூன்றையும் ஈற்றிற் பெற்ற வினைமுற்றுக்களும், ஏவற்பொருளில் வருகின்ற இருபத்து மூன்று ஈற்று ஏவல்களும் ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் என்னும் மூன்று கூற்றவாகிய முன்னிலை ஒருமைத் தொழில், குறிப்பு வினைமுற்றுக்களாம். எ–று.

ஏவல் தொழில்வினை ஒன்றிற்கே உரித்தாம் என்க.

**எ-டு.:-**

தொழில் வினைமுற்று

குறிப்பு வினைமுற்று

1. ஐ–நீ உண்டனை–உண்கின்றனை–உண்பை–குழையை
2. ஆய்–நீ உண்டாய்–உண்கின்றாய்–உண்பாய்–குழையாய்
3. இகரம்–உண்டி, உரைத்தி, தின்றி–எதிர்காலம்
   ஐய சிறிதெனை ஊக்கி,1
   ஈதன்மாட் டொத்தி பெரும,2
   பிரித்துறை சூழாதி,3
   வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய் — நிகழ்காலம்
   பொருதி புலம்புதி நீயும்.

4.நீ நட/வா/மடி/சீ1 முதலிய–ஏவல்வினைகள்.

தொல்காப்பியர்,

**அவற்றுள்**
**முன்னிலைக் கிளவி**
**இ ஐ ஆயென வரூஉம் மூன்றும்**
**ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒற்றற்கும்2**

என முன்னிலை ஒருமை பற்றிக் கூறியுள்ள நூற்பாவில் ஏவல் பற்றிய குறிப்பு ஏதும் இல்லை. உயர்திணைக்கும் அஃறிணைக்கும் ஒத்த உரிமையுடன் வழங்குவன என அவர் குறிப்பிட்ட எண் வகை வினைகளடங்கிய,

**முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி**
**இன்மை செப்பல் வேறென் கிளவி**
**செய்ம்மன செய்யுஞ் செய்த வென்னும்**
**அம்முறை நின்ற ஆயென் கிளவியும்**
**திரிபுவேறு படூஉஞ் செய்திய வாகி**
**இருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமைய,3**

என்ற நூற்பாவிலும் ஏவல்வினை இடம்பெறவில்லை. முன்னிலையை அடுத்து அமைந்துள்ள வியங்கோள் ஏவலிலும் வேறுபட்டது என்பது அது படர்க்கை இடத்திற்கே உரியது எனப் பின்னர் விதித்துள்ளமையாலும், உரையாசிரியர்கள் ஏவல் வினையை முன்னிலை வினைக்கண்ணே அடக்கி உரை கூறியுள்ளமையாலும் தெளிவுறும், தெய்வச்சிலையார், 'முன்னிலைவினை என்னாது முன்னிலை எனப் பொதுப்பட ஓதினவதனால், அச்சொல் இருவகைப்படும்; முன்னின்றான் தொழில் உணர்த்துவனவும்4, அவனைத் தெழிற் படுத்துவதற்கு ஏவல் குறித்து வருவனவும்5 என' எனக் கூறியுள்ளது இவண் நோக்கத்தக்கது.

வீரசோழிய ஆசிரியர், ஏவல்வினை பற்றித் தனி இலக்கணங் கூறினும், வியங்கோளை இசைவு எனக் குறிப்பிட்டு ஏவலுள்ளே அடக்கினார்.1 இவ்வாசிரியர் 'செய்யெனேவல் வினைப்பகாப் பதமே'2 எனப் பதவியலுட் கூறியும், இந்நூற்பாவில் முற்றீற்றையும் ஏவலையும் உம் கொடுத்து வேறெனக்காட்டி ஓதியும், ஏவலில் பயின்றுவரும் இகரத்தை ஏவலோடு பொருந்த வைத்தும்,

---

பாட வேறுபாடு.:–

1. அதற்கேற்ற
2. வருவன சில
3. வேறு சூத்திரமின்மையின்

**செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்**
**செய்யென் கிளவி யாகிடன் உடைத்தே,3**

எனத் தொல்காப்பியர் குறித்தவாறே உடன்பாட்டு ஏவற் பொருளிலும் வருதற்குரிய ஆய் விகுதியை அதனைச் சார முன்னர் வைத்தும் நூற்பா செய்து, ஏவல்வினை என்ற ஒன்றை இலக்கண நூலுட் செறித்து வைத்து ஏவல் வினையைத் தெளிவுற அமைத்தார் எனக் கொள்க.

'ஏவலில் வரூஉம் எல்லா ஈற்றவும்' என்றதனால் முன்னர் இவ்வாசிரியர் 'செய்யென்னேவல்',4 'செய்வி என்ஏவல்.... ஈரேவல்',5 பகுதிவேறாம் ஏவல்6 என விதித்துக் கூறியுள்ள ஏவல்களையும், செப்பல், செய்யேல் என இவ்வாறு வழங்கும் எதிர்மறை ஏவல்களையும், வியங்கோட் பொருளில் வாராத ககர ஈற்று ஏவல்களையும்7 அமைக்க.

இகர ஈறு உண்டி, உரைத்தி, தின்றி என இறந்தகால வினைகளோடு கூடிநின்று எதிர்கால முணர்த்திற்கு. உண்டுவா, கொண்டுவா, போய்ஒழி, தந்துதொலை என இவ்வாறு இறந்தகால வினைகளைக் கூடிநின்று ஏவல் வினைகள் மொத்தத்தில் ஏவற்பொருளையும், நிகழ்காலத் தையும் உணர்த்தி நிற்பதேபோல் உண்டு, உரைத்து, தின்று என்னும் இறந்தகால வினைகளோடு ஈகுழூஈழுஇ என்னும் துணைவினை கூடிநின்று ஏவற்பொருளையும் எதிர்காலத் தையும் உணர்த்தி நின்றது என அறிக.

**(16)**

1. வீரசோ. 79;
2. நன். 137;
3. தொல். சொல். 450;
4. வியங்கோட் பொருள் பற்றிச் சிறப்பு நூற்பா உரையிற் காண்க;
5. The Suffix 'cin' in Cankam Tamil-Tamil Culture Vol. VII.
6. தொல். சொல். 451;
7. நன். 338.

**335. முன்னிலை முன்ன ரீயு மேயும்**
**அந்நிலை மரபின் மெய்யூர்ந்தும் வருமே.**

முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்ஊர்ந்தும் வருமே.

munnilai munnar īyum ēyum
annilai marapin mey ūrnṭum varumē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

When i or e is added to (verbs of) the 2nd person some consonant or other that is sanctioned by usage may be inserted (in the middle).

## மயிலை நாதர்

எ–ன், மேலதற்கு எய்தியதொரு சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– ஒருமை முன்னிலை மொழியிடத்து ஈகாரமும் ஏகாரமும் [1]தமக்கேற்ற மெய்யை ஊர்ந்து [2] வருவனவும் சிலவுளவாம், எ– று.

வ–று.:– "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ"

"அட்டி லோலை தொட்டனை நின்மே" என வரும்.

இது, [3] புணர்ச்சிவிதியன்மையின் ஈண்டே வைத்தாரென்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், ஏவல் முற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்–ற்று.

இ–ள்.:– முன்னிலையேவன்முற்று என மேற்கூறியவற்றிற்கு முன்னே ஈகாரமும் ஏகாரமும் ஆண்டு வந்து நிற்றற்குரிய மரபினையுடைய மெய் யாதானும் ஒன்றை ஊர்ந்து வரும், எ–று.

> ஈகார ஏகாரங்களை 'அன் ஆன் அள் ஆள்' என விகுதி கூறியவழி எடுத்தோதாமையானும், மேலைச்சூத்திரத்து ஐ ஆய் இகரங்களோடு ஒருங்கு ஓதாமையானும் இவை விகுதியுருபல்ல என்பதூஉம், ஏவற்கண் வரும் எழுத்துப்பேறு என்பதூஉம், அந்நிலைமரபின் மெய் என விதந்தமையின் அஃது அம் மொழியிறுதி மெய்யன்று என்பதூஉம் பெற்றாம்.
>
> வ–று.:–
>
> [1]"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே" எனவும், [2]"அட்டி லோலை தொட்டனை நின்மே" எனவும் வரும்.
>
> இவ்வெழுத்துப்பேறு 'நட வா மடி' என்னுஞ் சூத்திரத்தின்

பிற்கூறாது ஈண்டுக்கூறினார், இவ்வாறு வரும் ஏவல்கள் பகுதி மாத்திரையன்றி நிற்றலின் இவை முன்னிலை யொருமை விகுதியுருபீற்று வினைமுற்றோ ஏவல்முற்றோ என்று ஐயுறுவார்க்கு ஐயமறுத்தற்கு.

இவற்றிற்கு விகுதியுருபின் பொருள் இன்மையின் முன்னிலை யசையாம் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், மேலதற்கு எய்தியதோர் விதி கூறுகின்றது.

**இ–ள்.: முன்னிலை முன்னர்** – ஒருமை முன்னிலை மொழியிடத்து, **ஈயுமேயும்** – ஈகாரமும் ஏகாரமும், **அந்நிலை மரபின்** – அவ்விடத்துத் தமக்கேற்ற, **மெய்யூர்ந்து வருமே** – ஒற்றெழுத்தைச் சேர்ந்து வருவனவும் சிலவுள, **எ–று.**

**உ–ம்.:–**

"சென்றீ பெரும நிற் றகைக்குநர் யாரே"

"அட்டி லோலை தொட்டனை நின்மே" எனவரும்.

இது புணர்ச்சி விதி அண்மையின் ஈண்டை வைத்தார் என்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** ஏவன் முற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ–ள்.:– முன்னிலைமுன்னர்** – முன்னிலையேவன் முற்றென முன் சொல்லப்பட்டவற்றிற்கு முன், **ஈயும்**–ஈகாரமும், **ஏயும்** –ஏகாரமும், **அந்நிலை மரபின்** – அவ்விடத்து நிற்றற்குரிய மரபினையுடைய, **மெய்**–யாதானுமொருமெய்யை, **ஊர்ந்து**–ஏறி, **வரும்** – வரும், **எ–று.**

**வ–று.:–**

'சென்றீபெரும நிற்றகைக்குநர் யாரே', 'அட்டிலோலை தொட்டனை நின்மே' என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

மேற்கூறிய முன்னிலைக்கண் விகுதிகளல்லாத எழுத்துக்களுமுளவெனக்

கூறுஞ் சூத்திரம் யாது?

முன்னிலை முன்ன ரீயு மேயும்

அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.

(முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்

அந்நிலை மரபின் மெய் ஊர்ந்து வருமே.)

இ–ள்.:– முன்னிலையேவன் முற்றென முன்சொல்லப்பட்டவற்றிற்கு முன் ஈகாரமும் ஏகாரமும் அவ்விடத்து நிற்றற்குரிய மரபினையுடைய யாதானுமொரு மெய்யை யூர்ந்து வரும், எ–று.

வ–று.:–

"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே" எனவும், "அட்டிலோலை தொட்டனை நின்மே" எனவும் வரும். இவ்வீகார ஏகாரங்கள் விகுதிகளல்ல; ஆய்விகுதி குறைந்த ஏவலில் வருமுன்னிலையசையாம். இங்கே, ஈயும் ஏயும் முறையே றகரவொற்றையும் மகரவொற்றையும் ஊர்ந்து வந்தன. றகரவொற்றும் மகரவொற்றும் எழுத்துப்பேறு.

## முகவை இராமானுச கவிராயர்

இது, ஏவல் வினைமுற்றிற்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி யுணர்த்திற்று.

இ–ள்.:– முன்னிலை முன்னர் – மேற்கூறிய முன்னிலையேவல் வினைகளின் முன், ஈயுமேயும் – ஈகாரமும் ஏகாரமும், அந்நிலை மரபின் மெய்– அங்கே நிற்றற்குரிய தன்மையை யுடைய மெய்யாதாயினு மொன்றை, ஊர்ந்து வரும் – நடத்திவரும், எ–று.

வ –று.:–

சென்றீபெரும் எனவும் 'அட்டிலோலை தொட்டனை நின்மே' எனவும் வரும். இந்த ஈகார ஏகாரங்கள் முறையே, றகர ஒற்றையும் மகர ஒற்றையும் ஊர்ந்து வந்தன. செல், நில், என்னும் ஏவல்வினைகள், மயக்க விதியில்லாததினாலே, ஈறு திரிந்து நின்றன. (மயக்கம்–இணக்கம், விதி – இலக்கணம்). இவற்றிற்கு விகுதியுருபின் பொருளில்லாததினாலே விகுதிகளாகா எனவும், அவை முன்னிலை அசைச்சொற் களெனவுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– முன்னிலை முன்னர்– முன்னிலை ஏவலொருமை முற்றின்

முன், **ஈயும் ஏயும்** – ஈகாரமும் ஏகாரமும், **அந்நிலை மரபின் மெய்யூர்ந்து** – அவ்விடத்து நிற்றற்கு உரிய தன்மையையுடைய (யாதாயினும்) ஒரு மெய்யை ஏறி, வரும் –

**உ–ம் :–**

செல் – சென்றீ; நில் – நின்மே என வரும்.

குறிப்பு :–

இங்கு 'செல்' 'நில்' என்பன மயக்கவிதி இல்லாததனால் ஈறு திரிந்தன. இந்த ஈகார ஏகாரங்கள் விகுதிகளல்ல; 'ஆய்' விகுதி குறைந்த ஏவலில் வருகின்ற முன்னிலை யசைகளாம். இவை எழுத்துப் பேறாகிய றகர மெய்யையும், மகர மெய்யையும் ஊர்ந்து வந்தன. இவ்வழக்குப் பெரும்பான்மை செய்யுளில் என்க. புதியன புகுதல் என்னும் உத்தியால் ஈர், உம் விகுதிகளும் ஏவற்பன்மைக்கு வருமென்றறிக.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– முன்னிலை முன்னர்** – முன்னிலையேவன் முற்றென முன்சொல்லப்பட்டவற்றிற்கு முன், **ஈயும் ஏயும்** – ஈகாரமும் ஏகாரமும், **அந்நிலை மரபின் மெய் ஊர்ந்து வரும்** – அவ்விடத்து நிற்றற்குரிய மரபினையுடைய யாதானுமொரு மெய்யை யூர்ந்து வரும், **எ–று.**

வ–று.:–

"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ" எனவும், "அட்டிலோலை தொட்டனை நின்மே" எனவும் வரும். இவ்வீகார ஏகாரங்கள் விகுதிகளல்ல; ஆய்விகுதி குறைந்த ஏவலில் வரு முன்னிலையசையாம். இங்கே, ஈயும் ஏயும் முறையே றகர வொற்றையும் மகர வொற்றையும் ஊர்ந்து வந்தன. றகர வொற்றும் மகர வொற்றும் எழுத்துப்பேறு.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– முன்னிலைமுன்னர்** – முன்னிலையேவன் முற்றென முன்சொல்லப்பட்ட வற்றிற்குமுன், **ஈயும் ஏயும்** – ஈகாரமும் ஏகாரமும் – **அந்நிலை மரபின் மெய் ஊர்ந்து வரும்** – அவ்விடத்து நிற்றற்குரிய மரபினையுடைய யாதானுமொரு மெய்யை யூர்ந்துவரும். **எ–று.**

வ–று.:–

"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே" எ–ம். "அட்டிலோலை தொட்டனைநின்மே". எ–ம். வரும். இவ்வீகார ஏகாரங்கள் விகுதிகளல்ல; ஆய்விகுதிகுறைந்த ஏவலில் வரும் முன்னிலையசையாம். இங்கே ஈயும், ஏயும் முறையே றகரவொற்றையும் மகரவொற்றையும் ஊர்ந்து வந்தன. றகரவொற்றும் மகரவொற்றும் எழுத்துப் போறு.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– முன்னிலை முன்னர்** – முன்னிலை யேவலொருமை முற்றிற்கு முன், **ஈயும் ஏயும்** – ஈகாரமும் ஏகாரமும், **அந் நிலை மரபின் மெய் ஊர்ந்து** – அவ்விடத்து நிற்றற்கு உரிய தன்மையையுடைய (யாதாயினும் ஒரு_) மெய்யின்மேல் ஏறி, வரும் ; **எ–று.**

**உ–ம்.:–**

**செல்** – சென்றீ எனவும், **நில்** – நின்மே எனவும் வரும்.

இங்கே செல், நில் என்பன, மயக்க விதியில்லாததனால், ஈறு திரிந்தன. இந்த ஈகார ஏகாரங்கள், விகுதிகளல்ல; 'ஆய்' விகுதியில்லாத ஏவலில் வருகின்ற முன்னிலையசைகளாம். றகரமெய்யும், மகரமெய்யும் எழுத்துப்பேறு.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– முன்னிலை முன்னர்** – முன்னிலையேவன் முற்றென முன் சொல்லப்பட்டவற்றிற்கு முன், **ஈயும் ஏயும்** – ஈகாரமும் ஏகாரமும், **அந்நிலை மரபின் மெய் ஊர்ந்து வரும்** – அவ்விடத்து நிற்றற்குரிய மரபினையுடைய யாதானுமொரு மெய்யை யூர்ந்து வரும். **எ–று.**

**(உ–ம்.)**

"சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே." "அட்டிலோலை தொட்டனை நின்மே."

இவ்வீகார ஏகாரங்கள் விகுதிகளல்ல; ஆய்விகுதி குறைந்த ஏவலில் வரும் முன்னிலையசையாம். இங்கே ஈயும் ஏயும் முறையே றகரவொற்றையும் மகரவொற்றையும் ஊர்ந்து

1. தொல். சொல். 45;

வந்தன. றகர வொற்றும் மரகவொற்றும் எழுத்துப்பேறு.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ—ள்.)** இர் ஈர் ஈற்ற இரண்டும் – இர் ஈர் என்கிற இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **இருதிணை** – இருதிணைக்கும் பொதுவாகிய, **பன்மை முன்னிலை** – பன்மை முன்னிலை வினைமுற்றும் குறிப்புமுற்றுமாம்; **மின்** – மின்விகுதியை இறுதியிலுடைய மொழிகள், **அவற்று ஏவல்** – முன்மிலைப்பன்மை ஏவல் முற்றாம். **(எ—று.)**

**(பொ—ரை.)** இர் ஈர் என்னும் இருவிகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் இருதிணைப்பன்மை முன்னிலை தெரிநிலை வினைமுற்றும் குறிப்புவினை முற்றுமாம்; மின் என்னும் விக்ுதியை இறுதியிலுடைய மொழிகள் இருதிணைப்பன்மை முன்னிலை ஏவல் முற்றாம்.

மின் விகுதியன்றி ஏவற்பன்மைக்கு ஈர், உம் விகுதிகளும் இக்காலத்து வழங்கிவருதலால் 'புதியன புகுதலும் வழுவல்' என்பதனாற்கொள்க.

**(உ—ம்.)**

இறந்தகாலம்

உண்டனிர்

உண்டீர்

நிகழ்காலம்

உண்கின்றனிர்

உண்கின்றீர்

எதிர்காலம்

உண்பிர்

உண்பீர்

நீர்

---

பாட வேறுபாடு.:–

1. அகம். 46;
2. நற். 300.
3. மொழியியற் கட்டுரைகள்—டாக்டர் மு.வரதராசனார்—பக்.249;
4. வீரசோ. 79
5. பதிற் 64;
6. கலி 94;

குழையிர்

குழையீர்

குறிப்பு. தெரிநிலை

இர்.

ஈர்.

மின்.

உம்.

உண்மின், உண்ணீர், உண்ணும் என ஏவற்பன்மை வினை முற்றுக்கள் வந்தன.

## கா. நமச்சிவாய முதலியார்

முன்னிலை முன்னர் - முன்னிலை யேவல்முற்றின் முன், ஈயும் - ஈகாரமும் ஏயும் - ஏகாரமும், அந்நிலை மரபின் - அவ்விடத்து நிற்றற்குரிய மரபினையுடைய, மெய்- யாதானும் ஒரு மெய்யை, ஊர்ந்து - ஏறி, வரும் - வரும்.

உதாரணம்

'சென்றீ பெரும நிற் றகைக்குநர் யாரே' - ஈ.
'அட்டி லோலை தொட்டனை நின்மே' - ஏ.

என வரும்.

இங்கே, ஈகாரமும் ஏகாரமும் விகுதிக ளல்ல; ஏவலில் வரும் முன்னிலை அசையாம். இந்த அசைகள் ஊர்ந்து நின்ற றகர மெய்யும் மகரமெய்யும் எழுத்துப்பேறு என்பர்.

## மோசசு பொன்னையா

முன்னிலை வினைமுற்றின் முன் ஈகார ஏகாரங்கள் அவ்விடத்தில் நிற்றற்குரிய தன்மையை உடைய யாதானுமொரு மெய்யினை ஊர்ந்து ஏவற்பொருளில் வரும். எ—று.

> இது தொல்காப்பிய நூற்பா1. செய்யாய் என்னும் முன்னிலை வினைமுற்று செய்யென்னும் வாய்பாட்டு ஏவல் வினைப் பொருளில் வரும் வழக்கினை எடுத்துக்கூறும் நூற்பாவின்

---

1. இடையியலில் விளக்கங் காண்க;

2. தொல். எழு. 152.

பின்னர் இதனை அவர் அமைகின்றார் ஆதலின், இதன்கண் ஏவல் மரபே கூறப்பட்டது என்பது போதரும். முன்னர் என்றது இடமுன்னை எனக் கொள்க.

'ஈகாரம் ஒன்றே யாக, புக்கீ, உண்டீ, உரைத்தீ, சென்றீ என முன்னிலைவினைகளின் ஈற்று வேறுபாட்டிற்கேற்ப மெய் வேறுபட்டு வருதலான், அந்நிலை மரபின் மெய் என்றார். ஏகாரம் மகர மூர்ந்தல்லது வாராது' என்பது சேனாவரையம்.

எ-டு.:-

1.சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரே1

2.அட்டி லோலை தொட்டனை நின்மே2

ஈகாரத் துணைவினை பற்றி முந்திய நூற்பாவின் உரையிற் கூறப்பட்டது. ஆண்டு ஈகாரம் திரிந்து நின்றது, ஈண்டுத் திரியாது நின்றது. நின்மே என்னுஞ் சொல்லை நில்>நின்+உம்>ம்+ஏன்>ஏ எனப் பகுத்து அதன் ஈற்றில் நிற்கும் ஏகாரம் ஏன் என்ற வினா இடைச்சொல்லின் திரிபே என்பர்.3 ஈண்டு அவ்வினா இடைச்சொல் தனது வினாப்பொருளை இழந்து மரியாதை ஏவலான உம் இடைச்சொல்லை அடுத்து உரையசையாக நிற்கின்றது எனக் கொள்க.

வீரசோழிய ஆசிரியர் முன்னிலைச்சிறப்பு (மரியாதை) ஏவலின் கண் உம் என்னும் பிரத்தியம் (இடைச்சொல்) வரும் எனக் கூறியுள்ளார்.4 செய்மின், செய்மே என்னும் சொற்களில் அடங்கி இருக்கும் உம்மையே அது என்பதை அதன் உரையின் பழைய அடிக்குறிப்பு விளக்குகின்றது. எனினும், நின்மே என்னுஞ் சொல்லை நில்+ஈகும்>ஈம்>ம்+ஏன்>ஏ எனப் பிரித்து ஈகு என்னும் வினையின் பன்மையே ஈகும் எனக் கொள்ளின் மிகப் பொருந்துவதாகும். பதிற்றுப்பத்தில்

புறஞ்சிறை வயிரியர்க் காணின் வல்லே

எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவி

அலங்கும் பாண்டில் இழையணிந் தீம்என

ஆனாக் கொள்கையை,5

என வரும் இடத்தில் ஈகும் என்னும் துணைவினை ஈம் எனத் திரிந்து நின்றது. கலித்தொகையில் ஒருமையில் நின்றீத்தை6 என்றவிடத்து அதனுடன் அத்தும் ஐயும் கூடிநின்றன; நின்றீக்க என்றவிடத்து மரியாதைப் பொருள் தரும் ககரம் பெற்று நின்றது. சென்மோ என்பது ஓகாரம்1பெற்றுப்

பன்மையில் வந்தது.

தொல்காப்பியர்,

ஔவென வரூஉம் உயிரிறு சொல்லும்

ஞநமவ வென்னும் புள்ளி யிறுதியும்

குற்றிய லுகரத் திறுதியும் உளப்பட

முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே,2

என எழுத்தோத்துள் விதித்துள்ளார் ஆதலின், ஈண்டு இவ்வாறு இவர் நூற்பா செய்தார் போலும்.

(17)

**336. இர்ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப்
பன்மை முன்னிலை மின்னவற் றேவல்.**

**இர் ஈர் ஈற்ற இரண்டும் இரு திணைப்
பன்மை முன்னிலை மின் அவற்று ஏவல்.**

ir īr īṟṟa iraṇṭum irutiṇaip
paṉmai muṉṉilai miṉ avaṟṟu ēval.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Second person plural**

The 2nd Person plural ends in ir and ir and is common of the two classes, but those which are imperatives end in min.

## ஒப்புமைப் பகுதி

இர்ஈர் மின்என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர்

(தொல். சொல்.: 224)

மின்னும் இர்ஈரும் விளம்பும் இருதிணையின்
முன்னிலைப் பன்மைக்கா மொய்குழலாய்

(நேமி.: 67: 1–2)

இர்ஈர் ஈற்ற விரண்டும் இருதிணைப்

பன்மை முன்னிலையும் மின் உம் ஈற்ற
வன்ன அவற்று ஏவலுமாம் என மொழிப

(இ.வி.: 238 : 5–7)

இர்ஈர் மின்னீ றாம்பெயர்க் கிளவி
பல்லோர் மருங்கினும் பலவொடும் சிவணும்

(மு.வீ.: 619)

............... இர் ஈர்
பெறும் ஏவலிலும் மின் முன்னிலைப் பல்லீறே

(சுவாமி.: 50:4)

## மயிலை நாதர்

எ–ன், முன்னிலைப்பன்மை வினையும் வினைக்குறிப்புமுற்றும் உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– இவ்விரு விகுதியீற்று மொழியிரண்டும் இருதிணை முன்னிலைப்பன்மையை புணர்த்தும் வினை வினைக்குறிப்புமுற்றாம் ; மின்னென்பது அப்பன்மை யேவற்கண் வரும், எ–று.

வ–று.:–

உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்குவிர் ; உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர், உண்மின் எனவும், தாரினிர், தரையினிர், காரினிர், காலினிர், வலியினிர், வரவினிர் எனவும், தாரினீர், தரையினீர், காரினீர், காலினீர், வலியினீர், வரவினீர் எனவும் வினை நீயிரென்னும் பெயர் தந்து கொள்க. வினைக்குறிப்பு முற்று வந்தன.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், முன்னிலைப்பன்மை வினைமுற்றும் குறிப்பு முற்றும் உணர்–ற் று.

இ–ள்: இர் ஈர் என்னும் இரு விகுதியினையும் இறுதியாக வுடையமொழிகள் இருதிணைப்பன்மை முன்னிலை வினைமுற்றும் குறிப்பு முற்றுமாம். மின் என்னும் விகுதியை இறுதியாகவுடைய மொழிகள் இருதிணைப்பன்மை முன்னிலை ஏவன்முற்றாம், எ–று.

வ – று:–

உண்டனிர், உண்ணா நின்றனிர், உண்குவிர், உண்டீர், உண்ணா நின்றீர், உண்பீர், உண்மின் எனவும்;

குழையினிர், குழையீர்; நீர் எனவும் வரும்.

மின்னவற்றேவல் என்றமையான், **உண்ணும், தின்னும்** : நீர் என உம்மீற்றவாய் வரும் பன்மையேவல் புதியன என்பதூஉம், அவை **'புதியன புகுதலும் வழூவல'** என்பதனான் அமையும் என்பதூஉம் பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், விரவுத் திணை முன்னிலைப் பன்மைத் தெரிநிலை வினை முற்றும் குறிப்பு வினைமுற்றும் கூறுகின்றது.

இ–ள்.:– **இர்ஈரீற்ற விரண்டும்** – இர், ஈர் என்னும் இவ்விரண்டு விகுதியினையும் ஈறாகவுடைய மொழிகள், **இருதிணைப் பன்மை முன்னிலை** – விரவுத்திணை முன்னிலைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்றும் குறிப்பு வினைமுற்றுமாம்; **மின்னவற்றேவல்** – மின் விகுதியை ஈறாகவுடைய மொழிகள் விரவுத் திணை முன்னிலைப் பன்மையாய் ஏவற் பொருண்மையின் வரும், எ–று.

உ–ம்.:–

**உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்குவிர்; உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர்; உண்மின்** என இம்மூவிகுதி சேர்ந்த விரவுத் திணை முன்னிலைப் பன்மைத் தெரிநிலை வினைமுற்று. **தாரினிர், தரையினிர் காரினிர், காலினிர், வலியினிர்** எனவும் **தாரினீர், தரையினீர், காரினீர், காலினீர், வலியினீர்** எனவும் இவ்விரு விகுதி சேர்ந்த விரவுத் திணை முன்னிலைப் பன்மைக் குறிப்புவினை வந்தன.

## விசாகப் பெருமாளையர்

**இது**, முன்னிலைப் பன்மை வினை முற்றுங் குறிப்பு வினைமுற்றும் உணர்த்துகின்றது.

**இ–ள்.: இர் ஈரீற்றவிரண்டும்** – இர் ஈர் என்கிற இரண்டு விகுதிகளையு மிறுதியிலுடைய மொழிகள், **இருதிணை**–இருதிணைக்கும், பொதுவாகிய, **பன்மை முன்னிலை** –பன்மை முன்னிலை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமாம், **மின்** – மின் விகுதியை யிறுதியிலுடையமொழிகள், அவற்றேவல் – முன்னிலைப்பன்மையேவன் முற்றாம், எ–று.

(உம் விகுதி முன்னிலைப்பன்மை யேவலுக்கு இக்காலத்தில் வழங்கி வருதலால் **'புதியன புகுதலும் வழூவல'** என்பதனாற்கொள்க.)

**வரலாறு:–**

தெ–இ தெ–நி தெ–எ கு

இர்–உண்டனிர்–உண்கின்றனிர்–உண்பிர்–குழையிர்

ஈர்–உண்டீர்–உண்கின்றீர்–உண்பீர்–குழையீர்

மின் – – உண்மின்–

உம்– – உண்ணும் –

என வரும், மற்றவையு மிப்படியே.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

55. முன்னிலைப்பன்மை வினைமுற்று இவையெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

இர் ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப்

பன்மை முன்னிலை மின்னவற் றேவல்.

(இர் ஈர் ஈற்ற இரண்டும் இருதிணைப் பன்மை முன்னிலை மின் அவற்று ஏவல்.)

**இ–ள்.:–** இர் ஈர் என்னும் இரண்டுவிகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் இருதிணைக்கும் பொதுவாகிய பன்மைமுன்னிலை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம். மின்விகுதியை இறுதியிலுடைய மொழிகள் முன்னிலைப் பன்மை யேவன்முற்றாம், எ–று.

மின் விகுதியன்றி, ஈர் உம் விகுதிகளும் முன்னிலைப்பன்மை யேவலுக்கு வருமெனக் கொள்க.

(வரலாறு)

| இ. தெரி. | நி. தெரி. | எ. தெரி. | குறி. |
|---|---|---|---|
| உண்டனிர் | உண்கின்றனிர் | உண்பிர் | குழையினிர் |
| உண்டீர் | உண்கின்றீர் | உண்பீர் | குழையீர் நீர் |

உண்மின், உண்ணீர், உண்ணும் என ஏவல்வினைமுற்று வந்தன.

## முகவை இராமானுச கவிராயர்

இது, முன்னிலைப்பன்மை வினைமுற்றுங் குறிப்பு முற்றுமுணர்த்திற்று.

**இ–ள்.:–** இர் ஈர் என்னும் இரண்டுவிகுதிகளை யீறாகவுடைய மொழிகள், இருதிணைக்கும் பொதுவாகிய முன்னிலைப் பன்மைவினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், மின் என்னும் விகுதியை ஈறாகவுடைய மொழிகள் அந்த இருதிணைப் பன்மை முன்னிலை ஏவல் முற்றாம், எ–று.

வ-று.:-

உண்டனிர், உண்ணாநின்றனிர், உண்குவிர், உண்டீர், உண்ணாநின்றீர், உண்பீர் எனவும் குழையினிர், குழையீர் எனவும் உண்மின், நீர் எனவும் வரும். மின்னவற்றேவலென்றதினாலே, உண்ணும், தின்னும், நீர் என உம் இறுதியாய் இக்காலத்துப் பயின்றுவரும் பன்மை ஏவல்கள் புதியன எனவும்; அவை 'புதியன புகுதலும் வழுவல' என்பதினாலே அமையு மெனவுங் கொள்க. இரண்டும் பன்மை முன்னிலை, மின், ஏவல் என இரு முடிபாக்குக.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :-** **இர் ஈர் ஈற்ற இரண்டும்** - இர் ஈர் என்கிற இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **இருதிணை** - இரண்டு திணைக்கும் பொதுவாகிய, **பன்மை முன்னிலை** - முன்னிலைப் பன்மைத் தெரிநிலை முற்றுங் குறிப்புமுற்றுமாம்; **மின்**- 'மின்' விகுதியை இறுதியிலுடைய மொழிகள், **அவற்று ஏவல்** - முன்னிலை ஏவற்பன்மை முற்றாம்.

| உ-ம் : | இறப்பு | நிகழ்வு | எதிர்வு | குறிப்பு | |
|---|---|---|---|---|---|
| இர் - | உண்டினிர் | உண்கின்றனிர் | உண்பிர் | குழையிர் | நீர். |
| ஈர் - | உண்டீர் | உண்கின்றீர் | உண்பீர் | குழையீர் | |
| மின் - | உண்மின் | உண்ணீர் | உண்ணும் - (ஏவற்பன்மை) | | |

## ஆறுமுக நாவலர்

**இ-ள்.:-** **இர் ஈர் ஈற்ற இரண்டும்** - இர் ஈர் என்னும் இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **இருதிணைப் பன்மை முன்னிலை** - இருதிணைக்கும் பொதுவாகிய பன்மை முன்னிலை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், **மின் அவற்று ஏவல்** - மின் விகுதியை இறுதியிலுடைய மொழிகள் முன்னிலைப் பன்மை யேவன் முற்றாம், எ-று.

மின் விகுதியன்றி, 'ஈர், உம்' விகுதிகளும் முன்னிலைப்பன்மை யேவலுக்கு வருமெனக் கொள்க.

வ-று.:-

இ.தெரி. நி.தெரி. எ. தெரி. குறி.

உண்டனிர் உண்கின்றனிர் உண்பிர் குழையினிர் நீர்

உண்டீர் உண்கின்றீர் உண்பீர் குழையீர்

உண்மின், உண்ணீர், உண்ணும் என ஏவல்வினைமுற்று வந்தன.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள்.:— இர் ஈர் ஈற்ற இரண்டும்** — இர் ஈர் என்னும் இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **இருதிணைப் பன்மை முன்னிலை**—இருதிணைக்கும் பொதுவாகிய பன்மை முன்னிலை வினைமுற்றுங் குறிப்புமுற்றுமாம், **மின் அவற்று ஏவல்** — மின் என்னும் விகுதியை ஈறாகவுடைய மொழிகள் அவ்விருதிணைப் பன்மைமுன்னிலையேவன் முற்றாம். **எ—று.**

மின்னவற்றேவல் என்றதினால் மின்விகுதி குறிப்புவினையில் வாராதெனக் கொள்க. முன்னிலையேவற்பன்மைக்கு, ஈர் என்னும் விகுதியும் புதியன புகுதலால் உம் என்னும் விகுதியும் வருமெனக் கொள்க.

வரலாறு:—

| இ.தெரி | நி.தெரி | எ .தெரி | குறிப் | |
|---|---|---|---|---|
| உண்டனிர் | உண்கின்றனிர் | உண்பிர் | குழையினிர் | |
| உண்டீர் | உண்கின்றீர் | உண்பீர் | குழையீர் | நீர் |

## வை. மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:— **இர் ஈர் ஈற்ற இரண்டு** — இர் ஈர் என்கிற இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **இரு திணை** — இருதிணைகளுக்கும் பொதுவாகிய, **பன்மை முன்னிலை** — முன்னிலைப்பன்மைத் தெரிநிலைமுற்றும் குறிப்புமுற்றும் ஆம்; **மின்**— 'மின்' விகுதியை இறுதியிலுடைய மொழிகள், **அவற்று ஏவல்** — முன்னிலை ஏவற் பன்மை முற்றாம்; எ— று.

---

1. மொழியியற் கட்டுரைகள்—பக். 249;
2. புறம். 9;
3. புறம். 87;
4. புறம். 152;
5. புறம்.35;
6. புறம். 40.

ஏவற்பன்மைக்கு 'ஈர்' 'உம்' விகுதிகளும் புதியனபுகுதலால் வரும்.

உ – ம்.:–

இறப்பு. நிகழ்வு. எதிர்வு. குறிப்பு.

இர் உண்டனிர் உண்கின்றனிர் உண்பிர் குழையிர் நீர்

ஈர்– உண்டீர் உண்கின்றீர் உண்பீர் குழையீர்

உண்மின், உண்ணீர், உண்ணும் என ஏவற்பன்மை வினைமுற்றுக்கள் வந்தன.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– இர் ஈர் ஈற்ற இரண்டும்** – இர் ஈர் என்னும் இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், இருதிணைப் பன்மை முன்னிலை – இருதிணைக்கும் பொதுவாகிய பன்மை முன்னிலைத் தெரிநிலை வினைமுற்றும குறிப்புமுற்றுமாம். **மின் அவற்று ஏவல்** – மின்விகுதியை இறுதியிலுடைய மொழிகள் முன்னிலைப்பன்மை யேவன் முற்றாம். எ–று.

மின் விகுதியன்றி, ஈர் உம் விகுதிகளும் முன்னிலைப்பன்மை யேவலக்குப் புதியன புகுதலாய் வருமெனக் கொள்க.

(உ–ம்.)

தெரிநிலை குறிப்பு

இறப்பு நிகழ்வு எதிர்வு

இர் – உண்டனிர் உணகின்றனிர் உண்பிர் குழையினிர்

ஈர் – உண்டீர் உண்கின்றீர் உண்பீர் குழையீர் – நீர்

மின் – உண்மின், ஈர் – உண்ணீர், உம் – உண்ணும் – என ஏவல்வினைமுற்று வந்தன.

## கா. நமச்சிவாய முதலியார்

**இர் ஈர் ஈற்ற இரண்டும்** – இர் ஈர் என்னும் இரண்டு விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள், **இருதிணை** – இருதிணைக்கும் பொதுவாகிய, **பன்மை முன்னிலை** – முன்னிலைப் பன்மை வினைமுற்றும் குறிப்பு முற்றுமாம், **மின்** – மின் விகுதியை இறுதியிலுடைய மொழிகள், **அவற்று ஏவல்** – முன்னிலைப் பன்மை யேவல்முற்றாம்.

மின் 'விகுதியே யன்றி ஈர், உம் விகுதிகளும் முன்னிலைப் பன்மை யேவலுக்கு வரும் எனக் கொள்க.

உதாரணம்

இறந்தகாலம் உண்டனிர்

| | | | | |
|---|---|---|---|---|
| | | | – உண்டீர் | |
| | தெரிநிலை | நிகழ்காலம் | உண்கின்றனீர் | |
| | | | – உண்கின்றீர். | நீர் |
| இர் | | எதிர்காலம் | உண்பிர் | |
| ஈர் | | | – உண்பீர் | |
| | குறிப்பு | | குழையிர் | |
| | | | – குழையீர் | |

மின், ஈர், உம் – உண்மின், உண்ணீர், உண்ணும் – ஏவல் வினைமுற்று.

## மோசகு பொன்னையா

இர், ஈர் என்னும் இரண்டு வினைகளையும் ஈற்றிற் பெற்ற முற்றுமொழிகள் உயர்திணை, அஃறிணை என்னும் இரண்டு திணைகட்கும் பொதுவாகிய முன்னிலைப் பன்மைத் தொழில், குறிப்பு வினைமுற்றுக்களாம்; மின் என்பதை ஈற்றிற் பெற்ற முற்றுமொழிகள் அவ்விரு திணைகளின் முன்னிலைப் பன்மை ஏவல் வினைமுற்றுக்களாம் எ–று.

எ-டு

**தொழில் வினைமுற்று** **குறிப்பு வினைமுற்று**

1. இர்–உண்டனிர்–உண்கின்றனிர்–உண்பிர்–குழையிர்

   ஈர்–உண்டீர்–உண்கின்றீர்–உண்பீர்–குழையீர்

2. நீர் உண்மின்–முன்னிலைப்பன்மை ஏவல்

   நீர் உண்ணும், உண்ணீர்; நீங்கள் உண்ணுங்கள் என்பவற்றைப் புதியன புகுதலாகக் கொள்க. உண்மின் என்பது உண்+உம்>ம்+ஏன்>என்>இன் எனப் பகுக்கப்படும் என்பார் டாக்டர் மு.வரதராசனார்.1 ஏன் பற்றிய விளக்கத்தை முந்திய நூற்பா உரையிற் காண்க. தொல்காப்பியர் இவ்வாறே மோ, மதி, சின், மே எனப் பல இடைச்சொற்களைப் பிறழ்பிரிப்பால்

பாட வேறுபாடு.:–

1. மயிலியலாட்டி
2. யாவருங்கேட்க
3. பாணன்
4. நடுக்கின்று நிலையரோ
5. நீ வாழிய
6. இருதிணைக்கண்ணும்

உருவாக்கினார் எனக் கொள்க. எனவே, சங்க இலக்கியங்களில் வரும், சேர்மின்,2 ஓம்புமின்,3 தொடுமின்4 என்பவற்றைப் போன்றே கேண்மதி,5 ஆகுமதி6 எனவும்,

செய்ம்மே எனவும் மொழிமோ, உரைமோ, உள்ளுமோ எனவும் வருவனவற்றையும், கொண்ம் வாரும் என உரையசை பெறாமல் வருவனவற்றையும் மரியாதைப் பன்மை ஏவல்கள் எனக் கொள்க. கேண்மியா, சென்மியா என்பவும் அவை.

முன்னிலைப் பன்மை பற்றிய தொல்காப்பிய நூற்பா,

இர்ஈர் மின்னென வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர்,

*என்பதாகும்.*

(18)

## 337. கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
## இயலு மிடம்பா லெங்கு மென்ப.

க ய ஒடு ரவ் ஒற்று ஈற்ற வியங்கோள்
இயலும் இடம் பால் எங்கும் என்ப.

ka ya otu rav oṟṟu īṟṟa viyaṅkōḷ
iyalum itam pāl eṅkum eṉpa.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**optatives**

Verbs ending in ka, ya and r are optatives and they are common to all the persons and Genders.

### ஒப்புமைப் பகுதி

அவற்றுள்
முன்னிலை தன்மை ஆயி ரிடத்தொடும்
மன்னா தாகும் வியங்கோள் கிளவி

(தொல். சொல்.: 226)

கயவொடு ரவ்வொற் றல்ஆல் உம்மார்
ஐகா னீற்ற வியங்கோண் முற்றவை
யெய்தும் இடம்பால் எங்கும் என்ப

(இ.வி.: 239)

தன்மை முன்னிலையொடு சாரா வியங்கோள்

(மு.வீ.: 621)

## மயிலை நாதர்

எ-ன், வியங்கோண்முற்று உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்.: ககார யகாரங்களையும் ரகாரவொற்றையும் ஈறாகவுடைய மொழிகள் வியங்கோள்முற்று வினையாம்; அது மூவிடத்து ஐம்பாற்கண்ணும் நடக்குமென்பர், ஆசிரியர், எ-று.

'ரவ்வொற்று' எனவே ஏனைய உயிர்மெய்யாம் என்க.

வ-று.:-

"அமுத முண்கநம் [1]மயலி லாட்டி", "அருளிலர் கொடாமை வல்ல ராகுக", "பெறுகதி லம்ம யானே", "மடவ மாக மடந்தை நாமே", "கேட்டிது மறக்க நம்பி" "[2]யாவிருங்கேட்க" "வெல்க வாழிநின் வென்றி வார்கழல், செல்க தீயன சிறக்க நின்புகழ்" எனவும், "யான்வாழு நாளும் [3]பண்ணன் வாழிய", "மன்னிய பெருமநீ நிலமிசை யானே" எனவும், "நடுக்கின்றி நிலியரோ வத்தை", "[5]நீவா ழியர்நின் றந்தை, தாய்வா ழியர்நிற் பயந்தி சினாரே" எனவும் [6] இடம் பாலெங்கும் வந்தன.

வியங்கோள் மூவிடத்தும் வருதலின், ஏவலுள் அடங்காதென்க.

## சங்கர நமச்சிவாயர்

எ-னின், வியங்கோண்முற்று உணர்-ற்று.

இ-ள்.:- க ய என்னும் இரண்டு உயிர்மெய்யினையும் ரகர ஒற்றினையும் இறுதியாக உடையன வியங்கோள்முற்றாம்; அவை மூவிடத்தினும் ஐம்பாலினும் செல்லும் என்று சொல்லுவர் புலவர், எ-று.

'ரவ்வொற்று' என்றமையான் முன்னைய இரண்டும் உயிர்மெய் என்பதூஉம், 'ஒடு' என்றமையான் ரகரவொற்றுக் ககர யகர உயிர்மெய்கள்போல் தனித்தியலாது யகரத்தோடு வரப்பெறும் என்பதூஉம், 'என்ப' என்றமையான் இம்மூன்று ஈற்றவும் தொன்றுதொடு நெறிய என்பதூஉம் பெற்றாம்.

வ-று.:- வாழ்க, வாழிய, வாழியர், நிலீயர் : யான், யாம், நீ,

நீர், அவன், அவள், அவர், அது, அவை எனவும் ; [1] "பெறுகதில் அம்ம யானே" [2] "வெல்க வாழிநின் வென்றி வார்கழல், செல்க தீயன சிறக்க நின்புகழே" [3] "மன்னிய பெரும நீ நிலமிசை யானே" எனவும் வாழ்த்துதற் பொருண்மைக்கண் வந்தன. நடக்க, வருக, உண்க, செல்க என உயர்ந்தோன் இழிந்தோனை இன்னது செய்க என விதித்தற் பொருண்மைக்கண் வந்தன. [4]"போற்றியருளுக நின் னாதியாம் பாதமலர்" [5]"எம் கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க" எனவும்; "கடாவுக பாகநின் கால்வல் நெடுந்தேர்" எனவும் வேண்டிக் கோடற் பொருண்மைக்கண் வந்தன.

இங்ஙனம் கூறினார் 'வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே' என அல்லீற்று வியங்கோளும் உடன்பட்டுப் புணர்த்தமையான், எடுத்தோதாப் பிறவீற்றவாய் இருதிணை ஐம்பால் மூவிடங்களினும் வாழ்த்து முதலிய ஏவற் பொருளவாய்ச் சென்றன உளவேல், அவை 'புதியன புகுதலும் வழுவல' என்னும் வழுவமைதியாய் வந்த வியங்கோள் என்பதூஉம் பெற்றாம்.

[6]"பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி எனல்"

என்புழிப் 'பதடியெனல்' என்பது வியங்கோள்; 'மகனெனல்' என்பது எதிர்மறை ஒருமையேவல். இவ்வாறு பிறவீற்றவாய் வருமாயின், அவை வியங்கோளாதல் ஆராய்ந்து கொள்க.

ஏவல், வியங்கோள் என்பன ஒருபொருட்கிளவியாயினும் இருதிணை ஐம்பால் மூவிடங்களினும் செல்லும் ஏவலை வியங்கோள் என்பது தொன்னெறிமரபாம் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், வியங்கோட் டெரிநிலை வினைமுற்று வருமாறு கூறுகின்றது.

இ–ள்.: கயவொடு ரவ்வொற் றீற்ற – ககர யகரங்களையும் ரகார வொற்றையும் இம்மூன்று விகுதியையும் ஈறாகவுடைய மொழிகள், வியங்கோள் – வியங்கோட் டெரிநிலை வினைமுற்றாம்; இயலுமிடம்பா லெங்குமென்ப – அம்மூவிடத்தை தம்பாற்கண்ணும் நடக்கும் என்றார், எ–று.

உ–ம்.:–

"அமுத முண்க", 'நம் மயிலியலாட்டி வாழ்க, வருக, சிறக்க, எழுதுக, துணிக; வாழிய, காணிய, வாழியர், காணியர்; நாம் வருக, தந்தை வாழிய, தாய் வாழிய,

நமர் வாழிய' என மூவிடத்து இரு திணைக்கண்ணும் வியங்கோட்டெரிநிலை வினைமுற்று வந்தன.

## விசாகப் பெருமாளையர்

**இது**, வியங்கோண்முற்று உணர்த்துகின்றது.

**இ–ள்.: கயவொடு** – கய வென்கிற விரண்டுயிர்மெய்யினையும், **ரவ்வொற்று**–ரகர மெய்யினையும், **ஈற்ற**–இறுதியிலுடையமொழிகள், **வியங்கோள்** – வியங்கோண்முற்றுகளாம், **(இடமெங்கும்)** – மூன்றிடங்களிலும், **பாலெங்கும்**–ஐம்பால்களிலும், **இயலும்**–செல்லும், **என்ப** – என்று சொல்லுவர் புலவர், **எ–று.**

**வ–று.:–**

வாழ்க, யான், யாம், நீ, நீர், அவன், அவள், அவர்

வாழிய, அது, அவை, எனவரும், வாழ்த்துப் பொருளில் வந்தன.

வாழியர்,

(இவை அவனுண்க, நீவருக என வுயர்ந்தோ னிழிந்தோனை விதித்தற் பொருளிலும் எம்மைக் காத்தருள்க, ஒரு சொற்கேட்க, என வேண்டிக் கோடற்பொருளிலும், அத்தீயன்கெடுக என வைதற் பொருளிலும் வரும். இப்படி சொன்னவர் தாமே "வகுத்துரையாதவும் வகுத்தனர்கொளலே" என அல்லீறும் உடன்பட்டுப் புணர்த்தமையால் அதுவுங் கொள்க. அன்றியுஞ் சிறுபான்மை இக்கால வழக்கத்தில் நடக்கக்கூடவன் எனவும், நடப்பானாக எனப்பாலிடங்களுள் ஒன்றைச் சேர்ந்து வருவனவுங் கொள்க.)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வியங்கோண்முற்றும் அவை வருமிடமும் இவை எனக் கூறுஞ் சூத்திரம் யாது?

கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்

இயலு மிடம்பா லெங்கு மென்ப.

(கய வொடு ரவ்வொற்று ஈற்ற வியங்கோள்

இயலும் இடம் பால் எங்கும் என்ப.)

**இ–ள்.:–** கயவென்னும் இரண்டுயிர்மெய்யினையும் ரகரமெய்யினையும் இறுதியிலுடைய மொழிகள் வியங்கோள்முற்றுக்களாம். அவை மூன்றிடங்களிலும்

ஐம்பால்களிலுஞ் செல்லும் என்று சொல்லுவர் புலவர், எ–று.

வியங்கோள் என்பதன் பொருள் யாது?

இருதிணை யைம்பான் மூவிடங்களிலும் பாந்துபோய்க் கொள்ளும் ஏவல் என்பது அதன் விரிபொருள். வியம்–பரத்தல். கோள்–கொள்வது. வியம்–ஏவல்–கோள்–கொள்வது எனினும் பொருந்தும்.

வரலாறு.:–

| | | | | |
|---|---|---|---|---|
| வாழ்க | உண்க | ஆடுக | யான்,யாம், நீ, நீர், | |
| அவன், | அவள், | அவர், | அது, | அவை. |
| வாழிய | உண்ணிய | ஆடிய | ,, | |
| வாழியர் | உண்ணியர் | ஆடியர் | ,, | |

உரையிற் கோடலென்னு முத்தியால், "நான்மறையறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க," "மக்கட்பதடியெனல்," "மனத்துக்கண் மாசிலனாதல்" என அ, அல், தல் என்பனவும் வியங்கோள் விகுதிகளாய் வருமெனக் கொள்க.

வியங்கோள்வினைமுற்று: "ஆறிரு தடந்தோள் வாழ்க வறுமுகம் வாழ்க" என வாழ்த்துதற் பொருளிலும், நடக்க, வருக. உண்க என உயர்ந்தோன் இழிந்தோனை இன்னது செய்கவென விதித்தற் பொருளிலும், "போற்றி யருளுக நின்னாதியாம் பாதமலர்" என வேண்டிக்கோடற் பொருளிலும், "பரந்து கெடுகவுலகியற்றியான்" என வைதற்பொருளிலும், வருமெனக் காண்க. விதித்தற்பொருள் தன்மையில் வராது.

## முகவை இராமானுச கவிராயர்

இது, வியங்கோள் முற்றுவினைகளா மாறுணர்த்துகின்றது.

இ–ள்.:– க ய என்னும் இரண்டுயிர்மெய்யையும் ரகர வொற்றையும் இறுதியாக உடைய மொழிகள் வியங்கோள் முற்றுவினைகளாம், இவை மூன்றிடத்திலும் ஐம்பாலிலும் செல்லு மென்று சொல்லுவர் புலவர்,எ–று.

உயிர்மெய்களை ஒடுக் கொடுத்துப் பிரித்ததினாலே அவை போலத் தனித்து நில்லாமல், யகரத்தொடுகூடி நிற்கப்பெறும் ரகர ஒற்றெனக் கொள்க.

வ–று.:–

வாழ்க, வாழிய, வாழியர், நிலீயர், யான், யாம், நீ, நீர், அவன், அவள், அவர், அது, அவை என வரும். இனியிவை

"வெல்க வாழி நின் வென்றி வார்கழல்
செல்க தீயன சிறக்க நின்புகழ்"

என வாழ்த்துதற்கண்ணும், நடக்க, வருக, உண்க, என உயர்ந்தோன் இழிந்தவனை விதித்தற்கண்ணும் (விதித்தல் – ஏவுதல்,) 'போற்றி யருளுக', 'கடாவுக பாகநின் கால்வ னெடுந்தேர்', 'வல்லே செயிற் செய்க' என வேண்டிக் கொள்ளுதலிலும், 'பரந்து கெடுக வுலகியற்றியான்' எனத் திட்டுதற் கண்ணும் வருமெனக் காண்க.

இனி 'மொழிந்தபொருளோ டொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்றி முடித்த'லென்னும் உத்தியால், அல், ஆல், உம், மார், ஐ என்னும் விகுதிகளை யுடையனவும் வியங்கோள் முற்றுக்களெனக் கொள்க. இவற்றுள், அல்லீறு, 'மகனெனல் மக்கட் பதடியெனல்' என மகனென்று சொல்லாதொழிக, 'பதடி யென்று சொல்லுக' என எதிர்மறையிலும் உடன்பாட்டிலும் ஆலீறு 'மரீஇய தொரால்', மருவியதை நீக்காதொழிக என விதித்தற்கண் எதிர்மறையிலும்; உம்மீறு, 'வாழ்தல் வேண்டு மிவண் வரைந்தவைகல்' என வாழ்த்துதற் கண்ணும்; 'வரல்வேண்டும்' என வேண்டிக் கொளற்கண்ணும், மாரீறு, 'பாடன்மா ரெமரே' எனப் பாடுவாராகவென வாழ்த்துதற்கு எதிர்மறையிலும்; ஐயீறு, 'அஞ்சாமை யஞ்சுவ தொன்றின்' என விதித்தற்கண் எதிர்மறையிலும் வருமெனக் காண்க. 'நாடா கொன்றோ காடாகொன்றோ' என்பன நாடாகக் காடாக என வருதலால் இவையும் வியங்கோ ளெனவும் இவற்றுள் ஒன்றோ என்பது எண்ணிடைச் சொல்லாதலால், இதுபோலவே 'சீயகங்கன்றரு கெனமொழிந்தனனாக' என்பதில், தருகவென வியங்கோளாய் வேண்டிக் கோடற் பொருளில் வருதலும்; செய்க என்னும் வாய்பாட்டு வியங்கோள் முற்றிற்குச் செய்யாதொழிக என வினையெச்சமும் முடிக்குஞ் சொல்லுமாய் விரிந்து எதிர்மறையா தலும் – செய்யல் என்னும் எதிர்மறை வியங்கோள் விகுதிமேல் விகுதி பெற்றுச் செய்பற்க என நின்று எதிர்மறையாதலும், செய் என்னும் வாய்பாட்டு ஒருமை ஏவற்குச் செய்யல். செய்பால், செய்யேல், செய்யாதை என நின்றெதிர் மறையாதலும்; செய்பும் என்னும் வாய்பாட்டை யுடைய பன்மையேவல், போம் என ஈற்று உயிர்மெய் கெட்டுத் துணிவு தோன்ற நிற்றலும்; போய்விடும், போய்த்தொலையும், போயொழியும் என வினையெச்சமும் முடிக்குஞ் சொல்லுமாய் விரிந்து விரைவும் வெகுளியுந் தோன்ற நிற்றலும்; போ–

என்னும் ஒருமையேவலும்; போய்விடு, போய்த்தொலை, போயொழி என அவ்வாறு நிற்றலும், செய்தல் வேண்டும் என்னும் வியங்கோள் செய்யவேண்டும் என வினையெச்சமும் முடிக்குஞ் சொல்லும் போல நிற்றலுமன்றிச், செய்யட்டும் என இடைக்குறைந்து மரீஇ நிற்றலும்; பிறவுங் காண்க. ஏவல், வியங்கோள் என்னுமிரண்டும் ஒருபொருளிலே வருமாயினும் ஐம்பால் மூவிடங்களிலும் செல்வதை வியங்கோளென்பதும் முன்னிலை யொன்றிற்கே யுரியதை ஏவலென்பதும் தொன்னெறி மரபெனக் காண்க.

**"கயவொடு ரவ்வொற் றல்லா லும்மா**
**ரைகா னீற்ற வியங்கோண் முற்றவை**
**யெய்து மிடம்பா லெங்கு மென்ப"**

எனக் கூறினாருமுளரெனக் காண்க. ஈற்ற வியங்கோள், இவையெய்து மென்ப புலவர் என இரு முடிபாக்குக.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **கயவொடு** – க ய என்கிற இரண்டு மெய்களையும், **ர ஒற்று** – ரகர மெய்யையும், **ஈற்ற** இறுதியிலுடைய மொழிகள், **வியங்கோள்** – வியங்கோள் வினைமுற்றுக்களாம்; (அவை), **இடம்பால் எங்கும்** – மூன்றிடங்களிலும், ஐம்பால்களிலும், **இயலும்** –செல்லும், **என்ப** – என்று சொல்லுவர் (புலவர்)

குறிப்பு :–

(வியம்–ஏவல்; வியங்கோள்–ஏவலைக்கொள்வது) "வியங்கோள் இம்மார் எதிர்வும்" என்றமையால் இது எதிர்காலங் காட்டு மென்றறிக. 'கயவொடு' எனப்பிரித்துக் கூறியதனால் ரகரமெய் அவைபோலத் தனித்து இயலாது யகரத்தைச் சார்ந்தே வருமென்றும், யகரத்தைக் ககரத்தின் பின்வைத்ததனால் அஃது இகர ஈகாரச் சாரியைகளில் ஒன்றைப் பெற்றுவரும் என்றும் அறிக.

உ–ம் : –

| | |
|---|---|
| வாழ்க, வாழிய, வாழியர் | யான், யாம், நீ, நீர் அவன், அவள், |
| உண்க, உண்ணிய, நிலீயர் | அவர், அது, அவை. |

உரையிற் கோடல் என்னு முத்தியால் எழுந்தருள என 'அ' என்பதும், ஒரால் (ஒருவுக) என 'ஆல்' என்பதும்; 'மாசிலனாதல்' (ஆகுக) எனத் 'தல்' என்பதும்; "அஞ்சாமை (அஞ்சற்க) அஞ்சுவது" என 'மை' என்பதும் என்னற்க) என

எதிர்மறையிலும் 'அல்' என்பதும் வியங்கோள் வினைமுற்று விகுதியாய் வருதல் காண்க.

இனி, 'போற்றி' என்பதை இகரவீற்று வியங்கோள் என்பர் **அடியார்க்கு நல்லார்.** இன்னும் 'செய்ய வேண்டும்' என வினை எச்சமும் முடிக்குஞ் சொல்லுமாய் நிற்பதும், 'செய்யப்படும்' என இடை குறைந்து மரீஇ நிற்பதும் வியங்கோள் என்க.

வியங்கோள் – 'சிறக்க' என வாழ்த்துதற்பொருளிலும், 'உண்க' என விதித்தற்பொருளிலும், 'அருளுக' என வேண்டுகோளிற் பொருளிலும், 'அழிக' என வைதற்பொருளிலும், 'வருக' என மகிழ்ச்சிப் பொருளிலும், 'எறிக' என வெகுளிப் பொருளிலும் வரும்.

ஏவல், வியங்கோள் என்னும் இரண்டும் ஏவற்பொருளில் வருவன வாயினும், முன்னிலையில் மாத்திரமே வருவதை ஏவலென்றும், ஐம்பால் மூவிடங்களிலும் வருவதை வியங்கோள் என்றும் பகுத்துக் கூறுவது தொன்றுதொட்டுவரும் முறைமை என்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– க ய வொடு ரவ்வொற்று ஈற்ற வியங்கோள் – க ய** வென்னும் இரண்டுயிர்மெய்யினையும் ரகர மெய்யினையும் இறுதியிலுடைய மொழிகள் வியங்கோண்முற்றுக்களாம், **இடம் பால் எங்கும் இயலும் என்ப** – அவை மூன்றிடங்களிலும் ஐம்பால்களிலுஞ் செல்லும் என்று சொல்லுவர் புலவர், எ– று.

வ–று.:–

வாழ்க உண்க ஆடுகயான், யாம், நீ, நீர், அவன்,

வாழிய உண்ணிய ஆடிய அவள், அவர், அது, அவை.

வாழியர் உண்ணியர் ஆடியர்

உரையிற் கோடலென்னு முத்தியால், **"நான்மறை யறங்களோங்க நற்றவம் வேள்வி மல்க." "மக்கட்பதடியெனல்" "மனத்துக்கண் மாசிலனாதல்"**என அ, அல், தல், என்பனவுங் வியங்கோள் விகுதிகளாய் வருமெனக் கொள்க.

வியங்கோள் வினைமுற்று: **"ஆறிரு தடந்தோள் வாழ்க வறுமுகம் வாழ்க"** என வாழ்த்துதற்பொருளிலும்; நடக்க

வருக, உண்க என உயர்ந்தோன் இழிந்தோனை இன்னது, செய்கவென விதித்தற்பொருளிலும், **"போற்றி யருளுக நின் னாதியாம் பாதமலர்"** என வேண்டிக்கோடற் பொருளிலும், **"பரந்து கெடுக வுலகியற்றியான்"** என வைதற்பொருளிலும், வருமெனக் காண்க. விதித்தற்பொருள் தன்மையில் வராது.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.;– கயவொடு ரவ்வொற்று ஈற்ற வியங்கோள்** – கயவென்னும் இரண்டுயிர்மெய்யினையும் ரகரமெய்யினையும் இறுதியிலுடைய மொழிகள் வியங்கோண்முற்றுக்களாம், **இடம் பால் எங்கும் இயலும் என்ப** – அவை மூன்றிடங்களிலும் ஐம்பால்களிலுஞ் செல்லும் என்று சொல்லுவர் புலவர்.

**வரலாறு**

| | | | |
|---|---|---|---|
| வாழ்க | உண்க | ஆடுக | யான், யாம், நீ, நீர், |
| வாழிய | உண்ணிய | ஆடிய | அவன், அவள், அவர் |
| வாழியர் | உண்ணியர் | ஆடியர் | அது, அவை |

உரையிற்கோடலென்னுமுத்தியால், "நான்மறையறங்களோங்க நற்றவம் வேள்விமல்க", "மக்கட்பதடியெனல்", "மனத்துக்கண்மாசி லனாதல்" என அ, அல், தல், என்பனவும் வியங்கோள்விகுதிகளாய் வருமெனக் கொள்க.

வியங்கோள்வினைமுற்று, "ஆறிருதடந்தோள் வாழ்கவறுமுகம் வாழ்க", என வாழ்த்துதற் பொருளிலும், நடக்க, வருக, உண்க என உயர்ந்தோன் இழிந்தோனை இன்னது செய்கவென விதித்தற்பொருளிலும், "போற்றியருளுகநின்னாதி யாம்பாதமலர்" என வேண்டிக் கோடற்பொருளிலும், "பரந்துகெடுகவுலகியற்றியான்" என வைதற்பொருளிலும் வருமெனக் காண்க. விதித்தற்பொருள் தன்மையில் வராது.

கயவொடு ரவ்வொற்றென்று ஒடுக்கொடுத்தது கய என்பன உயிர்மெய்யென்பதும், பின்பு ய ஒடு ரவ்வொற்றென்று கொண்டு (தனியே ரகர வொற்று வருவதன்று) யகரத்தைச் சார்ந்து வரும் ரகரவொற்றென்பதும் அறிவித்தற்காம்.

வியங்கோள் என்பதும் ஏவல் என்பதுஞ் சொற்பொருளால் ஒக்குமாயினும், ஐம்பால் மூவிடங்களிலுஞ் செல்வதை வியங்கோள் என்பதும் முன்னிலையொன்றற்கே யுரியதை

ஏவலென்பதும் தொன்னெறிமாபெனக் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ—ள்.:— க ய ஒடு — க ய என்கிற இரண்டு உயிர்மெய்களுடன், ர ஒற்று — ரகரமெய்யையும், ஈற்ற — இறுதியிலுடையமொழிகள், **வியங்கோள்**—வியங்கோள் வினைமுற்றுக்களாம் ; (அவை), **இடம் பால் எங்கும்** — மூன்றிடங்களிலும் ஐம்பால்களிலும், **இயலும்** — செல்லும், **என்ப** — என்று சொல்வர், (புலவர்) ; எ—று. இது, எதிர்காலத்துக்கு மாத்திரம் வரும்.

'ரவ்வொற்று' என்றதனால், முன்னைய இரண்டும் உயிர்மெய்யென்பது பெறப்படும். 'கயவொடு' என உயிர்மெய்களை 'ஒடு' என்னும் இடைச்சொற் கொடுத்துப் பிரித்ததனால், ரகரமெய் அவைபோலத் தனித்து நில்லாமல் யகரத்தோடு கூடி நிற்கப்பெறுமெனக் கொள்க. 'க ய' இரண்டனுள் யகரத்தைப் பின்னே வைத்தது, அது தனித்து வராமல் இகரச்சாரியை பெற்றே வருதலால்.

உ—ம்.:—

| | |
|---|---|
| வாழ்க, வாழிய, வாழியர் | யான், யாம்; நீ, நீர்; அவன், |
| உண்க, உண்ணிய, நிலீயர் | அவள், அவர், அது, அவை. |

**உரையிற்கோடலால்** — ஒங்க; எழுந்தருள என 'அ' என்பதும், ஓரால் (ஒருவுக) என 'ஆல்' என்பதும்; 'மாசில னாதல்' (ஆகுக) என 'தல்' என்பதும்; "அஞ்சாமை (அஞ்சற்க) அஞ்சுவது" என 'மை' என்பதும்; "மக்கட் பதடியெனல்" (என்க) என் உடன்பாட்டிலும், "மகனெனல்" (என்னற்க) என எதிர்மறையிலும் 'அல்' என்பதும் வியங்கோள் வினைமுற்று விகுதிகளாய் வருமென்க. 'காட்டி — **இகரவீற்றுவியங்கோள்**' என்பதும், '**வேண்டும் என்பது** — உம் ஈற்றால் வந்ததோர் **ஏவல்கண்ணிய வியங்கோள்**' என்பதும் நச்சினார்க்கினியர் கொள்கை.

வியங்கோள் — வெல்க, சிறக்க என **வாழ்த்துதற் பொருளிலும்**; வருக, உண்க என **விதித்தற் பொருளிலும்** ; அருளுக, ஏக என **வேண்டிக் கொள்ளுதற் பொருளிலும்**;

கெடுக, அழிக என வைதற் பொருளிலும் வருமென்க. மற்றைப் பொருள்களையும் இவற்றில் அடக்கிக் கொள்க.

வியங்கோள் – காரணப்பெயர்; ஏவுதலைக் கொள்வதென்று பொருள்; வியம் – ஏவல்; இப்பொருளாதலை 'வியவர்' என்பதிலும் காண்க.

ஏவலுக்கும் வியங்கோளுக்கும் வேறுபாடு : (1) ஏவல் – கட்டளைப் பொருளில் மாத்திரமே வரும் ; வியங்கோள் – வாழ்த்துதல் முதலிய பல பொருள்களில் வரும். (2) ஏவல் – முன்னிலையில் மாத்திரமே வரும் ; வியங்கோள் – ஐம்பால் மூவிடங்களிலும் வரும். (3) ஏவலில் ஒருமை பன்மை என்ற பகுப்பு உண்டு; வியங்கோளில் அப்பகுப்பு இல்லை.

வியங்கோளும் ஒருவகை ஏவற்பொருள் பற்றியதே யாயினும், முன்னிலையில் மாத்திரமே வருவதை ஏவலென்றும், ஐம்பால் மூவிடங்களிலும் வருவதை வியங்கோளென்றும் பிரித்துக் கூறுவது, தொன்றுதொட்டு வரும் முறைமை யென்க. '**வியங்கோள் மூவிடத்து வருதலின், ஏவலுள் அடங்காதென்க**' என்பது, பழைய உரை.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.;– **கயவொடு ரவ்வொற்று ஈற்ற** – கயவென்னும் இரண்டுயிர் மெய்யினையும் ரகரமேய்யினையும் இறுதியிலுடைய மொழிகள், **வியங்கோள்** – வியங்கோண்முற்றுக்களாம். **இடம் பால் எங்கும் இயலும்** – (அவை) மூன்றிடங்களிலும் ஐம்பால்களிலுஞ் செல்லும், **என்ப** – என்று சொல்லுவர் புலவர். எ–று.

ஏவல் வியங்கோள் இரண்டும் ஒரு பொருளிலே வருமாயினும் ஐம்பால் மூவிடங்களிலும் செல்வதை வியங்கோளென்பதும் முன்னிலை யொன்றற்கே உரியதை ஏவல் என்பதும் மரபு.

(உ–ம்.)

| | | |
|---|---|---|
| க – வாழ்க | உண்க | ஆடுக |
| ய – வாழிய | உண்ணிய | ஆடிய |
| ர் – வாழியர் | உண்ணியர் | ஆடியர் – யான், யாம், |

நீ, நீர், அவன், அவள், அவர், அது, அவை.

உரையிற் கோடல் என்னும் உத்தியால், "நான்மறை யறங்களோங்க நற்றவம் வேள்வி மல்க." – அ. "மக்கட்பதடி யெனல்." – அல். "மனத்துக்கண் மாசிலனாதல்" – தல். என

அ, அல், தல் என்பனவும் விளங்கோள் விகுதிகளாய் வருமெனக்கொள்க.

வியங்கோள் வினைமுற்று : "ஆறிரு தடந்தோள் வாழ்க வறுமுகம் வாழ்க" என வாழ்த்துதற்பொருளிலும், நடக்க வருக உண்க என உணர்ந்தோன் இழிந்தோனை இன்னது செய்கவென விதித்தற்பொருளிலும், "போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்" என வேண்டிக்கோடற்பொருளிலும், "பரந்து கெடுக வுலகி யற்றியான்" வைதற்பொருளிலும் வருமெனக் காண்க. விதித்தற்பொருள் தன்மையில் வாராது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ-ள்.)** கயவொடு ர ஒற்று - க ய என்கிற இரண்டு உயிர்மெய்யினையும் ரகரமெய்யினையும், ஈற்ற - இறுதியிலுடைய மொழிகள், **வியங்கோள்**-வியங்கோள் முற்றுக்களாம்; **இடம் பால் எங்கும்** - மூன்றிடங்களிலும் ஐம்பால்களிலும், **இயலும் என்ப** - செல்லுமென்று சொல்லுவர் புலவர். **(எ-று)**

**(பொ-ரை.)** க, ய என்னும் இரண்டு உயிர்மெய்யினையும், ரகர ஒற்றினையும் இறுதியிலுடைய மொழிகள் வியங்கோள் முற்றாம்; அவை மூவிடத்திலும் ஐம்பாலிலும் செல்லுமென்று சொல்லுவர் புலவர்.

**(உ-ம்.)**

வாழ்க யான், யாம், நீ, நீர், அவன், வாழ்க்குப்

வாழிய அவள், அவர், அது, அவை. பொருள்.

வாழியர்

இவ் வியங்கோள் வினைமுற்று வாழ்க்கு தற்பொருளிலும், உயர்ந்தோன் இழிந்தோனை விதித்தற்பொருளிலும், வேண்டிக் கோடற்பொருளிலும், வைதற் பொருளிலும் வரும்.

"வெல்க வாழிநின் வென்றிவார்கழல்" வாழ்த்துதல்.

"செல்கதீயன சிறக்க நின்புகழ்"

நீ நடக்க

நீ வருக விதித்தல் (ஏவுதல்).

அளன் உண்க (இது தன்மையில் வாராது.0

எம்மைக் காத்தருள்க வேண்டிக் கோடல்.

"வல்லேசேயிற்செய்க"

துயோன் கெடுக.

"பரந்துகெடுக வுலகியற்றியான்" வைதல்.

அ, அல், ஆல், தல், விகுதிகளும் சிறுபான்மை வியங்கோளுக்கு வரும்.

"அறங்களோங்க"

"வேள்விமல்க" அ–விகுதி.

"வகுத்தனர்கொளலே"

"மகனெனல்" அல்–விகுதி.

"மக்கட்பதடியெனல்"

"மரீயஇய தொரால்" –ஆல் – விகுதி.

"மனத்துக்கண் மாசிலனாதல்" –தல் – விகுதி.

அன்றியுஞ் சிறுபான்மை இக் காலவழக்கத்தில் நடக்கக் கடவன், நடப்பானக எனப் பாலிடங்களுள் ஒன்றைச்சேர்ந்து வருவனவும் கொள்க.

(வியங்கோள் – ஏவுதலைக்கொள்வத (வியம்=ஏவல்).)

ஏவலுக்கும் வியங்கோளுக்கும் வேறுபாடு:–

(1) ஏவல் – கட்டளைப் பொருளில் மாத்திரமே வரும்; வியங்கோள் – வாழ்த்துதல் முதலிய பல பொருள்களில் வரும்.

(2) ஏவல் – முன்னிலையில் மாத்திரமே வரும்; வியங்கோள் ஐம்பால் மூவிடங்களில் வரும்.

(3) ஏவல் – ஒருமை பன்மை என்ற பகுப்பில் வரும்; வியங்கோள் – அப் பகுப்பில் வருதல் இல்லை.

("வியங்கோளும் ஒருவகை ஏவற்பொருள் பற்றியதே யாயினும், முன்னிலையில் மாத்திரமே வருவதை ஏவலென்றும், ஐம்பால் மூவிடங்களிலு:ம வருவதை வியங்கோளென்றும் பிரித்துக் கூறுவது, தொன்றுதொட்டு வரும் முறைமை யென்க. வியங்கோள் மூவிடத்து வருதலின், ஏவலுள் அடங்காதென்க"

---

1. தொல்.எழு. 211.
2. தொல்.எழு.211;
3. புறம். 152;
4. புறம். 48;
5. அகம்.66;
6. பதிற். 58;

என்பது பழைபவுரை.)

## கா. நமச்சிவாய முதலியார்

**கயஒடு** – க ய என்னும் இரண்டு உயிர்மெய்யினையும், **ரவ்வொற்று** – ரகர மெய்யினையும், ஈற்ற – இறுதியிலுடைய மொழிகள், **வியங்கோள்** – வியங்கோள் வினைமுற்றுக்களாம், (அவை) **இடம் எங்கும்** – மூன்றிடங்களிலும், **பால் எங்கும்** – ஐம்பால்களிலும், **இயலும்** – செல்லும், **என்ப** – என்று சொல்லுவர் புலவர்.

**உதாரணம்**

| | |
|---|---|
| வாழ்க | யான், யாம், நீ, நீர், |
| வாழிய | அவர், அவன், அவள்; |
| வாழியர் | அது, அவை. |

இவ் வியங்கோள் வினைமுற்று, வாழ்த்தற் பொருளிலும், உயர்ந்தோன் இழிந்தோனை விதித்தற் பொருளிலும், வேண்டிக் கோடற் பொருளிலும், வைதற் பொருளிலும் வரும்.

'வெல்க வாழிநின் வென்றி வார்கழல்'
'செல்க தீயன சிறக்க நின்புகழ்' — வாழ்த்தல்

நீ நடக்க — விதித்தன் (= ஏவுதல்)
நீ வருக — இது தன்மையில் வராது.
அவன் உண்க

எம்மைக் காத்தருள்க
'வல்லே செயிற் செய்க' — வேண்டிக்கோடல்

தீயோன் கெடுக
'பரந்து கெடுக உலகியற்றியான்' — வைதல்

அ, அல், ஆல், தல் விகுதிகளும் சிறுபான்மை வியங்கோளுக்கு வரும்.

'அறங்கள் ஓங்க'
'வேள்வி மல்க' — அ – விகுதி

வகுத்தனர் கொளலே'
'மகனெனல்'
'மக்கட்பதடியெனல்' — அல் – விகுதி

1. வீரசோ, 79.

'மரீஇய தொரால்' – ஆல் – விகுதி.
'மனத்துக்கண் மாசிலனாதல்' – தல் – விகுதி.

அன்றியும், சிறுபான்மை இக்கால வழக்கத்தில், நடக்கக்கடவன், நடப்பானாக எனப் பாலிடங்களுள் ஒன்றைச் சேர்ந்து வருவனவுங் கொள்க.

## மோசசு பொன்னையா

க, ய என்னும் இரண்டு உயிர்மெய்களையும் ர என்னும் மெய்யையும் ஈற்றிற் பெற்ற முற்றுமொழிகள் வியங்கோள் வினை முற்றுக்களாம்; அவை மூன்றிடங்களிலும், ஐம்பால்களிலும் வரும் எனச் சொல்வர் எ–று.

ரவ்வொற்றை ஒடுக்கொடுத்துப் பிரித்தமையின், க, ய என்றது உயிர்மெய்களை என்பது போதரும்

எ–டு

| | | |
|---|---|---|
| வாழ்க, ஒழிக | – | க |
| வாழிய, மன்னிய | – | ய |
| வாழியர், ஆகியர் | – | ர் |

தொல்காப்பியர், எழுத்ததிகாரத்தில் அகர வீற்றுப்புணர்ச்சி அதிகாரப்பட்டு நின்றவிடத்தில், 'ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்'[1] இயல்பாக முடியும் எனக் கூறியுள்ளார். வியங்கோள் பற்றி அஃது ஓரளவு விளக்கந் தருகிறது.

அதனால், வியங்கோள் அகர வீற்றதாகவும் அமையும் என உணரமுடிகின்றதோடு, வியங்கோள் ஏவல் கண்ணி வரும் என்னும் உண்மையும் புலனாகின்றது. கல்லாடனார், 'மற்று,

---

1. தொல். சொல். 226;
2. மரூஉ வழக்கென்றது ஒற்றுமைப் போலி வழக்கை எனக்கொள்க;
3. தொல் சொல் 13;
4. குறள். 196.
5. குறள். 653;
6. கலி. 26;
7. நேமிநாத ஆசிரியர், 'வியங்கோளுந்–தேறும்
இடமூன்றோ டெய்தி யிருதிணையைம் பாலும்
உடனொன்றிச் சேறலும் உண்டு'–(69) என்றார்

இவ்வியங்கோள் ஏவல் கண்ணியதும் ஏவல் கண்ணாததும் என இரு வகைத்து. ஏவல் கண்ணியதாவது உயர்ந்தான் இழிந்தானை இன்னது செய்க என விதித்தல். ஏவல் கண்ணாததாவது இழிந்தான் உயர்ந்தானை இன்னது செய்யப்பெற வேண்டிக்கோடல்,[2] என ஒரு விளக்கவுரை எழுதியுள்ளார். அதனால் விதித்தலும் வேண்டலும் வியங்கோள் எனப்படுவதல்லது ஏவல் கண்ணி வருவதற்கும் ஏவற்கும் வேறுபாடு பெறப்படவில்லை.

இலக்கியங்களில் கண்ணிய ஆண்மை'[3] எனவும், கண்ணிய பெருமகன்'[4] எனவும், 'விளரிப்பண் கண்ணினார்'[5] எனவும் வந்துள்ள இடங்களில் உரைகாரர் 'கண்ணிய' என்பதற்கு 'நினைத்த, கருதிய அல்லது குறித்த' எனப் பொருளுரைத்துள்ளனர். பதிற்றுப்பத்தில் வரும்,

**ஏவல் வியங்கொண்டு இளையரோ டெழுதரும்[6]**

என்ற அடிக்கு, அதன் பழைய உரைகாரர், 'ஏவல் வியங்கொண் டென்றது இளையரை முன்பு போர்க்குக் கையும் அணியும் வகுப்புவழி ஏவித், தாமும் ஏவல்களைச் செய்து என்றவாறு' எனக் குறிப்புவரை வகுத்துள்ளார். எனவே, பிறர் தாமே தொழிற்பட இருக்கும் நிலையைத் தூண்டும் குறிப்போடு பிறரைத் தொழில் கொள்ளுதலே ஏவல் கண்ணுதல் எனவும், அதனை உணர்த்தும் வினைச்சொல்லே வியங்கோளாகும் எனவும் கொள்ளுதல் பொருந்துவதாகும். வீரசோழிய ஆசிரியர் வியங்கோளை இசைவு எனக் குறிப்பிடுவது ஈண்டு நோக்கத்தக்கது.1

தொல்காப்பியர்,

**அவற்றுள்,**

**முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்**

**மன்னா தாகும் வியங்கோள் கிளவி,1**

என வியங்கோள் பற்றிக் கூறியுள்ளார். உரையாசிரியர்களும் பிற்கால ஆராய்ச்சியாளர்களும் வியங்கோள் பற்றிப் பற்பல கருத்துக்களைக் கூறுவாராயினர். தொல்காப்பியர் 'மன்னா தாகும்' என்பதற்குச் 'சிறு வரவின' என இளம்பூரணர் உரை கண்டார். சேனாவரையர், 'ஆயீரிடத்தொடு கொள்ளா

1. Annals of Oriental Research, Madras University IV (1939-40) Pages 1-24.

தென்னாது மன்னாதாகும் என்றதனான், அவ்விடத்தொடு சிறுபான்மை வருதல் கொள்க' எனக் கூறினார். தெய்வச் சிலையார், 'மன்னாது' என்றதற்கு 'நிலைபெறாது' எனப் பொருளுரைத்து, செய்க என்னும் பொருட்கண்ணும், தவிர்க்க என்னும் பொருட்கண்ணும், வேண்டிக்கோடற் பொருட் கண்ணும் வருவது, அதாவது வாழ், உண், தவிர் என்னும் ஏவல் குறித்த சொற்கள், தன்மைப் பெயர்க்கண்ணும், படர்க்கைப் பெயர்க்கண்ணும் ஏலாது முன்னிலை ஒருமைக் கண் நீவாழ், நீஉண், நீதவிர் என ஏற்றலின், ஆண்டுப் பாலுணர்த்துஞ் சொல்லொடு ஒருநிகரனவாகி முன்னிலை வினையுள் அடங்கின. அப்பொருட்கண் தன்மை கூறுவழி, யான் வாழ்வல், உண்பல், தவிர்வல் எனக்கூற வேண்டலின் அவை தன்மை வினையுள் அடங்கின. இனிப்படர்க்கைக்கண் வருங்கால், அவன் வாழ்க, உண்க, தவிர்க எனக்கரம்கடை யார்த்துக் கூற வேண்டுதலின், அவ்வாறு வருஞ்சொல் பாலுணர்த்தாமையின் வியங்கோள் என வேறு குறி பெற்றது. அவன் வாழ்க, அவள் வாழ்க, அவர் வாழ்க, அது வாழ்க, அவை வாழ்க என ஐந்துபாற்கும் உரித்தாகி வந்தவாறு கண்டு கொள்க'[1] எனவும் நீ வாழ்க, உண்க என வருவன மரூஉ வழக்கெனவும்,[2] வாழ்க என்பது வாழி, வாழிய, வாழியர் எனத் திரிந்து வழங்கும் எனவும் கூறியுள்ளார். 'செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்'[3] எனவும், மகனெனல் மக்கட் பதடியெனல்[4] எனவும் வரும்

அல் ஈறுகளையும் ககர' ஈற்றின் திரிபுகள் எனவே அவர் கருதுகின்றார். எனவே ககரஈற்று முற்றுக்களே வியங்கோள் வினை முற்றுக்கள் என்பதே அவரது உறுதியான கொள்கை எனத் தெரிகிறது. ககரஈற்றுக் கோள்கைப் பிடிப்பின் மிகுதியால் அவர், 'என்னுமவர்.... ஓதல் வேண்டும்',[5] 'அவர்....அருளுவார்'[6] என வரும் வினை யீறுகளையும் வேண்டிக்கோடற் பொருளில்

1. புறம். 2;
2. புறம். 6;
3. புறம். 9;
4. புறம். 13;
5. புறம். 14;
6. புறம். 18;
7. புறம். 137;
8. புறம். 279.

திரிந்து வந்த ககரஈறுகளே என்றார். நச்சினார்க்கினியர் 'மன்னாதாகும்' என்பதற்கு, 'அஃறிணைக்கண் பெரும் பான்மையும் நிலைபெறாது; உயர்திணைக்கண் பெரும் பான்மையும் நிலைபெறும்' எனவும், 'அஃறிணை ஏவற் பொருண்மையை முற்ற முடியாது என்பது உணர்த்தற்கு மன்னதாகும் என்றார்' எனவும் உரை கூறினார். இவ்வாசிரியர் மேற்கண்ட தொல்காப்பிய நூற்பாவின் கருத்தை அறவே விடுத்துத் தங்காலத்திலிருந்த அல்லது அவர் காலத்திற்குச் சிறிது முன்னர் வாழ்ந்த இலக்கணப் புலவர் கொள்கையராகி,[7] 'இயலும் இடம்பால் எங்கும் என்ப' என்றார். அவர் ஈறு பற்றிக் 'கயவொடு ரவ்வொற்று' எனக் கூறியுள்ளதால் தெய்வச் சிலையாரின் ககரமும் அதன் திரிபுகளுமே வியங்கோளீறுகள் என்ற கொள்கையோடு ஓராற்றான் ஒத்ததே அவரது கொள்கையாகும் என்பது போதரும். இக்கால இலக்கண ஆராய்ச்சியாளராக விளங்கிய வேங்கடராசுலுரெட்டியார் ககராஈற்றுக் கொள்கைக்கு ஆதரவு தந்துள்ளார் என்பது ஈண்டு அறியற்பாலது.[1]

தொல்காப்பியர், அகர ஈற்றுப் புணர்ச்சியில், 'ஏவல் கண்ணிய வியங்கோட்கிளவி' என அகரவீற்று வியங்கோளைக் குறிப்பிட்டு,; அடுத்த நூற்பாவில்,

**வாழிய வென்னுஞ் செயவென் கிளவி**

**இறுதி யகரங் கெடுதலும் உரித்தே,**

என வாழிய என்னுஞ் சொல்லின் முடிவு பற்றிய சிறப்பு இலக்கணம் கூறியவதனால், வியங்கோள் என்பதை வாழ்க என்னுஞ் சொல்லோடும் அதனோடு ஒத்த முடிபுடைய உண்க, தவிர்க முதலிய ககரவீற்றுச் சொற்களோடும் தெய்வச் சிலையார் முதலியோர் தொடர்புபடுத்தினர் போலும். பவணந்தியார் இந்நூற்பாவில் வியங்கோளுக்கு உரியன என ஓதிய ஈறுகள் வாழ் என்னும் வினையடி ஒன்றோடே பொருந்தி நிற்கின்றனவேயன்றி, செய்க, செய அல்லது செய்யிய; செய்யியர் என இவ்வாறு பிற வினைகளோடு ஒட்டிக்காணின் பொருந்துமாறு இல்லை ஆதலின்; வாழ்க, வாழிய, வாழியர் என்னுஞ் சொற்களையே வியங்கோள் வினைமுற்றுக்கள் எனக்கொண்டார் என எண்ண இடமுண்டு.

வாழ்க, ஒழிக, கெடுக என்னுஞ் சொற்கள் மூவிட ங்களிலும் வழங்குகின்றன. இவை விதி அல்லது கடவுள் என்னை, உன்னை அல்லது அவனை வாழ்விக்க, ஒழிக்க, அல்லது

கெடுக்க என்னும் இசைவுப் பொருளில் ஏவல் கண்ணிப் படர்க்கைப் பொருளில் மன்னுதலையே தொல்காப்பியர்,

அவற்றுள்

**முன்னிலை தன்மை ஆயி ரிடத்தொடும்**

**மன்னா தாகும் வியங்கோள் கிளவி,**

என விதித்தார் எனக் கொள்ளுதல் வேண்டும். இடம் என்றது ஆகுபெயராக இடப்பொருளை உணர்த்திற்று. மன் என்பதை இடைச்சொல்லெனக் கொண்டு இவ்வாசிரியர், இலக்கணங் கூறியிருப்பினும், மன்னுதல், மன்னிய, மன்னும் என வினைப்பெயராகவும் எச்சங்களாகவும் வழங்குவதே போல், ஈண்டு எர்மறை வினையாகவே தொல்காப்பியரால் அமைத்து வழங்கப்பட்டுள்ளது ஆதலின், ஈண்டு நிலைபெறுதற் பொருளன்றிப் பிறபொருளேதும் பொருந்தாமை அறிக. அதனாலே, இவ்வாசிரியர் இயலுமிடம்பா லெங்கு மென்ப என்றது தொன்னெறி மரபன்று எனக் கொள்க.

பொருள் அமைப்பால் வியங்கோளை ஏவலினின்று வேறு பிரித்துக் காண்பதே பொருந்துவதாகும். சங்க இலக்கியங் களில்,

> வான வரம்பனை நீயோ பெரும
> ........ ...... ........ .................
> நடுக்கின்றி நிலியரோ[1]

எனவும்,

> மன்னிய பெருமநீ நிலமிசை யானே[2]

எனவும்,

> எங்கோ வாழிய[3]

எனவும்,

> நோயிலனாகிப் பெயர்க[4]

எனவும்,

> வலிய வாகுகநின் றாடோய் தடக்கை[5]

எனவும்,

> ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை யிரீஇய
> பெருமைத் தாகநின் னாயுள் தானே[6]

எனவும்,

---

பாட வேறுபாடு.:–

1. வேறுண்டில்லையைம்
2. பாலிடமுணர்த்துதல்
3. வேறுண்டில்லை

நீவா ழியர்நின் றந்தை
தாய்வா ழியர்நிற் பயந்திசி னோரே[7]

எனவும்

கெடுகசிந்தை[8]

எனவும் வழங்கும் வியங்கோட் கிளவிகள் சொல்லமைப்பால் மூவிடத்தும் வழங்கினும், விதி அல்லது இறையருளை ஏவுதல் கண்ணி நின்று படர்க்கை இடத்திற்கே உரியனவாய் வழங்கியுள்ளமையை நுணித்தறிந்து கொள்க.

தொல்காப்பியர் மா என்ற இடைச்சொல்லை வியங்கோள் அசைநிலை எனக் குறிப்பிட்டுள்ளதால்,[1] வியங்கோட் பொருளில் வாராத ககரவீற்று ஏவல்கள் ஒற்றுமைப் போலியாகப் பின்னர் வியங்கோளென வழக்கிற் புகுந்தன வாகலாம்.

கட்டளைப் பொருளும், வேண்டிக்கோடற் பொருளும், மரியாதை ஏவற்பொருளும், வியங்கோள் எனின், எல்லா ஏவல்களும் வியங்கோளாமாறு செல்லும் ஆதலின், அவ்வாறு விளக்கங் கூறுதலின் பொருந்தாமை புலனாகும். 'இருதிணை ஐம்பால் மூவிடங்களினுஞ் செல்லும் ஏவலை வியங்கோள் என்பது தொன்னேறி மரபாம்' எனச் சங்கரநமச்சிவாயர் கூறியுள்ளது தொல்காப்பியரை யுள்ளிட்ட தொல்லாசிரியன்மாருக்கு உடன்பாடில்லாதது ஆதலின், அவர் கூறும் விளக்கம் தொன்னெறி மரபாகாது என்பது தானே போதரும்.

இலக்கணவிளக்க ஆசிரியர்,

கயவொடு ரவ்வொற் றல்ஆல் உம்மார்
ஐகா னீற்ற வியங்கோண் மற்றவை
எய்து மிடம்பா லெங்கு மென்ப,[2]

எனக் கூறி அல், ஆல், உம், மார், ஐ என்ற விகுதிகளைப் புதியனவாகக் கொண்டு கூறினார். அதனால், வியங்கோள் வினைமுற்று பொருளமைதி அடிப்படையில் அல்லாமல், சொல்லமைதி அடிப்படையிலேயே வரையறுக்கப்படும் எனவும், அது திணை பால் இடம் ஆகியவற்றை உணர்த்தும் விகுதிகளைப் பெறாமல் வேறுபல விகுதிகளைப் பெற்று வரும் எனவும் பிற்கால இலக்கண ஆசிரியர்கள் கருதினர் என்பது

---

பாட வேறுபாடு.:-

1.(1) அஃறிணையொருமைக்கேகொண்டு
(2) அஃறிணையொருமைக்குக்கொண்டு

புலனாகும்.

செய் என்பது முன்னிலை விதித்தற் பொருளது; செய்யாய் என்பதும், செய்க என்பதும் மரியாதை ஏவற் பொருளன. நாம் வருவோம் என்பது தன்மைப் பன்மை விதித்தற் பொருளது; நாம் வருவோமாக என்பதும், வரக்கடவோம் என்பதும் தன்மைப் பன்மை மரியாதை ஏவற் பொருளன. வாழ்க, ஒழிக, வீழ்க, ஓங்குக, மன்னிய, நிலீஇயர் என இவ்வாறு

1. தொல். சொல். 273;

2. சொல். வினையியல். 13.

வருவனவற்றோடு, வாழட்டும், ஒழியட்டும், நிலவட்டும் என இவ்வாறு வருவனவும் வியங்கோள்கள். தொல்காப்பியர் வியங்கோளை ஈறுபற்றி ஓதாமையும் இதனாலேயேயாம். புணர்ச்சிக்குப் பொருளுணர்ச்சி இன்றியமையாதது என்பதாலேயே அவர், பெரும்பான்மை பற்றி, எழுத்தோத்தில் அகர வீறு அதிகாரப்பட்டவிடத்தில் ஏவல் கண்ணிய வியங்கோளுக்கும் சார்த்தி முடிவு கூறுவாராயினர் எனக் கொள்க.

(19)

## 338. [1]வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன.

வேறு இல்லை உண்டு ஐம் பால் மூ இடத்தன.

vēṟu illai uṇṭu aimpāl mū iṭattaṉa.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Unconjugable verbs**

The (defective verbs) 'veru' illai' and untu are common to the five Genders and three Persons.

### ஒப்புமைப் பகுதி

வேறில்லை யுண்டைம் பால்மூ இடத்தன

(இ.வி.: 240)

## மயிலை நாதர்

எ–ன், இம்மூன்றற்கும் [2]பாலிடவுரிமை யுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: [3]வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்றும், ஐம்பால்களினும் மூவிடங்களினும் ஒழியாது வரும் வினைக்குறிப்பு முற்றுக்களாம், எ–று.

வ–று.:– வேறவன், வேறவள், வேறவர், வேறது, வேறவை; வேறியான், வேறியாம்; வேறுநீ, வேறுநீயிர் எனவும், இல்லை அவன், இல்லை அவள், இல்லை அவர், இல்லை அது, இல்லை அவை; இல்லையான், இல்லையாம்; இல்லைநீ, இல்லைநீயிர் எனவும் அவனுண்டு, அவளுண்டு, அவருண்டு, அதுவுண்டு, அவையுண்டு; யானுண்டு, யாமுண்டு, நீயுண்டு, நீயிருண்டு எனவும் வரும்.

உண்டு என்பதனையும் இவ்வாறே பொதுவினையாகக் கொள்ளாது [1]அஃறிணையொருமையாகக் கொண்டு

> "தினைத்தா ளன்ன சிறுபசுங்கால
> ஒழுகுநீ ராரல் பார்க்கும்
> குருகு முண்டுதா மணந்த ஞான்றே"

என்றற் றொடக்கதனவற்றைப் பன்மையொருமைப்பால் வழுவமைப்பாகக் கொள்ளின்,

> "நாவுண்டு நீயுண்டு நாமந் தரித்தோதப்,
> பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ – பூவுண்டு,
> வண்டுறங்குஞ் சோலை மதிலரங்கத் தேயுலகை
> உண்டுறங்கு வானொருவ னுண்டு"

> "பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்
> கொண்ட கொழுந ருறுகுறை தாங்குறூஉம்
> பெண்டிரு முண்டுகொல் ஈன்ற குழவி யெடுத்து
> வளர்க்குறூஉம் சான்றோரு முண்டுகொல் பெண்டிரு
> முண்டுகொல் சான்றோடு முண்டுகொல் சான்றோரு
> முண்டுகொல், சான்றோரு முண்டுகொல்"

என்றற்றொடக்கத்தன முடியாவென்க.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

எ–னின், இவ்வினைக்குறிப்பு மூன்றும் பால் இடங்கட்குப் பொதுவாமாறு உணர்–ற்று

இ–ள்.: வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்று வினைக் குறிப்பு முற்றும்

ஐம்பாற்கும் மூவிடத்திற்கும் உரியனவாம், எ—று.

உண்டு என்பது அஃறிணை யொருமைக்கே யன்றிப் பொது வினையாதல் புதியன புகுதலாம் என்பார் பிற்கூறினார்.

வ—று.:-

வேறு அவன், இல்லை அவன், உண்டு அவன், அவள், அவர், அது, அவை, யான், யாம், நீ, நீர் எனவும்;
"விளைந்தாரின் வேறல்லர் மன்ற"

"யாரும் இல்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யான்எவன் செய்கோ
தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீ ராரல் பார்க்கும்
குருகும் உண்டு தாம் மனந்த ஞான்றே"

"பெண்டிரும் உண்டுகொல் பெண்டிரும் உண்டுகொல்
கொண்ட கொழுநர் உறுகுறை தாங்குறூஉம்
பெண்டிரும் உண்டுகொல் பெண்டிரும் உண்டுகொல்"

"நாஉண்டு நீஉண்டு நாமம் தரித்தோதப்
பாஉண்டு நெஞ்சே பயம்உண்டோ - பூஉண்டு
வண்டுறங்கும் சோலை மதிலரங்கத் தேஉலகை
உண்டுறங்கு வானொருவன் உண்டு"

எனவும் வரும்.

". பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்"

என்பது செய்யுளாதலின், இல்லை என்பது இல் எனக் கடைக்குறைந்து நின்றது.

*இனி மொழிந்தபொருளோடொன்ற அவ்வயின் மொழியா தனை முட்டின்று முடித்தல் என்பதனால் வேண்டும் தகும் படும் என்னும் சொற்களும் ஐம்பால் மூவிடத்தனவாம் எனவும் கொள்க.*

வ—று.:-

"ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
யா அதும் என்னு மவர்"

*"யான் போகல் வேண்டும், நீ உரைத்தல் வேண்டும்."*

*"இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்"*

*"இனைத்தென் றறிபொருள் உலகினி லாப்பொருள்
வினைப்படுத் துரைப்பின் உம்மை வேண்டும்"*

*"இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற் (கு)*
*இன்னென் சாரியை இன்மை வேண்டும்"*

*"வேறுவினைப் பல்பொருள் தழுவிய பொதுச்சொலும்*
*வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்"*
*"நலம் வேண்டின் நாணுடைமை வேண்டும்"*
*இவரால் இக்காரியம் செய்யத்தகும், இவ்வூழ் அருந்தத் தகும், இச்சோறு உண்ணத்தகும், இந்நீர் குடிக்கத் தகும் எனவும்,*

*"முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா*
*வஞ்சரை அஞ்சப் படும்"*

*"இளையர் இனமுறையர் என்றிகழா நின்ற*
*ஒளியோ டொழுகப் படும்"*

*"கற்றிந் தோரைத் தலைநிலத்து வைக்கப்படும்"*

*" கீழ்களைச் செய்தொழிலாற் காணப்படும்"*
*எனவும் வரும்.*
*இம்மூன்றும், ஒரு பொருட்கிளவியாய்த் தொழிற் பெயராய்த் தேற்றப்பொருள்பட்டே நிற்கும் என்க.*
*இங்ஙனம் வரும் செய்யுட்கெல்லாம் நச்சினார்க்கினியர், சேனாவரையர், பரிமேலழகர், உரையாசிரியர் முதலாயினார், முற்றாயும் எச்சமாயும் பொருளுரைக்கின் வழுவாம் என்று கருதி, வியங்கோட்பொருட்டு என்றும், விதிப்பொருட்டு என்றும், தகுதிப் பொருட்டு என்றும், வேண்டுவ என்றும், தமக்கு வேண்டியவாறே பொருளெழுதிச் சொற்குணம் வாளாபோயினர் அது நிற்க.*

## கூழங்கைத் தம்பிரான்

சூ—ம், வேறு இல்லை உண்டு என்னும் மூன்று சொற்கும் பாலிட உரிமை கூறுகின்றது.

இ—ள்.:— வேறில்லை யுண்டு — வேறு இல்லை, உண்டு என்னும் மூன்று சொற்களும், ஐம்பான் மூவிடத்தன — ஐம்பால் மூன்றிடத்தினும் ஒழியாது வரும் குறிப்பு வினைமுற்றுக்களாம்.

உ—ம்.:—

வேறு அவன், வேறு அவள், வேறு அவர், வேறு அது, வேறுஅவை, வேறு யான், வேறுயாம், வேறுநீ, வேறுநீர் என வரும். இவ்வாறு ஒழிந்த வினைக்கும் வருவிக்க.

## விசாகப் பெருமாளையர்

இது, வேறுமுதலிய மூன்றும் பாலிடங்களுக்குப் பொதுவாமாறு உணர்த்துகின்றது.

**இ–ள்.:– வேறில்லையுண்டு** – வேறு இல்லை உண்டு என்கிற மூன்று வினைக்குறிப்பு முற்றுகளும், **ஐம்பால்** – ஐம்பாலுக்கும், **மூவிடத்தன** – மூவிடத்திற்கு முரியனவாம், எ–று.

வேறு, இல்லை, உண்டு, அவன், அவள், அவர், அது, அவை, யான், யாம், நீ, நீர், என வரும்.

**மொழிந்த பொருளோடொன்றவவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தல்,** என்கிறவுத்தியால் வேண்டும், தகும், படும், என்கிற சொற்களும் ஐம்பான் மூவிடத்திற்கும் பொதுவாமெனக் கொள்க.

வ–று.:–

அவரோதல் வேண்டும், நீபோகல்வேண்டும் எனவும், இச்சோறுண்ணத் தகும், இவரா லிக்காரியஞ் செய்யத் தகும் எனவும், வஞ்சரை யஞ்சப்படும், கற்றறிந்தோரைத் தலைநிலத்து வைக்கப்படும் எனவும் வரும். இம்மூன்று மொருபொருட் சொற்களாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப் பொருள்பட்டே நிற்கு மென்றறிக.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஐம்பான் மூவிடங்களுக்கும் பொதுவாகிய வினைக்குறிப்பு முற்றுக்களிவை யெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

வேறில்லை யுண்டைம் பான்மூ விடத்தன

(வேறு இல்லை உண்டு ஐம்பால் மூவிடத்தன.)

**இ–ள்.:** வேறு இல்லை உண்டு என்னு மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும் ஐம்பாலுக்கு மூவிடத்திற்கு முரியனவாம், எ–று.

வ–று.:–

யான் வேறு, யாம் வேறு, நீ வேறு, நீர் வேறு, அவன் வேறு, அவள் வேறு, அவர் வேறு, அது வேறு, அவை வேறு, இல்லை, உண்டு என்பவற்றையும் மூவிடப்பெயர்களோடும் ஒட்டுக. இல்லை யென்பது சிறுபான்மை இல் என நிற்றலுமுண்டு.

இனி, **மொழிந்தபொருளோடொன்ற** வவ்வயின்

மொழியாததனையு முட்டின்று முடித்தலென்னு முத்தியால், வேண்டும், தகும், படும் என்னுஞ் சொற்களும் ஐம்பான்மூவிடத்துக்கும் பொதுவாமெனக் கொள்க. இம்மூன்றும் ஒருபொருட்சொற்களாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப்பொருள்பட்டே நிற்கும்.

வ—று. அவரோதல்வேண்டும்; நீ போதல்வேண்டும்; யானுண்ணல் வேண்டும் எனவும், இச்சோறுண்ணத்தகும்; இவராலிக்காரியஞ் செய்யத்தகும் எனவும், வஞ்சரையஞ்சப்படும்; "கற்றறிந்தோ ரைத் தலைநிலத்து வைக்கப்படும்" எனவும் வரும்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, வியங்கோள்வினை போலப் பாலிடங்கட்குப் பொதுமையினிற்பன இவை யென்கின்றது.

இ—ள்.:— வேறு இல்லை உண்டு என்னும் இந்த மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும் ஐம்பாற்கும் மூவிடத்திற்கும் உரியவாம், எ—று.

வ—று.:—

அவன் வேறு, அவள் வேறு , அவர் வேறு, அது வேறு, அவை வேறு, நீ வேறு, நீர் வேறு, யான் வேறு, யாம்வேறு எனவும்; அவன் இல்லை, அவள் இல்லை, அவனுண்டு, அவளுண்டு எனவும் வரும். ஒழிந்த பாலிடங்கள்தோறும் ஒட்டிக் கொள்க. இனிச் செய்புளிலே வருமாறு; "விளிந்தாரின் வேறல்லார்", "யாருமில்லைத்தானே கள்வன் "குருகுமுண்டு தாமணந்த ஞான்றே", "பெண்டிரு முண்டுகொல், பெண்டிருமுண்டுகொல்".

"நாவுண்டு நீயுண்டு நாமந்தரித்தோதப்
பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ — பூவுண்டு
வண்டுறங்குஞ் சோலை மதிளரங்கத் தேயுலகை
யுண்டுறங்கு வானொருவ னுண்டு'

எனவரும்.

"பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்"

என இதில், இல்லை பென்பது இல் எனக் கடைக்குறைந்து நின்றது. இனி மொழிந்த பொருளோடொன்ற மொழி யாததனையு முட்டின்றிமுடித்தலென்பதினால், தகும் படும் என்னுஞ் சொற்களும் ஐம்பால் மூவிடத்தனவாமெனக் கொள்க.

வ–று.: இவராலிது செய்யத் தகும், இச் சோறுண்ணத்தகும், 'வஞ்சரை யஞ்சப்படும்', 'ஒளியோ டொழுகப் படும்' என வரும். இவை யொரு பொருட் சொற்களாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப்பொருள்பட்டே நிற்குமெனக் கொள்க. இவற்றை நச்சினார்க்கினியர், சேனாவரையர் பரிமேலழகர், உரையாசிரியர் முதலியோர் வியங்கோட்பொருளுடைய வென்றும், விதிப்பொருளுடைய வென்றும், தகுதிப் பொருளுடைய வென்றுங் கூறுவர். வேறில்லையுண்டு – மூன்றிடத்தன – என எழுவாய் பயனிலையாக முடிந்தது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– வேறு இல்லை உண்டு –இம்மூன்று குறிப்பு வினை முற்றுக்களும், ஐம்பால் மூ இடத்தன – ஐம்பால்களுக்கும் மூன்று இடங்களுக்கும் உரியன.

உ–ம் : –

வேறு, இல்லை உண்டு

யான், யாம்; நீ, நீர்; அவன், அவள், அவர், அது, அவை.

குறிப்பு :–

'தகும்', 'படும்' என்பனவும் ஐம்பால் மூவிடத்தனவாம் எனவும், தேற்றப் பொருளுடையன எனவும் கொள்க. உ–ம் : "செய்யத்தகும்" "வஞ்சரை அஞ்சப்படும்" இவற்றை ஆசிரியர் நச்சினாக்கினியர், சேனாவரையர் முதலிய உரையாசிரியர்கள் வியங்கோட்பொருளுடையன என்றும், தகுதிப்பொருள் உடையன என்றும் கூறுவர்.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– வேறு இல்லை உண்டு – வேறு இல்லை உண்டு என்னு மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும், ஐம்பால் மூவிடத்தன – ஐம்பாலுக்கும் மூவிடத்திற்கு முரியனவாம், எ–று.

வ–று.:–

**யான் வேறு, யாம் வேறு, நீ வேறு, நீர் வேறு, அவன் வேறு, அவள் வேறு, அவர் வேறு, அது வேறு, அவை** வேறு. இல்லை, உண்டு என்பனவற்றையும் மூவிடப்

பெயர்களோடும் ஒட்டுக. இல்லையென்பது சிறுபான்மை, இல்
என நிற்றலுமுண்டு.

இனி, மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தலென்னு முத்தியால் வேண்டும், 'தகும், படும்' என்னுஞ் சொற்களும் ஐம்பான் மூவிடத்துக்கும் பொதுவாமெனக் கொள்க, இம்மூன்றும் ஒரு பொருட்சொற்களாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப் பொருள்பட்டே நிற்கும்.

வ—று.:—

'அவரோதல் வேண்டும்', 'நீ போதல் வேண்டும்', 'யானுண்ணல் வேண்டும்' எனவும், 'இச் சோறுண்ணத் தகும்', 'இவராலிக் காரியஞ் செய்யத்தகும்' எனவும், வஞ்சரை யஞ்சப்படும் "கற்றறிந்தோரைத் தலைநிலத்து வைக்கப்படும்" எனவும் வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

இ—ள்.:— வேறு இல்லை உண்டு — வேறு இல்லை உண்டு என்ன மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும், — ஐம்பால் மூவிடத்தன — ஐம்பாலுக்கும் மூவிடத்திற்கு முரியனவாம். எ—று.

வ—று.:—

யான்வேறு, யாம்வேறு, நீவேறு, நீர்வேறு, அவன்வேறு, அவள்வேறு, அவர்வேறு, அதுவேறு, அவைவேறு, இல்லை உண்டு என்பவற்றையும் மூவிடப்பெயர்களோடும் ஒட்டுக. இல்லை என்பது சிறுபான்மை இல் என நிற்றலுமுண்டு.

இனி, மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாத தனையு முட்டின்று முடித்தலென்னுமுத்தியால், வேண்டும், தகும். படும் என்னுஞ் சொற்களும் ஐம்பான்மூவிடத்துக்கும் பொதுவாமெனக் கொள்க. இம்மூன்றும் ஒருபொருட் சொற்களாயத் தொழிற்பெயராய்த் தேற்றப் பொருள்பட்டே நிற்கும்.

வ—று.:—

அவரோதல்வேண்டும்; நீ போதல் வேண்டும்; யானுண்ணல் வேண்டும். எ—ம். இச்சோறுண்ணத்தகும்; இவராலிக்காரியஞ்

செய்யத்தகும். எ–ம். வஞ்சரையஞ்சப்படும்; "கற்றறிந்தோரைத் தலைநிலத்து வைக்கப்படும்". எ–ம். வரும்.

(சூத்திரம்) "வேறிலையுண்டியார் வேண்டுந் தகும்படும் வினைபெயரெச்சம் வியங்கோள்பத்துந் திணைபாலிடமெலாஞ் செல்லுமென்ப" என்று இலக்கணக்கொத்துக் கூறியதுங் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– வேறு இல்லை உண்டு** – இம்மூன்று குறிப்பு வினை முற்றுக்களும், **ஐம்பால் மூ இடத்தன** – ஐம்பால்களுக்கும் மூன்றிடங்களுக்கும் உரியன.

**உ–ம்.:–**

**வேறு, இல்லை, உண்டு** – யான், யாம், நீ, நீர், அவன், அவள், அவர், அது, அவை.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– வேறு இல்லை உண்டு** – வேறு இல்லை உண்டு என்னும் மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும், **ஐம்பால் மூவிடத்தன** – ஐம்பாலுக்கும் மூவிடத்திற்கு முரியனவாம். எ–று.

வியங்கோள் வினைபோலப் பாலிடங்கட்குப் பொதுமையின் நிற்பனவாதலின் இவை ஈண்டுக் கூறப்பட்டன.

**(உ–ம்.)**

யான் வேறு, யாம் வேறு, நீ வேறு, நீர் வேறு; அவன் வேறு, அவள் வேறு, அவர் வேறு, அது வேறு, அவை வேறு. இல்லை, உண்டு என்பவற்றையும் மூவிடப்பெயர்களோடும் ஒட்டுக. இல்லையென்பது சிறுபான்மை இல் என நிற்றலுமுண்டு.

இனி, மொழிந்தபொருளோடொன்ற வவ்வயின் மொழியாத தனையு முட்டின்று முடித்தல் என்னும் உத்தியால், உண்டும், தகும், படும் என்னுஞ் சொற்களும் ஐம்பான் மூவிடத்துக்கும் பொதுவாமெனக் கொள்க. இம்மூன்றும் ஒரு பொருட்சொற் களாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப்பொருள் பட்டே நிற்கும்.

**(உ–ம்.)**

அவரோதல்வேண்டும்; நீ போதல்வேண்டும; யானுண்ணல்

வேண்டும். இச்சோறுண்ணத்தகும்; இவரா லிக் காரியஞ் செய்யத்தகும். "வஞ்சரை யஞ்சப்படும்" "கற்றறிந்தோரைத் தலைநிலத்து வைக்கப்படும்"

வேண்டும் என்பது விபங்கோட்பொருட் டென்றார் இராமானுஜ கவிராயர்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ–ள்.)** வேறு இல்லை உண்டு – வேறு இல்லை உண்டு என்கிற மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும், ஐம்பால் மூவிடத்தன – ஐம்பாலுக்கும் மூவிடத்திற்கும் உரியனவாம். (எ–று)

**(பொ–ரை.)** வேறு, இல்லை, உண்டு என்னும் மூன்று வினைக் குறிப்பு முற்றும் ஐம்பாற்கும் மூவிடத்திற்கும் உரியனவாம்.

**(உ–ம்.)**

யான் வேறு
யாம் இல்லை தன்மை.
உண்டு

நீ வேறு
நீர் இல்லை முன்னிலை.
உண்டு

அவன்
அவள்
அவர் வேறு
அது இல்லை
அவை உண்டு
படர்க்கை.

இனி, இல்லை என்பது சிறுபான்மை இல் என நிற்றலுண்டு. "மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின், மொழியாததனையு முட்டின்று முடித்தல்" என்கிற உத்தியால் வேண்டும், தகும், படும் என்கிற சொற்களும் ஐம்பால் மூவிடத்திற்கும் பொதுவாம் எனக் கொள்க.

**(உ–ம்.)**

அவரோதல் வேண்டும் வேண்டும்.
நீ போகல் வேண்டும்
இச் சோறுண்ணத் தகும்
இவரா லிக்காரியஞ் செய்யத்தகும் தகும்.
வஞ்சரை யஞ்சப்படும்
கற்றறிந்தோரைத் தலைநிலத்து வைக்கப்படும் படும்.

இம் மூன்றும் ஒரு பொருட் சொற்களாய்த் தொழிற் பெயராய்த் தேற்றப்பொருள் பட்டே நிற்கும் என்றறிக.

## கா. நமச்சிவாய முதலியார்

**வேறு இல்லை உண்டு** – வேறு இல்லை உண்டு என்னும் மூன்று, வினைக்குறிப்பு முற்றுக்களும், **ஐம்பால்** – ஐம்பாலுக்கும், **மூவிடத்தன** – மூவிடத்திற்கும் உரியனவாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| யான் | வேறு | | அவன் | | |
| யாம் | இல்லை | தன்மை | | | |
| | உண்டு | | அவள் | | |
| | | | | வேறு | |
| நீ | வேறு | | அவர் | இல்லை | படர்க்கை |
| நீர் | இல்லை | முன்னிலை | அது | உண்டு | |
| | உண்டு | | அவை | | |

இல்லை என்பது சிறுபான்மை இல் என நிற்றலும் உண்டு, **வேண்டும், தகும்,** படும் என்னும் சொற்களும் ஐம்பால் மூன்றிடத்திற்கும் பொதுவாதலும் ஆம்.

உதாரணம்

| | |
|---|---|
| அவர் ஓதல் வேண்டும்<br>நீ போகல் வேண்டும். | வேண்டும் |
| இச்சோறு உண்ணத் தகும்<br>இவரால் இக்காரியஞ் செய்யத் தகும். | தகும் |
| வஞ்சரை யஞ்சப்படும்<br>கற்றறிந்தோரைத் தலைநிலத்து வைக்கப்படும். | படும் |

இம்மூன்றும் ஒரு பொருட் சொற்களாய்த் தேற்றப் பொருள்பட்டே நிற்கும் என்று அறிக.

## மோசசு பொன்னையா

வேறு, இல்லை, உண்டு என்னும் இம்மூன்று குறிப்பு வினை முற்றுக்களும் ஐம்பால் மூவிடங்களுக்கும் உரியன எ–று.

**எ–டு.:-**

யான், யாம்;

நீ, நீர், நீவிர்;

அவன், அவள், அவர் வேறு/இல்லை/உண்டு

அது, அவை;

இவ்வாசிரியர்,

**பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்**
**கொண்ட கொழுநர் உறுகுறை தாங்குறூஉம்**
**பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்,**

எனவும்,

**நாவுண்டு நீயுண்டு நாமந் தரித்தோதப்**
**பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ–பூவுண்டு**
**வண்டுறங்குஞ் சோலை மதிலரங்கத் தேயுலகை**
**யுண்டுறங்கு வானொருவ னுண்டு.**

எனவும் வரும் வழக்கு நோக்கி, உண்டு என்பதைப் புதியது புகுதலாக உடன்கொண்டு கூறினார். இன்று என்பதும் பண்டே ஐம்பால் மூவிடங்களுக்கும் உரிய பொது வினையாக வழங்கிற்று என்பது,

**விழும மாக அறியுநர் இன்றென,**

என்னுங் கபிலர் வாக்கால் புலனாகின்றது. இவ்வாறே, வேண்டும், தகும், படும் என்பனவும், ஒட்டி ஒரு சொல்லாய் நின்று ஓதல்வேண்டும், உண்ணத்தகும், அஞ்சப்படும் என இவ்வாறு அமைந்து தேற்றப் பொருளை விளக்கி நிற்பனவும் ஐம்பால் விடத்தனவாகிய குறிப்பு வினைமுற்றுக்களே எனக்கொள்க. தொல்காப்பியத்திற் காணப்படும் வேண்டும்1 என்னும் சொல்லாட்சியையும் இந்நூலுள் அது வழங்கப் பட்டுள்ள இடங்களையும், திருக்குறளில் வரும் படும் என்னுஞ் சொல்லாட்சியையும், வழக்கினுள், இவரால் இக்காவியஞ் செய்யத்தகும் என இவ்வாறு இயலும் ஆட்சியையும் கூர்ந்து நோக்குவார்க்கு அம்மூன்று சொற்களின் தேற்றப் பொருள் புலனாகும். 'இங்ஙனம் வருஞ் செய்யுட்கெல்லாம் நாச்சினார்க்கினியர், சேனாவரையர், பரிமேலழகர்,

---

பாட வேறுபாடு.:–

1. காலஞ்செயலொடு
2. செய்வதாதியும்
3. பாலும்கருத்தா முதலியனவும்
   பொருளாதியறு பொருட்பெயரும்

உரையாசிரியர் முதலாயினார் முற்றாயும் எச்சமாயும் பொருளுரைக்கின் வழுவாமென்று4 கருதி, வியங்கோட் பொருட்டென்றும், விதிப்பொருட்டென்றும், தகுதிப்பொருட் டென்றும், வேண்டுவதென்றும், தமக்கு வேண்டியவாறே பொருளெழுதிச் சொற்குணம் வாளா போயினர்' எனக் கூறிய இலக்கணக் கொத்து ஆசிரியர் 'இம்மூன்றும் ஒரு பொருட் கிளவியாய்த் தேற்றப் பொருட்பட்டே நிற்கும்' எனக் கூறியதொடு அமையாது 'இம்மூன்றும் தொழிற்பெயராய் நிற்கும்' என வாளா கூறியுள்ளமையையும் நோக்குக.

(20)

**339. செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்**
**[1]காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு**
**[2]செய்வ தாதி யறுபொருட் பெயரும்**
**எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.**

செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில்
காலமும் செயலும் தோன்றிப் பாலொடு
செய்வது ஆதி அறு பொருள் பெயரும்
எஞ்ச நிற்பது பெயர் எச்சமே

seyṭa seykiṉṟa seyyum eṉ pāttil
kālamum seyalum ṭōṉṟip pạlotu
seyvaṭu āṭi aṟuporuḻ peyarum
eñsa niṟpaṭu peyar essammē.

---

பாட வேறுபாடு.:-

1. பண்ணியமரம், பண்ணாநின்ற மரம், பண்ணுமரம்,
2. வாய்பாட்டுட்கொள்க.
3. பெயர்கொளும்மதுவே பெயரெச்சம்மே
4. கொள்ளுதலும்.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### RELATIVE PARTICIPLES

#### Relative participle defined

Verbs of the forms 'ceyta', 'ceykinra' and 'ceyyum' which while indicating Time and Action, require not only Gender but also (one of ) the six (charactertics of verbs) such as 'Agent', &c., to complete their meanings,—are termed Relative Participles.

### ஒப்புமைப் பகுதி

நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
அவ்வறு பொருட்குமோ ரன்ன உரிமைய
செய்யும் செய்த என்னுஞ் சொல்லே

(தொல். சொல்.: 234)

அவற்றுட்
செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
செய்வ தாதி யறுபொருட் பெயரொடு
முடியு முறையது பெயரெச் சமே

(இ.வி.: 243)

செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
காலமும் செயலும் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி யறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச்சம்மே

(மு.வீ.: 628)

முற்றிலது பிறசொல்நோக் குவதுஎச் சமாகும்
முடிதல் பெயர் வினையிலாம் செய்யெனும்வாய் பாடு
பெற்று இறுதி சுட்டதின்எட் டுஒற்று அமையத் திரியும்
பெயரெச்சம் முக்காலம் இடைநிலையாற் காட்டி
மற்றகாம் இறப்புநிகழ் வுக்குஎதிர் உம்ஈறாய்
வாய்பாடு செய்த செய்கின்ற செய்யும் எனவே
நற்றொழிற் செய்பொருட் செய்வோன் நிலம்கருவி கால
நண்ணி முடிவாங் காலத்தொகை குறிப்பாய்ச் செய்யே

(சுவாமி.: 52)

## மயிலை நாதர்

எ–ன், நிறுத்த முறையானே பெயரெச்சமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.:– செய்த செய்கின்ற செய்யுமென்னும் வாய்பாட்டால் முக்காலமும் தொழிலுந்தோன்றிப் [3]பால்தோன்றாது, கருத்தா முதலாகிய பொருள்களாறின் பெயரும் ஒழியநிற்பன, பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களாம், எ–று.

'பாட்டிற்காலமும்' என்றது, அம்முக்கால வாய்பாடு யாவையும் கோடற்கென்க.

வ–று.:–

நின்றஒருவன், நிற்கின்ற ஒருவன், நிற்குமொருவன்; எறிந்த வேல், எறியாநின்றவேல், எறியும்வேல்,; பொருதகளம், பொராநின்றகளம், பொருங்களம்; செய்தசெயல், செய்யாநின்ற செயல், செய்யுஞ்செயல்; வாழ்ந்தநாள், வாழாநின்றநாள், வாழும்நாள்; [1]பண்ணிய மா, பண்ணாநின்றமா, பண்ணுமா என வரும்.

இவ்வாறே ஒழிந்த பாலிடங்களிலும் ஒட்டிப் பெயரெச்சவினை வந்தவாறு காண்க.

கரியகொற்றன். கரியகொற்றி, கரியகொற்றர், கரியகுதிரை, கரிய குதிரைகள்; கரியயான், கரியயாம், கரியநீ, கரியநீயிர்,

"செய்ய கோலினாய் செப்ப லாவதன்,
றைய தாரினா னருளின் வண்ணமே"

"பெரிய, கேழ லட்ட பேழ்வாயேற்றை"

எனப் பெரெச்ச வினைக்குறிப்பு வந்தவாறு காண்க. ஓடாக்குதிரை, பாடாப்பாணனென்றற் றொடக்கத்தனவும், ஓடாமலைச்செய்த, பாடாமலைச் செய்தவென்னும் [2]வாய்பாடாகவே கொள்க.

"காலமும் வினையுந் தோன்றிப்பா றோன்றாது; [3]பெயர்கொள்ளும்மது பெயரெச்சம்மே" என்றார் அகத்தியனார்.

இதற்கு நிகழ்காலங் கொள்ளாதார் [4]கோளும் அறிந்து கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

எ—னின், [2]"பெயர் வினை எச்சமுமாகி" என்றவற்றுள் பெயரெச்சமாமாறு உணர்—ற்று.

இ—ள்.:— செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் மூவகைப்பட்ட சொல்லின்கண், முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலமும் செயலும் தோன்றி, வினைமுற்றுதற்கு வேண்டும் பால் ஒன்றுந் தோன்றாது, அப்பாலுடனே செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் என்னும் அறுவகைப் பொருட்பெயரும் ஒழிய நிற்பன பெய ரெச்சவினை வினைக்குறிப்புக்களாம், எ—று.

'பாட்டு' என்னும் பலபொருளொருசொல் ஈண்டுச் சொல்லை உணர்த்தி நின்றது.

இவற்றுள் செய்யும் என்னும் ஒன்றும் இறுநிலை காலம் காட்டியது.

இவை வெளிப்படையின் உணர்த்துவன காலமும் செயலும் என்பார் 'பாட்டு' என்றும், பெயரெச்சம் என்றது வினை முற்றாத குறைச்சொல்லாய்த் திணைபாலிடங்கட்குப் பொதுவாகிப் பெயரெஞ்ச நின்றனவற்றை என்பார் 'பாலொடு' என்றும் கூறினார்.

'நிற்பது' என்பது தொகுதியொருமை.

ஏற்புழிக்கோடலால், தோன்றி என்பதன்காறும் தெரிநிலை உடன்பாட்டிற்கும், ஏனைய தெரிநிலையும் குறிப்புமாகிய உடன்பாடு எதிர்மறை இரண்டற்கும் கொள்க.

பதப்பொருளொழிந்த உரை வினையெச்சத்திற்கும் கொள்க.

வ—று.:—

உண்ட, உண்ணாநின்ற, உண்ணும்: சாத்தன், கலம், இடம், ஊண், நாள், சோறு, எனவும்; "வேளாண் முகத்த களிறு" "மூவிலைய வேல்" "உள்ள பொருள்" எனவும்; "உண்ணாத சோறு" எனவும்; "இல்லாத பொருள்" எனவும் வரும்.

செய்வதாதி அறுபொருளும் காரணமாதலின், இவ்வெச்சங்கள் காரியப்பொருட்டாய் நின்றன. 'வனைந்த குடம்' என்புழிக் குடம் காரியமாயும் நிமித்தமாயும் நிற்றலின், இவ்வெச்சம் காரணப்பொருட்டாயும் காரியப் பொருட்டாயும் நின்றது. பிறவும் அன்ன.

'அறுபொருட்பெயரும்' என்னும் உம்மையை 'ஆறும்

தருவது வினையே' என்னும் உம்மைபோல வைத்து அறு பொருட்பெயரில் சில குறைந்தும், இன்னதற்கு இது பயன் என்னும் இருபொருட் பெயரும் பிறபெயரும் கூடியும் எஞ்ச நிற்பது எனவும் பொருளுரைத்துக் கொள்க. அவை வருமாறு:–

'ஆடின கொடி, துஞ்சின கொடி': இவை குறைந்து எஞ்ச நின்றன. 'களைகட்டபயிர், களை கட்டகூலி': இவை இன்னதற்கு எனவும், இது பயன் எனவும், இருபெயரும் எஞ்ச வந்தன. 'உண்ட இளைப்பு' எனவும், "குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி" எனவும், 'குடிபோன' ஊர் எனவும், 'பொன் பெரிய நம்பி' எனவும் பிறபெயர்கள் எஞ்ச நின்றன. பிறவும் அன்ன.

'உண்ட இளைப்பு' என்பது உண்டகாரணத்தான் வரும் காரியமாகிய இளைப்பாதலின் செயப்படுபொருள் கொண்டது எனின் அமையாதோ எனின்:– சாத்தன் உண்ட சோறு என்புழிச் சோற்றை உண்ட சாத்தன் எனச் சோறு என்பது இரண்டாமுருபு ஏற்றாற்போல, 'இளைப்பு' என்பது அவ்வுருபு ஏலாமையின் அது செயப்படுபொருளாகா தென்க. இவ் வெச்சம் காரணப்பொருட்டாயே நின்றது. எனவே இப் பெயரெச்சங்கள் காரணப்பொருட்டாயும் காரியப் பொருட்டாயும் இவ்விரு திறந்தவாயும் வருதல் காண்க.

*இப்பெயரெச்சம் அரசன்செய்த தேர் எனத் தலைமை பற்றியும், தச்சன் செய்த தேர் என அஃதின்மை பற்றியும்* வரும். இனி 'காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை' எனக் கூறுதலின் வினைத்தொகையினைப் பெயரெச்ச வினையுள் அடக்கி இதுவே விதியாகக் கொள்க.

வ–று.:–

அடுகளிறு, கோடு, களம், போர், நாள், கந்து எனவரும்.

"காலமும் வினையும் தோன்றிப்பால் தோன்றாது
பெயர்கொள் ளும்மது பெயரெச் சம்மே"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், நிறுத்த முறையானே தெரிநிலைவினைப் பெயரெச்சமும் குறிப்பு வினைப் பெயரெச்சமும் கூறியது.

இ–ள்.:– செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற் – செய்த,

செய்கின்ற, செய்புமென்னும் வாய்பாட்டான், காலமுஞ் செயலுந் தோன்றி – முக்காலமும் தொழிலும் தோன்றி, பாலொடு – பால் தோன்றாது, செய்பவனாதி – செய்பவன் முதலான ஆறு பொருளையும், அறுபொருட் பெயரும் எஞ்ச நிற்பது – பொருளாதி அறுவகைப் பெயரும் ஒழிய நிற்பது, பெயரெச்சம்மே – தெரிநிலைவினைப் பெபரெச்சமும் குறிப்பு வினைப் பெயரெச்சமுமாம், எ–று.

உ–ம்.:–

நின்ற ஒருவன், நிற்கின்ற ஒருவன், நிற்கும் ஒருவன்; எறிந்த வேல், எறியா நின்ற வேல், எறியும் வேல், பொருத களம், பொராநின்ற களம், பொரும் களம், செய்த செயல், செய்கின்ற செயல், செய்யும் செயல், வாழ்ந்த நாள், வாழாநின்ற நாள், வாழும் நாள், வனைந்த குடம், வனைகின்ற குடம், வனையும் குடம் என வரும்.

இவ்வாறே ஒழிந்த பால் இடங்களிலும் ஒட்டித் தெரிநிலை வினைப் பெபரெச்சம் வந்தவாறு காண்க.

கரிய கொற்றன், சிறிய காலம், சிறிய கால், நல்ல குணம், நல்ல செயல் என வரும்.

ஒழிந்த பால் இடங்களினும் ஒட்டிக் குறிப்புவினைப் பெபரெச்சம் வந்தவாறு காண்க.

ஓடாக்குதிரை, பாடப்பாணன், கேளாநூல், காணாத நூல் என எதிர்மறைத் தெரிநிலைவினைப் பெயரெச்சம்; இவற்றிக்கு வாய்பாடு 'ஓடாமலைச் செய்த, பாடாமலைச் செய்த' என்று கொள்க. 'ஓடுதலைச் செய்யாத', பாடுதலைச் செய்யாத என்றுமாம். அல்லாத 'குதிரை, பொல்லாத பாணன்' எதிர்மறைக்குறிப்பு வினைப் பெயரெச்சம்.

## விசாகப் பெருமாளையர்

இது, ஈரெச்சமெனப்பட்ட வற்றுள்ளே பெயரெச்சமாமாறு உணர்த்துகிறது.

இ–ள்.:– **செய்த செய்கின்ற செய்யுமென்** – செய்தவென்றும் செய்கின்ற வென்றும் செய்யுமென்றும் சொல்லப்படுகிற, **பாட்டில்**– மூவகைச் சொற்களிலே, **காலமும்** – முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்கிற மூன்று காலங்களும், **செயலும்** – தொழிலும், **தோன்றி** – தோன்றி, **பாலொடு** – பாலுடனே, **செய்வதாதி** – செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செயப்படுபொருள் என்கிற, **அறுபொருட்பெயரும்** – அறுவகைப் பொருட்பெயர்களும், **எஞ்சநிற்பது** – ஒழியநிற்பன, **பெயரெச்சம்** –

பெயரெச்சவினை வினைக்குறிப்புகளாம், எ–று. (ஏற்புழிக்கோடலால், தோன்றி என்பது வரைக்கும் தெரிநிலைக்கும், ஒழிந்த விதி தெரிநிலை குறிப்பு இரண்டற்குங் கொள்க)

உண்ட உண்கின்ற உண்ணும்–சாத்தன், செய்பவன், கலம், கருவி, வீடு, நிலம், ஊண், செயல், பகல், காலம், சோறு, செயப்படுபொருள்.

கரியகுதிரை, உள்ளபொருள், எனப் பெயரெச்சக் குறிப்பு வரும். அறுபொருட் பெயருமென்ற உம்மையால் களைகட்டபயிர், களைகட்டகூலி என இன்னதற்கு இதுபயன் என்னும் பெயர்களெஞ்ச நிற்பனவும் உண்டவிளைப்பு, குடிபோனவூர், எனப் பிறபெயரெஞ்ச நிற்பனவுங் கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

பெயரெச்சவிலக்கணமும் அதன்வாய்ப்பாடுங் கூறுஞ் சூத்திரம் யாது?

செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி யறுபொருட்பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.

(செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில்
காலமும் செயலும் தோன்றி, பாலொடு
செய்வது ஆதி அறுபொருட்பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச்சம்)

இ–ள்.: செய்தவென்றுஞ் செய்கின்றவென்றுஞ் செய்யுமென்றுஞ் சொல்லப்படும் மூவகைச் சொற்களிலே முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்னு மூன்றுகாலங்களுந் தொழிலுந் தோன்றிப், பால்காட்டும் விகுதியும், செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செயப்படுபொருள் என்னும் அறுவகைப்பொருட்பெயர்களும் ஒழிய நிற்பது பெயரெச்சவினைச்சொல்லாம், எ – று.

பெயரெச்சம்வரும் வாய்பாடுகள் யாவை?

"செய்த செய்கின்ற செய்யுமென்பாடு"

அவை காட்டுங் காலங்கள் யாவை?

செய்த என்னும் வாய்ப்பாட்டுப் பெயரெச்சம் இறந்தகாலமும், செய்கின்ற என்னும் வாய்பாட்டுப்பெயரெச்சம் நிகழ்காலமும், செய்யும் என்னும் வாய்ப்பாட்டுப் பெயரெச்சம் எதிர்காலமுங் காட்டும்.

பெயரெச்சத்திலே வெளிப்படத்தோன்றி நிற்பன யாவை?

''காலமுஞ் செயலும்''

பெயரெச்சம் என்னும் பெயர்க்குக் காரணம் யாது?

''பாலொடு–செய்வதாதி அறுபொருட்பெயரும் எஞ்சநிற்பது ஆதலின் பெயரெச்சமெனப்பட்டது. பெயர் எஞ்ச நிற்பது பெயரெச்சம்.

எனவே பெயரெச்சம் எதனை அவாவி நிற்கும்?

செய்வதாதி அறுபொருட்பெயருள் ஒன்றை அவாவி நிற்கும்.

பாலொடு எனப் பாலை ஒடுக் கொடுத்துப்

பிரித்தது யாது பற்றி?

ஐம்பாலாகிய வினைமுதலைக்காட்டும் விகுதியுறுப்புக்குறைந்

ததென்பது காட்டுதற்கும், ஐம்பான் மூவிடங்களுக்கும் உரியதென்பது புலப்படுத்தற்குமாம்.

குறிப்புவினைப் பெயரெச்சத்திற்கும் இதுவே இலக்கணமாமோ?

அன்று; குறிப்புவினைப் பெயரெச்சம் காலமுஞ் செயலும் வெளிப்படக்காட்டாது பால்காட்டும் விகுதியும் பெயரும் எஞ்சநிற்கும்.

(வரலாறு)

இற. நிகழ். எதிர். (1) உண்ட, உண்கின்ற, உண்ணும் – சாத்தன்...வினைமுதல்.

கலம்....கருவி.

இடம்...நிலம்

ஊண்...தொழில்.

நாள்....காலம்.

சோறு...செயப்படுபொருள்.

(2) ''வேலாண் முகத்த களிறு;'' ''மூவிலையவேல்;'' உள்ளபொருள், கரியகுதிரை, புதியநட்பு எனக் குறிப்புவினைப் பெயரெச்சம் வரும். இவை செய்தவென்பதன் குறிப்பாய் வந்தன.

(3) உண்ணாத குதிரை, உண்கலாத குதிரை, உண்கிலாத குதிரை என எதிர்மறைத் தெரிநிலைவினைப் பெயரெச்சம் வரும்.

(4) இல்லாதபொருள், அல்லாத குதிரை என எதிர்மறைக் குறிப்புவினைப் பெயரெச்சம் வரும்.

இங்கே உண்ட என்பது; உணலென்னுந் தொழிலும் இறந்தகாலமுந் தோன்றி, அத்தொழி னிகழ்த்துதற்கு

வேண்டும் பாறோன்றாமையும் அப்பாலுடனே பெயரொழிய நின்றமையுமறிக.

அறுபொருட்பெயரும் என்ற உம்மையால், இன்னதற்கு, இதுபயன் என்னும் இருபொருட்பெயர் எஞ்ச நிற்பனவும், பிறபெயர் எஞ்ச நிற்பனவுங் கொள்க.

வ—று. (1) அரசன் ஆகொடுத்த பார்ப்பான், களை கட்ட பயிர்; இவை இன்னதற்கென்னும் பெயரெஞ்ச நின்றன. களை கட்ட கூலி; இது இதுபயனென்னும் பெயரெஞ்ச நின்றது. இவை பார்ப்பானுக்கு அரசன் கொடுத்த ஆவெனவும் பயிருக்குக் கட்ட களை எனவும் கூலிக்குக் கட்டகளை எனவும் மாற்றப்படும்.

(2) உண்டவிளைப்பு, ஆறு சென்ற வியர், உண்டவெச்சில் எனவும், குடி போனவூர், பழமுதிர்ந்த கோடு எனவும், பொன் பெரிய நம்பி எனவும், பிறபெயர்களெஞ்ச நின்றன. "நின்முகங்காணு மருந்தினேன்" என்புழிக் காட்சியை மருந்தென்றதாகலிற் றொழிற்பெயரெஞ்ச நின்றது.

## முகவை இராமானுச கவிராயர்

இது, பெயரெச்சமாமாறு உணர்த்துகின்றது.

இ—ள்.:– **செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டில்** இம்மூவகை வாய்ப்பாட்டிலே, **காலமும் செயலும் தோன்றி** – முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலமுந் தொழிலுந் தோன்றி, **பாலொடு** – வினைமுற்றுதற்கு வரும் பாலொடு கூட, **செய்வதாதியறு பொருட்பெயரும்** – செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செய்பொருள் என்னும் அறுவகைப் பொருட்பெயரும், **எஞ்ச நிற்பது பெயரெச்சமே** – ஒழிய நிற்பன பெயரெச்சவினை வினைக் குறிப்புக்களாம், எ—று.

'பாட்டில்' என்ற இடத்து வாய் என்பது குறைந்து நின்றது, நட வா முதலிய, சிறப்பு வாய்பாடுகளால் தோன்றுவன எல்லாம் அடங்குதற்குச் 'செய்த, செய்கின்ற, செய்யும்' என்னும் பொதுவாய் பாட்டாற் கூறினார். வாய்படுதல் – வாய்பாடு எனச் சொல்லின் மேல்நின்றது. இவற்றுள், செய்யுமென்பது இறுதிநிலை காலங்காட்டும்; ஒழிந்தனவற்றுள் இடைநிலை காலங்காட்டும், 'நிற்பது' என்றது தொகுதி ஒருமையாதலால் அதற்கு நிற்பன எனப் பொருளுரைக் கப்பட்டது. ஏற்புழிக் **கோடலென்னும் உத்தியால்,** காலமுஞ் செயலுந் தோன்றுதல் தெரிநிலையுடன்பாட்டிற்கும் ஒழிந்தவிதி

தெரிநிலையுங் குறிப்பு மாகிய உடன்பாடு எதிர்மறை யிரண்டிற்குங் கொள்க.

வ–று.:–

உண்ட, உண்ணாநின்ற, உண்ணும் என நிறுத்தி; சாத்தன், கலம், இடம், ஊண், நாள், சோறு என வருவித்து ஒட்டிச் செய்வதாதி அறுபொருட் பெயரு முறையே கொண்டு முடிந்து நின்ற தெரிநிலையுடன்பாட்டுப் பெயரெச்சமெனக் காண்க. 'குறைய நிற்ப'தென்றதற்கு, முடிந்து நிற்கக் காட்டிய தென்னெனின், இந்த ஆறுங் குறைய நின்றன அந்த மூன்று வாய்பாட்டு வினைகளாதலால் அவற்றைப் பெயரெஞ்சுகிளவி யென்றும் பெயரெச்சமென்றுஞ் சொல்லப்பட்டன. 'வேலாண் முகத்த களிறு', 'மூவிலைய வேல்', உள்ள பொருள், அன்ன, இன்ன, என்ன, கரிய, பெரிய, சிறிய, நெடிய, என வருமிவை யெல்லாம், உடன்பாட்டுக் குறிப்புப் பெயரெச்சம். ஓடாத சாத்தன், உண்ணாதசாத்தான், இல்லாத பொருள் என்றாற் போல்வன, எதிர்மறைத் தெரிநிலை குறிப்புப் பெயரெச்சம் எனக் காண்க.

செய்வதாதியறு பொருட் பெயருங் காரணமாதலால் இவ்வெச்சங்கள் காரியப் பொருட்டாய் நின்றன. 'அறு பொருட் பெயரும்' என்ற உம்மையை 'ஆறுந் தருவது **வினையே**' என்ற உம்மைபோல வைத்து, அறு பொருட்பெயரில் சில குறைந்தும் இன்னதற்கு என்பதும், இது பயனென்பதும் பிறபெயருங் கூடியும் எச்சமாக நிற்குமெனவும் பொருளுரைத்துக் கொள்க. அவை வருமாறு: ஆடின கொடி, துஞ்சின கொடி: இவை கருவியுஞ் செயப்படுபொருளுங் குறைந்தெச்சமாக நின்றன. களை கட்டபயிர், களைகட்ட கூலி இவை களை கட்டது பயிர்க்கு எனவும், களைகட்டதற்குப் பயன் எனவும் நிற்றலால், இன்னதற்கென்பதும் இது பயனென்பதுங் கூடி யெச்சமாகி நின்றன, உண்ட இளைப்பு, பூத்தகண்ணி (கண்ணி – மாலை) குடிபோனவூர், பொன் பெரிய நம்பி: இவை செய்வதாதி எட்டினுள்ளடங்காப் பிற பெயர்கள் கூடி யெச்சமாகிநின்றன. இனிவந்த -தன்மை வந்தமை என்றும், முடிந்த தன்மை முடிந்தமை என்றும் விகாரப்பட்டு வருதலும், நின்றவுழி நின்றுழி, வந்தவுழி, வந்துழி, சென்றவுழி, சென்றுழி என விகாரப்பட்(டு) வருதலும், பிறவும், 'காலம் கரந்த

பெயரெச்சம் வினைத்தொகை' எனக் கூறுதலால், வினைத்தொகையையும் பெயரெச்சத்துள் அடக்கி இதுவே விதியாகவுங் கொள்க. இப்பெயரெச்ச விகுதியாவன: அ, உம் எனக் காண்க. செய்வதாதி யறுபொருட் பெயரொடு முடியுமென்றவற்றுள் வந்தமை, முடிந்தமை, நின்றுழி, வந்துழி என்பன எவற்றைக் கொண்டு முடிந்தன வெனின், இங்கே தன்மை யென்றது தொழில் தன்மையாதலால் செயல்கொண்டு முடிந்ததெனவும் உழியென்பதிடமாதலால் நிலத்தைக் கொண்டு முடிந்த தெனவுங் காண்க. செல்வுழி சார்வழி என்பன வினைத்தொகை விகற்பமாதலால் விரிந்துழி யிவை போலு மென்க.

**"காலமும் வினையுந் தோன்றிப்பா றோன்றாது**
**பெயர்கொள் ளும்மது பெயரெச் சம்மே"**

என்றாராசிரியர் அகத்தியனாரு மெனக் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– **செய்த செய்கின்ற செய்யும் என்பாட்டில்** – செய்த செய்கின்ற செய்யும் என்று சொல்லப்படும் மூன்றுவகை வாய்பாட்டுச் சொற்களிலே, **காலமும்** – (முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்கிற மூன்று) காலங்களும், **செயலும்**– தொழிலும், **தோன்றி** – தோன்றப்பெற்று, **பாலொடு**– பாலுடனே, **செய்வது ஆதி அறுபொருள் பெயரும்** – செய்பவன் முதலிய அறுவகைப் பொருட்பெயர்களும், **எஞ்ச நிற்பது** – ஒழிய நிற்பன, **பெயரெச்சம்** – தெரிநிலைப் பெயரெச்சமும் குறிப்புப் பெயரெச்சமுமாம்.

குறிப்பு :–

பால் எஞ்சி நிற்றல் – கொண்டுமுடியுஞ் சொல்லின் பாலன்றித் தனக்கென்று ஒருபாலில்லாமை. அறுபொருட்பெயர் எஞ்சி நிற்பது – அறுவகைப்பொருட் பெயருள் ஒன்று கொண்டு முடியுஞ் சொல்லாக நிற்கப்பெறுதல். மேல் வினையெச்சச் சூத்திரத்தில் 'பால்வினை ஒழிய நிற்பது' என்பதற்கும் இவ்வுரைகொள்க. ஏற்புழிக்கோடல் என்னு முத்தியால்– இச்சூத்திரத்தில் 'தோன்றி' என்பதுவரைக்கும் தெரிநிலைக்கும் ஒழிந்தவிதி தெரிநிலை குறிப்பு இரண்டுக்குங் கொள்க.

உதாரணம்

| | | செய்பவன் | கருவி. | நிலம். | செயல். | காலம். | செய்பொருள் |
|---|---|---|---|---|---|---|---|
| இறப்பு–உண்ட | – | மனிதன். | கலம். | வீடு. | ஊன். | பகல். | சோறு. |
| நிகழ்வு–உண்கிற | – | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| எதிர்வு–உண்ணும் | – | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| குறிப்பு–நல்ல | – | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| எதிர்ம–தெரி–உண்ணாத | – | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| எதிர்ம–குறி–இல்லாத | – | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |

பெயரெச்சம் – 'உண்ட இளைப்பு' எனக்காரணப் பொருளதாய்க் காரியத்தைக் கொண்டு முடிதலும் 'நோய்தீர்ந்தமருந்து' எனக்காரியப் பொருளதாய்க் காரணத்தைக் கொண்டு முடிதலும் உண்டு.

இன்னும் 'படிக்குந்தோறும்', 'செய்தபின்' எனச் சில இடைச்சொற்களைக் கொண்டு முடியுமேனும் அவை செய்வதாதிபாறில் ஒன்றனுள் அடங்குதல் உய்த்துணர்க.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: – செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில் – செய்த வென்றுஞ் செய்கின்ற வென்றுஞ் செய்புமென்றுஞ் சொல்லப்படும் மூவகைச் சொற்களிலே, காலமும் செயலும் தோன்றி – முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்னு மூன்று காலங்களுந் தொழிலும் தோன்றி, பாலொடு – வினை முற்றுதற்கு வேண்டும் பாலொன்றுந் தோன்றாது அப்பாலுடனே, செய்வது ஆதி அறுபொருட் பெயரும் – செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செயப்படுபொருள் என்னும் அறுவகைப் பொருட்பெயர்களும், எஞ்சநிற்பது பெயரெச்சம் – ஒழிய நிற்பன பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களாம், எ–று.

நிற்பதென்பது தொகுதி பொருமை.

ஏற்புழிக்கோடலால், தோன்றி பென்பது வரைக்குந் தெரிநிலை யுடன்பாட்டிற்கும் ஒழிந்த விதி தெரிநிலையுங் குறிப்புமாகிய உடன்பாடெதிர்மறை யிரண்டற்குங் கொள்க.

வ–று.:–

சாத்தன், ......... வினைமுதல்

கலம் .............. கருவி

இடம் ........... நிலம்

இற, நிகழ், எதிர் (1) உண்ட, உண்கின்ற, உண்ணும்

ஊண் ............. தொழில்

நாள் .................. காலம்

சோறு ........... செயப்படுபொருள்

(2) "வேலாண் முகந்த களிறு" "மூவிலையவேல்" 'உள்ளபொருள்', 'கரியகுதிரை', 'புதியநட்பு' எனக் குறிப்புவினைப் பெயரெச்சம் வரும்.

(3) 'உண்ணாத குதிரை', 'உண்கலாத குதிரை', 'உண்கிலாத குதிரை' என எதிர்மறைத் தெரிநிலைவினைப் பெயரெச்சம் வரும்.

(4) 'இல்லாத பொருள்', 'அல்லாத குதிரை' என எதிர்மறைக் குறிப்புவினைப் பெயரெச்சம் வரும்.

இங்கே உண்ட என்பது; உணலென்னுந் தொழிலும் இறந்த காலமும் தோன்றி, அத்தொழினிகழ்த்துதற்கு வேண்டும் பாறோன்றாமையும் அப்பாலுடனே பெயரொழிய நின்றமையுமறிக.

'அறுபொருட்பெயரும்' என்ற உம்மையால், இன்னதற்கு, இது பயன் என்னும் இருபொருட்பெயர் எஞ்ச நிற்பனவும், பிறபெயர் எஞ்ச நிற்பனவுங் கொள்க.

வ–று.:–

(1) 'களை கட்டபயிர்'; இது இன்னதற்கென்னும் பெயரெஞ்ச நின்றது. 'களை கட்டகூலி'; இது, இது பயனென்னும் பெயரெஞ்ச நின்றது.

(2) 'உண்டவிளைப்பு', 'ஆறு சென்ற வியர்', 'உண்டவெச்சில்' எனவும், 'குடிபோன வூர்', 'பழமுதிர்ந்த கோடு' எனவும் 'பொன் பெரிய நம்பி' எனவும் பிறபெயர்கள் எஞ்ச நின்றன. "நின்முகங் காணுமருந்தினேன்" என்புழிக் காட்சியை மருந்தென்றதாகலிற் றொழிற்பெயரெஞ்ச நின்றது.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– **செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில்** – செய்தவென்றுஞ் செய்கின்றவென்றுஞ் செய்யுமென்றுஞ் சொல்லப்படும் மூவகைச் சொற்களிலே, **காலமும் செயலுந் தோன்றி** – முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்று மூன்று காலங்களுந் தொழிலுந் தோன்றி, பாலொடு – வினைமுற்றுதற்கு வேண்டும். பாலொன்றுந் தோன்றாது அப்பாலுடனே. **செய்வது ஆதி அறுபொருட்பெயரும்** – செய்பவன் கருவி நிலம், செயல் காலம், செயப்படுபொருள் என்னும் அறுவகைப் பொருட்பெயர்களும், **எஞ்சிநிற்பது பெயரெச்சம்** – ஒழியநிற்பன பெயரெச்சவினை

வினைக்குறிப்புக்களாம், எ—று.

நிற்பதென்பது தொகுதியொருமை,

ஏற்புழிக்கோடலால், தோன்றியென்பதுவரைக்குந் தெரிநிலைவினையு டன பாட்டிற்கும், ஒழிந்தவிதி தெரிநிலையுங் குறிப்புமாகிய உடன்பாடெதிர்மறை யிரண்டற்குங் கொள்க.

(வரலாறு)

| | சாத்தான் | வினைமுதல். | | |
|---|---|---|---|---|
| | | | கலம் | கருவி |
| இற | நிகழ். | எதிர் | இடம் | நிலம் |
| (1) உண்ட | உண்கின்ற | உண்ணும் | உண்ணுதல் | தொழில் |
| | | | நாள் | காலம் |
| | | | சோறு | செயப்படு பொருள் |

(2)''வேலாண் முகத்தகளிறு'; '' மூவிலையவேல்''; உள்ளபொருள், கரியகுதிரை, புதியநட்பு எனக் குறிப்புவினைப் பெயரெச்சம் வரும்.

(3)உண்ணாதகுதிரை, உண்கலாதகுதிரை, உண்கிலாதகுதிரை எனஎதிர்மறைத் தெரிநிலைவினைப் பெயரெச்சம் வரும்,

(4)இல்லாதபொருள், அல்லாதகுதிரை என எதிர்மறைக் குறிப்புவினைப் பெயரெச்சம் வரும்,

இங்கே உண்ட என்பது; உணலென்னுந் தொழிலும் இறந்தகாலமும் தோன்றி, அத்தொழினிகழ்த்துதற்குவேண்டும் பாறோன்றாமையும் அப்பாலுடனே பெயரொழிய நின்றமையுமறிக,

அறுபொருட்பெயரும் என்ற உம்மையால், இன்னதற்கு, இதுபயனென்னும் இருபொருட்பெயர் எஞ்சநிற்பனவும், பிறபெயர் எஙசநிற்பனவுங் கொள்க.

வ—று:—

(1)களை கட்ட பயிர்; இது இன்னதற்கென்னும் பெயரெஞ்சநின்றது. களை கட்ட கூலி; இதுபயனென்னும் பெயரெஞ்ச நின்றது.

(2)உண்டவிளைப்பு, ஆறு சென்ற வியர், உண்டவெச்சில், எ—ம், குடிபோனவூர், பழமுதிர்ந்த கோடு, எ—ம், பொன்பெரியநம்பி. எ—ம்.

பிறபெயர்களெஞ்ச நின்றன ''நின்முகங்காணுமருந்தினேன்''

என்புழிக் காட்சியை மருந்தென்றதாக லிற் தொழிற்பெயரெஞ்ச நின்றது (ஆறு–வழி)

“காலங்கரந்த பெயரெச்சம்வினைத்தொகை” எனக்கூறலால், கொல்புலி, அடுகளிறு, வளர்மதி என்பவற்றில் நிலைமொழியும் பெயரெச்சவினையெனக் கொள்க, காலந்தோன்றி என்பது இவற்றிற்குப் பொருந்தாதாயினும். அல்வழிவகை பதினான்கனுன்ளே பெயரெச்சத்தொடரும் வினைத் தொகையும் வெவ்வேறாயினும் வினையின் பகுப்பினுள் இது எப்பகுப்பின் பாற்படுமெனிற்பெயரெச்சத்தின்பாற்படு மென்பதே அமைவுடையதாதலா லென்றறிக.

“காலமும் வினையுந் தோன்றிப் பாறோன்றாது, பெயர்கொள்ளும்மது பெயரெச்சம்மே”, என்றார் ஆசிரியரகத்தியனார்,

## வை.மு. சடகோபராமானுசாச்சாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில்** – செய்த செய்கின்ற செய்யும் என்று சொல்லப்படுகின்ற மூன்றுவகை வாய்பாட்டுச் சொற்களிலே, **காலமும்** – (முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்கிற மூன்று) காலங்களும், **செயலும்** – தொழிலும், **தோன்றி** – தோன்றப்பெற்று, **பாலொடு** – பாலும், **செய்வது ஆதி அறு பொருள் பெயரும்** – செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செயப்படுபொருள் என்கிற அறுவகைப் பொருட்பெயர்களும், **எஞ்சநிற்பது** – ஒழிய நிற்பன, **பெயரெச்சம்** – தெரிநிலைப் பெயரெச்சமும், குறிப்புப் பெயரெச்சமும் ஆம்; எ–று.

நிற்பது – சாதியொருமை.

பெயரெச்சம் – பெயரைக் கொண்டு முடிவதாகிய குறைந்து நிற்குஞ்சொல், எஞ்சுவது, எச்சம்.

பால் எஞ்சி நிற்றல் – கொண்டு முடியுஞ் சொல்லின் பாலன்றித் தனக்கென்று ஒருபா லில்லாமை. அறுபொருட்பெயர் எஞ்சி நிற்றல் – ஆறுவகைப் பொருட்பெயருள் ஒன்று கொண்டுமுடியுஞ் சொல்லாக நிற்கப்பெறுதல். மேல் வினையெச்சச் சூத்திரத்தில், 'பால் **வினை யொழிய நிற்பது**' என்பதற்கும் இவ்வாறு கொள்க.

**ஏற்புழிக்கோடலால்** இச்சூத்திரத்தில் 'தோன்றி' என்பது வரையிலும் தெரிநிலைக்கும், மற்றையது தெரிநிலை குறிப்பு இரண்டுக்கும் கொள்க.

**உ–ம்.:–**

இறப்பு, உண்ட பொன்னன் – செய்பவன். ஊண் – செயல்

நிகழ்வு, உண்கிற கலம் – கருவி பகல் –காலம்

எதிர்வு, உண்ணும் வீடு – நிலம் சோறு – செய்பொருள்.

குறிப்பு – உள்ள, பெரிய, புதிய, இலைய, முகத்த – வேல்

தெரிநிலைப்பெயரெச்சம் காலமும் செயலும் தோன்ற நிற்றலும், இருவகைப் பெயரெச்சமும் பாலும் கொண்டு முடியும் பெயரும் குறைய நிற்லும் காண்க.

உண்ணாத, செய்பாத – எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சம். இல்லாத, அல்லாத – எதிர்மறைக் குறிப்புப்பெயரெச்சம். (உண்ணாத, செய்பாத என்பவை காலங்காட்டாதனவாயினும், அவற்றின் உடன்பாடாகிய உண்ட செய்த முதலியவை காலங் காட்டுதலால் இவையும் தெரிநிலையாம். எதிர்மறைப்பெயரெச்சம், உண்ணா செய்யா இல்லா அல்லா என்று ஈறுகெட்டும் நிற்கும்.

உண்ணாத செய்பாத என்பவற்றில் உண், செய் என்ற பகுதிகள் உடன்பாட்டுக்கு உரியவை யாதலால்; ஆ–எதிர்மறை யிடைநிலை; இல்லாத, அல்லாத என்றவற்றில் இல் அல் என்ற பண்படிப் பகுதிகளே எதிர்மறை காட்டுதலால், ஆ–சாரியை; இது, எதிர்மறை வினையெச்சத்துக்கும் பொருந்தும். இல்லாத, அல்லாத என்றவற்றிலும் ஆ–எதிர்மறையெனக் கொண்டால் இரண்டு எதிர்மறை ஒருடன்பாட்டை உணர்த்தவேண்டுமாதலின் அங்ஙனம் கொள்ள இடமில்லாமை காண்க.

பெயரெச்சம் – **'சங்குசுட்ட சுண்ணாம்பு'**, **'உண்ட இளைப்பு'** எனக் காரணப்பொருளிலும்: **'நோய்தீர்ந்த மருந்து'**, **'நின்னைக் காணும் அவா'** எனக் காரியப்பொருளிலும் வருமென்று அறிக. (சுட்ட – சுட்டதனா லாகிய, உண்ட – உண்டதனாலாகிய, தீர்ந்த – தீர்தற்குக் காரணமான காணும் – காணவேண்டுமென்ற என்று பொருள்)

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– செய்த செய்கின்ற செய்யும் என் பாட்டில்** – செய்த செய்கின்ற செய்யும் என்னும் மூவகை வாய்பாட்டுச் சொற்களிலே, **காலமும் செயலும் தோன்றி** – முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலங்களுந் தொழிலுந் தோன்றி, பாலோடு – வினை முற்று தற்கு வேண்டும் பாலோன்றுந் தோன்றாது அப் பாலுடனே, **செய்வது ஆதி அறுபொருட்பெயரும்** – செய்பவன் கருவி நிலம் செயல் காலம்

செயப்படுபொருள் என்னும் அறுவகைப் பொருட்பெயர்களும், எஞ்ச நிற்பது **பெயரெச்சம்** – ஒழிய நிற்பன பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களாம். எ–று.

நிற்பதென்பது தொகுதியொருமை.

ஏற்புழிக்கோடலால், தோன்றியென்பது வரைக்குந் தெரிநிலையுடன்பாட்டிற்கும், ஒழிந்த விதி தெரிநிலையுங் குறிப்புமாகிய உடன்பாடெதிர்மறை யிரண்டற்குங் கொள்க.

**(உ–ம்.)**

(இறப்பு) (நிகழ்வு) (எதிர்வு)

(1) உண்ட, உண்கின்ற, உண்ணும் – சாத்தன்......வினைமுதல்.

காலம்......கருவி.

இடம்......நிலம்.

ஊண்......தொழில்.

நாள்......காலம்.

சோறு......செயப்படு பொருள்.

எனத் தெரிநிலைவினைப் பெயரெச்சம் வரும்.

(2) "வேலாண் முகத்த களிறு", "மூவிலைய வேல்"; உள்ள பொருள், கரிய குதிரை, புதிய நட்பு – எனக் குறிப்புவினைப் பெரெச்சம் வரும்.

(3) உண்ணாத குதிரை, உண்ணகலாத குதிரை, உண்கிலாத குதிரை என எதிர்மறைத் தெரிநிலைவினைப் பெயரெச்சம் வரும்.

(4) இல்லாத பொருள், அல்லாத குதிரை என எதிர்மறைக் குறிப்புவினைப் பெயரெச்சம் வரும்.

இங்கே 'உண்ட' என்பது, உணலென்னுந் தொழிலும் இறந்த காலமுந் தோன்றி, அத்தொழினிகழ்த்துதற்கு வேண்டும் பால்தோன்றாமையும் அப்பாலுடனே பெயரொரிய நின்றமையு மறிக.

அறுபொருட்பெயரும் என்ற உம்மையால், இன்னதற்கு, இது பயன் என்னும் இருபொருட்பெயர் எஞ்ச நிற்பனவும், பிற பெயர் எஞ்ச நிற்பனவுங் கொள்க.

(உ–ம்.)

(1) களை கட்ட பயிர்; இது இன்னதற்கென்னும் பெயரெஞ்ச நின்றது. களை கட்ட கூலி; இது இதுபயனென்னும் பெயரெஞ்ச

நின்றது.

(2) உண்ட விளைப்பு, ஆறு சென்ற வியர், உண்ட வெச்சில் என்றும் குடிபோனவூர், பழமுதிர்ந்த கோடு, பொன் பெரிய நம்பி என்றும் பிறபெயர்கள் எஞ்ச நின்றன. "நின்முகங்காணு மருந்தினேன்" என்புழிக் காட்சியை மருந்தென்றதாகலின் தொழிற்பெயரெஞ்ச நின்றது.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ-ள்.) செய்த செய்கின்ற செய்யும் என்பாட்டில்** – செய்த செய்கின்ற செய்யும் என்று சொல்லப்படுகிற மூவகை வாய்பாட்டுச் சொற்களிலே, **காலமும் செயலும் தோன்றி** – (முறையே இறப்பு நிகழ்வு எதிர்வு என்கிற மூன்று) காலங்களும் தொழிலும் தோன்றி, **பாலொடு** – பாலுடனே, **செய்வது ஆதி அறுபொருள் பெயரும்** – செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செயப்படுபொருள் என்கிற அறுவகைப் பொருட் பெயர்களும், **எஞ்ச நிற்பது** – ஒழிய நிற்பன, **பெயரெச்சம்** – பெயரெச்சவினை வினைக்குறிப்புக்களாம். (எ–று)

**(பொ–ரை.)**

செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் மூவகைப் பட்ட சொல்லின்கண் முறையே இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலமும் செயலும் தோன்றி, வினை முற்றுதற்கு வேண்டும் பால் ஒன்றும் தோன்றாது, அப் பாலுடனே செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் என்னும் அறுவகைப் பொருட் பெயரும் ஒழிய நிற்பன தெரிநிலைப் பெயரெச்சவினை குறிப்பு வினைப் பெயரெச்சங்களாம்.

பெயரெச்சம் – பெயரைக் கொண்டு முடிவதாகிய குறைந்து நிற்குஞ்சொல். (எஞ்சுவது. எச்சம்.)

பால் எஞ்சநிற்றல்–கொண்டு முடியுஞ் சொல்லின் பாலன்றித் தனக்கென்று ஒருபாலில்லாமை.

அறுபொருட் பெயரெஞ்சநிற்றல் – அறுவகைப் பொருட் பெயருள் ஒன்று கொண்டு முடியுஞ்சொல்லாக நிற்கப்பெறுதல்.

(மேல் வினையெச்சச் சூத்திரத்துள்ளும் 'பால் வினை யொழிய நிற்பது' என்புழி, 'நிற்பது' என்பது தொகுதி யொருமை.)

ஏற்புழிக் கோடலால் இச் சூத்திரத்தில் 'தோன்றி' என்பது வரைக்கும் தெரிநிலைப் பெயரெச்சத்திற்கும், மற்ற விதி தெரிநிலையுங் குறிப்பும் ஆகிய இரண்டுவகைப்

பெயரெச்சங்களுக்கும் கொள்க.

**(உ–ம்)**

| இறந் | நிகழ் | எதிர் |
|---|---|---|
| உண்ட | உண்கின்ற | உண்ணும் |
| | உண்ணாநின்ற | |

சாத்தன் – செய்பவன்.

கலம் – கருவி.

வீடு – நிலம்.

ஊண் – செயல்.

பகல் – காலம்.

சோறு – செயப்படு பொருள்.

வேலாண் முகத்த களிறு

மூவிலைய வேல்

உள்ள பொருள் உடன்பாட்டுக்குறிப்புப் பெயரெச்சம்.

கரிய குதிரை

புதிய நட்பு

ஓடாக குதிரை எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சம்.

உண்ணாத சாத்தன்

இல்லாக பொருள் எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம்.

அல்லாத குதிரை

'அறுபொருட் பெயருமூ' என்ற உம்மையால் 'களைகட்டபயிர்,' 'களைகட்ட கூலி' என இன்னதற்கு இதுபயன் என்னும் பெயர்கள் எஞ்ச நிற்பனவும்,

"உண்ட இளைப்பு," குடிபோன ஊர்' எனப் பெயர்எஞ்ச நிற்பனவும் கொள்க.

(தெரிநிலைப் பெயரெச்சம் காலமும் செயலும் தோன்ற நிற்றலும், இருவகைப் பெயரெச்சமும் பாலும் கொண்டுமுடியும் பெயரும் குறையநிற்றலும் காண்க.

ஓடாத, உண்ணாத என்பவை எதிர்மறைத்தெரிநிலைப்

1. தொல். சொல். 236;
2. தொல். சொல். 237;
3. நன். 354;3.

பெயரெச்சம். இவற்றுள் ஓடு, உண் என்கிற பகுதிகள் உடன் பாட்டுக்குரிய தெரிநிலைவினைப் பகுதியாதலாலும், 'எதிர்மறை மும்மையும் ஏற்கும்' என்றமையாலும், ஆகாரம் எதிர்மறை இடைநிலை யாதலாலும் இவை தெரிநிலை எதிர்மறை எனக்கொள்க.

இல்லாத, அல்லாத என்பவை எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம். இவற்றுள் இன்மை அன்மை என்பவற்றின் இல், அல் என்கிற பண்படிப்பகுதிகளே எதிர்மறைகாட்டுதலாலும், ஆதாரம் சாரியை யாதலாலும் இவை எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்மெனக் கொள்க. இவை எதிர்மறைவினை யெச்சத்திற்கும் பொருந்தும்.

இல்லாத, அல்லாத என்பவற்றிலும் ஆஎதிர்மறை யெனக் கொண்டால், இரண்டு எதிர்மறை ஒருடன்பாட்டை யுணர்த்த வேண்டுமாதலின், அங்ஙனம் கொள்ள இடமில்லாமையறிக.)

சங்கு சுட்ட சுண்ணாம்பு, உண்ட இளைப்பு என்பன காரணப் பொருளிலும், நோய் தீர்ந்த மருந்து, நின்னைக்காணும் அவா என்பன காரியப்பொருளிலும் வருமெனக் கோடலு மொன்று.

(சுட்ட – சுட்டதனலாகிய, உண்ட – உண்டதனாலகிய, தீர்ந்த – தீர்தற்குக் காரணமான, காணும் – காணவேண்டுமென்ற என்று பொருள்.)

(செய்புமென் னெச்சத்திற்குச் சிறப்பு விதி.)

## கா. நமச்சிவாய முதலியார்

**செய்த செய்கின்ற செய்யும் என்** – செய்த செய்கின்ற செய்யும் என்று சொல்லப்படுகிற, **பாட்டில்** – மூவகைச் சொற்களிலே, **காலமும்** – இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று காலங்களும், **செயலும்** – தொழிலும், **தோன்றி** – தோன்றி, **பாலோடு** – பாலுடனே, **செய்வது ஆதி** – செய்பவன் கருவி நிலம் செயல் காலம் செயப்படுபொருள் என்னும், அறு **பொருட்பெயரும்** – அறுவகைப் பொருட்பெயர்களும், **எஞ்ச நிற்பது** – ஒழிய நிற்பது, **பெயரெச்சம்** – பெயரெச்சமாம்.

இச் சூத்திரத்தில், தோன்றி என்பது வரைக்கும் தெரிநிலைப்

---

1. தொல் சொல் 234;
2. தொல். சொல் 433;
3. வீரசோ. 66 உரை;
4. நன். 364.

பெயரெச்சத்திற்கும், மற்ற விதி தெரிநிலையும் குறிப்பும் ஆகிய இரண்டுவகைப் பெயரெச்சங்களுக்கும் கொள்க.

**உதாரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| | | சாத்தன் | – | செய்பவன் |
| இறந்த காலம் – | உண்ட | கலம் | – | கருவி |
| | | வீடு | – | நிலம் |
| நிகழ்காலம் – | உண்கின்ற | ஊண் | – | செயல் |
| | | பகல் | – | காலம் |
| எதிர்காலம் – | உண்ணும் | சோறு | – | செயப்படுபொருள் |

வேலாண்முகத்த களிறு
மூவிலைய வேல்
உள்ள பொருள் — உடன்பாட்டுக் குறிப்புப் பெயரெச்சம்
கரிய குதிரை
புதிய நட்பு

ஓடாத குதிரை
உண்ணாத சாத்தன் — எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சம்

இல்லாத பொருள்
அல்லாத குதிரை — எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம்

'அறுபொருட் பெயரும்' என்னும் உம்மையால், களைகட்ட பயிர், களைகட்ட கூலி என இன்னதற்கு, இது பயன் என்னும் பெயர்கள்' எஞ்ச நிற்பனவும், உண்ட இளைப்பு, குடிபோனவூர் எனப் பிறபெயர் எஞ்ச நிற்பனவும் கொள்க.

## மோசகு பொன்னையா

செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் மூவகை வாய்பாட்டனவாக அமைந்து, முக்காலங்களையும் தொழிலையுந் தோற்றுவித்து; பாலுடனே, செய்பவன், கருவி, நிலம்,

செயல், காலம், செயப்படுபொருள் என்னும் அறுவகைப்பட்ட பெயர்களும் கொண்டு முடியுமாறு ஒழியநிற்பன பெயரெச்சங்களாம். எ–று.

பாலுணர்த்தும் விகுதி இன்றி வரும் வினைக்குறைச் சொல், கொண்டு முடியும் பெயர்ச் எஞ்ச வரும், ஆதலின் பெயரெச்சம் எனப்பட்டது.

**எ–டு.**

1. தொழிற் பெயரெச்சம் இறப்பு–உண்ட பொன்னன்/கலம்/வீடு/ஊண்/காலம்/சோறு
   நிகழ்வு–உண்கிற
   எதிர்வு–உண்ணும்

2. குறிப்புப் பெயரெச்சம் உள்ள/பெரிய/புதிய/இலைய/முகத்தவேல்

தொல்காப்பியர்,

**பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்**
**எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா,**[1]

எனவும்,

**தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்**
**எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்**[2]

எனவுங் கூறியுள்ளதாலும், இவ்வாசிரியர் பொதுவியலில் அவற்றை அமைப்பார்,[3] ஆதலானும் உண்ணா, உண்ணாத என்பன முதலாக வரும் எதிர்மறைப் பெயரெச்சங்களையும், கொல்லுங் காட்டுள் யானை, கொன்ற காட்டுள் யானை என எவ்வாறு முடிக்குஞ் சொற்களுக்கிடையே இடைப்பிறவரலாக வேறு சொற்களைப் பெற்று வரும் பெயரெச்சங்களையும் நிற்பது எனத் தொகுதி ஒருமையாற் குறிப்பிட்டவதனால் அமைக்க. சங்கு சுட்ட சுண்ணாம்பு, உண்ட இளைப்பு என இவ்வாறு காரணங் பொருளிலும், நோய் தீர்த்த மருந்து, நின்னைக் காணும் அவா என இவ்வாறு காரியப்பொருளிலும் வரும் பெயரெச்சங்களையும் அதனாலே அமைக்க. இன்னும் அதனாலே

அந்த, இந்த எந்த என இவ்வாறு வரும் சுட்டுவினாவடிப் பெயரெச்சங்களையும் அமைக்க. வினைத்தொகையின் முற்சொல் பெயரெச்சமன்று என்பது பின்னர் தெளிவுறுக்கப்படும்.

தொல்காப்பியர்,

**நிலனும் பொருளும் காலமும் கருவியும்**
**வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட**
**அவ்வறு பொருட்குமோ ரன்ன வுரிமைய**
**செய்யுஞ் செய்த வென்னுஞ் சொல்லே,**

எனவும்,

**பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே,**

எனவும் கூறியுள்ள பெயரெச்சம் பற்றிய நூற்பாக்களின் கருத்து இந்நூற்பாவிற் செறித்து வைக்கப்பட்டுள்ளது. நிகழ்காலப் பெயரெச்ச அமைப்புகள் தொல்காப்பியர் காலத்தில் வழக்கில் இல்லையாதலின் அவர் கூறாது விடுத்தார். இடைக்கால இலக்கண நூலான வீரசோழியத்திலும் அதன் உரையிலும் நிகழ்காலப் பெயரெச்ச வடிவங்கள் கூறப்படுகின்றன.[3] இவ்வாசிரியரும் செய்கின்ற என்னும் நிகழ்காலப் பெயரெச்ச

வடிவைக் கூறினார்.

பொதுவாகப் பெயரெச்சங்களின் இலக்கணமுணர்த்தப் புகுந்த இவ்வாசிரியர், காலமுஞ் செயலுந் தோன்றி என்பது இருவகைப் பெயரெச்சங்களுக்கும் எல்லாவிடங்களிலும் பொருந்துமா றில்லை. குறிப்புப் பெயரெச்சங்கள் தொழிலைத் தோற்றுவிப்பதில்லை. காலம் உணர்த்தப்பட்ட அளவிலேயே, தொழிற்பொருண்மையும், நிலைப்பொருண்மையும் அடங்குமேனும் அது வெளிப்படத் தோன்றி நிற்றலை எல்லாப் பெயரெச்சங்களும் ஏற்பதில்லை என்பது,

**காலங் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை,**[4]

என்ற இவ்வாசிரியருக்கும் உடன்பாடேயாம். தொல்காப்பியர் காலத்தைக் கூறாது விடுத்தது இவண் நோக்கத்தக்கது.

சேனாவரையர், பிறிதோர் சொல்லோடியையாது தாமே தொடராதற் கேற்கும் வினைச்சொல் முற்றாம்; பிறிதோர் சொற்பற்றி யல்லது நிற்ற லாற்றா வினைச்சொல் எச்சமாம்'எனக் கூறிய விளக்கம், செய்து, செய்கு என இவ்வாறு வரும் பழைய வினைமுற்று வடிவங்களுக்குப் பொருந்தாமலிருந்தாலும், பால் விகுதிபெற்ற வினைமுற்று பண்டை வாக்கியத் திரிபு எனவும், பால்விகுதி பெறாத எச்சம் பண்டை வாக்கியத் திரிபின் முற்பகுதி எனவும் கொள்ள ஆதரவுகாட்டி நிற்கிறது.

(21)

**340. செய்யுமெ னெச்சஈற் றுயிர்மெய் சேறலும்
செய்யுளு ளும்முந் தாகலு முற்றேல்
உயிரு முயிர்மெய்யு மேகலு முளவே**

செய்யும் என் எச்ச ஈற்று உயிர் மெய் சேறலும்
செய்யுளுள் உம் உந்து ஆகலும் உற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே

seyyum e͟n essa ī͟ṟṟu uyirmey sē͟ṟalum
seyyu͟ḷu͟ḷ um unṭu ākalum muṟṟēl
uyirum uyirmeyyum ēkalum u͟ḷavē

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

### The form ceyyum

If verbs of the forms ceyyum are relative participles, it is usual in some cases to drop the (medial) vowel-consonant, and in poetry to change the um into untu; but if they are Finite Verbs, the medial vowel or vowel-consonant may be sometimes dropped.

## ஒப்புமைப் பகுதி

அவற்றுள்
செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொருங் கெடுமே யீற்றுமிசை யுகரம்
அவ்விட னறித லென்மனார் புலவர்

(தொல். சொல்.: 238)

உம்உந் தாகும் இடனுமார் உண்டே

(தொல். சொல்.: 292)

செய்யுமென் எச்சவீற்று உயிர்மெய் சேறலும்
செய்யுளுள் உம்உந் தாதலும் முற்றே
லுயிரு முயிர்மெய்யு மேகலு மாம்பிற

(இ.வி.: 244)

உம்ஈற்ற எச்சத்து ஈறும் ஈற்றயல்
உயிரும் உயிர்மெய்யும் ஒழிதலாம் செய்யுட்கு
உம்உந் தாதலும் ஒக்கும் என்ப

(தொ.வி.: 118)

## மயிலை நாதர்

எ–ன், பெயரெச்சத்திற்கும் முற்றிகும் ஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: செய்யுமென்னும் பெயரெச்சச் சொற்களுட் சில மொழியீற்று உயிர்மெய் கெடுதலும், செய்யுளுட் சில உம்மை உந்தென்றாதலும், செய்யுமென்னு முற்றுவினைச் சொல்லுட் சில ஈற்றுயிரேகலும், சில ஈற்றுயிர்மெய் ஏகலுமுள, எ–று.

உம்மையான், இவை இவ்வாறாதல் ஒருதலையன்றெனக் கொள்க.

வ–று.:

"ஆம்பொருள்க ளாகுமவை யார்க்குமழிக் கொண்ணா", "போம்புழை", "வாம்புரவி வழுதி" என [1]இவை உயிர்மெய்கெட்டன. இவை மகரவொற்று நிற்றலான், வினைத் தொகையாகா வென்க. "நெல்லரியு மிருந்தொழுவர், செஞ்ஞாயிற்று வெயின்முனையிற் றெண்கடற்றிரை, மிசைப்பாயுந்து, திண்டிமில் வன்பரதவர்" "நீர்க்கோழி கூஉய்ப் பெயர்க் குந்து" என இவை உம் உந்தென்றாயின. "சாரனாடவென் றோழியுங் கலுழ்மே", "அம்ப லூரு மவனொடு மொழிமே" "ஆஅ மெனக்கெளி தென் றன்றுலக மாண்டவன்" என முற்றுச்சொல் உயிரும் உயிர்மெய்யும் கெட்டன. பிறவுமன்ன.

பாட வேறுபாடு.:–

1. ஆகும் போகும் வாவுமென்ற உயிர்மெய்

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், செய்யுமென் எச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி உணர் –ற்று.

இ–ள்.:– செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தின் இறுதியுயிர்மெய் கெடுதலும், செய்யுளகத்து அதன் இறுதி உம்மை உந்து எனத் திரிதலும், அது முற்றாயின் அதனிறுதி உயிரேனும் உயிர்மெய்யேனும் கெடுதலும் உளவாம், எ–று.

'செய்யுளுள் உம் உந்தாம்' எனவே ஏனைய வழக்குச் செய்யுள் ஈரிடத்துமாம் என்பதூஉம், 'முற்றேல்' எனவே செய்யுமெனெச்சம் முற்றுமாம் என்பதூஉம், இறந்தததுதழீஇ யெண்ணி நின்ற இழிவு சிறப்பு உம்மைகளான் இவை ஒரு தலையல்ல என்பதூஉம் பெற்றாம்.

முற்றுவிகுதி இன்றி எச்சவிகுதியே முற்றுவிகுதிப் பொருளாகிய பால்காட்டி ஒரோவழி நிற்றலின் எச்சம் முற்றாம் எனப்பட்டது.

வ–று.:–

'ஆம்பொருள், போம்பொருள்' எனவும்; "[1]ஆம் பொருள்க ளாகுமவை யார்க்குமழிப் புண்ணாவாம்" "போம்புழை, வாம்புரவி வழுதி" எனவும் செய்யுமெனெச்ச வீற்று உயிர்மெய் கெட்டன. இவை மகர வொற்று நிற்றலின் வினைத்தொகையாகா என்க.

"நெல்லரியும் இருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயின்முனையில்

தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து"

"நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து"

இவை உம் உந்தாயின. அஃதாம், இவைபோம் எனவும், [2]"சாரல் நாடவென் தோழியும் கலுழ்மே" "அம்ப லூரும் அவனொடு மொழிமே" எனவும் இவை முற்றாய் உயிரும் உயிர்மெய்யும் கெட்டன. செய்யுமென்னும் முற்று என்றேனும் செய்யுமென்னும் ஏவன் முற்று என்றேனும் விதாவது பொதுமையின் முற்றேல் என்றமையின்,

"மாமறை மாக்கள் வரும்குலம் கேண்மோ"

"முதுமறை அந்தணிர் முன்னிய துரைமோ"

எனக்கேளும் உரையும் என்னும் ஏவல்முற்றும் இவ்வாறு உயிரும் உயிர்மெய்யும் கெட்டுவருதல் கொள்க. இவை இங்ஙனமாதலின் 'சொற்றொறு மிற்றிதன் பெற்றி' என்னும் சூத்திரத்தானே ஆடுவாமோ என்னும் தன்மைப்பன்மைமுற்று "பொன்னூசல் ஆடாமோ" என எதிர்கால இடைநிலைகெட்டு வருதலும் பிறவும் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், எதிர்காலத் தெரிநிலைப் பெயரெச்சத்துக்கும் தெரிநிலை வினைமுற்றுக்கும் ஆவதோர் இயல்பு கூறுகின்றது.

**இ–ள்.:– செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்** – செய்யும் என்னும் பெயரெச்ச வாய்பாட்டுச் சொற்களுட் சில மொழியீற்று உயிர்மெய் கெடுதலும், **செய்யுளுளும் முந்தாகலும்** – செய்யுட்கண் சில உம் உந்தென்று தோன்றுதலும், **முற்றேல்** – செய்யுமென்னும் வாய்பாட்டுச் சொல் தெரிநிலை வினைமுற்றாயின், **உயிரு முயிர்மெய்யு மேகலும்** – சில ஈற்றுயிர் கெடுதலும் சில ஈற்றுயிர் மெய் கெடுதலும், **உளவே** – உளவாம், எ–று.

உ–ம்.:–

"ஆம்பொருள்கள்" போம் பொருள்கள் "வாம்புரவி வழுதி" இவை எதிர்காலப் பெயரெச்சம்; உயிர் மெய் கெட்டன. "கடற்றிரை மிசைப்பாயுந்து" "நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து" "ஆதித்தன் மேற்கே பாயுந்து" இவை உம் உந்தென்றாயின. "அம்பலூரு மவனொடு மொழிமே" "சார னடாவென் றோழியுங் கலுழ்மே", "..... பசுத்தான், வெருளினு மெல்லாம வெருண்ம்," போன்ம். இவை உயிர் கெட்டன. "ஆம்போதவளோடு மாம்" எனவும் "போம்போ

தவளோடும் போம்" என உயிர்மெய் கெட்டன.

இவை மகரவொற்று நிற்றலான் முன் கூறிய பெயரெச்சம்; வினைத்தொகை அல்லவென்க. பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

இது, செய்யுமென் னெச்சத்திற் கெய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ—ள்.:–** **செய்யுமெனெச்சம்** – செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய, **ஈற்று** – இறுதியிலுள்ள, **உயிர்மெய்** – உயிர்மெய்யானது, **சேறலும்** – கெடுதலும், **செய்யுளுள்** – செய்யுளிடத்து, **உம்**– உம்விகுதியானது, **உந்தாகலும்** – உந்து எனத் திரிதலும், **முற்றேல்** – அது முற்றாயின், **உயிரும்** – அதனிறுதியுயிராயினும், **உயிர்மெய்யும்** – உயிர்மெய்யாயினும், **ஏகலும்** – கெடுதலும், **உள** – உளவாம், **எ—று.**

வ—று.:–

வாவும்புரவி, வாம்புரவி எனச் செய்யுமெனெச்சத்தீற்று உயிர்மெய் கெட்டது, கூப்பெயர்க்கும் – 'நீர்க்கோழி, கூப்பெயர்க்குந்து', எனச் செய்யுளில் உம், உந்து ஆயிற்று. கலுழும், தோழியுங்கலுழ்மே. மொழியும் – 'அவனோடு மொழிமே' என முற்றாயவிடத்து உயிரு முயிர்மெய்யுங் கெட்டன.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

செய்யுமென்னும் வாய்பாட்டெச்சமும் செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றும் வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணும் எவ்வாறாம்?

செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலுஞ்
செய்யுளு ளும்முந் தாகலு முற்றேல்
உயிரு முயிர்மெய்யு மேகலுமுளவே.

(செய்யும் என் எச்ச ஈற்று உயிர்மெய் சேறலும் செய்யுளுள் உம் உந்து ஆகலும் முற்றேல் உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே.)

**இ—ள்.:–** செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய இறுதியிலுள்ள உயிர்மெய் கெடுதலும், செய்யுளிடத்து உம்விகுதி உந்து எனத் திரிதலும் அது முற்றாயின் அதனிறுதி யுயிராயினும் உயிர்மெய்யாயினுங் கெடுதலும் உளவாம், **எ—று.**

செய்யுளுளும்முந்தாம் எனவே, மற்றவிதிகள் வழக்குச் செய்யு ளிரண்டிடத்துமாம் என்பதும், முற்றேல் எனவே, செய்யுமென்னும் பெயரெச்சம் முற்றுவினையுமாம் என்பதும் பெற்றாம்.

வ–று.;–

(1) ஆகும்பொருள்– ஆம்பொருள்; போகும்போது–போம் போது என வழக்கினும், ''ஆம்பொருள்க ளாகுமவையார்க்குமழிப் புண்ணாவாம்'' ''வாம்புரவி வழுதி'' எனச் செய்யுளினும், செய்யுமெனெச்சத் தீற்றுயிர்மெய் கெட்டன. இவை, மகரவொற்று நிற்றலின், வினைத்தொகை யாகாவென்க.

(உ) ''தெண்கடற் றிரைமிசைப் பாயுந்து;'' நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து'' எனச் செய்யுளிற் பாயும் என்பது பாயுந்து எனவும், கூப்பெயர்க்கும் என்பது கூப்பெயர்க்குந்து எனவும், உம் உந்தாயின.

(நு) அஃதாம், இவைபோம் என வழக்கில், ஆகும். போகும் என்பன, முற்றாயவிடத்து, ஆம்; போம் என ஈற்றுயிர்மெய் கெட்டன ''சார னாடவென் றோழியுங் கலுழ்மே;'' ''அம்பலூரு மவனொடு மொழிமே'' எனச் செய்யுளிற், கலுழும், மொழியும் என்பன, முற்றாயவிடத்துக், கலுழ்ம், மொழிம் என உயிரும் உயிர்மெய்யுங் கெட்டன.

செய்புமென்னு முற்றென்றாயினுஞ் செய்யுமென்னு மேவன்முற்றென்றாயினும் விதவாது, பொதுமையின் முற்றேலென்றமையின், ''மாமறை மாக்கள் வருகுவங் கேண்மோ;'' ''முதுமறையந்தணிர்முன்னிய துரைமோ'' எனக் கேளும் உரையும் என்னுமேவன் முற்றும் இவ்வாறு உயிரும் உயிர்மெய்யுங் கெட்டு வருதல் கொள்க. இவை இங்ஙனமாதலால், ''சொற்றொறுமிற்றிதன் பெற்றி'' என்னுஞ் சூத்திரத்கால், ஆடுவாமோ என்னுந் தன்மைப்பன்மைமுற்றும் ''பொன்னுசலாடாமோ'' என எதிர்காலவிடைநிலை கெட்டு வருதலும் பிறவுங் கொள்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, செய்புமென்னும் எதிர்காலப் பெயரெச்சத்திற்கு எய்தியதன் மேற்சிறப்பு விதியும் எய்தாதது எய்துவித்தலு முணர்த்திற்று.

இ–ள்.:– செய்புமெனெச்ச வீற்று – செய்யும் என்னும் பெயரெச்சத் திறுதியிலே நின்ற, உயிர்மெய்சேறலும்–உயிர்மெய்யெழுத்துக் கெடுதலும்,

செய்யுளுள்ளே, உம்உந்தாலும்–உம் ஈறுஉந்து எனத் திரிதலும், முற்றேல் – செய்யும் என்னும் முற்றுவினையாயின், உயிருமுயிர் மெய்யுமேகலுமுள – அதன் இறுதியுயிராயினும் உயிர்மெய் ஆயினும் கெடுதலும் உளவென்றவாறு

'செய்யுளுள் உம் முந்தா'மெனவே, மற்ற விதிகள் வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் ஆமென்பதும், 'முற்றேல்' எனவே, செய்யுமென்னும் பெயரெச்சம் முற்றுவினையுமாமென்பதும் பெறப்பட்டன. எச்சமுற்றாமெனவே, எய்தாதது எய்வித்தலாயிற்று .

வ–று.:–

ஆகும் பொருள் – ஆம்பொருள், போகும் போது – போம்போது எனவும்,

"ஆம்பொருள் களாகுமவை யார்க்கு
மழிப் புண்ணா வாம் புரவி வழுதி"

எனவும் ஈரிடத்துஞ் செய்யுமென்னும் எச்சத்து ஈற்றுயிர்மெய் கெட்டது,

"தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து"
"நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து"

எனச் செய்யுளிடத்து, பாயும் என்பது பாயுந்து எனவும், கூப்பெயர்க்கும் என்பது கூப்பெயர்குந்து எனவும், உம் – உந்தெனத் திரிந்தது. அதுவாம், – இவைபோம் எனவரும்: இவைஉயிர்மெய்கெட்டு நின்றமுற்றுவினை: கலுழும், மொழியும் என்பன. செய்யுளிடத்து

"சார னாட வென்றோழியுங் கலுழ்மே"
"அம்ப லூரு மவனொடு மொழிமே"

என உயிரும் உயிர்மெய்யுங் கெட்டுவந்த முற்றுவினைகள். பொதுமையின் 'முற்றே'லென்றதினாலே, கேளும், உரையும் என்னும் ஏவல்முற்று,

"மாமறை மாக்கள் வருகுலங்கேண்மோ"
"முதுமறையந்தணிர் முன்னிய துரைமோ"

என இவ்வாறு உயிரும் உயிர்மெய்யுங் கெட்டு வருதலுங் கொள்க. இவை இங்ஙனமாதலால், 'சொற்றொறுமிற்றிதன் பெற்றி' யென்னுஞ் சூத்திரத்தால் ஆடுவாமோ என்னுந் தம்மைப்பன்மை முற்றும்,

"பொன்னூச லாடாமோ தோழி"

என எதிர்கால இடைநிலை கெட்டு நிற்றலும் பிறவுங்கொள்க. சேறலும் ஆதலும், ஏகலும் உளவென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– **செய்யும் என் எச்சம்** – 'செய்யும்' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய, **ஈறு** – இறுதியிலுள்ள, **உயிர் மெய்**–உயிர்மெய் யெழுத்து, **சேறலும்** – கெடுதலும், **செய்யுளுள்**– செய்யுளிடத்து, **உம்** – உம் விகுதி, **உந்து ஆகலும்** – 'உந்து' எனத் திரிதலும், **முற்றேல்** – (அது) 'செய்யும்' என்னும் வாய்பாட்டு முற்றாயின், **உயிரும்** – (இறுதியிலுள்ள) உயிராயினும், **உயிர்மெய்யும்** – உயிர்மெய்யாயினும், **ஏகலும்** – கெடுதலும், **உள** – உள்ளனவாம்.

குறிப்பு :–

'செய்யுளுள் உம் உந்தாம்' எனவே, மற்றை விகுதிகள் வழக்கிலும் செய்யுளிலும் ஏற்றபடி வருமென்பதும், 'முற்றேல்' எனவே, 'செய்யும்' என்னும் பெயரெச்சம் அவ்வாய்ப்பாட்டு முற்றுவினையுமாம்' என்பதும் பெறப்பட்டன.

உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| போகும்போது | – | போம்போது | (எச்சத்துயிர்மெய்கெட்டது.) |
| "பாயும் நீர்" | – | "பாயுந்து நீர்" | (செய்யுளில் உம் உந்து ஆயிற்று. |
| கலுழுமே | – | கலுழ்மே | (முற்றின் உயிர்கெட்டது) |
| மொழியுமே | – | மொழிமே | (முற்றின் உயிர்மெய் கெட்டது.) |

'முற்றேல்' எனப் பொதுப்படக் கூறினமையால், "வருகுவங் கேண்மோ", "முன்னியதுரைமோ" எஉயிரும்உயிர்மெய்யும்ஏவல்முற்றிலுங்கெட்டுவருதல் அறிக.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.:– **செய்யும் என் எச்ச ஈற்று உயிர்மெய் சேறலும்** – செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய இறுதியிலுள்ள உயிர்மெய் கெடுதலும், **செய்யுளுள் உம் உந்து ஆகலும்** – செய்யுளிடத்து உம்விகுதி உந்து எனத் திரிதலும், **முற்றேல் உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உள** – அது முற்றாயின் அதனிறுதி யுயிராயினும் உயிர்மெய்யாயினும் கெடுதலும் உளவாம், எ – று.

'செய்யுளு ளும்முந்தாம்' எனவே, மற்றவிதிகள் வழக்குச்

செய்யுளிரண்டிடத்துமாம் என்பதும், 'முற்றேல்' எனவே, செய்யுமென்னும் பெயரெச்சம் முற்றுவினையுமாம் என்பதும் பெற்றாம்.

வ.று.:-

(1).ஆகும்பொருள் – ஆம்பொருள்; போகும்போது – போம்போது என வழக்கினும், "ஆம்பொருள்க ளாகுமவை யார்க்குமழிப் புண்ணாவாம்" "வாம்புரவி வழுதி" எனச் செய்யுளினும், செய்யுமெனச்சத்தீற் றுயிர் மெய் கெட்டன. இவை மகர வொற்று நிற்றலின் வினைத் தொகையாகா வென்க.

(2) "தெண்கடற் றிரைமிசைப்பாயுந்து", "நீர்க்கோழிகூப் பெயர்க்குந்து" எனச் செய்யுளிற் பாயும் என்பது பாயுந்து எனவும், கூப்பெயர்க்கும் என்பது கூப்பெயர்க்குந்து எனவும், உம் உந்தாயின.

(3) 'அஃதாம்', 'இவைபோம்' என வழக்கில், ஆகும், போகும் என்பன, முற்றாயவிடத்து, ஆம் போம் என ஈற்றுயிர் மெய்கெட்டன. "சாரனாடவென் றோழியுங் கலுழ்மே" அம்பலூரு மவனொடு மொழிமே" எனச் செய்யுளிற் கலுழும், மொழியும் என்பன, முற்றாயவிடத்துக் கலுழ்ம் மொழிம் என உயிரும் உயிர் மெய்யுங் கெட்டன.

செய்யுமென்னு முற்றென்றாயினுஞ் செய்யுமென்னுமேவன் முற்றென்றாயினும் விதவாது பொதுமையின் 'முற்றே' லென்றமையின் "மாமறை மாக்கள் வருகு வங்கேண்மோ" "முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ" எனக் கேளும் உரையும் என்னுமேவன் முற்றும் இவ்வாறு உயிரும் உயிர்மெய்யுங் கெட்டு வருதல் கொள்க. இவை இங்ஙனமாதலால், "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" என்னுஞ் சூத்திரத்தால் 'ஆடுவாமோ' என்னுந் தன்மைப்பன்மைமுற்றும், "பொன்னூசலாடாமோ" என எதிர்கால விடைநிலை கெட்டு வருதலும் பிறவுங் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– செய்யும் என் எச்ச ஈற்று உயிர்மெய் சேறலும் – செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய இறுதியிலுள்ள உயிர்மெய் கெடுதலும், செய்யுளுள் உம் உந்துஆகலும் – செய்யுளிடத்து உம்விகுதி உந்து எனத் திரிதலும், – முற்றேல் உயிரும் உயிர் மெய்யும் ஏகலும் உள – அது

முற்றாயி ன்அதனிறு தியுயிராயினும் உயிர்மெய்யாயினுங் கெடுதலும் உளவாம். எ – று.

செய்யுமெனெச்சம், செய்யுமென்முற்று இரண்டு செய்யுளுளும்முந்தாம் எனவே, மற்றவிதிகளை வழக்குச்செய்யு ளிரண்டிடத்துமாம் என்பதும், முற்றேல் எனவே, செய்யுமென்னும் பெயரெச்சம் முற்றுவினையுமாம் என்பதும் பெற்றாம்.

வ – று.:–

(1)ஆகும்பொருள் – ஆம்பொருள்; போகும்போது – போம்போது என வழக்கினும், "ஆம்பொருள்க ளாகுமவை யார்க்கு மழிப் புண்ணாவாம்" "வாம்புரவி வழுதி" எனச் செய்யுளினும், செய்யுமெனெச்சந்தீற்றுயிர் மெய்கெட்டன, இவை, மகரவொற்று நிற்றலின், வினைத்தொகை யாகாவென்க,

(2)தெண்கடற் றிரைமிசைப் பாயுந்து; "நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து" எனச் செய்யுளிற் பாயும் என்பது பாயுந்து எனவும், கூபெயர்க்கும் என்பது கூபெயர்க்குந்து எனவும்உம் உந்தாயின.

(3)அஃதாம், இவைபோம் என வழக்கில்,ஆகும், போகும் என்பன, முற்றாயவிடத்து, ஆம், போம் என ஈற்றுயிர்மெய் கெட்டன. "சாரனாடவென் றோழியுங் கலுழ்மே;" அம்பலூரு மவனொடு மொழிமே" எனச் செய்யுளிற்; கலுழும் மொழியும் என்பன, முற்றாயவிடத்துக் கலுழ்ம், மொழிம், என உயிரும் உயிர்மெய்யும் கெட்டன

செய்யுமென்னு முற்றென்றாயினுஞ் விதவாது, பொதுமையின் முற்றேலென்றமையின், "மாமறை மாக்கன் வருகுலங் கேண்மோ" "முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ"எனக் கேளும் உரையும் என்னுமேவன்முற்றும் இவ்வாறு உயிரும் உயிர் மெய்யுங் கெட்டு வருதல் கொள்க. இவை இங்ஙனமாதலால், சொற்றொறுமிற்றிதன் பெற்றி" என்னுஞ் சூத்திரத்தால், ஆடுவாமோ என்னுந் தன்மைப்பன்மைமுற்றும் "பொன்னூசலாடாமோ" என எதிர்காலவிடைநிலை கெட்டு வருதலும் பிறவுங் கொள்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– செய்யும் என் எச்சம்** – செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய, **ஈறு** – இறுதியிலுள்ள, **உயிர்மெய்** – உயிர்மெய்யெழுத்து, **சேறலும்** – கெடுதலும்; **செய்யுளுள்** – செய்யு ளிடத்து, **உம்** – உம் விகுதி, **உந்து ஆகலும்** – உந்து எனத்திரிதலும்: **முற்றேல்** – (அது) செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றாயின், **உயிரும்** – (இறுதியில் உள்ள) உயிராயினும், **உயிர்மெய்யும்** – உயிர்மெய்யாயினும், **ஏகலும்** – கெடுதலும், **உள** – உள்ளன; எ–று.

'செய்யளுள் உம் உந்தாம்' எனவே, மற்றை விதிகள் வழக்கிலும் செய்யுளிலும் ஏற்றபடி வருமெனக் கொள்க.

ஆகும்பொருள் – ஆம்பொருள்

தாவும்மரை – தாமரை எச்சத்து உம்

போகும் போது – போம்போது

வாவும்புரவி – வாம்புரவி மெய்கெட்டது

பாயும்–"பாயுந்து" கூப்பெயர்க்கும் "கூப்பெயர்க்குந்து"

செய்யுளில் எச்சத்து உம் உந்து ஆயிற்று

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– செய்யும் என் எச்ச ஈற்று உயிர்மெய் சேறலும்** – செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய இறுதியிலுள்ள உயிர்மெய் கெடுதலும், **செய்யுளும்** – செய்யுளிடத்து, **உம் உந்து ஆகலும்** – உம் விகுதி உந்து எனத் திரிதலும், **முற்றேல்** – அது முற்றாயின், **உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உள** – அதனிறுதியுயிராயினும் உயிர்மெய்யாயினுங் கெடுதலும் உள்வாம். எ–று.

செய்யுளுள் உம் உந்தாம் எனவே, மற்ற விதிகள் வழக்குச் செய்யுளிரண்டிடத்துமாம் என்பதும்; முற்றேல் எனவே, செய்யுமென்னும் பெயரெச்சம் முற்றுவினையுமாம் என்பதும் பெற்றாம்.

உ–ம்.:–

(1) ஆகும்பொருள் – ஆம்பொருள்; போகும்போது – போம்போது என வழக்கினும், "ஆம்பொருள்க ளாகுமவை யார்க்குமழிப் புண்ணாவாம்" "வாம்புரவி வழுதி" –

எனச்செய்யுளினும், செய்யுமெனெச்சத் தீற்றுயிர்மெய் கெட்டன. இவை, மகரவொற்று நிற்றலின், வினைத்தொகையாகா வென்க.

(2) "தெண்கடற் றிரைமிசைப் பாயுந்து"; "நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து"–எனச் செய்யுளிற் பாயும் என்பது பாயுந்து எனவும், கூப்பெயர்க்கும் என்பது கூப்பெயர்க்குந்து எனவும், உம் உந்தாயின.

(3) அஃதாம், இவைபோம் என வழக்கில், ஆகும், போகும் என்பன, முற்றாயவிடத்து, ஆம், போம் – என ஈற்றுயிர்மெய் கெட்டன. "சார னாடவென் றோழியுங் கலுழ்மே" "அம்பலூறு மவனொடு மொழிமே" – எனச் செய்யுளிற், கலுழும், மொழியும் என்பன, முற்றாய விடத்துக், கலுழ்ம், மொழிம் – என உயிரும் உயிர்மெய்யுங் கெட்டன.

செய்யுமென்னும் முற்றென்றாயினுஞ் செப்புமென்னும் ஏவன் முற்றென்றாயினும் விதவாது, பொதுமையின் 'முற்றேல்' என்றமையின், "மாமறை மாக்கள் வருகுவங் கேண்மோ"; "முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ" எனக் கேளும் உரையும் என்னும் ஏவன் முற்றும் இவ்வாறு உயிரும் உயிர்மெய்யுங் கெட்டு வருதல் கொள்க. இவை இங்ஙனமாதலால், "சொற்றொறு மிற்றிதன் பெற்றி" என்னும் (பொதுவியல் – 69ஆம்) சூத்திரத்தால், ஆடுவாமோ என்னுந் தன்மைப்பன்மை முற்றும் "பொன்னூசலாடாமோ" என எதிர்கால விடைநிலை கெட்டு வருதலும் பிறவுங் கொள்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) செய்யும் என் எச்சம் – செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய, ஈறு உயிர்மெய் – இறுதியிலுள்ள உயிர்மெய்யானது, சேறலும் – கெடுதலும், செய்யுளுள் – செய்யுளிடத்து, உம் உந்து ஆகலும் – உம் விகுதியானது உந்து எனத் திரிதலும், முற்றேல் – (அது) முற்றாயின், உயிரும் – (அதன் இறுதி) உயிராயினும், உயிர்மெய்யும் – உயிர்மெய்யாயினும்,

பாட வேறுபாடு: –

1. புறம். 24;
2. புறம். 395.
3. குறுந். 51;
4. மணி. 13;39,

ஏகலும் உள – கெடுதலும் உளவாம். (எ–று)

**(பொ–ரை.)** 'செய்யும்' என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தின் இறுதி உயிர்மெய் கெடுதலுமூ செய்யுளகத்து (அதன் இறுதி) உம்மை உந்தெனத் திரிதலும், (அது) முற்றாயின் (அதன் இறுதி) உயிரேனும் உயிர்மெய்யேனும் கெடுதலும் உளவாம்.

'செய்யுள் உம் உந்தாம்' எனவே மற்ற விதிகள் வழக்கிலும் செய்யுளிலும் வருமெனக் கொள்க.

**(உ–ம்.)**

வாவும் புரவி – வாம்புரவி

ஆகும் பொருள் – ஆம்பொருள் எச்சத்தில் உயிர்மெய்

போகும் போது – போம்போது கெட்டது.

பாயும் – "தென்கடற்றிரை மிசைப்பாயுந்து" எச்சத்தில் உம் உந்து ஆயிற்று.

கூப்பெயர்க்கும் – "நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து"

கலுழும் – "சாரனாட வென்றோழியுங் கலுழ்மே"
முற்றில் உயிர் தெட்டது.

மொழியும் – "அம்பலூரு மவ னொடு மொழிமே"
முற்றில் உயிர்மெய் கெட்டது.

ஆகும் – அதுவாம்

போகும் – இவை போம்

செய்யும் என் முற்று என்றாயினும், செய்யும் என் ஏவல்முற்று என்றாயினும் கூறாது பொதுப்பட 'முற்றேல்' எனப் கூறினமையின் 'மாமறைமாக்கள் வருகுவங்கேண்மோ,' 'முதுமறையந்தணிர் முன்னியதுரைமோ' என ஏவல் முற்றில் உயிரும் உயிருமெய்யும் கெட்டு வருதலும் கொள்க. (ஏவல்முற்று – கேளும், உரையும்.)

"சொற்றொது மிற்றிதன்பெற்றி" என்னம் சூத்திரத்தால், ஆடுவாமோ என்னும் தன்மைப்பன்மை முற்றும்,

1. மணி. 13;56;
2. திருவா. திருப்பொன். 1;9;
3. நன். 461;
4. தொல். சொல். 238.
5. தொல். சொல். 292,

"பொன்னூசலாடாமோ தோழி" என எதிர்கால இடைநிலை கெட்டு நிற்றலும் பிறவும் கொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**செய்யும் என் எச்சம்** – செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தினுடைய, **ஈறு** – இறுதியிலுள்ள, **உயிர்மெய்** – உயிர் மெய்யானது, **சேறலும்** – கெடுதலும், **செய்யுளுள்** – செய்யுளிடத்து, **உம்** – உம் விகுதியானது, **உந்து ஆகலும்** – உந்து எனத் திரிதலும், **முற்றேல்** – அது முற்றாயின், **உயிரும்** – அதன் இறுதி உயிராயினும், **உயிர் மெய்யும்** – உயிர் மெய்யாயினும், **ஏகலும்** – கெடுதலும், **உள** – உளவாம்.

'செய்யுளுள் உம் உந்தாம்' எனவே, மற்ற விகுதிகள் வழக்கிலும் செய்யுளிலும் வரும் எனக் கொள்க.

**உதாரணம்**

வாவும் புரவி – வாம் புரவி
ஆகும் பொருள் – ஆம் பொருள்
போகும் போது – போம் போது

பெயரெச்சத்தில் உயிர்மெய் கெட்டது.

கூஉய்ப் பெயர்க்கும் – 'நீர்க்கோழி கூஉய்ப் பெயர்க்குந்து'
பாயும் – 'தென்கடற்றிரை மிசைப்பாயுந்து'

பெயரச்சத்தில் உம், உந்து ஆயிற்று.

கலுழும்–'சாரனாடவென் தோழியுங் கலுழ்மே'

முற்றில் உயிரெழுத்து, கெட்டது.

மொழியும் –'அம்பலூரும் அவனொடு மொழிமே'
ஆகும்–அது ஆம்
போகும்–இவை போம்

முற்றில் உயிர்மெய் கெட்டது.

செய்யும் என்னும் முற்று என்றாயினும், செய்யும் என்னும் ஏவல் முற்று என்றாயினுங் கூறாது, பொதுப்பட 'முற்றேல்' எனக் கூறினமையின்,

'மாமறை மாக்கள் வருதிறங் கேண்மோ'
'முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ'

என, ஏவல்முற்றில் உயிரும் உயிர்மெய்யும் கெட்டு வருதலுங்

---

1. புறம். 24,
2. புறம். 137,
3. தொல். சொல். 222;
4. தொல். சொல். 225.
5. தொல். சொல், 227;

கொள்க.

'சொற்றொறு மிற்றிதன் பெற்றி' என்னும் (உரிச் – 461) சூத்திரத்தினால், ஆடுவாமோ என்னும் தன்மைப்பன்மை முற்றும், 'பொன்னூச லாடாமோ தோழீ' என எதிர்கால இடை நிலை கெட்டு நிற்றலும் பிறவும் கொள்க.

## மோசகு பொன்னையா

செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சத்தின் இறுதியிலுள்ள உயிர்மெய்யெழுத்துக் கெடுதலும், செய்யுளின்கண் அதன் உம் விகுதி உந்து விகுதியாகத் திரிதலும்; செய்யுமென்னும் வாய்பாட்டுச்சொல் முற்றாகவரின், இறுதியிலுள்ள உயிராயினும், உயிர்மெய்யாயினும் கெடுதலும் உளவாகும் எ–று.

உம் உந்தாதல் செய்யுளில் என்றதனால், ஏனைய இருவழியும் அமையும் எனக்கொள்க.

எ–டு.:–

1. ஆம்பொருள்
2. (ஆகும்) எச்சத்து உயிர்மெய் கெட்டது
   போம்பொருள் (போகும்)
   தாமரை (தாவும்)
   வாம்புரவி (வாவும்)
2. தென்கடற்றிரை மிசைப் பாயுந்து[1](பாயும்)
நீர்க்கோழி கூய்ப்பெயர்க்குந்து[2] (கூவிப்பெயர்க்கும்)
செய்யுளில் எச்சத்து உம் உந்தாயிற்று என்பர்
3.சாரனடவென் றோழியுங்கலுழ்மே1 (கலுழுமே)
செய்யுளில் முற்றின் உயிர் கெட்டது.
   மீகானும் போன்ம் (போலும்)
4. அவனொடு மொழிமே (மொழியும்)[3]
செய்யுளில் முற்றின் உயிர்மெய் கெட்டது
   வினையொடு முடியுமே (முடியும்)
5. குணமாம் (குணமாகும்)
வழக்குல் முற்றின் உயிர்மெய் கெட்டது
   பொழுதுபோம் (பொழுதுபோகும்)
செய்யுமென்னும் முற்றென்றோ, செய்யுமென்னும் ஏவல் முற்றென்றோ விதந்து கூறாது, முற்றேல் எனக் கூறியதனால்,
மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ,[4]
எனவும்,

---

1. தொல். சொல். 240.

**முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ**[1]

எனவும் கேளும், உரையும் என்னும் ஏவல் முற்றுக்கள் முறையே உயிரும் உயிர்மெய்யும் கெட்டு வருதலையும் அவ்வாறு வரும் பிறவுளவேல் அவற்றையுங் கொள்க. இன்னும்,

**'பொன்னூச லாடாமே'**[2]

என ஆடுவாமோ என்பது ஆடாமோ எனத் திரிந்து வருதலையும்,

**'சொற்றொறு மிற்றிதன் பெற்றி'**[3]

என்னும் புறனடை நூற்பாவால் ஈண்டே அமைக்க.

தொல்காப்பியர்

**அவற்றுள்,**

**செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு**

**மெய்யொடுங் கெடுமே யீற்றுமிசை யுகரம்**

**அவ்விட னறித லென்மனார் புலவர்,**[4]

என நூற்பா செய்துள்ளார். உரைகாரர் அனைவரும் செய்யும் என்னும் முற்றுச் சொற்கும் ஈற்றுமிசை யுகரம் மெய்யொடுங்கெடும், மெய்யொழித்துங் கெடுமென இலேசால் உரைத்து, எடுத்துக்காட்டுக்களையும் தந்து சென்றனர். இவ்வாசிரியர் அவர்கள் இலேசாற் கொண்டவற்றை நூற்பாவுள் அடக்கிக் கூறினார். தொல்காப்பியர், இடையியலில் உம் என்னும் இடைச்சொல் உந்து எனத் திரியும் இடனும் இலக்கியத்தில் உண்டு என்பதை,

**உம்உந் தாகும் இடனுமா ருண்டே,**[5]

என அமைத்தார். அதன் உரையில் தெய்வச்சிலையார், 'எண்ணும்மை அதிகாரப்பட்டு வருதலான், இவ்வாறு வருவது, ஓர் பொருண்மேல் உம்மை அடுக்கிய வழி என்று கொள்க. ஈண்டு (புறம். 24) எண்ணும்மை யாங்கதெனின், ஒரு பொருண்மேல் பலவினைச்சொல் வருதலின், அவை ஒருமுகத்தான் எண்ணப்பட்டனவாம்' என விளக்கமும் எழுதியுள்ளார். அவர் உந்தீற்று மொழிகளை வினை எனக் குறிப்பிட்டாரேயன்றி எச்சம் அல்லது முற்று என விதந்து

---

பாடவேறுபாடு.:-

1. பாலற்றுவினையொழிய

கூறினாரில்லை. புறநானூற்றின் பழைய உரைகாரர் 'நெலரியு மிருந்தொழுவர்'[1] எனத் தொடங்கும் புறப்பாட்டின் உரையில், 'மேல் எண்ணப்பட்ட பெயரெச்சம் மூன்று மிழலையென்னும் பெயர்க்கொண்டன; அவை உம் உந்தாய் நின்றன' எனவும், 'இரங்கு முரசின்'[2] எனத் தொடங்கும் புறப்பாட்டின் உரையில், 'முன்னின்ற பெயரெச்சம் மூன்றும் நாஞ்சிலென்னும் நிலப்பெயர் கொண்டன' எனவும் உரை கூறியுள்ளார். தொல்காப்பியர் விரவு வினைகள் எட்டு[3] எனத் தொகுத்துரைத்து, அவற்றுள் முதற்கண் நின்ற 'முன்னிலை' வினைகளை இரண்டு நூற்பாக்களில் விரித்துரைத்து,

**எஞ்சிய கிளவி யிடத்தொடு சிவணி**

**யைம்பாற்கு முரிய தோன்ற லாறே,**[4]

என்ற நூற்பாவால் ஏனை ஏழு வினைகளும் மூன்றிடத்திற்கும் ஐம்பாற்கும் உரிய என ஆணை தந்தார். அதன் உரையில்

சேனாவரையர் செய்யும் என்னும் பெயரெச்சத்திற்கு எடுத்துக்காட்டாக; யானுண்ணும் ஊண்; யாமுண்ணும் ஊண்; நீயுண்ணும் ஊண்; நீயிருண்ணும் ஊண்; அவனுண்ணும் ஊண்; அவளுண்ணும் ஊண்; அவருண்ணும் ஊண்; அது உண்ணும் ஊண்; அவை உண்ணும் ஊண் எனவும்; வினைமுற்றிற்கு எடுத்துக்காட்டாக; அவன் வரும், அவள் வரும், அது வரும், அவை வரும் எனவும் காட்டியுள்ளார். அதனால் அவர் செய்யும் என்னும் வினை பெயரெச்சமாகவும், வினைமுற்றாகவும் வரும் எனக் கருதினார் என்பது வெளிப்படை. அவர் பல்லோர் படர்க்கை, தன்மை முன்னிலைகட்கு எடுத்துக்காட்டுகள் தாராதொழிந்தது,

**பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை**

**யவ்வயின் மூன்று நிகழுங் காலத்துச்**

**செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா,**[5]

என்று பின்னர் அமைந்து கிடக்கும் நூற்பாவை மனத்திற் கொண்டே என்பதும் வெளிப்படை. தொல்காப்பியர் செய்யும் என்னும் முற்றைப் பொருளால் இரண்டாகக் கொண்டு, நடந்துகொண்டிருக்கும் செயலைக் குறிக்கும் செய்யும்

---

பாடவேறுபாடு.:–

1.கொண்டு வந்தான்

என்னும் முற்றினை 'நிகழுங் காலத்துச் செய்யுமென்னுங் கிளவி' என மேற்கண்ட நூற்பாவிற் கூறியும், முக்காலங் களுக்கும் உரிய இயற்கை நிகழ்ச்சியைக் குறிக்கும் செய்யும் என்னும் முற்றின் ஆட்சிக்கு.

**முந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை**

**யெம்முறைச் சொல்லு நிகழுங் காலத்து**

**மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்,[1]**

என்ற நுற்பாவால் ஆணைதந்து அமைத்தும் அது மூன்றிடத்திற்கும், ஐந்து பாற்கும் உரிய பொதுச்சொல் எனக் கூறியும் தெளிவுபடுத்தினார்.

செய்யும் என்பதின் உம் ஓர் இடைச் சொல்லாகலான், உம் என்னும் இடைச்சொல் அதிகாரப்பட்டவிடத்துச் செய்யும் என்னும் பெயரெச்சம், செய்யும் என்னும் நிகழுங் காலத்துச் சொல்,

செய்யும் என்னும் முந்நிலைக்கால இயற்கைச் சொல் ஆகிய மூன்றனுள், ஒன்றாகிய முந்நிலைக்கால இயற்கைச் சொல் உந்தெனத் திரிதலும் உண்டு என்பதை,

**உம்முந் தாகு மிடனுமா ருண்டே,**

என்னும் நூற்பாவால் அமைத்தார். அதன் உரையில் சேனாவரையர் 'இடனுமா ருண்டே' என்றது இத்திரிபு பெயரெச்சத்திற் கீறாயவழி யென்பது கருதிப்போலும் எனக் கூறியுள்ளார். இவ்வாசிரியரும் அவ்வாறே கருதிப் பெயரெச்சம் அதிகாரப்பட்டவிடத்துச் 'செய்யுளுள் உம் முந்தாகலும் உண்டு' என்றார்.

முந்நிலைக் கால இயற்கைச் சொல்லாகிய செய்யும் என்னும் முற்று ஒன்றே செய்யுந்து எனத் திரியும் எனக் கொள்வதோடு, தெய்வச்சிலையார் கருதுமாறே போல், 'இவ்வாறு வருவது, ஓர்பொருண்மேல் (அவ்) உம்மை அடுக்கியவழி' எனக்கொள்ளின், புறநானூற்று 24, 137, 395 முதலிய பாட்டுக்களுக்கு ஏற்ற உரைகாணல் எளிதாம். உந்தீற்றுச் சொற்களை 'வினைமுற்றுத் திரிந்த துவ்வீற்று வினை யாலணையும் பெயர்' என வலிந்து கூறிநிற்க வேண்டிய இடர்ப்பாடும் இல்லையாகும்.

மருந்து என்னும் பெயர்ச் சொல்லிலும், பருவ(ரு)ந்து, வருந்து, திருந்து முதலிய வினைச்சொற்களிலும், பாலுணர்த்தாத் துவ்விகுதி உம்மிடைச்சொல்லை ஒட்டிப் பகுதிப்பொருள்

விகுதியாக நிற்பதே போல், ஆருந்து, பெயர்க்குந்து, இழீஇயுந்து, பாயுந்து என இவ்வாறு வரும் உம்மீற்று வினைகளிலும் அமைந்து வழங்கிற்கு என மொழியியல் நெறிக்கேற்பக் கொள்ளல் அமையும்.

(22)

## 341. தொழிலுங் காலமுந் தோன்றிப்[1] பால்வினை ஒழிய நிற்பது வினையெச் சம்மே.

தொழிலும் காலமும் தோன்றிப் பால் வினை
ஒழிய நிற்பது வினை எச்சம்மே.

ṭoḷilum kālamum ṭōn̲r̲ip pālvin̲ai
oḷiya nir̤paṭu vin̲ai essammē.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**VERBAL PARTICIPLES**

**verbal participles defined**

Verbs which indicate Action and Time but require Gender and (other) Verbs (to complete) their meanings, are called VerbalParticiples.

### ஒப்புமைப் பகுதி

செய்து செய்யூ முதலவாய் பாட்டிற்
றன்வினை பிறவினை யாயிரு வினையொடு
முடியு முறையது வினையெச் சம்மே (இ.வி.: 245)

### மயிலை நாதர்

எ–ன், வினையெச்சமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்: செயலையும் காலத்தையுங் காட்டிப் பால்தோன்றாது வினையெஞ்ச நிற்பது, வினையெச்சமாம், எ–று.

வினையெஞ்ச நிற்றலான் வினையெச்ச மென்றார். வினையாவன: வினைமுற்றும், குறிப்புமுற்றும், பெயரெச்சமும், பெயரெச்சக் குறிப்பும்,

வினையெச்சமும், வினையெச்சக் குறிப்புமா மென்க.

வ—று.:—

**ஓதிவந்தான், ஓதிநல்லன்** எனவும், **ஓதிப் பெற்ற பொருள் ஓதிநல்லசாத்தன்** எனவும், **"உழுதுபயன் கொண்டு"** (பு.வெ.8:10), **உழுதன்றி யுண்ணார்** எனவும் முறையே காண்க.

**"காலமும் வினையுந் தோன்றிப்பா றோன்றாது,**
**வினைகொள் ளும்மது வினையெச் சம்மே"**

என்றார், அகத்தியனார்.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

**எ—னின்,** வினையெச்சமாமாறு உணர்—ற்று.

**இ—ள்.:** பின்னர்ச் செய்து செய்பு முதலியவாய் விதந்து கூறும் வாய்பாடுகளின்கண், தொழிலும் இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலங்களும் முறையே தோன்றி, வினைமுற்றுதற்கு வேண்டும் பாலொன்றும் தோன்றாது, அப்பாலுடனே வினையொழிய நிற்பன வினையொச்சவினை வினைக்குறிப்புக்களாம், எ—று.

வினை எனப் பொதுப்படக் கூறினமையின் வினை வினைக்குறிப்பின் விகற்பங்களும் அவ்வினையாலணையும் பெயரும் தொழிற்பெயரும் கொள்க.

வ—று.: —

அறமன்றி, அறமல்லாமல், அருளின்றி: **செய்தான், செய்யான், செய்த, செய்து, செய்தவன், செய்தல், இலன், இல்லாத, இல்லாது, இன்மை, இல்லாமை** எனவரும். செய்தான் என்னும் தெரிநிலை வினைக்கண் செய்தல் என்னும் தெரிநிலைத் தொழிற்பெயர் போல **'இலன்'** என்னும் குறிப்பு வினைக்கண் இன்மை இல்லாமை என்பன குறிப்புத் தொழிற்பெயராய் நிற்றலின், **'அறமன்றியின்மை', 'அறமன்றி யில்லாமை', 'நீயலாற்பிறிதுமற் றின்மை'** என முடிந்து நின்றன. பிறவும் அன்ன. தெரிநிலை வினையெச்சங்கட்கு உதாரணம் வருஞ் சூத்திரங்களான் உணர்க.

**"காலமும் வினையும் தோன்றிப்பால் தோன்றாது**
**வினைகொள் ளும்மது வினையெச் சம்மே"**

என்பது அகத்தியம்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், தெரிநிலை வினையெச்சமும் குறிப்பு வினையெச்சமும் வருமாறு.

இ–ள்.: தொழிலுங் காலமுந் தோன்றி – செயலையும் காலத்தையும் காட்டி, பால்வினை ஒழிய நிற்பது – பால் தோன்றாது வினையெஞ்ச நிற்பது, வினையெச்சமே – தெரிநிலை வினையெச்சமும் குறிப்பு வினையெச்சமும், எ–று.

உ–ம்.:–

'ஓதி வந்தான், பாடி வந்தான், ஓதி நல்லன், பாடி நல்லன், ஓதிப்பெற்ற, பாடிப்பெற்ற, ஓதிப்பெரிய, பாடிப்பெரிய, ஓதி வந்து, பாடி வந்து, ஓதியன்றி, பாடியன்றி' எனத் தெரிநிலை வினையெச்சம் வினைகளைக் கொண்டு முடிந்தன. அவனன்றி வந்தான், இவனின்றி வாரான், அவனின்றி நல்லன், இவனின்றி நல்லன், அவனின்றிப் பெற்ற, இவனின்றிப் பெற்ற, அவனன்றி நல்ல, இவனின்றிச் சிறிய, அவனன்றி வந்து, இவனின்றி வந்து எனக் குறிப்பு வினையெச்சம் வினைகளைக் கொண்டு முடிந்தவாறு காண்க.

"காலமும் வினையுந் தோன்றிப் பாறோன்றாது
வினைகொள் ளும்மது வினையெச் சம்மே"

## விசாகப் பெருமாளையர்

இது, வினையெச்சமாமாறு உணர்த்துகின்றது.

இ–ள்.: தொழிலும் – செயலும், காலமும் – பொழுதும், தோன்றி – விளங்கி, பால் – பாலுடனே, வினை – வினையானது, ஒழிய – எஞ்ச, நிற்பது – நிற்பன, வினையெச்சம் – வினையெச்சவினை, வினைக்குறிப்புகளாகும், எ – று.

(வினையெனப் பொதுப்படக் கூறுதலால் வினைமுற்றுங் குறிப்புமுற்றும் வினையாலணையும் பெயருந் தொழிற் பெயருங் கொள்க)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வினையெச்சமாவது யாது?

தொழிலுங் காலமுந் தோன்றிப் பால்வினை

ஒழிய நிற்பது வினையெச் சம்மே

(தொழிலும் காலமும் தோன்றி பால் வினை

ஒழிய நிற்பது வினையெச்சம் ஏ.)

இ—ள்.:— பின்பு விதந்து சொல்லப்படும் வாய்பாடுகளிலே தொழிலுங் காலமும் விளங்கிப் பால்காட்டும் விகுதியும் வினையுமெஞ்ச நிற்பன வினையெச்சவினைச்சொல்லாம், எ—று.

வினையெச்சத்தால் வெளிப்படக்காட்டப்படுவன யாவை?

"தொழிலுங்காலமும்"

வினையெச்சம் எவை எஞ்சநிற்பது?

"பால்வினை ஒழியநிற்பது"

வினையெனப் பொதுப்படக் கூறினமையால், "உடன்பாடும் எதிர்மறையும் பற்றி வருந் தெரிநிலையுங் குறிப்புமாகிய வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும், வினையாலணையும் பெயருந் தொழிற்பெயருமாகிய ஐவகை வினைச்சொற்களுங் கொள்க.

வ—று.;—

உண்டு வந்தான் தெரிநிலைவினையெச்சம். அருளின்றிச் செய்தான் குறிப்புவினையெச்சம். இவற்றுள்; உண்டு என்பது, உண்ணலென்னுந் தொழிலும் இறந்தகாலமுந் தோன்றி, அத் தொழினிகழ்த்துதற்கு வேண்டும் பாறொன்றாமையும் அப்பாலுடனே வினையொழிய நின்றமையுமறிக.

பெயரெச்சம் வினையெச்சம் இரண்டற்கும் பொதுவாகிய இலக்கணங்களெவை.

தொழிலுங்காலமுந் தோன்றுதலும் பால்காட்டும் விகுதிகுறைந்து நிற்றலும் இரண்டுக்கும் பொதுவாகிய இலக்கணங்களாம்.

இருவகைபெச்சங்களுக்குமுரிய சிறப்பிலக்கணமென்ன?

பெயரெச்சம் பெயரை அவாவி அதனோடு முடியும். வினையெச்சம் வினையை யவாவி அதனோடு முடியும்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, வினையெச்சமாமாறு வுணர்த்திற்று.

இ—ள்.:— தொழிலுங் காலமுந் தோன்றி — (பின்பு செய்து செய்பு முதலிய வறாக எடுத்துக் கூறப்படும் வாய்பாடுகளிலே) தொழிலும் மூன்று காலமும் முறையே தோன்றி, பால் வினையொழிய நிற்பது வினையெச்சம்

– வினைமுற்றுதற்கு வேண்டும் பால்காட்டும் விகுதியும் அதனொடு வினையும் ஒழிய நிற்பன வினையெச்ச வினை வினைக்குறிப்புக்களா மென்றவாறு.

'வினையொழிய' எனப் பொதுப்படக் கூறினதினாலே, தெரிநிலைவினை குறிப்புவினை விகற்பங்களும் வினையாலணையும் பெயருந் தொழிற் பெயருங்கொள்க.

வ–று.:–

அறனன்றி, அறனல்லாமல் என நிறுத்தி, செய்யாதவன், செய்தல், செய்தான், செய்யான், செய்த, செய்யாத, செய்து, செய்யாது, செய்தவன், செய்யாதவன், செய்தல், செய்யாமை எனவும், இலன் –இல்லாத– இல்லாது – இன்மை – இல்லாமை – எனவும் வருவித்து, அறனன்றிச்செய்தான், அறனன்றிச்செய்தல், அறனன்றியில்லாமை என முறையே யொட்டி, அன்றி அல்லாமல் என்னுங் குறிப்புவினை யெச்சத்திற்கும்; அருளின்றி, அருளில்லாமல் என நிறுத்தி செய்தான் முதலிய தெரிநிலை வினைவிகற்பங்களெல்லாம் வருவித்து அருளின்றிச் செய்தான், அருளில்லாமற்செய்தான், அருளின்றிச் செய்தல், அருளின்றிச் செய்யாமை என முறையே ஒட்டி, இன்றி இல்லாமல் என்னுங் குறிப்புவினை யெச்சத்திற்கும் உதாரணங் காண்க. செய்தான். என்னுந் தெரிநிலைவினையிடத்துச் செய்தல் என்னுந் தெரிநிலைத் தொழிற் பெயர்போல இலன் என்னுங் குறிப்புவினையிடத்து இன்மை, இல்லாமை என்பன குறிப்புத் தொழிற்பெயராய் நிற்பதினாலே, அறனன்றியின்மை, அறனன்றி யில்லாமை என முடிந்து நின்றன. இந்த அன்றி, இன்றி என்பன இரண்டும் செய்தென்னுந் தெரிநிலை யெச்சத்திற்குரிய குறிப்பெச்சம்; இவை அல்லாது, இல்லாது, அல்லாமல், இல்லாமல், அல்லாமை, இல்லாமை என விரித்தும் நிற்கும்; இவற்றிற்கு றி, து, மல், மை என்பன விகுதிகளாம். 'பெரிய வோதினுஞ் சிறிய வுணரா வெய்ய சிறிய மிழற்றுஞ் செவ்வாய்' எனவும், 'செவ்வன் றெரிகிற்பான்', 'இனிதி னுணர்ந்தான்', 'புதுவதனியன்றவணி', 'புதிதீன' என அகர ஈறு பற்றியும், பிற ஈறுகள் பற்றியும் வந்தன. இவை செயவென்னுந் தெரிநிலை வாய்பாட்டிற்குரிய குறிப்பெச்சம்; செவ்வனாக, இனிதாக, புதுவதாக, புதிதாக என அகரவீறாய் நிற்றல் காண்க. அல்லது, அல்லால் என்பன, 'நானல்லதில்லை', 'நுணங்கியகேள்வியரல்லால் வணங்கிய வாயின ராத லரிது' என வருதலின் இவையும்

இன்னும், ஒல்லைக் கொண்டான், சிறிதுதந்தான், வறிதுசென்றான் எனக் குறிப்பாக முடிக்குஞ் சொல்லை விசேடித்து வருவனவெல்லாங் குறிப்புவினை யெச்சமெனவுங் கொள்க. தெரிநிலை வினையெச்சங்களுக்கு உதாரணம் வருஞ் சூத்திரங்களாற் காண்க.

**"காலமும் வினையுந் தொன்றிப்பாறோன்றாது**
**வினைகொள் ளும்மது வினையெச் சம்மே"**

என்றார் ஆசிரியர் அகத்தியனார்.

**"நிலனும் பொருளுங் காலையுங் கருவியும்**
**வினைமுதற் கிளவியும் வினையு முளப்பட**
**வவ்வறு பொருட்கு மோரன்ன வுரிமைய**
**செய்யுஞ் செய்த வென்னுஞ் சொல்லே"**

என்றார் தொல்காப்பியனார். இவர் நிகழ்காலப் பெயரெச்சத்தை இலேசினாலே தழுவினார்.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை** :– **தொழிலும்** –செயலும், **காலமும்** –, **தோன்றி** – விளங்கி, பால்–பாலும், வினை – (கொண்டு முடியும்) வினையும், **ஒழிய நிற்பது** – குறைய நிற்பன, **வினையெச்சம்**– தெரிநிலை வினையெச்சமும் குறிப்பு வினையெச்சமுமாம்.

குறிப்பு :–

'வினை' எனப் பொதுப்படக் கூறியதனால் உடன்பாடும் எதிர்மறையும் பற்றிவருகிற தெரிநிலையும் குறிப்புமாகிய வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும், வினையாலணையும் பெயரும், தொழிற் பெயரும் ஆகிய ஐவகைவினைச்சொற்களையும் கொள்க.

உதாரணம்

| | முற்று | பெ.எ | வி.எ | தொ.பெ |
|---|---|---|---|---|
| இறந்தகாலம் :– | நடந்து–போனான், | போன, | போய், போனவன், | போதல். |

(மற்றைக்காலங்களிலும் எதிர்மறைத்தெரிநிலை வினை யெச்சங்களுக்கும், எதிர் மறைக்குறிப்பு வினையெச்சங்களுக்கும், உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்சங்களுக்கும் இவ்வாறே அமைத்துக்காண்க)

ஏற்புழிக்கோடலால் – தொழிலுங் காலமுந் தோன்றுதல் தெரிநிலைக்கும், பால்வினை ஒழியநிற்பது தெரிநிலை, குறிப்பு இரண்டுக்குங்

கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– தொழிலும் காலமும் தோன்றி** – பின்பு விதந்துசொல்லப்படும் வாய்பாடுகளிலே தொழிலுங் காலமும் விளங்கி, **பால்வினை ஒழிய நிற்பது** – வினைமுற்றுதற்கு வேண்டும் பாலொன்றுந் தோன்றாது அப்பாலுடனே வினையெஞ்ச நிற்பன, **வினையெச்சம்** – வினையெச்சவினை வினைக்குறிப்புக்களாகும், எ–று.

வினையெனப் பொதுப்படக் கூறினாமையால், உடன்பாடும் எதிர்மறையும் பற்றி வருந் தெரிநிலையுங் குறிப்புமாகிய வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும், வினையாலணையும் பெயருந், தொழிற்பெயருமாகிய ஐவகை வினைச்சொற்களும் கொள்க.

வ–று.:–

உண்டுவந்தான் தெரிநிலை வினையெச்சம், அருளின்றிச் செய்தான் குறிப்புவினையெச்சம், இவற்றுள், உண்டு என்பது, உணலென்னுந் தொழிலும் இறந்தகாலமுந் தோன்றி, அந்தொழினிகழ்த்துதற்கு வேண்டும் பாறோன்றாமையும் அப்பாலுடனே வினையொழிய நின்றமையுமறிக.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்:– தொழிலும் காலமும் தோன்றி**– பின்பு விதந்து சொல்லப் படும் வாய்பாடுகளிலே தொழிலுங் காலமும் விளங்கி, **பால்வினை ஒழிய நிற்பது** – வினைமுற்றுதற்கு வேண்டும் பாலொன்றுந் தோன்றாது அப்பாலுடனே வினையெஞ்ச நிற்பன, – **வினையெச்சம்** – வினையெச்சவினை வினைக்குறிப்புகளாகும், எ–று.

வினையெனப் பொதுப்படக் கூறினமையால், உடன்பாடும் எதிர்மறையும் பற்றி வருந் தெரிநிலையுங் குறிப்புமாகிய வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும், விணையாலணையும் பெயருந், தொழிற்பெயருமாகிய ஐவகைவினைச் சொற்களுங் கொள்க.

வ–று:–

உண்டுவந்தான் தெரிநிலைவினையெச்சம், அருளின்றிச் செய்தான் குறிப்பு வினையெச்சம், இவற்றுள். உண்டு என்பது. உணலென்னுந் தொழிலும் இறந்தகாலமுந் தோன்றி,

அத்தொழினிகத்துதற்கு வேண்டும், பாறோன்றாமையும் அப்பாலுடனே வினைபொழிய நின்றமையுமறிக, தோன்றி என்பதுவரையுங் குறிப்புவினைக்கில்லை.

உண்டு வந்த மானிடன், பொருளின்றி வருந்தின மிடியன் இவை வந்த, வருந்தின என்னும் பெயரெச்ச வினைகொண்டன. உண்டுமகிழ்ந்தவன். பொருள் இன்றி வருந்தினவன் இவை வினையாலனையும் பெயர்கொண்டன. உண்டு மகிழ்ந்து, பொருளின்றி வருந்தி இவை வினையெச்சங்கொண்டன, உண்டு மகிழ்தல், பொருள் இன்றி வருந்தல் இவை தொழிற்பெயர்கொண்டன. எதிர்மறையில் வரும் சொற்களையும் உண்டு மகிழாத, பொருளின்றி வருந்தாத என்று கூட்டி அனைத்துங் காண்க.

"காலமும் வினையுந் தோன்றிப் பாறோன்றாது,
வினைகொள்ளும் மது வினையெச்சம்மே"

என்றார் ஆசிரியர் அகத்தியனார்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– **தொழிலும்** – செயலும், **காலமும்**–, **தோன்றி** – விளங்கி, **பால்** – பாலும், **வினை**– (கொண்டு முடியும்) வினையும், **ஒழிய நிற்பது** – குறைய நிற்பன, **வினையெச்சம்** – தெரிநிலை வினையெச்சமும் குறிப்பு வினையெச்சமுமாம், எ – று.

வினையெச்சம் – வினையைக் கொண்டு முடிவதாகிய குறைந்து நிற்கும் சொல்.

'**வினை**' எனப் பொதுப்படக் கூறியதனால், உடன்பாடும் எதிர்மறையும் பற்றி வருகிற தெரிநிலையும் குறிப்புமாகிய வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும், வினையாலணையும் பெயரும், தொழிற் பெயரும் ஆகிய பலவகை வினைச்சொற்களையும் கொண்டு முடியுஞ் சொல்லாகப் பெற்று வரும்.

ஏற்புழிக்கோடலால் தொழிலும் காலமும் தோன்றுதல், தெரிநிலைக்கும், பால்வினை ஒழிய நிற்றல், தெரிநிலை குறிப்பு இரண்டுக்கும் கொள்க.

உ-ம்.:-

செய்துபோ - தெரிநிலை. இன்றிக் காண் - குறிப்பு.

இங்கே, தெரிநிலைவினையெச்சம் தொழிலும் காலமும் தோன்ற நிற்றலும், இருவகை வினையெச்சமும் பால்வினை ஒழிய நிற்றலும் காண்க.

## பவானந்தம் பிள்ளை

இ-ள்.:- தொழிலும் காலமும் தோன்றி - பின்பு விதந்துசொல்லப்படும் வாய்பாடுகளிலே தொழிலுங் காலமும் விளங்கி, பால்வினை ஒழிய நிற்பது - வினைமுற்றுதற்கு வேண்டும் பாலொன்றுந் தோன்றாது அப்பாலுடனே வினையெஞ்ச நிற்பன, வினையெச்சம் - வினையெச்சவினை வினைக்குறிப்புக்களாகும். எ-று.

வினையெனப் பொதுப்படக் கூறினமையால், உடன்பாடும் எதிர்மறையும் பற்றி வருந் தெரிநிலையுங் குறிப்புமாகிய வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும், வினையாலணையும் பெயரும் தொழிற் பெயருமாகிய ஐவகை வினைச்சொற்களும் எஞ்ச நிற்றல் கொள்க.

(உ-ம்.)

உண்டு (வந்தான்)-தெரிநிலை வினையெச்சம்.

அருளின்றி (ச் செய்தான்) - குறிப்பு வினையெச்சம். - முற்றுவினை எஞ்ச நின்றது.

உண்டு (வந்த, வந்து, வந்தவன், வருதல்); அருளின்றி (ச் செய்த, செய்து, செய்தவன், செய்தல்) எனப் பெயரெச்சம் முதலிய ஏனைய நால்வகை நினைச்சொற்களும் எஞ்ச நின்றமை காண்க.

இவற்றுள், உண்டு என்னும் வினையெச்சம் உணலென்னுந் தொழிலும் இறந்தகாலமுந்தோன்றி, அத்தொழினிகழ்த்துதற்கு வேண்டும் பாறோன்றாமையும் அப்பாலுடனே வினையொழிய நின்றமையுமறிக.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ-ள்.) தொழிலும் காலமும் தோன்றி** - செயலும் பொழுதும் விளங்கி, பால் வினை - பாலுடனே வினையானது, ஒழிய நிற்பது - எஞ்ச நிற்பன, வினையெச்சம் - வினையெச்சவினை வினைக் குறிப்புக்களாகும். (எ-று)

---

1.தொல். சொல். 432.

2.தொல். சொல். 236;

(பொ—ரை.)

(பின்னர், 'செய்து,' 'செய்பு' முதலிய்வாய் விதந்து கூறும் வாய்பாடுகளின்கண்) தொழிலும், இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலங்களும், முறையே தோன்றி வினைமுற்றுதற்கு வேண்டும் பால் ஒன்றும் தோன்றாது அப் பாலுடனே வினையொழிய நிற்பன தெரிநிலை வினையெச்சவினை குறிப்பு வினையெச்ச வினைகளாம்.

பால்வினை ஒழிய நிற்பது என்புழி வினை யெனப் பொதுப் படக் கூறுதலால் வினையாலணையும் பெயரும், தொழிற்பெயரும் கொள்க.

(உ—ம்.)

செய்து போ — தெரிநிலை.
இன்றிக் காண் — குறிப்பு.
இங்கே, தெரிநிலை வினையெச்சம் தொழிலுங் காலமும் தோன்ற நிற்றலும் இருவகை வினையெச்சமும் பால்வினை யொழிய நிற்றலும் காண்.

## கா. நமச்சிவாய முதலியார்

**தொழிலும்** — செயலும், **காலமும்** — பொழுதும், **தோன்றி** — விளங்கி, **பால்** — பாலுடனே, **வினை** — வினையானது, **ஒழிய நிற்பது** — எஞ்ச நிற்பது, **வினையெச்சம்** — வினையெச்சமாம்.

வினை எனப் பொதுப்படக் கூறுதலால் — வினைமுற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும், வினையாலணையும் பெயரும், தொழிற்பெயரு மாகிய ஐவகை உடன்பாடும் எதிர்மறையும் பற்றி வரும் தெரிநிலையும் குறிப்பும் ஆகிய வினைச்சொற்களும் கொள்க.

உதாரணம்

தெரிநிலை வினையெச்சம், ஐவகைத் தெரிநிலை, வினை விகற்பங்களைக் கொள்ளுதற்கு :

செய்து வந்தான் செய்து வாரான் — தெரிநிலை

செய்து வந்த
செய்து வாராத — தெரிநிலைப் பெயரெச்சம்.

செய்து வந்து
செய்து வாராமல் — தெரிநிலை வினையெச்சம்.

1. தொல். சொல். 237.
2. நன். 354, 335; 356; 357;
3. தொல். சொல். 233.

| | | |
|---|---|---|
| செய்து வந்தவன்<br>செய்து வாராதவன் | – | தெரிநிலைவினையாலணையும் பெயர். |
| செய்து வருதல்<br>செய்து வாராமை | – | தெரிநிலைத் தொழிற்பெயர். |

தெரிநிலைவினையெச்சம், குறிப்புவினைவிகற்பங்களைக் கொள்ளுதற்கு:

| | | |
|---|---|---|
| கற்று வல்லனாயினான் | – | குறிப்பு வினைமுற்று. |
| கற்று வல்ல | – | குறிப்புப் பெயரெச்சம். |
| கற்று இனிது | – | குறிப்பு வினையெச்சம். |
| கற்று வல்லவனாயினான் | – | குறிப்பு வினையாலணையும் பெயர். |
| கற்று இன்மை | – | குறிப்புத் தொழிற்பெயர் |

குறிப்புவினையெச்சம், தெரிநிலைவினைவிகற்பங்களைக் கொள்ளுதற்கு:

| | | |
|---|---|---|
| அறமன்றிச் செய்தான்<br>அறமன்றிச் செய்யான் | – | தெரிநிலை வினைமுற்று. |
| அறமன்றிச் செய்த<br>அறமன்றிச் செய்யாத | – | தெரிநிலைப் பெயரெச்சம். |
| அறமன்றிச் செய்து<br>அறமன்றிச் செய்யாமல் | – | தெரிநிலை வினையெச்சம். |
| அறமன்றிச் செய்தவன்<br>அறமன்றிச் செய்யாதவன் | – | தெரிநிலை வினையாலணையும் பெயர். |
| அறமன்றிச் செய்தல்<br>அறமன்றிச் செய்யாமை | – | தெரிநிலைத்தொழிற்பெயர். |

குறிப்பு வினையெச்சம், குறிப்புவினை விகற்பங்களைக் கொள்ளுதற்கு:

| | | |
|---|---|---|
| அறமன்றியிலன் | – | குறிப்பு வினைமுற்று. |
| அறமன்றியில்லாத | – | குறிப்பு வினைப் பெய ரெச்சம். |
| அறமன்றியில்லாமல் | – | குறிப்பு வினையெச்சம். |
| அறமன்றியில்லாதவன் | – | குறிப்பு வினையாலணையும் பெயர். |
| அறமன்றியின்மை | – | குறிப்புத் தொழிற் பெயர். |

இங்கே தெரிநிலை வினையெச்சம், தொழிலும் காலமும் தோன்ற நிற்றலும், இருவகை வினையெச்சமும் பால் வினை ஒழிய நிற்றலும் காண்க.

ஏற்புழிக் கோடலால் – தொழிலும் காலமும் தோன்றுதல் தெரிநிலைக்கும், பால் வினை ஒழிய நிற்பது தெரிநிலை, குறிப்பு இரண்டுக்குங் கொள்க.

## மோசசு பொன்னையா

தொழிலையும் காலத்தையும் விளக்கி, வினைமுற்றுதற்கு இன்றியமையாத

தொழிலையும் காலத்தையும் விளக்கி, வினைமுற்றுதற்கு இன்றியமையாத பாலுணர்த்தும் விகுதியைப் பெறாது, கொண்டு முடியும் வினையை எச்சமொழியாக அவாவி நிற்கும் குறைச்சொல் வினையெச்சமாகும். எ—று.

ஒழிய என்பதைப் பால்ஒழிய எனவும் வினைஒழிய எனவும் கூட்டி முன்னதற்கு நீங்கலாக எனவும், பின்னதற்கு எச்சமாக நிற்க எனவும் பொருள் கொள்க. வினையை எச்சமாகக் கொள்வது வினையெச்சம் எனப்பட்டது, வினை எனப்பொதுப் படக் கூறினமையின், உடன்பாடும் எதிர்மறையும் பற்றிவரும் தொழில், குறிப்பு வினைமுற்றுக்களும்; பெயர், வினை எச்சங்களும்; வினையாலணையும் பெயரும்; தொழிற் பெயருமாகிய ஐவகைச் சொற்களும் முடிக்குஞ் சொற்களாய் வரும் வினைகளாம் எனக் கொள்க. இந்நூற்பா வினை எச்சங்களின் பொது இலக்கணத்தை உணர்த்து கின்றது ஆதலின், ஏற்புழிக் கோடலால், தொழில் தோன்றுதலைத் தொழில் வினையெச்சத்திற்கும்; பாலுணர்த்தும் விகுதி குறைந்து வருதலையும், வினையை அவாவி நிற்றலையும் தொழில், குறிப்பு ஆகிய இருவகை எச்சங்களுக்குங் கொள்க.

தொல்காப்பியர்,

**வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்**

**நினையத் தோன்றிய முடிபா கும்மே**

**ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே**[1]

என்றார். குறிப்பு ஆக்கமோடு வருதல் சேனாவரையர் காலத்திலேயே வழக்கிழந்தது என்பது அவர் உரையாற் தெரியவருகிறது. இவ்வாசிரியர் அதனை விடுத்தார்.

எ-டு.:-

**உண்டு வந்தான்—தொழில் வினையெச்சம்**

**நன்றாகச் செய்தான்—குறிப்பு வினையெச்சம்**

தொல்காப்பியர்

**பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்**

**எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா,**[2]

எனவும்

**தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்**

**எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்,**[1]

எனவுங் கூறியுள்ளதாலும், இவ்வாசிரியர் பொதுவியலில் அவற்றை அமைப்பார் ஆதலானும்,[2] உண்ணாது, அருளின்றி,

காலமன்றி என இவ்வாறு வரும் எதிர்மறை வினையெச்சங்களையும்; உண்டு சாத்தான் வந்தான், நன்றாக அவள் பாடினாள் என இவ்வாறு முடிக்கும் வினையோடு இயையும் சொற்கள் இடைநிற்க முடிவதையும் நிற்பது எனத் தொகுதி ஒருமையாற் குறிப்பிட்டவதனால் அமைந்துக் கொள்க. பால்வினை என்பதற்குப் பால்விகுதி பெற்றவினை எனப் பொருளுரைத்தலும் ஒன்று.

தொழில் தோன்றுதல் குறிப்பு வினையெச்சங்களுக்குப் பொருந்தாததாலும், காலந்தோன்றின் தொழிற்பொருண்மையும், நிலைப்பொருண் மையும் உண்டெடன்பது தானே போதரும் ஆதலானும் இவ்வாசிரியர், தொழில்.. தோன்றி என்றது பொருத்தமில் வேண்டாக் கூற்று எனக் கொள்க.

தொல்காப்பியர்,

**பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி**

**கொள்முறை முடியா தடுக்குந வரினும்**

**முன்னது முடிய முடியுமன் பொருளே,**[3]

எனக் கூறியுள்ளதால், உண்டு குடித்து ஆடிப்பாடி வந்தான் என ஒரு வாய்பாட்டான் அடுக்கிவரினும்; கண்டு காதலியா மகிழ்குபு முன் வந்தாள் எனப் பிற வாய்பாடும் பிறவுமாகிய எச்சங்களைப் பெற்று அடுக்கிவரினும் ஈற்றில் நிற்கும் எச்சம் முடியும் வினையோடு எல்லா எச்சங்களும் முடிந்து நிற்கும் என்க.

தொல்காப்பியர், பெயரெஞ்சு கிளவி, வினையெஞ்சு கிளவி என வழங்கிய குறியீடுகளை விடுத்து, இவ்வாசிரியர் பெயரெச்சம், வினையெச்சம் எனக் குறிப்பிட்டு வழங்கியதும் அவற்றின் இலக்கணத்தை விரித்ததும்,

**காலமும் வினையுந் தோன்றிப்பா றோன்றாது**

**பெயர்க்கொள் ளுமது பெயரச் சம்மே,** எனவும்,

**காலமும் வினையுந் தோன்றிப்பா றோன்றாது**

**வினைகொள் ளுமது வினையெச் சம்மே,2**

எனவும் உள்ள ஒரு பிற்காலப் புலவர் கொள்கையை மேற்கொண்டு அமைக்கப்பட்டனவே எனக் கொள்க. பெயரை எச்சமாகக் கொள்வது எதுவோ அது பெயரெச்சம், வினையை எச்சமாகக் கொள்வது எதுவோ அது வினையெச்சம், என்னும் குறியீடுகள் ஓராற்றற் பொருந்துவனவாம். வினையெஞ்சு

கிளவியை இவர் வினைக்குறை3 எனக் குறியிட்டாளுதல் பொருந்தாது என்பது பெயரெஞ்சு கிளவியைப் பெயர்க்குறை என உச்சரித்துக் காண்பார்க்குப் புலனகாநிற்கும்.

(23)

**342. செய்து செய்பு செய்யாச் செய்யூச்**
**செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்**
**வான்பான் [1]பாக்கின வினையெச் சம்பிற**
**ஐந்தொன் றாறுமுக் காலமு முறைதரும்.**

செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர்
வான் பான் பாக்கின வினை எச்சம் பிற
ஐந்து ஒன்று ஆறு முக் காலமும் முறை தரும்.

seyṭu seypu seyyās seyyūs
seyṭenas seyasseyiṉ seyyiya seyyiyar
vāṉ pāṉ pākkiṉa viṉai essam piṛa
ainṭu oṉṛu āṛum mukkālamum muṛai ṭarum.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Forms of verbal participles**

Verbs of the forms 'ceytu', ceypu, ceyya, ceyyu, ceytena, ceyyin, ceyyiya, ceyyiyar, and those ending in van, pan, and pâkku together with others of this kind, are (all)verbal participles; (of these twelve forms), the first five denote the past tense,—the next one, the present,—and the last six, the future.

## ஒப்புமைப் பகுதி

பாடவேறுபாடு:-

1. அடங்குமென்பர்

செய்து செய்யூச் செய்யூ செய்தெனச்
செயியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி

(தொல். சொல்.: 228)

பின்முன் கால்கடை வழிஇடத்து என்னும்
அன்ன மரபின் காலம் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றியல் பினவே

(தொல். சொல்.: 229)

செய்து செயச்செய்யாச் செய்யிய செய்தெனச்
செய்பு செயின்செயற் கென்பனவும் – மொய் குழலாய்
பின்முன்பான் பாக்கும் பிறவும் வினையெச்சச்
சொன்முன் வகுத்தோர் துணிவு

(நேமி.: ள68)

செய்து செய்யூச் செய்யாச் செய்பு
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
வைந்தொன் றாறுமுக் காலமுறை தருமே

(இ.வி.: 246)

செய்து செய்யூ செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி

(மு.வீ.: 623)

பின்முன் கால்கடை யொடுவான் பானிடம்
அன்ன கிளவியு மவற்றியல் பினவே

(மு.வீ.: 624)

வினையெச்சம் கொள் விகுதி இஉ
உவ்வொடு எனவும் ஊபு ஆ இறப்பே
அஇரு கருத்தா அணையின் நிகழ்வே
ஒரு கருத்தாவும் ஓரிடத்து இரண்டும்
இயை அ அன்றி இல இன் இய இயர்
வான் பான் பாக்கு வரும்பொழுது ஆம்பிற

(தொ.வி.: 119)

செய்து செய்பு செய்யா செய்யூ இறப்பும் செய்யச்
செய்யிய செய்யியர் வான்பான் பாக்கு எதிர்வும் காலம்
எய்திவினை வரின்முடியும் வினையெச்சம் அன்றி
இன்றி ஏலால் காணுமாயின் இவ்வே யும்மே
மெய்தெரிபேர்ப் பயனிலைதீர் உருபுஇவைபோற் பிறவும்
வினையெஞ்சி லக்குறிப்பா கும்........

(சுவாமி.: 53)

## மயிலை நாதர்

எ—ன், வினையெச்சப்பகுதி யுணர்த்துதல் நுதலிற்று

இ—ள்.:– செய்தென்பது முதலான ஒன்பதுமொழிகளின் வாய்பாட்டான் வருவனவும், வான் பான் பாக்கென்னு மூன்றும் இவைபோல்வன பிறவும் வினையெச்சப் பகுதிகளாம்; இவற்றில் முதலைந்தும் இறந்தகாலமும், இடையொன்றும் நிகழ்காலமும், ஒழிந்த ஆறும் எதிர்காலமும் காட்டுவனவாம், எ – று.

வான், பான், பாக்கை, வேறெடுத்தோதியது இவை செய்து முதலியன போலத் தாமே வினையாக நில்லாது ஒரு வினைச்சொல்லைக் கொண்டுவரும் பெயர்களாகையா லென்க.

இதனுள் 'பிற' என்ற மிகையானே, செயவென்பது நிகழ்காலமே யன்றி எதிர்காலமும் காட்டுமெனக் கொள்க. 'இன்ன' என்றதனால், "கூறாமற் குறித்தன்மேற் செல்லுங் கடுங்கூளி" (குறள்.701) எனவும், "கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்" எனவும், (குறள். 701) இவற்றிக்கு எதிர்மறையாய் வருவனவும், "அற்றா லளவறிந் துண்க" (குறள்.943) "பெற்றாலுஞ் செல்வம் பிறர்க்கீயார்" "நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே" (கலி.39), "காண்டலு மிதுவே சொல்லும்" "செவ்வன் றெரிகிற்பான்" (தொல்.பாயிரம், ந.மேற்), "அவாவுண்டே லுண்டாம்" (குறள்.1075) என்றற் றொடக்கத்தனவும் இவ் வாய்பாடுகளிலே அடக்கிக் கொள்க. செய்தற்கென்பதுவும், பின் முன் கால் கடை என்பன முதலானவும் வினையெச்சமென்பாருமுளர். அவற்றுள், செய்தற்கென்பது தொழிற்பெயர்வழி வந்த நான்கனுருபாயும் ஏனைய செய்தவென்னும் காலம் பற்றிய இடப்பொருளுருபாயும் 'அடங்குமெனக் கொள்க.

## சங்கரநமச்சிவாயர்

**எ–னின்,** மேல் 'தொழிலும் காலமும் தோன்றி' என்ற வினையெச்ச வாய்பாடுகள் இவை என **வகுத்துணர்–ற்று.**

**இ–ள்.:–** செய்து என்பது முதலிய ஒன்பது வாய்பாட்டான் வருவனவும், வான் பான் பாக்கு என்னும் மூன்று விகுதியவாய் வருவனவும், இவைபோல்வன பிறவும் வினையெச்ச வினைகளாம். இவற்றுள் முன்னைய ஐந்தும் இறந்த காலமும், செய என்பது ஒன்றும் நிகழ்காலமும், ஒழிந்த ஆறும் எதிர்காலமும் காட்டுவனவாம், **எ–று.**

இவற்றுள் செய்து என்பது இடைநிலையானும், ஏனைய இறுதிநிலையானும் காலம் காட்டின.

வான் பான் பாக்கு என்பன, அவ்வவ்வெச்ச விகுதியவாகிய மொழிகளை உணர்த்தி நின்ற குறிப்புச் சொல்.

'இன' என்றமையால் [1]"அற்றால் அளவறிந்து உண்க" [2]"**ஒலித்தக்கால் என்னாம் உவரி" காண்டலும் இதுவே சொல்லும்**" எனச் செயின் என்னும் வாய்பாடுபோல் எதிர்காலம் காட்டுவனவும், [3]"**கூறாமற் குறித்ததன்மேற் செல்லும் கடுங்கூளி" [4]"கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்" [5]"ஈதல் இயையாக் கடை"** என எதிர்மறை விகற்பங்களாய் வருவனவும், இத்தொடக்கத்துக் குறைச் சொல்லாய் வினையெஞ்ச நிற்பன வெல்லாமும் கொள்க.

'**ஒலித்தக்கால்**' என்புழிக் ககர ஒற்று இடையே மிக்கமையின் கால் என்பது பெயரெச்சங் கொண்ட பெயரன்று; வினையெச்ச விகுதி என்பது பொருந்தும்.

'**ஈதலியையாக்கடை**' என்புழிக் கடை என்பது எதிர்மறைப் பெயரெச்சங் கொண்ட இடப்பெயர் என்றால் என்னை யெனின்:– அதனகத்து இடப்பொருள் இன்றி ஈதல் இயையாதாயின் என்னும் பொருள் தந்து நிற்றலின் வினையெச்ச விகுதியேயாம் என்க. பிறவும் அன்ன.

'பிற' என்றமையானே, செய்து என்னும் வாய்பாட்டெச் சங்களும் இடைநிலையின்றி '**ஆடிக்கொண்டன்' 'தழீஇக் கொண்டான்'** என இறுதிநிலை தன்னியல்பினின்றும் விகாரமாயும், புக்கு நின்றான் என முதனிலை விகாரமாயும் காலங்காட்டுவன உள எனவும், செய என்னும் வாய்பாட்டெச்சம் எதிர்காலத்திற்கும் உரித்து எனவும், இவ்வெச்சங்கட்கு விதந்து கூறாதன எல்லாம் அமைத்துக் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், வினைபெச்சப் பகுதியும் வினையெச்சத்திற்கு வரும் வாய்பாடும் கூறுகின்றது.

இ-ள்.:- செய்பு - வந்து, எண்ணி, பரீஇ, சினைஇ, ஆறி, ஆடி, அடுக்கி, அண்டி, பொருந்தி, கவ்வி, சொல்லி, உண்டு, இற்று, தின்று, அற்று; செய்பு - இடுபு, உண்பு, தெரிபு, வணங்குபு, சொல்லுபு, செய்யா - உண்ணா, வணங்கா, கல்லா, காணா, திளையா, வாரா, எண்ணா, ஆறா, ஆடா, அடா, செய்யூ - காணூஉ, படையூஉ, உண்ணூஉ, வணங்கூஉ, செய்தெனச் - பசித்தென வீழ்ந்தென உண்டென பட்டென, இற்றென, தின்றென, செய - கொள்ள, மோப்ப, நோக்க, உண்ண, காண, பாட, வணங்க, படிக்க, செயின் - வேண்டின், காணின், வரின், வரில், வணங்கின், வணங்கில், படில், படின், செய்யிய - வாழிய, வணங்கிய, உண்ணிய, திண்ணிய, பூணிய; செய்யியர் - அணியியர், பணியியர், காணியர் வாழியர், வணங்கியர், பேணியர், உண்ணியர், திண்ணியர், வான்-செல்வான், ஓதுவான், உறங்குவான்; பான் - கற்பான், உண்பான், தின்பான், பூண்பான்; பாக்கின - தருபாக்கு, உண்பாக்கு, உரைப்பாக்கு; வினையெச்சம் பிற - இப்பன்னிரண்டும் வினையெச்சமாம்; ஐந்து - இவற்றின் முதலைந்தும் இறந்த காலமும் செய்து, செய்ப, செய்யா, செய்யூ, செய்தென; ஒன்று - இடையில் ஒன்று நிகழ்காலமும், ஆறு - ஒழிந்த ஆறும் எதிர்காலமும் செயின், செய்யிய, செய்யியர், வான், பான், பாக்கு; முக்காலமு முறைதரும் - இவ்வகை முக்காலமும் முறையே காட்டுவனவாம், எ-று.

## விசாகப் பெருமாளையர்

இது, முன்னே தொழிலுங் காலமுந் தோன்றி யெனப்பட்ட வினையெச்ச வாய்பாடுகள் இவையென வகுத்துணர்த்துகின்றது.

இ-ள்.:- செய்து செய்யியர் - செய்து என்பது முதல் செய்யியர் என்பதீறாகிய ஒன்பது வாய்பாட்டால் வருவனவும், வான்பான்பாக்கு - இம்மூன்று விகுதிகளைக் கொண்டு வருவனவும், இன - இவை போல்வன பிறவும், வினையெச்சம் - வினையெச்சவினைகளாம், ஐந்து - முன்னையவைந்தும், ஒன்று - நடுநின்ற ஒன்றும், ஆறு - பின்னையவாறும், முக்காலமும் - இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும், முறை - முறையாக, தரும் - காட்டுவனவாம், எ-று.

(இவற்றுள் செய்தென்ப தொழிந்தவை இடைநிலை பெறாமல்
தாமே காலங் காட்டும்)

இனவென்றமையால் ஆடிக்கொண்டான், போய்க்கொண்டான்

எனச்செய்து என்கிற வாய்பாடுபற்றி இகர விகுதியும் யகர மெய்விகுதியும் வருமென்றும், தழீஇக்கொண்டான் எனவிகுதி விகாரப்பட்டு வருமென்றும், புக்கு வந்தான் எனப்பகுதி விகாரப்பட்டு வருமென்றும், உணற்க்குவந்தான் எனச் செயவென் வாய்பாடு பற்றிக் குவ்விகுதி வருமென்றும், உண்டாற் பசிதீரும் உண்டக்காற்பசிதீரும், உண்ணுமேற்பசி தீரும் எனச் செயினென்னும் வாய்பாடு பற்றி ஆல் கால் ஏல் விகுதிகள் வருமென்றும், எள்ளுமேனும் வரும் காண்டலுமிதுவே கூறும் என ஏனும், உம்மும் ஒரோவிடத்திலே விகுதிகளாய் வருமென்றும், உண்ணாமை வந்தான், உண்ணாமல் வந்தான், உண்ணாமே வந்தான், என எதிர்மறையிடத்து, மை, மல், மேவிகுதிகள், வருமென்றும், அருளின்றிவந்தான். அவனல்லதில்லை, அவனல்லாமலில்லை, என வினையெச்சக் குறிப்புகளுக்கு, றி, து, மல் என்பவை விகுதிகளாமென்றுங் கொள்க. உரையிற்கோடலால், சிறுபான்மை செயவெனெச்சம் உண்ணப் பசிதீர்ந்தது எனவருகிற விடத்தே இறந்தகாலமும் உண்ணவந்தான் என வருகிறவிடத்தே எதிர்காலமுந் தருமெனக் கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வினையெச்ச வாய்பாடும் அவற்றின் காலவுரிமையுங் கூறுஞ் சூத்திரம் யாது?

செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தோன் றாறுமுக் காலமு முறைதரும்.
(செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யிர்
வான் பான் பாக்கு இன வினையெச்சம்பிற
ஐந்து ஒன்று ஆறு முக்காலமும் முறை தரும்.)

இ–ள்.:– செய்தென்பது முதற் செய்யியரென்ப தீறாகிய ஒன்பதுவாய் பாட்டால் வருவனவும், வான் பான் பாக்கென்னு மூன்று விகுதிகளைக் கொண்டு வருவனவும், இவைபோல்வன பிறவும் வினையெச்ச வினைகளாம் முன்னையவைந்தும் நடுநின்ற ஒன்றும் பின்னைய ஆறும் இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும் முறையே காட்டுவனவாம்.

இறந்தகாலங்காட்டும் வினையெச்சவாய்பாடுகள் யாவை?

"செய்து செய்பு செய்யாச் செய்யூச் செய்தென."

நிகழ்கால வினைபெச்சவாய்பாடு யாது?

"செய"

எதிர்கால வினைபெச்ச வாய்பாடுகள் யாவை?

"செயின் செய்யிய செய்யியர் வான் பான் பாக்கு"

ஆக வினையெச்ச வாய்பாடுகள் எத்தனை?

"ஐந்து ஒன்று ஆறு" (பன்னிரண்டு.)

இவற்றுட் செய்து, செய்தென என்னுமிரண்டும் இடைநிலையாலும், ஒழிந்தன இறுதிநிலையாலுங் காலங்காட்டு மெனவுணர்க.

வான் பான் பாக்கென்பன அவ்வவ்வெச்ச விகுதிகளையுடைய மொழிகளை யுணர்த்தி நின்ற குறிப்புச்சொல்.

உ–ம்.:–

(1) செய்து என்னும் வாய்ப்பாட்டு உகரவீறு:–

நக்கு, உண்டு, வந்து, சென்று எனக் க ட த றக்களை ஊர்ந்து இறந்தகாலம் பற்றி வரும்.

(2) செய்பு என்னும் வாய்பாட்டுப் புகர வீறு:–

உண்ணுபு போனான், நகுபுவந்தான் என இறந்தகாலம் பற்றி வரும்.

(3) செய்யா என்னும் வாய்பாட்டு ஆகார வீறு:–

உண்ணாவந்தான், கல்லாக்கழிப்பர் எனப் பின்வருந் தொழிற்கு இடையின்றி முன்வருந் தொழின்மேல் விரைவுணர்த்தி இறந்தகாலம் பற்றி வரும்.

(4) செய்யூ என்னும் வாய்பாட்டு ஊகார வீறு:–

உண்ணூவந்தான், "படுமகன்கிடக்கைகாணூ – வீன்றஞான்றினும் பெரிதுவந்தனளே" என மேற்கூறியவாறு விரைவுணர்த்தி இறந்தகாலம் பற்றி வரும்.

(5) செய்தென என்னும் வாய்ப்பாட்டு என வீறு:–

உண்டெனப்பசியகன்றது. உரைத்தெனவுணர்ந்தான் என முடிக்குஞ்சொல்லால் உணர்த்தப்படுந் தொழிற்குத் தன்முதனிலைத்தொழில் காரணமென்பது படக் க ட த ற வூர்ந்து இறந்தகாலம் பற்றி வரும். எஞ்சியென, உரிஞியென எனப் பிறவெழுத்தோடும் வரும்.

(6) செய என்னும் வாய்பாட்டு அகர வீறு:–

நடக்கக் காண்கின்றான், ஞாயிறு பட வந்தான் என நிகழ்காலம் பற்றி வரும். ஞாயிறு பட வந்தான் என்பது சூரியன் படுகிறபோது வந்தான் எனப் பொருள்படுதலின் பட வென்பது நிகழ்கால வினையெச்சம்.

(7) செயின் என்னும் வாய்பாட்டு இன்னீறு–

மழைபெய்யிற் குள நிறையும், மெய்யுணரின் வீடெளிதாம் எனக் காரணப்பொருட்டாய் எதிர்காலம் பற்றிவரும்.

(8) செய்யிய என்னும் வாய்பாட்டு இயவீறு–

உண்ணிய வருவான் என எதிர்காலம் பற்றி வரும்.

(9) செய்யியர் என்னும் வாய்பாட்டு இயரீறு–

உண்ணியர் வருவான் என எதிர்காலம் பற்றி வரும்.

(10) செய்வான் என்னும் வாய்பாட்டு வானீறு–

கொல்வான் வந்தான் என எதிர் காலம் பற்றி வரும்.

(11) செய்பான் என்னும் வாய்பாட்டுப் பானீறு–

உண்பான் செல்வான் என எதிர்காலம் பற்றி வரும்.

(12)செய்பாக்கு என்னும் வாய்பாட்டுப் பாக்கீறு–

செல்வந்தருபாக்குச் சென்றான் என எதிர்காலம்பற்றி வரும்.

உண்ணுபு வந்தான் என்பது உண்ணாநின்று வந்தான் எனவும் பொருள்படும். உண்டுகொண்டு வந்தான் என இக்காலத்து வழங்குவர். ஆதலின் உண்ணுபு என்பதன் தொழில், முடிக்குஞ் சொல்லானுணரப்படுந் தொழிலோடு உடனிகழ்தலின் இறந்தகாலத்தில் நிகழ்காலம் பற்றி வந்ததெனக் கொள்ளல்வேண்டும்.

இன என்றமையாற் கொள்ளக்கிடப்பது யாது?

மேற்கூறிய வாய்ப்பாட்டு ஈறுகளேயன்றி அவ்வாய்பாடுகள் பற்றி வரும் வேறு ஈற்று எச்சங்களுமுள வென்பது.

'இன' என்றமையால், ஆடிக் கொண்டான், போய்க் கொண்டான் எனச் செய்தென்வாய்பாடு பற்றி இகர விகுதியும் யகர மெய் விகுதியும் வருமெனவும். தழீஇக்கொண்டான் என விகுதி விகாரப்பட்டு வருமெனவும், புக்கு வந்தான் எனப் பகுதி விகாரப்பட்டு வருமெனவும், உணற்கு வந்தான் எனச் செயவென் வாய்பாடு பற்றிக் குவ்விகுதி வருமெனவும், உண்டாற் பசிதீரும் உண்டக்காற் பசி தீரும், உண்டக்கடைப் பசி தீரும், உண்டவழிப்பசி தீரும், உண்டவிடத்துப் பசி தீரும்,

உண்ணுமேற் பசி தீரும் எனச் செயினென்வாய்ப்பாடு பற்றி ஏல், கால், கடை, வழி, இடத்து, எல் விகுதிகள் வருமெனவும், எள்ளுமேனும் வரும், காண்டலுமிதுவே கூறம் என எனும் உம்மும் ஒரோவிடத்து விகுதிகளாய் வருமெனவும், உண்ணாமே வந்தான், உண்ணாமை வந்தான், உண்ணாமைக்கு வந்தான், உண்ணாமல் வந்தான் என எதிர்மறையிடத்து, மே, மை, மைக்கு, மல் விகுதிகள் வருமெனவும், அருளின்றி வந்தான், அறமல்லாதில்லை, அறமல்லாமேயில்லை அறமல்லாமை யில்லை, அறமல்லாமலில்லை, நீயல்லாலில்லை என வினை யெச்சக் குறிப்புகளுக்கு, றி, து, மே, மை, மல், ஆல் என்பவை விகுதிகளாமெனவுங் கொள்க.

உரையிற்கோடலென்னுமுத்தியினாலே, செயவெனெச்சம் நிகழ்காலமன்றி மற்றைக்காலமுந் தருமெனக் கொள்க. அது, தனக்குரிய நிகழ்காலத்தின்கண் இது நிகழாநிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருட்டாயும், இறந்தகாலத்திற் காரணப்பொருட்டாயும், எதிர்காலத்திற் காரியப்பொருட்டாயும், வரும். காரணப்பொருட்டாய் வருதலாவது முடிக்குஞ்சொல்லால் உணரப்படுந் தொழில் **காரணமென்பது** பட வருதல்; காரியப்பொருட்டாய் வருதலாவது முடிக்குஞ்சொல்லால் உணரப்படுந் தொழிற்கு வினையெச்சத்தாலுணரப்படுந் தொழில் காரியமென்பது பட வருதல்.

வ – று.:–

சூரியனுதிக்க வந்தான்..................................நிகழ்.

மழை பெய்ய நெல் விளைந்தது..................................இற.

நெல் விளைய மழை பெய்தது......................................எதிர்.

இன்னும், உரையிற்கோடலென்னுமுத்தியால், வான், பான், பாக்கென்னு மூன்றுட் சிறுபான்மை தொழிற்பெயர் விகுதிகளாயும் வருமெனக் கொள்க.

வ – று.:–

நீ வருவானேன் யானுரைப்பானேன்; "ஒழுக்கத்தினொல் சாருரவோ ரிழுக்கத்தி–னேதம் படுபாக் கறிந்து" என வரும். இங்கே, வருவான், உரைப்பான், படுபாக்கு என்பன, முறையே, வருதல், உரைத்தல், படுதல் எனப் பொருள்படுதல் காண்க.

## முகவை இராமானுசக் கவிராயர்

இது, மேற்கூறிய வினையெச்ச வாய்பாடுகள் இவையென வுணர்த்திற்று.

**இ-ள்.:-** செய்து என்பது முதலிய ஒன்பது வாய்பாடுகளால் வருவனவும், வான், பான், பாக்கு, என்னும் மூன்று விகுதிகளை யுடையனவும், இவை போல்வன பிறவும், தெரிநிலை வினையெச்சங்களாம், இவற்றுள் முறையே, முன்னின்ற ஐந்தும் – இறந்தகாலமும், இடைநின்ற செயவென்பது ஒன்றும் நிகழ்காலமும், ஒழிந்த – இறுதியில் நின்ற ஆறும் எதிர்காலமுந் தருமென்றவாறு.

இவற்றுள், செய்து என்பது இடைநிலையாலும், ஒழிந்தன இறுதிநிலையாலுங் காலங்காட்டுமெனவுணர்க. வான், பான், பாக்கு என்பன அந்தந்த எச்சவிகுதிகளாய் அம்மொழிகளை யுணர்த்தி நின்றன. இவற்றிக்கு உதாரணம் வருஞ் சூத்திரத்திற் காண்க. 'இன்ன'வென்றதனால் ஆல், கால், உம், கு, பின், முன், கடை, வழி, இடம், ஏல், ஏன் என்னும் விகுதிகளை யுடையனவும் வினையெச்சங்களா மெனக் கொள்க.

வ–று.:–

'அற்றா லளவறிந் துண்க', 'ஒலித்தக்கா லென்னா முவரி' 'காண்டலு மிதுவே சொல்லும்' எனச் செயின் என்னும் வாய்பாடுபோல இவை எதிர்காலங்காட்டின. கு – உணற்கு வந்தான் என எதிர்காலம் பற்றிவரும். எற்றுக்கு வந்தான் என்பது எக்காரியஞ் செய்தற்கு வந்தான் என இதன்குறிப்பாய் நிற்கும். எவற்றுக்கு வந்தானென்பதும் அது. பின் 'நீர் பொய்கூறியபின் மெய்கூறுவர் யார்' என இறந்தகாலமும், 'நீயிவ்வாறு கூறுகின்றபின் உரைப்பதுண்டோ' என நிகழ்காலமும் பற்றி வரும். முன் 'மருந்து தின்னாமுன் நோய்தீர்ந்து' என இறந்தகாலம் பற்றி வரும். கடை – தொடர்கூரத்தூவாமைவந்தக்கடை' என இறந்தகாலமும் வழி விடுவழி விடுவழிச்சென்று என, இறந்தகாலமும் 'ஆடும் வழி – யாடும் வழி அகலேன் மன்னே' என நிகழ்காலமும், இடம் 'களையுநர் கைகொல்லுங் காழ்த்த விடத்து' என இறந்தகாலமும் உரைக்கும்மிடத்து என நிகழ்காலமும், ஏல் – அவா வுண்டே லுண்டாஞ் சிறிது' ஏன்– 'அவள் எள்ளுமேனும் வரும்' என வரும். இந்த இரண்டையுங் குறிப்பெச்ச மென்பாருமுளர்.

இன்னும் – மல் மை கடை என்னும் விகுதிகளையுடையன 'கூறாமற் குறித்ததன்மேற் செல்லுங் கடுங்கூளி' 'கூறாமை நோக்கிக்குறிப் பறிவான்' 'ஈதலி யையாக் கடை' என எதிர்மறை விகற்பங்களாய் வருதலும் இன்னும், வினைக்குறையாய் வருவன வெல்லாங் கொள்க. 'பிற'வென்றதினாலே செய்து என்னும் வாய்பாட்டெச்சம் ஆடி,

ஒடி, உரிஞிப்போயினான் எனவும் இயல்பாய் நின்றான் போய் நின்றான் எனவும் உகர ஈறு இகரமாய்த் திரிந்தும் யகர ஒற்றுவரக் கெட்டும் செய்தென்னும் வாய்பாடு தோன்ற நின்று இறந்தகாலங்காட்டு மெனவுங் கொள்க. இவற்றை இகரவீறு என்றும் யகர ஒற்றீறென்றுங் கொள்ளாமல் உகர ஈற்றின் திரிபென்றே கொள்க. என்னெனின், இவற்றை யெதிர்மறுத்துக்கூறும்போது ஆடாது ஒடாது உரிஞாது, ஆகாது, போகாது என உகர ஈறு தோன்றலாலென்க. தழீஇக்கொண்டான் வரனசைஇ, சினைஇ என்றாற்போல்வன செய்யுள் முடிபாய்நின்று இறுதி நிலை விகாரப்பட்டு இறந்தகாலங் காட்டின. மழை பெய்யமின்னிற்று – மழைபெய்ய நெல்விளைந்தது எனச் செயவெனெச்சம் எதிர்காலமும், இறந்தகாலமும், பற்றி வருமெனவும், இன்னுமிவ்வெச்சங்கட்கு எடுத்துச் சொல்லாதனவெல்லாம் அமைத்துக் கொள்க, ஐந்தொன்றாறு இன்ன–வினையெச்சம், அவை முக்காலமுந் தரும் என இருமுடிபாக்குக.

"செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின் செயச் செயற்கென
வவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி"

எனவும்,

"பின்முன் கால்கடை வழியிடத் தென்னு
மன்ன மரபிற்காலங்கண்ணிய
வென்னகிளவியுமவற்றியல் பினவே"

எனக் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** செய்து * * * செய்யியர் – செய்து என்பது முதலாகச் செய்யியர் என்பது வரையிலுள்ள ஒன்பது வாய்பாடுகளில் வருவனவும், **வான்பான் பாக்கு–** இம்மூன்று விகுதிகளைப்பெற்று வருவனவும், **இன பிற–** இவைபோல்வன பிறவும், **வினையெச்சம்** –தெரிநிலை வினையெச்சங்களாம். (இப்பன் (னிரண்டினுள்), **ஐந்து** (முதலிலுள்ள) ஐந்தும், **ஒன்று** – நடுவிலுள்ள) ஒன்றும், **ஆறு** – (இறுதியிலுள்ள) ஆறும், **முறை** – முறையே, **முக்காலமும்** – மூன்றுகாலங்களையும், **தரும்–** காட்டும்.

குறிப்பு :–

இவற்றுள் – 'செய்து' என்பது இடைநிலையினாலும், மற்றவை

விகுதியினாலும் காலங்காட்டுமென்று அறிக.

| இறப்பு | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|
| 1. நடந்துவந்தான் | 1. நடக்கவந்தான். | 1 வரிற்கொள்ளும் |
| 2. உண்புபோனான். | | 2. ஆடியதந்தான். |
| 3. பெய்யாக்கொடுக்கும் | | 3. உண்ணியர்வருவார். |
| 4. காணூமகிழ்ந்தான் | | 4. கொல்வான்சென்றது. |
| 5. உண்டெனப்போனான் | | 5. தின்பான்புகுந்தது. |
| | | 6. செய்பாக்குவந்தான். |

'வான்' 'பான்' 'பாக்கு' என்பன அந்தந்த விகுதிகளையுடைய சொற்களை யுணர்த்தி நின்றன. 'இன' என்றதனால் – இறந்தகாலத்திற்கு இ, ய் உம் என்பனவும், எதிர்காலத்திற்கு ஆல் கால் கு கடை வழி இடத்து என்பனவும், எதிர்மறைக்கு மல் மை மே து என்பனவும், குறிப்புவினையெச்சத்துக்கு அ றி ஆல் முதலியனவும், பிறவும் விகுதிகளாய் வருமெனக் கொள்க. (அவையெல்லாம் பதவியலுட் காட்டப்பட்டன.)

**உரையிற்கோடலால்** நிகழ்காலத்திற்குக் காட்டிய செயவெனெச்சம்– காரணப்பொருளில் வரும்போது 'மழைபெய்ய நெல்விளைந்தது' என இறந்தகாலத்தையும், காரியப்பொருளில்வரும்போது, 'நெல்விளைய மழைபெய்தது' என எதிர்காலத்தையும், உடனிகழ்ச்சிப் பொருளில் வரும்போது "சூரியன் உதிக்க இராமன் புறப்பட்டான்" எனத் தனக்குரிய நிகழ் காலத்தையுங் கொள்ளும். காரணம் நியதியாய்க் காரியத்திற்கு முற்பட்டு நிகழ்வதாதலின் இறந்தகாலமெனவும், காரியம் காரணத்திற்கு முற்பட்டு நிகழ்வதாதலின் இறந்தகாலமெனவும், காரியம் காரணத்திற்குப் பிற்பட்டு நிகழ்வதாதலின் எதிர்காலம் எனவும் அறிக. உடனிகழ்ச்சிப் பொருளில் வரும் செயவெனெச்சத்தை ஸமகாலக்ரியை என்பர் வடநூலார். இன்னும் இவ்வுத்தியால் – வான் முதலிய மூன்றும் 'யான் வருவானேன்', 'அவன் நடப்பானேன்', 'படுபாக்கறிந்து' என முறையே 'வருதல்', 'நடத்தல்', 'படுதல்' எனப்பொருள்பட்டுத் தொழிற்பெயர் விகுதிகளாய் வருதலுங்கொள்க. 'வான்பான்' என்றவற்றில் ஆன் வினையெச்சவிகுதி; வ், ப் – எதிர் கால இடைநிலையென்பர் ஒருசாரார்.

## ஆறுமுக நாவலர்

**இ-ள்.:- செய்து.......செய்யியர்** - செய்தென்பது முதற் செய்யியரென்ப தீறாகிய ஒன்பது வாய்பாட்டால் வருவனவும், **வான்பான் பாக்கு**- வான் பான் பாக்கென்னு மூன்று விகுதிகளைக் கொண்டு வருவனவும், **இன வினையெச்சம்** - இவை போல்வன பிறவும் வினையெச்ச வினைகளாம், **ஐந்து ஒன்று ஆறு** - முன்னைய வைந்தும் நடுநின்ற ஒன்றும் பின்னைய ஆறும், **முக்காலமும் முறை தரும்** - இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும் முறையே காட்டுவனவாம், எ-று.

இவற்றுட் செய்து, செய்தென என்னுமிரண்டும் இடைநிலை யாலும், ஒழிந்தன இறுதிநிலையாலுங் காலங்காட்டுமென வுணர்க.

வான், பான் பாக்கென்பன அவ்வவ்வெச்ச விகுதிகளையுடைய மொழிகளை யுணர்த்திநின்ற குறிப்புச்சொல்.

'இன' என்றமையால் ஆடிக்கொண்டான், போய்க் கொண்டான்-எனச் செய்தென் வாய்பாடு பற்றி இகரவிகுதியும் யகரமெய் விகுதியும் வருமெனவும், **'தழீஇக் கொண்டான்'** என விகுதி விகாரப்பட்டு வருமெனவும், **'புக்கு வந்தான்'** எனப் பகுதி விகாரப்பட்டு வருமெனவும், **'உணற்கு வந்தான்'** எனச் செயவென்வாய்பாடு பற்றிக் குவ்விகுதி வருமெனவும், **'உண்டாற் பசி தீரும்', 'உண்டக்காற் பசி தீரும்', 'உண்டகடைப்பசி தீரும்', 'உண்டவழிப் பசிதீரும்' 'உண்டவிடத்துப் பசிதீரும்', 'உண்ணுமேற் பசி தீரும்'** எனச் செயினென் வாய்பாடு பற்றி ஆல், கால், கடை , வழி, இடத்து, ஏல், விகுதிகள் வருமெனவும், **'எள்ளுமேனும் வரும்', 'காண்டலு மிதுவே கூறும்'** என ஏனும் உம்மும் ஒரோவிடத்து விகுதிகளாய் வருமெனவும், **'உண்ணாமே வந்தான்', 'உண்ணாமை வந்தான்', 'உண்ணாமைக்கு வந்தான், உண்ணாமல் வந்தான்'** என எதிர்மறையிடத்து, மே, மை, மைக்கு, மல் விகுதிகள் வருமெனவும் 'அருளின்றி வந்தான்', 'அறமல்லாதில்லை', 'அறமல்லாமேயில்லை', 'அறமல் லாமை யில்லை', 'அறமல்லாம வில்லை', **'நீயல்லா வில்லை'** என வினைபெச்சச் குறிப்புக்களுக்கு றி, து, மே, மை, மல், ஆல் என்பவை விகுகளாமெனவுங் கொள்க.

**உரையிற்கோட** லென்னு முத்தியினாலே செயவெனச்சம் நிகழ்கால மன்றி மற்றைக்காலமும் தருமெனக் கொள்க. அது தனக்குரிய நிகழ்காலத்தின்கண் இது நிகழா நிற்க; இது நிகழ்ந்தது என்னும் பொருட்டாயும், இறந்தகாலத்திற் காரணப்

பொருட்டாயும் எதிர்காலத்திற் காரியப் பொருட்டாயும் வரும். காரணப்பொருட்டாய் வருதலாவது முடிக்குஞ் சொல்லால் உணரப்படுந் தொழிற்கு வினையெச்சத்தால் உணரப்படுந் தொழில் காரணமென்பது பட வருதல், காரியப்பொருட்டாய் வருதலாவது முடிக்குஞ் சொல்லால் உணரப்படுந் தொழிற்கு வினையெச்சத்தாலுணரப்படும் தொழில் காரியமென்பது படவருதல்.

வ–று.:–

**'சூரியனுதிக்க வந்தான்'** .................. நிகழ்.
**'மழை பெய்ய நெல் விளைந்தது'** .................. இற.
**'நெல் விளைய மழை பெய்தது'** ...................... எதிர்.

இன்னும், **உரையிற்கோடலென்னுமுத்தியால்** வான், பான், பாக்கென்னு மூன்றுஞ் சிறுபான்மை தொழிற்பெயர் விகுதிகளாயும் வருமெனக் கொள்க.

வ–று.: –

**'நீ வருவானேன்' 'யானுரைப்பானேன்' "ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி – னேதம் படுபாக் கறிந்து"** என வரும். இங்கே, வருவான், உரைப்பான், படுபாக்கு என்பன முறையே, வருதல், உரைத்தல், படுதல் எனப் பொருள்படுதல் காண்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்:–செய்து செய்யியர்** – செய்தென்பது முதற் செய்யியரென்ப தீறாகிய ஒன்பது வாய்ப்பாட்டால் வருவனவும், **வான் பான் பாக்கு** – வான் பான் பாக்கென்னு மூன்று விகுதிகளைக் கொண்டு வருவனவும், **இன வினையெச்சம்** – இவைபோல்வன பிறவும் வினையெச்ச வினைகளாம், **ஐந்து ஒன்று ஆறு–** முன்னையவைந்தும் நடுநின்ற ஒன்றும் பின்னைய ஆறும் **முக்காலமும் முறை தரும்** – இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும் முறையே காட்டுவனவாம்,
எ – று.

இவற்றுட் செய்து, செய்தென என்னு மிரண்டும் இடை நிலையாலும், ஒழிந்தன இறுதிநிலை யாலுங்காலங் காட்டுமென வுணர்க.

வான் பான் பாக்கென்பன அவ்வவ் வெச்ச விகுதிகளை யுடையமொழிகளை யுணர்த்திநின்ற குறிப்புச்சொல்,

இன என்றமையால், ஆடிக்கொண்டான், போய்க் கொண்டான் எனச் செய்தென்வாய்பாடு பற்றி இகரவிகுதியும் யகரமெய் விகுதியும் வருமெனவும், தழீஇக்கொண்டான் என விகுதி

விகாரப்பட்டும்,வருமெனவும், புக்குவந்தான் எனப் பகுதி விகாரப்பட்டும் வருமெனவும், உணற்கு வந்தான் எனச் செயவென்வாய்பாடுபற்றிக் குவ்விகு திவருமெனவும், உண்டாற் பசி தீரும், உண்டாக்காற் பசி தீரும், உண்டக் கடைப் பசி தீரும், உண்டவழிப் பசி தீரும், உண்டவிடத் பசித்து தீரும், உண்ணுமேற் பசி தீரும் எனச் செயினென்வாய்பாடு பற்றி ஆல், கால், கடை, வழி, இடத்து, ஏல் விகுதிகள் வருமெனவும், எள்ளுமேனும் வரும். காண்டலுமிதுவே கூறும் என ஏனும் உம்மும் ஒரோவிடத்து விகுதிகளாய் வருமெனவும், உண்ணாமே வந்தான், உண்ணாமை வந்தான், உண்ணாமைக்கு வந்தான், உண்ணாமல் வந்தான் என எதிர்மறையிடத்து, மே, மை, மைக்கு, மல்விகுதிகள் வருமெனவும், அருளின்றிவந்தான், அறமல்லாதில்லை, அறமல்லாமேயில்லை, அறமல்லாமை யில்லை, அறமல்லாமலில்லை, நீயலல்லாலில்லை என வினையெச்சக் குறிப்புக்களுக்கு, றி, து, மே, மை, மல், ஆல் என்பவை விகுதிகளாமெனவும் கொள்க.

உரையிற்கோடலென்னு முத்தியினாலே, செயவெனெச்சம் நிகழ்காலமன்றி மற்றைக்காலமுந் தருமெனக் கொள்க. அது தனக்குரிய நிகழ்காலத் திண்கண் இது நிகழாநிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருட்டாயும், இறந்த காலத்திற் காரணப் பொருட்டாயும், எதிர்காலத்திற் காரியப் பொருட்டாயும், வரும். காரணப் பொருட்டாய் வருதலாவது முடிக்குஞ்சொல்லால் உணரப்படுந் தொழிற்கு வினையெச்சத்தால் உணரப்படுந் தொழில் காரணமென்பது படவருதல். காரியப் பொருட்டாய் வருதலாவது முடிக்குஞ்சொல்லால் உணரப்படுந் தொழிற்கு வினையெச்சத்தாலுணரப்படுந் தொழில் காரியமென்பது படவருதல்.

வ–று:–

சூரியனுதிக்க வந்தான்........ நிகழ்
மழை பெய்ய நெல் விளைந்தது ..... இற.
செல்விளைய மழை பெய்தது ....... எதிர்.

இன்னும், உரையிற்கோடலென்னுமுத்தியால், வான், பான், பாக்கென்னு மூன்றுஞ் சிறுபான்மை தொழிற்பெயர் விகுதிகளாயும் வருமெனக் கொள்க.

வ–று:–

நீ வருவானேன்; யானுரைப்பானேன்; "ஒழுக்கத்தி னொல்காருரவோ ரிழுக்கத்தி, னேதம்படுபாக் கறிந்து" என

வரும். இங்கே வருவான், உரைப்பான், படுபாக்கு என்பன முறையே, வருதல், உரைத்தல், படுதல் எனப் பொருள்படுதல் காண்க.

செய்து செய்யூச் செய்பு செய்தெனச் செய்யியர் செய்யிய செயின் செயச் செயற்கென, வவ்வகை யொன்பதும் வினையெஞ்சுகிளவி, எ–ம், பின்முன் கால்கடை வழியிடத் தென்று, மன்னமரபிற் காலங் கண்ணிய, வென்ன கிளவியு மவற்றியல்பினவே, எனவுங் கூறப்பட்டமை காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– செய்து .... செய்யியர் – செய்து என்றது முதல் செய்யியர் என்பது வரையிலுள்ள ஒன்பது வாய்பாடுகளால் வருவனவும், வான்பான் பாக்கு – இம்மூன்று விகுதிகளைப் பெற்று வருவனவும், இனபிற – இவைபோல்வன பிறவும், வினையெச்சம் – தெரிநிலை வினையெச்சங்களாம்; (இப்பன்னிரண்டினுள்), ஐந்து – (முதலிலுள்ள) ஐந்தும், ஒன்று – (நடுவிலுள்ள) ஒன்றும், ஆறு – (இறுதியிலுள்ள) ஆறும், முறை – முறையே, முக்காலமும் – இறந்தகால நிகழ்கால எதிர்காலங்களை, தரும் – காட்டும்; எ–று.

இவற்றுள், செய்து என்பது இடைநிலையினாலும், மற்றவை விகுதியினாலும் காலங்காட்டுவன வென்று அறிக.

உ–ம்.:–

| இறப்பு | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|
| 1. நடந்துவந்தான் | 1. நடக்க வல்லன் | 1.வரின் கொள்ளும் |
| 2.உண்குபு போனான் | | 2. ஆடிய தந்தான் |
| 3. பெய்யாக் கொடுக்கும் | | 3. உண்ணியர் வருவான் |
| 4. காணூ மகிழ்ந்தான் | | 4. கொல்வான் சென்றது. |
| 5. உண்டெனப் போனான் | | 5. தின்பான் புகுந்தது |
| | | 6. செய்பாக்கு வந்தான். |

(உண்புகு – உண்டு. பெய்யா – பெய்து. காணூ – கண்டு. உண்டென – உண்டதனால். வரின் – வந்தால். ஆடிய – ஆடுதற்கு. உண்ணியர் – உண்ணுதற்கு. கொல்வான் – கொல்லுதற்கு. தின்பான் – தின்னுதற்கு. செய்பாக்கு –

செய்தற்கு) '**செய்யூஉ**' என அளபெடையோடு கூடிய பாடமும் உண்டு.

வான், பான், பாக்கு என்பன, அந்தந்த விகுதிகளையுடைய சொற்களை உணர்த்தி நின்றன. வான், பான் என்பவற்றில், ஆன் – வினையெச்சவிகுதி, வ், ப் – எதிர்கால இடைநிலை என்பது, ஒருசாரார் கொள்கை.

இன – இன்ன என்பதன் தொகுத்தல்.

'**இன்ன**' என்றதனால், இறந்தகாலத்திற்கு இ ய் உ என்பனவும், எதிர் காலத்திற்கு ஆல் கால் கு கடை வழி இடத்து என்பனவும், எதிர்மறைக்கு மல் மை மே என்பனவும், குறிப்பு வினையெச்சத்துக்கு அறி,ஆல் முதலியனவும், றவும் விகுதிகளாக வருமெனக் கொள்க. அவையெல்லாம் பதவியலில் காட்டப்பட்டன.

இடையில் ஆகாரம் பெற்ற உண்ணாமல் இல்லாமல் முதலிய வினையெச்சங்கள் ஈறுகெட்டு உண்ணா இல்லா என்று நிற்றலும் உண்டு.

**உரையிற்கோடலால்** நிகழ்காலத்திற்குக் காட்டிய செயவெனெச்சம் காரணப்பொருளதாம்பொழுது இறந்த காலத்திலும், உடனிகழ்ச்சிப் பொருளதாம்பொழுது தனக்கு உரிய நிகழ்காலத்திலும் காாயப் பொருளாதாரம் பொழுது எதிர்காலத்திலும் வருமெனக் கொள்க. அதனால், இது சிறுபான்மை '**முக்காலத்துக்கும் பொதுவான வினை யெச்சம்**' எனவும் படும்.

உ–ம்.:–

'**மழை பெய்ய நெல் விளைந்தது**' – இறந்தகாலம்

'**சூரியன் உதிக்கச் சாத்தன் வந்தான்**' – நிகழ்காலம்

'**நெல் விளைய மழை பெய்தது**' – எதிர்காலம்.

இவற்றுள் பெய்ய என்பது, (பெய்தலால் எனப் பொருள்பட்டு), விளைதலுக்குக் காரணமாகியும்; உதிக்க என்பது, (உதிக்கையில் எனப்பொருள்பட்டு) வருதலோடு உடன் நிகழ்கிறதாகியும்; விளைய என்பது, (விளையும்படி எனப் பொருள்பட்டுப்) பெய்வதன் காரியமாகியும் நிற்றல் காண்க.

இன்னும், இவ்வுத்தியால், வான் முதலிய மூன்றும் 'யான் **வருவானேன்**', 'அவன் நடப்பானேன்', 'படுபாக்கறிந்து' என (முறையே) வருதல், நடத்தல், படுதல் எனப் பொருட்பட்டுத் தொழிற்பெயர் விகுதிகளாக வருதலும் கொள்க.

வினையெச்சம், சிறுபான்மை தொழிற்பெயர்ப் பொருளிலும் வரும்.

**உ–ம்.:–**

'வரக்கண்டேன்'; (இது வருதலைக் கண்டேனென்று பொருள்படும்)

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:–** செய்து......செய்யியர் – செய்தென்பது முதற் செய்யிய ரென்பதீறாகிய ஒன்பது வாய்பாட்டால் வருவனவும், வான் பான் பாக்கு – வான் பான் பாக்கென்னு மூன்று விகுதிகளைக்கொண்டு வருவனவும், இன – இவைபோல்வன பிறவும், வினையெச்சம் – வினையெச்ச வினைகளாம் : ஐந்து ஒன்று ஆறு – முன்னையவைந்தும் நடுநின்ற ஒன்றும் பின்னைய ஆறும், முக்காலமும் முறை தரும் – இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும் முறையே காட்டுவனவாம். **எ–று.**

இவற்றுட் செய்து என்பது இடைநிலையாலும், ஒழிந்தன இறுதி நிலையாலுங் காலங்காட்டு மெனவுணர்க்.

வான் பான் பாக்கென்பன அவ்வவ்வெச்ச விகுதிகளையுடைய மொழிகளை யுணர்த்திநின்ற குறிப்புச்சொல்.

**(உ–ம்.)**

| இறப்பு | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|
| 1. செய்து வந்தான். | 1. செய வந்தான். | 1. செயிற் கொள்ளும். |
| 2. செய்பு போனான். | | 2. செய்யிய தந்தான். |
| 3. செய்யாக் கொடுக்கும். | | 3. செய்யியர் வருவான். |
| 4. செய்யூ மகிழ்ந்தான். | | 4. செய்வான் சென்றான். |
| 5. செய்தெனச் சென்றான். | | 5. தின்பான் புகுந்தது. |
| | | 6. செய்பாக்கு வந்தான். |

'இன' என்றமையால், ஆடிக்கொண்டான் போய்க் கொண்டான் எனந் செய்தென்வாய்பாடு பற்றி இகரவிகுதியும் யகரமெய் விகுதியும் வருமெனவும்; தழீஇக்கொண்டான் என விகுதி விகாரப்பட்டு வருமெனவும்; புக்கு வந்தான் எனப் பகுதி விகாரப்பட்டு வருமெனவும்; உணற்கு வந்தான் எனச் செயவென்பாய்பாடு பற்றிக் குவ்விகுதி வருமெனவும்;

உண்டாற் பசி தீரும் உண்டக்காற் பசி தீரும் உண்டக்கடைப் பசி தீரும் உண்டவழிப் பசி தீரும் உண்டவிடத்துப் பசி தீரும் உண்ணுமேற் பசி தீரும் எனச் செயினென்வாய்பாடு பற்றி ஆல், கால், கடை, வழி, இத்து, ஏல் விகுதிகள் வருமெனவும்; ''எள்ளுமேனும் வரும்' 'காண்டலு மிகவே கூறும்' என ஏனும் உம்மும் ஒரோவிடத்து விகுதிகளாய் வருமெனவும்; உண்ணாமே வந்தான் உண்ணாமை வந்தான் உண்ணாமைக்கு வந்தான் உண்ணாமல் வந்தான் என எதிர்மறையிடத்து, மே, மை, மைக்கு, மல் விகுதிகள் வருமெனவும்; அருளின்றி வந்தான் அறமல்லாதில்லை அறமல்லாமேயில்லை அறமல்லாமை யில்லை, அறமல்லாமலில்லை, நீயல்லாலில்லை என வினையெச்சக் குறிப்புக்களுக்கு, றி, து, மே, மை, மல், ஆல் என்பவை விகுதிகளாமெனவுங் கொள்க.

உரையிற்கோடலென்னு முத்தியினாலே, செயவெனெச்சம், நிகழ்காலமன்றி மற்றைக்காலமுந் தருமெனக் கொள்க. அது தனக்குரிய நிகழ்காலத்தின்கண் இது நிகழாநிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருட்டாயும், இறந்தகாலத்திற் காரணப்பொருட்டாயும், எதிர்காலத்திற்காரியப் பொருட்டாயும் வரும். காரணப்பொருட்டாய் வருதலாவது முடிக்குஞ்சொல்லால் உணரப்படுந் தொழிற்கு வினையெச்சத்தால் உணரப்படுந் தொழில் காரணமென்பதுபட வருதல். காரியப்பொருட்டாய் வருதலாவது முடிக்குந் சொல்லால் உணரப்படுந்தொழிற்கு வினையெச்சத்தாலுணரப்படுந் தொழில் காரியமென்பது படவருதல்.

(உ–ம்.) சூரியனுதிக்க வந்தான்.....நிகழ்வு. (உடனிகழ்ச்சிப் பொருட்டு)

மழை பெய்ய நெல் விளைந்தது.......இறப்பு. (காரணப் பொருட்டு)

நெல் விளைய மழை பெய்தது......எதிர்வு. (காரியப் பொருட்டு.)

இன்னும், உரையிற்கோடலென்னு முத்தியால், வான், பான், பாக்கென்னு மூன்றுஞ் சிறுபான்மை தொழிற்பெயர் விகுதிகளாயும் வருமெனக் கொள்க.

(உ–ம்.) நீ வருவானேன்; யானுரைப்பானேன்; ''ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி.....னேதம் படுபாக் கறிந்து.''

இங்கே, வருவான் உரைப்பான் படுபாக்கு என்பன, முறையே, வருதல் உரைத்தல் படுதல் எனப் பொருள்படுதல் காண்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ–ள்.) செய்து.......செய்யியர்** – 'செய்து' என்பது முதல் 'செய்யிர்' என்பதீறாகிய ஒன்பது வாய்பாட்டால் வருவனவும், **வான் பான் பாக்கு** – இம் மூன்று விகுதிகளைக்கொண்டு வருவனவும், **இன** – இவைபோல்வன பிறவும், **வினையெச்சம்** – வினையெச்சவினைகளாம்; **ஐந்து** – (முன்னைய) ஐந்தும், **ஒன்று** – (நடுநின்ற) ஒன்றும், **ஆறு** – (பிந்னைய) ஆறும், **முக்காலமும்** – இறந்த காலமும் நிகழ்காலமும் எதிர்காலமும், **முறைதரும்** – முறையாயகக் காட்டுவனவாம். (எ–று)

**(பொ–ரை.)**

'செய்து' என்பது முதலிய ஒன்பது வாய்பாட்டான் வருவவைும், வான், பான், பாக்கு என்னும் மூன்று விகுதியவாய் வருவனவும், இவைபோல்வனபிறவும், வினையெச்சவினைகளாம்ங இவற்றுள், முன்னைய ஐந்தும் இறந்தகாலமும், 'செய' என்பது ஒன்று நிகழ்காலமும், ஒழிந்த ஆறும் எதிர்காலமும் காட்டுவனவாம்.

ஒன்பது வாய்பாடாவன செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென, செய், செயின், செய்யிய, செய்யியர் என்பனவாம்.

சூத்திரத்துட் கூறிய வாய்பாடுகளுள் செய்து, செய்தென என்னும் இரண்டும் ஒழிந்த மற்றவை இடைநிலைபெறாமல் தாமே காலங்காட்டும்.

**(உ–ம்.)**

இறந்தகாலம்.

1. நடந்து
உண்டு செய்கு.
சென்று
கற்று

2. உண்குபு செய்பு.
உண்பு
தின்பு

3. உண்ணா
பெய்யா செய்யா
குன்றா
கல்லா

4. உண்ணூ செய்யூ
காணூ

5. உண்ணென் செய்தென.

தின்னென

நிகழ்காலம்.

6. நடக்க

உண்ண

தின்ன

கற்க

7. நடக்கின்

உண்ணின் செயின்.

தின்னின்

கற்கின்

8. ஆடிய

பாடிய செய்யிய.

உண்ணிய

9. ஆடியர்

பாடியர் செய்யியர்.

உண்ணியர்

10. உண்ணுவான்

விடுவான் வான்.

காணுவான்

11. தின்பான்

நடப்பான் பான்.

கடப்பான்

12. வேபாக்கு பாக்கு.

விடுபாக்கு

வான், பான், பாக்கு என்பன அந்தந்த எச்ச விகுதிகளாய் அம் மொழிகளை யுணர்த்திவரும் குறிப்புச்சொல்.

'இன' என்றமையால் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் இகர யகர விகுதிகளைப் பெற்றும், விகுதி விகாரப்பட்டும், பகுதி விகாரப்பட்டும் வருமெனவும்; வருமெனவும்; 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம் குவி விகுதி பெறு மெனவும்; 'செயின்' என்னும் வாய்பாட்டு வினையெச்சம், ஆல், கால், ஏல், ஏனும், உம் என்கிற

விகுதிகளைப் பெற்று வருமெனபும்; குறிப்பு வினையெச்சங்கள் றி, து, மல் விகுதிகளைப் பெற்று வருமெனவும் கொள்க.

('இன' இன்ன என்பதன் தொகுத்தல்.)

(உ–ம்.)

ஆடி

தேடி இகரவிகுதி

ஆய் யகரவிகுதி

போய்

தழீஇ

ஒரீஇ விகுதிவிகாரம்.

சினைஇ

புக்கு

நட்டு பகுதிவிகாரம்.

செற்று

உணற்கு குவ்விகுதி.

தின்றால்

உண்டக்கால்

தின்றக்கால்

உண்டானேல் ஆல், கால், ஏல், ஏனும், உம் விகுதிகள்.

பெற்றனேல்

எள்ளுமேனும்

தினையள வேனும்

காண்டலும்

தின்னலும்

எதிர்மறை

உண்ணாமை

தின்னாமை

உண்ணாமே மை, மே, மல் விகுதிகள்.

தின்னாமே

உண்ணாமல்

தின்னாமல்

குறிப்பு. அருளின்றி வந்தான்

அவனல்லது இல்லை றி, து, மல் விகுதிகள்.

அவனல்லாமல் இல்லை

உரையிற் கோடலால் சிறுபான்மை செயவெனெச்சம் நிகழ் காலமல்லாமல் மற்றைக்காலமும் துரமெனக்கொள்க. அது தனக்குரிய நிகழ்காலத்தில் இது நிகழாநிற்க இது நிகழ்ந்தது என்னும் பொருளதாயும், இறந்தகாலத்தில் காரணப் பொருள தாயும் எதிர்காலத்திற் காரயப் பொருள தாயும் வரும்.

(உ–ம்.)

மழை பெய்ய நெல் விளைந்தது
இறந்தகாலம்.

சூரியன் உதிக்கச் சாத்தன் வந்தான்
நிகழ்காலம்.

நெல் விளைய மழை பெய்தது
எதிகாலம்.

இவற்றுள் பெய்ய என்பது பெய்தலால் எனப் பொருள்பட்டு விளைதலுக்குக் காரணமாகியும், உதிக்க என்பது உதிக்கையில் எனப் பொருள்பட்டு வருதலோடு உடன் நிகழ்கிறதாகியும், விளைய என்பது விளையும்படி எனப்பொருள்பட்டுப் பெய்வதன்காரிய மாகியும் நிற்றல் காண்க.

இன்னும் இவ்வுத்தியால் வான், பான், பாக்கு என்னும் மூன்றும் தொழிற்பெயர் விகுதிகளாய் வருமெனக் கொள்க.

(உ–ம்)

நீ வருவானேன், யான் உரைப்பானேன், 'ஏதம்படு பாக்கறிந்து' எனவரும் இங்கே வருவான், உரைப்பான், படுபாக்கு என்பன முறையே, வருதல், உரைத்தல், படுதல் எனப் பொருள் படுதல்காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**செய்து . . . செய்யியர்** – செய்து என்பது முதல் செய்யியர் என்பதீறாகிய ஒன்பது வாய்பாட்டால் வருவனவும், **வான் பான் பாக்கு** – இம் மூன்று விகுதிகளைக் கொண்டு வருவனவும், **இன** – இவைபோல்வன பிறவும், **வினையெச்சம்** – வினையெச்ச வினைகளாம், **ஐந்து** – முன்னைய ஐந்தும், **ஒன்று** – நடுநின்ற ஒன்றும், **ஆறு** – பின்னைய ஆறும், **முக்காலமும்** –

இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும், முறை – முறையாக, தரும் – காட்டுவனவாம்.

அஃதாவது, செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென என்னும் ஐந்து எச்சங்கள் இறந்த காலத்தையும் செய என்னும் வினையெச்சம் ஒன்று மட்டும் நிகழ்காலத்தையும், செயின், செய்யிய, செய்யியர், வான், பான், பாக்கு என்னும் ஆறும் எதிர்காலத்தையும் காட்டும் என்பதாம்.

இவற்றுள் **செய்து, செய்தென** என்னும் இரண்டும் ஒழிந்த மற்றவை, இடைநிலை பெறாமல் தாமே காலங் காட்டும்.

**உதாரணம்**

1.நடந்து
உண்டு
சென்று

உண்குபு இறந்தகாலம்

உண்செய்பு தின்பு

3.உண்ணா பெய்யா குன்றா
செய்யா
கல்லா

4.உண்ணூ இறந்தகாலம்
காணூ செய்யூ

5.உண்ணென
தின்னென செய்தென

நிகழ்காலம்

1நடக்க

உண்ண செய

1.தொல். சொல். 228 உரை;

2. வீழுசையாக (Zero Morbh)ப் பெற்றுள்ளவை

3.தொல். சொல். 239,

4. பொருநர். 86,

5. புறம். 33,

6. கலி. 10;2,

7. முருகு. 1.

8. கலி. 102;22. 23; 7.

தின்ன

கற்க

1.நடக்கின்

உண்ணின் செயின்

தின்னின் கற்கின்

2.ஆடிய

பாடிய செய்யிய

உண்ணிய

3.ஆடியர்

பாடியர்

செய்யியர் எதிர்காலம்

உண்ணியர்

4. உண்ணுவான்

விடுவான்

வான்

காணுவான்

5.தின்பான்

நடப்பான்

பான்

கடப்பான்

6.வேபாக்கு

விடுபாக்கு பாக்கு

வான், பான், பாக்கு என்பன அந்தந்த எச்ச விகுதிகளாய் அம்மொழிகளை உணர்த்திவருங் குறிப்புச்சொல்.

இன' என்றமையால், செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் இகர யகர விகுதிகளைப் பெற்றும், விகுதி

---

1.Nonpast;

2. A History of the Tamil Language p. 83.

3.தொல். எழு. 223;

4. அகநா. 16;

5. நாலடி. 366;

6. புறம். 273;

7. பதிற். 'இலங்குதொடி'.

விகாரப்பட்டும், பகுதி விகாரப்பட்டும் வரும் எனவும்; செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் குவ்விகுதி பெறுமெனவும்; செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம், அல், கால், ஏல், ஏனும், உம் என்னும் விகுதிகளைப் பெற்று வரும் எனவும்; எதிர்மறை வினையெச்சங்கள் மை, மே, மல் விகுதிகளைப் பெற்று வரும் எனவும்; குறிப்பு வினையெச்சங்கள் றி, து, மல் விகுதிகளைப் பெற்று வரும் எனவுங் கொள்க.

1.ஆடி

தேடி இகர

விகுதி ஆய்

போய் யகர விகுதி

செய்து

தழீஇ

ஓரீஇ விகுதி விகாரம்

சினைஇ

புக்கு

நட்டு பகுதி விகாரம்

செற்று

உணற்கு

செய. தினற்கு குவ் விகுதி

உண்டால் தின்றால்

ஆல்

உண்டக்கால்

தின்றக்கால் கால்

செயின் உண்டானேல்

பெற்றானேல் ஏல்

எள்ளுமேனும்

தினையளவேனும் ஏனும்

1.A Comparative Grammar-Caldwell-p. 534;

2. தொல். சொல். 228;

காண்டலும்
தின்னலும் உம்

உண்ணாமை
தின்னாமை மை

எதிர்மறை

உண்ணாமே
தின்னாமே மே

உண்ணாமல்
தின்னாமல் மல்

குறிப்பு

அருளன்றி வந்தான் – றி
அவனல்லதில்லை – து
அவனல்லாமலில்லை – மல்

உரையிற்கோடலால், சிறுபான்மை செயவெனெச்சம் உண்ணப் பசிதீர்ந்தது என வருமிடத்தே இறந்தகாலமும், உண்ணவந்தான் என வருமிடத்தே எதிர்காலமுந் தருமெனக் கொள்க.

## மோசசு பொன்னையா

செய்து என்னும் முற்று வேறு, செய்து என்னும் எச்சம் வேறு, முன்னதின் ஈற்றில் நிற்பது இறந்த கால எழுத்தாகிய தகர ஒற்றை ஊர்ந்து நிற்கும் ஒலித்துணை உகரம்; பின்னதின் ஈற்றில் நிற்பது இறந்தகால எழுத்தாகிய தகர ஒற்றை ஊர்ந்து நிற்கும் எச்சப்பொருள் தரும் உகரம் எனக் கொள்க. சேனாவரையர்,[1] 'ஆய். போய்; சினைஇ, உரைஇ, இரீஇ, உடீஇ; பராஅய் தூய், தாய் என்பனவும் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் என்றார். ஆய் முதலியன இழுப் என்ற இறந்தகால எழுத்தைப் பெற்று எச்சப்பொருள் தரும் உகரத்தை இழந்து[2] நிற்பவை எனக் கொள்ளல் சாலும். செய்து என்னும் எச்சம் இறந்த காலத்திற்கு உரியது என இவ்வாசிரியர் கூறினும், 'நீ நாளை எழுதி வா;

1. தொல். சொல் 40 சேனா உரை;
2. பான். வான் ஈற்று எச்சங்கள் முதன் முதல் வீரசோழிய ஆசிரியரால் கூறப்பட்டன.
3. பதிற் 81; 2. குறுந். 87;
4. குறள் 1150;
5. தொல். சொல். 229.

கணக்கை முடித்துக் காட்டு' என இவ்வாறு எதிர்கால வினையாய் முடிக்கப்படுங்கால் எதிர்காலப் பொருள்தருதலாலும், தொல்காப்பியர்,

**செய்தெ னெச்சத் திறந்த கால**

**மெய்திட னுடைத்தே வாராக் காலம்,**[3]

என விதித்துள்ளார் ஆதலானும், அஃது எதிர்காலத்திற்காம் இடனும் உண்டு எனக் கொள்க.

**செய்பு**

செய்து என்னும் வினையெச்சத்தின் அடுக்குப் பொருள் செய்பு என்னும் வினையெச்சத்தால் பெறப்பட்டது என்பதே, வாக்குபு தரத்தர,[4]புலராப் பச்சிலை இடையிடுபு தொடுத்த,[5]வாடுபு வனப்போடி,[6]வலனேர்பு திரிதர[7] என்ற இலக்கியப் பகுதிகளைக் கூர்ந்து நோக்கின் புலப்படா நிற்கின்றது. சங்க காலத்தின் பிற்பகுதியிலேயே இவ்வடுக்குப் பொருளை இவ்வெச்சம் இழக்கத் தலைப்பட்டது என்பது.

தொழுவினுள், புரிபு புரிபு புக்க பொருவரைத் தெரிபு தெரிவு குத்தின ஏறு,[8]

என்ற கலியடிகளாற் புலனாகும். உரையாசிரியர்கள் அனைவரும் இவ்வெச்சத்திற்குப் பொருளும் காலமும் உரைப்பதில் பெருங் குழப்பநிலையடைந்துள்ளனர். டாக்டர். தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் இதனை 'இறப்பல்வினை'[1]எனக் கூறியதும் அக்குழப்பத்தின் விளைவே போலும்.[2]முடிக்கும் வினையாலேயே இதன் காலமும் உறுதிப்படும் எனக் கொள்க.

**செய்யா**

தொல்காப்பியர் எச்சங்களைத் தொகுத்துரைத்த இடத்தில் செய்யா என்னும் எச்சத்தைச் சேர்த்துக் கொள்ளவில்லை. எனினும் எழுத்ததிகாரத்தில்,

**செய்யா வென்னும் வினையெஞ்சு கிளவியும்**

**அவ்வியல் திரியா தென்மனார் புலவர்,**[3]

எனக் குறிப்பிடுவதால், அவர் காலத்திற்கு முன்னும் அது வழக்கில் இருந்தமை புலனாகும். 'நிலங் கிளையா நாணி நின்றோள்'[4] 'கல்லாக் கழிப்பர் தலையா யார்'[5] என இவ்வாறு எதிர்மறை உருவில் இறந்தகால நேர் பொருளைத் தரும் இதன் இயல்பால், இதனைப் பிற எச்சங்களோடு ஒப்ப வைத்துக் கூறாது அவர் விடுத்தார் போலும்.

**செய்யூ**

இரண்டு செயல்கள் ஒருங்கு நிகழ்ந்து கொண்டிருந்ததை

அல்லது நிகழ்ந்து கொண்டிருப்பதை உணர்த்தி, முடிக்கும் வினையின் காலத்தையே பெறும் செய்யூ என்னும் எச்சம்.

**படுமகன் கிடக்கை காணூஉ**

**வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனனே,**[6]

என இறந்தகாலத்திலும்,

**நிலம் புடையூ வெழுதரு**

**வலம்படு குஞ்சரம்,**[7]

என நிகழ்காலத்திலும் அது வந்தது. இக்காலத்தில் அது வழக்கொழிந்தது.

**செய்தென**

செய்தென என்பது கடதற வூர்ந்து இறந்தகாலம் பற்றி முடிக்குஞ் சொல்லான் உணர்த்தப்படுந் தொழிற்குத் தன் முதனிலைத் தொழில் காரண மென்பதுபட வரும் என்பது சேனாவரையர் கருத்து. செய்து என்னும் முற்றும் என என்னும் எச்சமும் கூடி ஒருசொல் நீர்மை பெற்றுச் செய்ததால் என்னும் பொருளில் வழங்குவதாயிற்று. இதுவும் முடிக்கும் வினையின் காலத்தையே தன் காலமாகக் கொள்ளும் தன்மையது. என் என்பது ஒரு வினைச்சொல் ஆதலின், என என்பது எச்சப் பொருள் தரும்

அகரத்தைப் பெற்று நின்ற தனி வினையெச்சமாகும். அது செய என்னும் வாய்பாட்டு முறையில் தன் பொருளை விளக்கும் நிலையை இழந்து, இவ்வெச்சத்தோடு ஒட்டி நிற்கின்றது. இக்காலத்தில் செய்தான் / தாள் / தனர் / தது / தன எனவே / ஆதலால் / ஆகையினாலே / ஆகவே / ஆனதால் / ஆனபடியால் எனப் பிரித்திசைத்துத் தொடராக வழங்குகின்றது. செய்ததால் என வழங்குதலும் உண்டு.

**செய**

வினையடியோடு அகரஞ்சேர அமையும் செய (இக்காலத்தில் செய்ய) என்னும் வாய்பாட்டு எச்சங்களே திராவிட மொழிகளின் மிகப் பழைய எச்சவடிவாகும் என்பது அறிஞர் கால்டுவெல் கருத்தாகும்.[1] அது மழை பெய்யக் குளம் நிறைந்தது. ஞாயிறுபட வந்தான், தேர் தரவந்தான். உண்ண வந்தான், என இவ்வாறு காரண காரியத் தொடர்புடன் வழங்குவதாகும். அன்றி, அவீன, மழைபொழிய, அகத்தடியாள் மெய்நோவ..... என இவ்வாறு ஏக காலத்தில் நிகழும் செயல்களைக் குறிப்பிடும் எச்சங்களின் அடுக்காக அமைந்து

இறுதியில் முடிக்கும் வினையைப் பெற்று வருவதும் அவ்வெச்சத்தின் சிறப்பு நிலையாகக் காணப்படுகிறது.

தொல்காப்பியர் செயற்கு என்னும் ஒரு எச்சத்தையும் குறிப்பிட்டுள்ளார்.[2] இவ்வாசிரியர் அதனை விடுத்தார். உண்ணற்கு வந்தான். காணற்கு இனியன் என இவ்வாறு வழக்கிலும் அது காணப்படுகின்றது. அது, செயல் என்ற தொழிற்பெயரையும் கு என்ற நான்காம் வேற்றுமை உருபையும் பெற்று 'உருபேற்றுநின்ற தொழிற்பெயரோடு ஒப்புமையுடைத் தாயினும், உருபும் பெயரும் ஒன்றாகாது, பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான் அதனினும் வேறாகி'[1] வினையெச்சமாக விளங்குகின்றது. இவ்வெச்சமும், உண்ணற்பொருட்டு, உண்பான்[2] (உண்பு+ஆன்), உண்வான் (உண்ணு+வான்), உண்ணுதற்கு என வருவனவும் ஒரே தன்மைய இவற்றின்

இடத்திலும் செய என்னும் எச்சம், பொருள் வேறுபாடு இன்றி வழங்கும் தன்மையது ஆதலின், தொல்காப்பியர் இவற்றைக்

---

பாட வேறுபாடு.:–

1. நான்கும் செய்தென்னு மிறந்தகாலங்கொண்டும், வான் .................. மூன்றும் எதிர்காலங் கொண்டும் முடியுமிடத்து வினைமுதல் வினையேற்று முடியும்; ஒழிந்தவைந்தும்

2.எனச் செய்தென்னும் வாய்பாட்டுக்கு வந்து எண்ணி, பருகி என இறந்தகாலம் முறையே வந்தது. புலராப் பசலையிடையெழுஉ

3.காணாக்கழிந்தநாட்கிரங்கும்''

4.இவற்றுள் இடையெழுபு என்றது இடையிலெழுந்தென்றும், கல்லா என்றது கற்றென்றும் காணா என்றது கண்டென்றும் காணூஉ என்றது கண்டென்றும் செய்பு செய்யாச் செய்யூஉ என்னும் வாய்பாடுகள் செய்தென்னும் இறந்தகாலத்திலடங்கினவாறு காண்க. இனி, தோன்றினானென்றும் துணிக சாத்தனென்றும் பருகியுயிர் செகுக்குமரவென்றும் பசலையெழுந்ததென்றும் தெரிந்து குத்தின ஏறென்றும் கற்றுக்கழிப்பரென்றும் இரங்குமென் னெஞ்சமென்றும் நாணி நின்றவளென்றும் பெரிதுவந்தனளென்றும் குஞ்சரமென்றும் வினைமுதலை இருதிணையுமேற்றன ''கொள்வான்

5.(1) கோடுநெடித்துண்ணும்

(2) கோடு கொடுத்துண்ணும்

6.செய்தெனநின்றுதன்றொழிலும்

7.மெச்சமிருதொழிலு மெதிர்காலமு மேற்றன

கூறாது விடுத்தார் போலும், செய்யியர், செய்யிய என்னும் எச்சங்கள் இரண்டும்,

**மாணிழை யரிவை காணிய வொருநாட்**

**பூணக மாகநின் புனைவினை நெடுந்தேர்,**[3]

எனவும்,

**பசலை யுணியியர் வேண்டும்,**[4]

எனவும் இலக்கியங்களில் வழங்கினும், இக்காலத்தில் வழக்கில் இல்லை. இவற்றின் இடத்தைச் செயவென் எச்சம் பறித்துக் கொண்டது எனலாம்.

**செயின்**

செயின் என்னும் எதிர்கால வினையெச்சம் நிபந்தனைப் பொருளது. அது,

**தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டிற்**

**கௌவை யெடுக்குமிவ் வூர்,**[5]

என இலக்கியத்திலும், மழை பெய்யின் குளம் நிறையும், மெய்யுணரின் வீடெளிதாம் என இவ்வாறு வழக்கிலும் நடக்கும் இயல்பினது. இக்காலத்தில், வேண்டினால் என ஆல்மட்டும் சேர்க்கப்பட்டும். செய்வானேல், செய்வானெனின், செய்வானாயின், செய்வானேனும் என முற்றுவினையோடு ஏல், எனின், ஆயின், ஏனும் என்பன இயையப்பெற்று ஒருசொல் நீர்மைத்தாகியும் வழங்குகின்றது.

தொல்காப்பியர்,

**பின்முன் கால்கடை வழியிடத் தென்னு**
**மன்ன மரபிற் காலங் கண்ணிய**
***வென்ன கிளவியு மவற்றியல் பினவே,***

என்ற நூற்பாவால், ஈறுபற்றி எடுத்தியம்பியுள்ளனவும் வினையெச்சமும் பெயருமாகி, முன்னைய நான்கும் பெயரெச்சத் தொடராகவும்,

பின்னைய இரண்டும் வினைத்தொகையாகவும் அமைந்து, பிளவுபட்டிசையாது ஒட்டி ஒரு சொல் நீர்மைத்தாய் இசைத்தலான் நிபந்தனைப் பொருளோடியைந்த சார்புப் பொருள் தந்து நிற்கின்றன. இவற்றை இவ்வாசிரியர் கூறாது விடுத்தார்.

**பாக்கு**

இவ்வாசிரியர், நேமிநாதரைப் பின்பற்றிப் பாக்கு என்னும் ஓர் எச்சத்தையும் ஈறுபற்றி ஓதினார். பிற இலக்கண ஆசிரியர்கள்

அதனைக் கூறவில்லை. திருக்குறளில் படுபாக்கு, என்பாக்கு, வேபாக்கு, என வழங்கியுள்ள இடங்களிலெல்லம் அது பெயர்ச்சொல்லாகவே காணப்படுகின்றது. இக்காலத்தில் அது வழக்கில் இல்லை.

(24)

**343. அவற்றுள்**
**முதலி னான்கு மீற்றின் மூன்றும்**
**வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற.**

அவற்றுள்
முதலில் நான்கும் ஈற்றின் மூன்றும்
வினை முதல் கொள்ளும் பிறவும் ஏற்கும் பிற.

avaṟṟuḻ
muṭalil nāṉkum īṟṟil mūṉṟum
viṉai muṭal koḻḻum piṟavum ēṟkum piṟa.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**verbal participles; different ending**

Of the forms enumerated above, the first four and the last three are governed by (the predicates of their)own subjects; the others may be governed (not only by these but) also by other predicates.

## ஒப்புமைப் பகுதி

அவற்றுள்
முதல்நிலை மூன்றும் வினைமுதல் முடிபின

(தொல். சொல்.: 230)

அவற்றுள்
முதலி ல்நான்கு ம்ஈற்றின் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற

(இ.வி.: 247)

செய்து செய்யூ செய்பு வினைமுதல்

முடிபின வாகு மொழியுங் காலே

(மு.வீ.: 625)

## மயிலை நாதர்

எ–ன், வினையெச்சத்திற்கு ஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று

இ–ள்.:– மேற்சொன்ன பன்னிரண்டனுள்ளும் செய்து, செய்பு, செய்யா, செய்யூ என்னும்[1] நான்கும் வான் பான் பாக்கென்னும் மூன்றும் வினைமுதல் வினைகொண்டு முடியும்; ஒழிந்தன ஐந்தும் வினைமுதல் வினையையும் பிறிதின் வினையையும் கொண்டு முடியும், எ–று.

வ–று.:–

"வாளொடு கனையிருள் வந்து தோன்றினான்" (சீவக.320), "எண்ணித் துணிக கருமம்" (குறள்.467) "பரீஇ யுயிர்செகுக்கும்" (நாலடி.220) "ஐவரொடு சினைஇ, நிலந்தலைக்கொண்ட" (புறநா.2) எனவும், [2]"புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த" (புறநா. 33) "தெரிபு தெரிபு குத்தின வேறு" (கலி.103) எனவும், "கல்லாக் கழிப்பர் தலையாயார்" (நாலடி.366) [3]"காணாது கழிந்த வைகல் காணா, வழிநாட் கிரங்குமென் னெஞ்சம்" (புறநா.176) "நிலங்கிளையா, நாணி நின்றோ ணிலை" (அகநா. 16) எனவும், "படுமகன் கிடக்கை காணூஉ, ஈன்ற ஞான்றினும் பெரிது வந்தனளே" (புறநா. 278) "நிலம்புடையூஉ வெழுதரும் வலம்படு குஞ்சரம்" (பதிற். இலங்குதொடி) எ– ம் முதலில் நான்கும் வினைமுதலும் இறந்தகாலமும் தழுவின. [4]"கொள்வான் கொடித்தானை கொண்டெழுந்தான்" (பு.வெ.6:5) 'ஓதுவான்போனான்', 'உறங்குவான்வந்தான்' எனவும் "திருவிற்றான் மாரிகற்பான் றுவலைநாட் செய்ததேபோல்" (சீவக. 2070), உண்பான் வந்தான் எனவும், "புணர்தரு செல்வந் தருபாக்குச் சென்றார்" (கார்.11), உண்பாக்குச் சென்றான், உண்பாக்குவந்தான் எனவும், ஈற்றின் மூன்றும் வினைமுதலும் எதிர்காலமும் ஏற்றன. "காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக் கடுங்கண் யானைக் [5]கோடுகொடுந் துண்ணும்" (குறுந்.100, பி–ம்) எனவும். "கோவா வாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு பேஎ நாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை" (பையுண் மாலை" தொல் களவு, 23 ந.மேற்) எனவும், [6]எனவெனீறு தன்றொழிலும் பிறிதின்றொழிலும் இறந்தகாலமு மேற்றது. "கொளக்கொளக் குறைபடாக கூழுடை வியனகர்" (புறநா. 70) எனவும், "மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து" (குறள். 90) எனவும் செயவெனெச்சம் இருதொழிலும் நிகழ்காலமுமேற்றது. "தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டிற் கவ்வை யெடுக்குமிவ் வூர்" (குறள்.1150) எனச் செயினென்னு [7]மெச்சமும், "காணியவாநீ வாழிய தோழி" (கலி.42)

எனவும், "மாணிழை யரிவை காணிய வொருநாட் பூண்க மாளநின் புரவி நெடுந்தேர்" (பதிற்.81) எனவும், செய்யியவென்னுமெச்சமும், "பசலையுணீயர் வேண்டும்" (குறுந்.27) எனவும், "கொற்கைச் செழியர் கொங்கர்ப் பணீஇயர், வெண்கோட்டியானைப் போஒர் கிழவோன், பழையன் வேல்வாய்த் தன்ன" (நற்.10) எனவும், செய்யிய ரென்னுமெச்சமும் எதிர்காலமும் இருதொழிலும் கொண்டன.

'பிற' என்ற [1]விதப்பினானே சிறுபான்மை தொழிற்பெயர் கொண்டு முடிவனவும் உளவெனக் கொள்க.

வ–று.:–

உண்டுவருதல், உண்குபுவருதல், உண்ணாவருதல், உண்ணூஉவருதல், பசித்தெனஉண்டல், வாழக்கருதல், மழைபெயின் விளைதல், காணியசேறல், மழைபெய்யிய ரெழுதல், கொள்வான்போதல், உரைப்பான்றொடங்கல், உண்பாக்கிருத்தல், "எரிபுரை யெழிலதாய விளந்தளி ரிரண்டுநாளின், மரகத வுருவ மெய்தி மற்றது பசலை கொண்டு, [2]சருகிலை யாகி வீழ்ந்து சரிந்துமண் ணாதல் கண்டும், வெருளிலர் வாழ்த்துமென்பார் வெளிற்றினை விலக்க லாமோ" (சூளா.துறவு.7) எனத் தொழிற் பெயரேற்றவாறு [3] தேடிய வான்பொருள், ஏறிய யானை, ஓடியபுரவி என இவ்வாறு [4]பெயர் கொண்டு முடியிற் பெயரெச்சமாவனவும் காண்க.

"விருந்தின்றி யுண்டபகலும்" (திரி.45) [5]"துயிலின்றி யாளீந்த" (கலி.30) [6]"நாளன்று போகிப் புள்ளிடை தட்பப், பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்" (புறநா.124) என வினையெச்சக்குறிப்பு வந்தவாறு காண்க. [7]பிறவும் இவ்வாறு வருவனவும் ஆராய்ந்து கொள்க.

பாட வேறுபாடு.:– 1. மிகையானே

2. கருகிலையாகி வீழ்ந்துகரிந்து

3. இவற்றில் மண்ணாதல் தொழிற்பெயர், கல்வி கொண்டு தேடிய

4. பொருள் கொண்டு முடிவனவுங் காண்க

5. யான்றுயர

6. நாளின்று

7. நாளின்றி என்றது நாளின்றென்றாயது வினையெச்சக்குறிப்பு;

அன்றி இன்றி என்பன வல்லாது வாராவென வறிக.

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், இவ்வெச்சங்கட்கு ஆவதோர்விதி உணர் —ற்று.

இ—ள்.: மேலைச்சூத்திரத்து முதற்கண் கூறிய செய்து செய்பு, செய்யா, செய்யூ என்னும் நான்கும் இறுதிக்கண் கூறிய வான், பான், பாக்கு என்னும் மூன்றும் வினைமுதலைக் கொண்டு முடியும்; இடைநின்ற செய்தென, செய, செயின், செய்யிய, செய்யியர் என்னும் ஐந்தும் இன என்றதனான் வருவனவும் வினையெச்சக் குறிப்புக்களும் வினைமுதலையும் அஃதல்லாத பிறவற்றையும் கொண்டு முடியும், எ—று.

இடையின் ஐந்தும் என்னாது 'பிற' என்றார் 'இன' என்றதனான் வருவனவும் வினையெச்சக் குறிப்புக்களும் தழீஇக்கோடற்கு என்க.

வ—று.:—

'நடந்து வந்தான்' "வாளொடு கனையிருள் வந்து தோன்றினான்" "எண்ணித் துணிக கருமம்" "பரீஇ உயிர் செகுக்கும்" "ஐவரோடு சினைஇ, நிலந்தலைக் கொண்ட" எனவும்,
"புலராப் பச்சிலை இடையிடுபு தொடுத்த" "தெரிபு தெரிபு குத்தின ஏறு"
எனவும்,
"கல்லாக் கழிப்பர் தலையா யார்" "நிலங்கிளையா நாணி நின்றோள் நிலை"
எனவும்,
"படுமகன் கிடக்கை காணூஉ, ஈன்றஞான்றினும் பெரிதுவந்தனளே" "நிலம்புடையூஉ எழுதரும் வலம்படுகுஞ்சரம்"
எனவும்,
"கொள்வான் கொடித்தானை கொண்டெழுந்தான்"
எனவும்
"அலைப்பான் பிறிதுயிரை யாக்கலும் குற்றம்"
எனவும்,
"புணர்தரு செல்வம் தருபாக்குச் சென்றார்"
எனவும் முதலில் நான்கும் ஈற்றின் மூன்றும் வினை முதல் கொண்டன.
"காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக் கடுங்கண் யானைக் கோடுநொடுத் துண்ணும்"
எனவும்,

"கோவா வாரம் வீழ்ந்துதெனக் குளிர்கொண்டு
பேஎ நாறும் தாழ்நீர்ப் பனிச்சுனை"
எனவும்,
உண்ண வந்தான்,
"கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்"
எனவும்,
மழை பெய்ய நெல் விளைந்தது,
"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து"
எனவும்,
"தாம் வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டிற்
கௌவை யெடுக்குமிவ் வூர்"
எனவும்,
"காணிய வாவாழி தோழி"
எனவும்,
[19]"மாணிழை யரிவை காணிய ஒருநாள்
பூண்க மாளநின் புனைவினை நெடுந்தேர்"
எனவும்,
"பசலை உண்ணியர் வேண்டும்"
எனவும்,
"கொற்கைச் செழியர் கொங்கர்ப் பணியியர் பழையன்
வேல்வாய்த் தன்ன"
எனவும் இடையினைந்தும் வினைமுதலும் பிறவும் கொண்டன.

உண்டால் உவக்கும் உண்டால் பசிதீரும்,

"விண்ணின்று பொய்ப்பின்" "விருந்தின்றி உண்டபகல்" என 'இன்' என்றதனான் வருவனவும் வினையெச்சக் குறிப்பும் வினைமுதலும் பிறவும் ஏற்றல் காண்க.

நடந்து வந்தவன் வருதல், இடையிடுபு தொடுத்தவன் தொடுத்தல் எனவும்; காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக் கடுங்கண் யானைக் கோடுநொடுத்து உண்டவன் உண்டல், கோவா வாரம் வீழ்ந்தெனக் குளிர்கொண்டு பேஎநாறுவது நாறல், உண்ண வந்தவன் வருதல், மழைபெய்ய நெல் விளைவது விளைதல் எனவும் வினையாலணையும் பெயரும் தொழிற்பெயரும் வருவித்து வினைமுதலும் வினைமுதலோடு பிறவும் ஏற்றல் காண்க. பிறவும் அன்ன.

இச்சூத்திரத்துள் வினைமுதல் கொள்ளும் பிறவும் ஏற்கும் என்பதற்கு வினைமுதல்வினை கொள்ளும் பிறவினை கொள்ளும் எனப் பொருள் உரைத்தால் என்னை யெனின்:- அது பொருளாயின் வினைமுதல்வினை கொளும் பிறவினை கொள்ளும் எனக் கூறினும் யாப்பு அமையுமாதலின் அங்ஙனம் கூறல்வேண்டும் அவ்வாறு கூறாமையானும், வினைகொண்டு முடியும் என இதற்குக் கூறினார் எனின் முன்னர்கூறிய பெயரெச்சத்திற்கும் பெயர்கொண்டு முடியும் எனக் கூறல் வேண்டும் அவ்வாறு கூறாமையானும், பொதுவியலுள், 'பெயர்வினை உம்மை' என்னும் சூத்திரத்தானே முற்றாது குறைந்து நின்ற இப்பெயரெச்ச வினையெச்சங்கள் முதலியவாக இவ்வதிகாரத்துள் விதந்தும் விதவாதும் பரந்து கிடந்த எச்சங்களையெல்லாம் எடுத்து ஒன்பதும் ஒன்றும் எனத் தொகை தந்து 'தத்தம் எச்சம் கொள்ளும்' எனக் கூறுதலானும், இங்ஙனம் வினைமுதற் பொருண்மையினையும் அஃதொழிந்த பிறபொருண்மையினையும் கொள்ளும் எனக் கூறலே நூலாசிரியர் கருத்து என்க.

அங்ஙனமாயின், இவ்விருவகை யெச்சங்களும் பெயரினையும் வினையினையும் கொண்டு முடிந்து நிற்க, உதாரணம் காட்டியது என்னை யென்னின்:- பெயரெச்சம் பெயரெஞ்ச நிற்றலும் வினையெச்சம் வினையெச்ச நிற்றலும் வினைமுதல் கோடலும் பிற கோடலும் தோன்றுதற் பொருட்டன்றிப் பெயரினையும் வினையினையும் கொண்டு முடிதல் தோன்றுதற் பொருட்டன்று என்க.

இவ் வினையெச்சங்கள் நடந்து வந்தான், மழை பெய்ய நெல் விளைந்தது எனக் காரணப்பொருட்டாயும்; நெல் விளைய மழை பெய்தது எனக் காரியப் பொருட்டாயும்; உண்ணவந்தான் எனக் காரணம் காரியம் என்னும் இரு பொருட்டாயும்;

"கடிக்கமலம் முகங்காட்ட ........
கருநெய்தல் கண்காட்டும்"

எனக் காரணம் காரியம் இரண்டும் இன்றியும்; உழுது பயன் கொண்டான் வேந்தன் எனத் தலைமை பற்றியும்; உழுது பயன் கொண்டான் வறியன் என அஃது இன்மை பற்றியும் வருதல் காண்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூம், தெரிநிலை வினையெச்சத்திற்கு ஆவதோர் இயல்பு கூறியது.

இ–ள்.: **அவற்றுள்** – மேற்சொன்ன பன்னிரண்டு வாய்பாட்டு வினையெச்சத்தினுள்ளும், **முதலினான்கும்** – செய்து, செய்பு, செய்யா, செய்யு என நான்கு வாய்பாட்டு வினையெச்சமும், **ஈற்றின் மூன்றும்** – வான் பான், பாக்கு என்னும் மூன்று வாய்பாட்டு வினையெச்சமும், **வினை முதல் கொள்ளும்** – வினைமுதலாகிய தன்வினை கொண்டு முடியும்; **பிறவுமேற்கும் பிற** – ஒழிந்த ஐந்தும் வினைமுதலாகிய தன் வினையும் பிறிதின் வினையையும் கொண்டு முடியும், எ–று.

உ–ம்.:–

"வாளொடு கனையிருள் வந்து தோன்றினன்" "எண்ணித் துணிக கருமம்", "............. நிலந்தலைக் கொண்ட "ஐயம் இட்டு உண்" எனச் செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் தன்வினை கொண்டன.

"இணக்கம் அறிந்து இணங்கு" "புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த" "கூடிப் பிரியேன்"..... "தெரிபு குத்தின ஏறு" "சேரிடம் அறிந்து சேர்" எனச் செய்பு என்னும் வினையெச்சம் தன்வினை கொண்டது

"பரீஇயுயிர்செருக்கும்" "கல்லாக் கழிப்பர் தலையாயார்" ,"காணாக் கழிப்ப ரறிவோர்", ஐவரோடு கிளைஇ "நிலங்கிளையா வந்த கேழல்" எனச் செய்யா என்னும் வினையெச்சம் தன்வினை கொண்டது.

"படுமகன் கிடக்கை காணூஉ, ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே", "நிலம் புடையூஉ வெழுதரு வலம்படுகுஞ்சரம்" (இலங்குதொடி எனத் தொடங்கும் பதிற்.) எனச் செய்யூ என்னும் வினையெச்சம் தன்வினை கொண்டது. ஆகவே முதலினான்கும் வினைமுதலும் இறந்த காலமும் தழுவின.

"கொல்வாம் கொடித்தானை கொண்டெழுந்தான்", 'புரவலன் புரிவான் றொடுத்த கரும மனைத்துஞ் சொன்னான், ஓதுவான் போனான், உறங்குவான் வந்தான்' எனவும் 'கல்வி கற்பான் வந்தான்', உண்பான் வந்தான் என்வும் "புணர்தரு செல்வம் தருபாக்குச் சென்றார்" உண்பாக்கு வந்தான் எனவும் ஈற்றின் மூன்றும் வந்தன; வினையும் எதிர்காலமும் ஏற்றன.

"பசித்தென ... யானைக்கோடுநொடுத்துண்ணும்" யானை வீழ்ந்தென அலறா நிற்கும், வெட்டெனப் போவார், "வீழ்ந்தென குளிர்கொண்டு, பேஏ நாறுந் தாணீர்ப் பனிச்சுனை" ("பையுண் மாலை" யெனத் தொடங்கும் பாடல்) என வரும் செய்தென என்னுமீறு தன்றொழிலும் பிறிதின்றொழிலும் இறந்த காலமும் ஏற்றது. 'பசித்தெனப் புனமேயா வென்றோ புலி' 'மாரி பெய்தென மலர்ந்தன முல்லைமேல்' என்பனவும் அவை.

மோப்ப வெடுத்தான், "மோப்பக் குழையுமனிச்சம்"

"விண்டு பெய்ய விரிந்தன முல்லைமேல்
வண்டு பாட வந்தாடின மஞ்ஞையைக்
கண்டு வாழ மணிக்கழ லார்குழுக் கொண்டு
போக வெங்கொய்யுளி யேறினார்".

எனவும் செயவென்னீறு தன்வினையும் பிறவினையும் நிகழ்காலமும் ஏற்றது. "கொளக் குற்றபடா கூழுடை வியனகர்", "பீடு பெற நில்" புகழ் பெற வாழ், "வீடு பெற நில்", "பிழைபடச் சொல்லேல்" என்பனவும் அவை.

"தாம் வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டிற் கவ்வையெடுக் குமிவ்வூர்", "பீரம் பேணிற் பாரந்தாங்கும்", "ஊருடன் பகைக்கில் வேருடன் கெடும்", "கவ்வைச் சொல்லின் எவ்வருக்கும் பகை", "வேந்தன் சீறின் ஆந்துணை யில்லை" எனச் செயினென்னீறு தன்வினையும் பிறவினையும் எதிர்காலமும் ஏற்றது.

"காணியவா வாழி தோழி" எனவும் "மாணிழை யரிவை காணி வொருநாள், பூண்க மாளநின் புனைவினை நெடுந்தேர்" எனவும் செய்யியவென்னீறு தன்வினையும் பிறவினையும் எதிர்காலமும் ஏற்றது. 'பசலை யுணியியர் வருந்தினன்', "கொற்கைக் செழியர் கொங்கர்ப் பணியியர்....பழையன் வேல்வாய்த் தன்ன" என வரும் செய்யியரென்னீறு தன்வினையும் பிறவினையும் எதிர்காலமும் கொண்டது.

"பிற" என்ற மிகையானே சிறுபான்மை தொழிற்பெயர்கொண்டு முடிவனவென்க.

உண்டு வருதல், உண்குபு வருதல், உண்ணா வருதல், உண்ணூஉ வருதல், பசித்தென உண்டல், வாழக் கருதல், மழைபெயின் விளைதல், காணிய சேறல், மழை பெய்யியர் எழுதல், கொள்வான் போதல், உரைப்பான் தொடங்கல், உண்பாக்கு வருதல் என வரும்.

“விருந்தின்றி யுண்ட பகலும்” “துயிலின்றி யானீந்த” “நாளின்றிப் போகிப் புள்ளிடை தட்பப், பதனன்றிப் புக்குப் பயனன்றி மொழியினும்” எனக் குறிப்பு வினையெச்சம் வந்தவாறு காண்க. பிறவாறு வருவனவும் ஆராய்ந்து கொள்க.

## விசாகப் பெருமாளையர்

இது, அவ்வினை யெச்சங்களுக் காவதோர் புறனடை யுணர்த்துகின்றது.

**இ–ள்.:–அவற்றுள்** –முன் சூத்திரத்துட் சொல்லிய வினையெச் சங்களுள், **முதலில்** – முதலிலுள்ள, **நான்கும்**–செய்து செய்பு செய்யா செய்யூ என்கிற நான்கும், **ஈற்றில்** – இறுதியிலுள்ள, **மூன்றும்** – வான் பான் பாக்கு என்கிற விகுதிகளையுடைய மூன்றும், **வினைமுதல்** – செய்பவனை, **கொள்ளும்** – கொண்டுமுடியும், **பிற** – நடுவிலுள்ள, **செய்தன** – செய செயின் செய்யிய செய்யியர் என்கிற ஐந்தும், **இவைபோல்வன** – பிறவுமென்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக் குறிப்புகளும் ஆகியவிவைகள், பிறவும் – செய்பவனை யன்றி மற்றவைகளையும், ஏற்கும்–கொண்டுமுடியும், எ–று.

உ– தானடந்து வந்தான் பு – தானுண்குபு போனான், ஆ – தான்கல்லாக் கழிந்தான், ஊ–தான் காணூ மகிழ்ந்தான், வான் – தான் கொல்வான் செல்வான், பான் – தானலைப்பான்புகுந்தான், பாக்கு – தான்றருபாக்கு வருவான், முதலினான்கும் ஈற்றின் மூன்றும் வினைமுதல் கொண்டு முடிந்தன.

என தானுண்டெனமகிழ்ந்தான், பிறனுண்டென மகிழ்ந்தான்,

அ தானுண்ணவருகிறான், பிறனுண்ணக் காண்கிறான்,

இன் தானுண்ணின்மகிழ்வான், பிறனுண்ணிற் கொடுப்பான்,இய தானுண்ணியவருவான், பிறனுண்ணிய கொடுப்பான்,

இயர் தானுண்ணியர்போவான், பிறனுண்ணியர் வழங்குவான்,- இடையினைந்தும் வினைமுதலும் பிறவுங் கொண்டன.

உண்டாலுவக்கும் உண்டாற்பசிதீரும்-எனவும், மழையின்றிப் பொய்ப்பின் விருந்தின்றியுண்டான்-எனவும், இன்னவென்ற தனால் வருகிற செய்தால் முதலியவையும் வினையெச்சக் குறிப்பும் இப்படியே வினைமுதலும் பிறவுமேற்றல் காண்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வினையெச்சங்களுக்கு முடிபு கூறுஞ் சூத்திரம் யாது?

அவற்றுள்,

முதலி னான்கு மீற்றின் மூன்றும்

வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற.

(அவற்றுள்,-

முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்

வினைமுதல் கொள்ளும் பிறவும் ஏற்கும் பிற.)

இ—ள்.: மேலைச் சூத்திரத்துட் சொல்லிய வினையெச்சங்களுள் முதலிலுள்ள செய்து செய்பு செய்யாச் செய்யூ என்னுநான்கும் இறுதியிலுள்ள வான் பான் பாக்கு என்னும் விகுதிகளையுடைய மூன்றும் வினைமுதல்வினையைக் கொண்டு முடியும், நடுவிலுள்ள செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர் என்னும் ஐந்தும் இவைபோல்வன பிறவுமென்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக்குறிப்புக்களும் ஆகிய இவைகள் பிறகருத்தாவினது வினையையும் தம்மை நிகழ்த்தின கருத்தாவினது வினையையுங் கொண்டு முடியும், எ—று.

வரலாறு:-

உ – தானடந்து வந்தான் முதலினான்கும் ஈற்றின் மூன்றும் வினைமுதல் வினை கொண்டுமுடிந்தன.

பு – தானுண்குபு போனான் ,,

ஆ – தான் கல்லாக் கழித்தான் ,,

ஊ – தான் காணூஉ மகிழ்ந்தான் ,,

வான் – தான் கொல்வான் செல்வான் ,,

பான் – தானலைப்பான் புகுந்தான் ,,

பாக்கு – தான்றருபாக்கு வருவான் ,,

என தானுண்டெென மகிழ்ந்தான்
இடையினைந்தும்வினைமுதல் வினையும் பிறவினையுங் கொண்டன.

பிறனுண்டென மகிழ்ந்தான்

அ தானுண்ண வருகிறான் ,,

பிறனுண்ணக் காண்கிறான் ,,

இன் தானுண்ணின் மகிழ்வான் ,,

பிறனுண்ணிற் கொடுப்பான் ,,

இய தானுண்ணிய வருவான் ,,

பிறனுண்ணிய கொடுப்பான் ,,

இயர் தானுண்ணியர் போவான் ,,

பிறனுண்ணியர் வழங்குவான் ,,

மழைபெய்தற்கு முழங்கும், மழைபெய்தற்கு வெயிலெறிக்கும். உண்டாலுவக்கும், உண்டாற்பசிதீரும் எனவும் மழையின்றிப் பொய்ப்பின், விருந்தின்றி யுண்டான் எனவும் இனவென்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக்குறிப்பும் இப்படியே வினைமுதலும் பிறவுமேற்றல் காண்க.

## முகவை இராமானுச கவிராயர்

இஃது, அவ் வெச்சவினைகளுக்காவதோர் முடிபுவேறுபாடு ணர்த்திற்று

**இ–ள்.:– முதலினான்கும் –** (மேலைச்சூத்திரத்து) முதலிலே சொல்லிய செய்து செய்பு செய்யாச் செய்யூ என்னும் நான்கும், **ஈற்றின் மூன்றும் –** இறுதியிலே சொல்லப்பட்ட செய்வான் செய்பான் செய்பாக்கு என்னும் மூன்றும், **வினைமுதல் கொள்ளும் –** வினைமுதலைக் கொண்டு முடியும், **பிற –** இடைநின்ற, செய்தென செய செயின் செய்யிய செய்யியர் என்னும் ஐந்தும் இன்னவென்றதனால் வருவனவும் வினையெச்சக் குறிப்புகளும், **பிறவுமேற்கும்** – தன்மை நடத்தின வினை முதலையும் பிற வினைமுதலையும் கொண்டு முடியுமென்றவாறு.

**வ–று.:–**

அவனுண்டுவந்தான், அவனுண்புவந்தான், அவனுண்ணாக் களிப்பான், அவனுண்ணூமகிழ்வான், அவன் கொல்வானெழுந்தான், அவன் அலைப்பான்சென்றான், அவனுண் பாக்குச்சென்றான் என முதலிலே நின்ற நான்கும் ஈற்றிலே நின்ற மூன்றுமாகிய உ, பு, ஆ, ஊ, வான், பான், பாக்கு என்னும் விகுதிகளையுடைய ஏழும் வினைமுதலைக் கொண்டன. அவனுண்டென மகிழ்ந்தான், அவனுண்டெனமகிழ்ந்தானிவன், அவனுண்ண வந்தான், அவனுண்ண வந்தானிவன், அவனுண்ணின் மகிழ்வான், அவனுண்ணின் மகிழ்வானிவன், அவனுண்ணிய மகிழ்வான், அவனுண்ணிய மகிழ்வானிவன், அவனுண்ணியர் மகிழ்வான், அவனுண்ணியர் மகிழ்வானிவன் என இடையிலே நின்ற என, அ, இன், இய, இயர் என்னும் விகுதிகளையுடைய ஐந்தும் வினைமுதலையும் பிற வினைமுதலையுங் கொண்டன. அவனுண்டா லுவப்பான், அவனுண்டாலுவப்பானிவன், அவனுண்டக்காலுவப்பான், அவனுண்டக்காலுவப்பானிவன், மழையின்றிப்பொய்ப்பின் விருந்தின்றி யுண்ணானவன்–என இன்னவென்றதனால் வந்த ஆல், கால் முதலிய விகுதிகளையுடையனவும், வினையெச்சக் குறிப்புகளு மிவ்வாறு வினைமுதலையும் பிறவினைமுதலையுங் கொள்ளுமெனக் காண்க.

இனிச்செய்யுளகத்து வருமாறு: 'உ–உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' 'எண்ணித் துணிக', 'பரீ இயுயிர்செருக்கும் வரொடு சினைஇ, நிலத்தலைக் கொண்ட'– (பரீஇ–பரிந்து,) (சினைஇ–சினந்து,) எனவும், பு – 'புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த', 'தெரிபு தெரிபு குத்தின வேறு' எனவும், ஆ– 'கல்லாக்களிப்பர் தலையாயார்', 'நிலங்கிளையா நாணிநின்றாள்' எனவும், ஊ – 'படுமகன் கிடைக்கை காணூஉ வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே' 'நிலம்புடையூ வெழுதரு வலம் படு குஞ்சரம்' எனவும், வான் – 'கொல்வான் கொடித்தானை கொண்டெழுந்தான்' எனவும், பான் 'அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்' எனவும், பாக்கு – 'புணர்தரு செல்வந் தருபாக்குச் சென்றான்' எம், முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும் வினைமுதல்கொண்டன. என – 'காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித் தெனக் கருங்கண் யானைக்கோடு நொடுத்துண்ணும்' வினைமுதல் –கோவா வாரம் வீழ்ந் தெனக்குளிர் கொண்டுபே எம் நாறுந்தாழ் நீர்ப்பனிச்சுனை – பிறவினைமுதல் (நொடுத்தல்–ஒடித்தல்,

பேம்–நுரை,) 'ஆரம்வீழ்ந்தெனக் குளிர்கொண்டு நாறுஞ்சுனை' (வினைமுதல் இரண்டு) அ, உண்ணவந்தான், உடுக்கவந்தான், 'பிறர்கொள்ளக் குறைபடாக் கூழுடைவியனகர்', மழைபெய்ய நெல்விளைந்தது; வினைமுதல் இரண்டு, இன்–தாம்வேண்டினல்குவர் எனவும், வினைமுதல் யாம்–வேண்டிற் கொளவையெடுக்கும் மிவ்வூர் எனவும், (பிற வினைமுதல், வினைமுதல் இரண்டு.) இய – காணியவா வாழிதோழி (வினைமுதல்) வாணுதலரிவை காணியபூணகமாகநின் புனைமணி நெடுந்தேர் எனவும், (பிற வினைமுதல், வினைமுதல் இரண்டு.) இயர்–பசலையுண்ணியர் வேண்டும்–வினைமுதல், கொங்கர்ப்பணியியர் பழையன் வேல் வாய்த்தன எனவும், (பிற வினைமுதல், வினைமுதல் இரண்டு.) எனவும், இடையில் ஐந்தும் வினைமுதலையும் பிறவினை முதலையும் கொண்டான். அற்றாலுடற்கிண்பந்தரும் வினைமுதல் அற்றாலளவறிந் துண்க பிற வினைமுதல் இரண்டு எனவும் விண்ணின்றிப் பொய்ப்பின் வினைமுதல் விருந்தின்றியுண்டபகல் பிறிது வினைமுதல் இரண்டு எனவும் இன்னவென்றதனால் வருவனவும் வினையெச்சக் குறிப்புகளும் இவ்வாறு வினைமுதலையும் பிற வினைமுதலையுங் கொள்ளுமெனக் காண்க. நடந்துவந்தவன், நடந்துவருதல் என்றாற்போல ஒழிந்தனவற்றிற்கும் வினையாலணையும் பெயருந் தொழிற் பெயரும் வருவித்து வினைமுதலும் வினைமுதலொடு பிறவு மேற்றல் காண்க, பிறவுமன்ன. இனி யிவ்வினையெச்சங்கள் நடந்துவந்தான், மழைபெய்ய நெல்விளைந்தது எனக் காரணப்பொருட்டாயும், நெல்விளையமழை பெய்தது எனக் காரியப்பொருட்டாயும், உண்ண வந்தான் எனக் காரண காரியப்பொருட்டாயும், 'கடிக்கமல முகங்காட்டக் கருநெய்தல் கண்காட்டும்' எனக் காரணகாரியமிரண்டு மின்றியும் வருதல் காண்க.

இச்சூத்திரத்துள், 'வினைமுதல் கொள்ளும் பிறவு மேற்கு' மென்பதற்கு வினைமுதல் வினைகொளும் பிறவினைகொள்ளுமெனப் பொருளுரைத்தாலென்னெனின், நடந்து வந்தான் என வினைமுதல் வினைகொளினும், நடந்து வந்தான் சாத்தன் என வினைமுதல்வந்தே முடிதலாலும், ஆசிரியர் தொல்காப்பியனார்,

"அவற்றுள்
முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின"

எனவும்,

"ஏனை யெச்சம் வினைமுத லானு
மானவந் தியையும் வினைநிலை யானுந்
தாமியன் மருங்கின் முடியு மென்ப" எனக்
கூறுதலாலும் பொருந்தாதென்க. நான்கும் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் எனவும், பிற பிறவுமேற்கும்
எனவும் இரு முடிபாக்குக.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

உரை :- **அவற்றுள்** – (முன் சூத்திரத்துட் சொல்லிய பன்னிரண்டு வாய்பாட்டு) வினையெச்சங்களுள், **முதலில்** –முதலிலுள்ள, **நான்கும்** – (செய்து செய்பு செய்யா செய்யூ என்கிற) நான்கும், **ஈற்றில்** – இறுதியிலுள்ள, **மூன்றும்** – (வான் பான் பாக்கு என்கிற விகுதிகளையுடைய) மூன்றும், **வினைமுதல்** – தன் கருத்தாவின் வினையை, **கொள்ளும்**– கொண்டு முடியும், **பிற** – (நடுவிலுள்ள செய்தென செய செயின் செய்யிய செய்யியர் என்கிற) ஐந்தும், **பிறவும்** – (தன் கருத்தாவின் வினையை மாத்திரமேயன்றிப்) பிறகருத்தாவின் வினையையும், **ஏற்கும்** – கொண்டு முடியும்.

உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| 1. | செய்து | – இராமன் நடந்துவந்தான். | முதலில் நான்கும் |
| 2. | செய்பு | – இராமன் உண்புபோனான் | தம் வினைமுதல் |
| 3. | செய்யா | – இராமன் உண்ணா வந்தான் | வினை |
| 4. | செய்யூ | – இராமன் உண்ணூ வந்தான் | கொண்டன. |

| | | | |
|---|---|---|---|
| 1. | வான் | – இராமன் உண்ணுவான் வந்தான் | ஈற்றில் மூன்றும் |
| 2. | பான் | – இராமன் உண்பான் வந்தான் | தம்வினை முதல் |
| 3. | பாக்கு | – இராமன் உண்பாக்குச் சென்றான் | |

வினைகொண்டன.

| | | | |
|---|---|---|---|
| 1. | செய்தென | – இராமன் உண்டென மகிழ்ந்தான். | |
| | | " " யான்மகிழ்ந்தேன். | |
| 2. | செய | – இராமன் உண்ண வருகிறான். | |
| | | " " நீ வந்தாய் | இடையில் ஐந்தும் |
| 3. | செயின் | – இராமன் உண்ணின் மகிழ்வான். | தம்வினை முதல் |
| | | " " யான் கொடுப்பேன் | வினையையும், |
| 4. | செய்யிய | – இராமன் உண்ணிய வருவான் | வேறு வினை |

| | | |
|---|---|---|
| | ” ” தாய் கொடுப்பாள் | முதலின் வினையை |
| 5. செய்யியர் | – இராமன் உண்ணியர் போவான். | யும் கொண்டன. |
| | ” ” நீ வழங்குவாய் | |

குறிப்பு :– 'இடையினைந்தும்' என்னாது 'பிற' என்றதனால் – கீழ்ச்சூத்திரத்து, 'இன' என்றதனாற் கொண்ட வினையெச்சங்களுள், 'செய்து' என்னும் வாய்பாடு பற்றிவருகின்ற இகர யகரவீற்று வினையெச்சங்களும், உடன்பாட்டுக் குறிப்புவினையெச்சமும் – தன் வினை முதலின் வினையையும், மற்றவை தம் வினைமுதலின் வினையையும் பிற வினைமுதலின் வினையையுங் கொள்ளுமென்க.

**உதாரணம்**

அவன் ஓடிவந்தான் / அவன் போய்க்கண்டான் / அவன் வலியச்சென்றான்.

(எனத்தன் வினைமுதல்வினை கொண்டது)

அவன் உண்டால் உவக்கும் மழையின்றிப் பொய்ப்பின்
யான் உண்டால் பசிதீரும் விருந்தின்றியவன் உண்ணான்.

(என இருவகை வினைமுதலின் வினைகொண்டன. பிறவுமன்ன)

(கீழ் 'வினை முதல்கொள்ளும்' என்பதற்குப் புறனடை)

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:–அவற்றுள்** – மேலைச் சூத்திரத்துட் சொல்லிய வினையெச்சங்களுள், **முதலில் நான்கும்** – முதலிலுள்ள செய்து செப்பு செய்யாச் செய்யூ என்னு நான்கும், **ஈற்றில் மூன்றும்** – இறுதியிலுள்ள வான் பான் பாக்கு என்னும் விகுதிகளையுடைய மூன்றும், **வினைமுதல் கொள்ளும்** – வினைமுதலைக் கொண்டு முடியும், பிற – நடுவிலுள்ள செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர் என்னும் ஐந்தும் இவை போல்வன பிறவு மென்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக் குறிப்புக்களும் ஆகிய இவைகள், **பிறவும் ஏற்கும்** – செய்பவனை யன்றி மற்றவைகளையுங் கொண்டு முடியும், எ–று.

வ–று.:–

உ – தானடந்து வந்தான்

பு – தானுண்குபு போனான்

ஆ – தான் கல்லாக் கழித்தான்

ஊ - தான் காணூஉ மகிழ்ந்தான்

முதலினான்கும் ஈற்றின்

மூன்றும் வினைமுதல் கொண்டு முடிந்தன.

வான் - தான் கொல்வான் செல்வான்

பான் - தானலைப்பான் புகுந்தான்

பாக்கு - தான்றருபாக்கு வருவான்

என தானுண்டென மகிழ்ந்தான்

பிறனுண்டெனமகிழ்ந்தான்

அ - தானுண்ண வருகிறான்

பிறனுண்ணக் காண்கிறான்

இன் - தானுண்ணின் மகிழ்வான்

இடையினைந்தும் வினைமுதலும் பிறவுங்

கொண்டன.

பிறனுண்ணிற் கொடுப்பான்

இய - தானுண்ணிய வருவான்

பிறனுண்ணிய கொடுப்பான்

இயர் - தானுண்ணியர் போவான்

பிறனுண்ணியர் வழங்குவான்

'உண்டாலுவக்கும்', 'உண்டாற் பசிதீரும்' எனவும், 'மழையின்றிப் பொய்ப்பின்', 'விருந்தின்றி யுண்டான்' எனவும் இன்னவென்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக் குறிப்பும் இப்படியே வினைமுதலும் பிறவுமேற்றல் காண்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ-ள்.:- அவற்றுள் - மேலைச் சூத்திரத்துட் சொல்லிய வினையெச்சங்களுள், முதலில் நான்கும் - முதலிலுள்ள செய்து செய்பு செய்யாச் செய்யூ என்று நான்கும், ஈற்றில் மூன்றும் - இறுதியிலுள்ள வான் பான் பாக்கு என்னும் விகுதிகளையுடைய மூன்றும், வினைமுதல் கொள்ளும் - வினைமுதல் வினையைக் கொண்டு முடியும், - பிற - நடுவிலுள்ள செய்தென, செய, செயின், செய்யிய, செய்யியர் என்னும் ஐந்தும் இவை போல்வன பிறவுமென்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக்

குறிப்புக்களும் ஆகிய இவைகள், பிறவும் ஏற்கும் – செய்பவனையன்றி மற்றவினைமுதல் வினைகளையும் கொண்டு முடியும். எ–று.

| | | | |
|---|---|---|---|
| உ | – | தானடந்து வந்தான் | |
| பு | – | தானுண்குபு போனான் | |
| ஆ | – | தான் கல்லாக் கழித்தான் | முதலினான்கும் ஈற் |
| ஊ | – | தான் காணூ மகிழ்ந்தான் | றின் மூன்றும் தன் |
| வான் | – | தான் கொல்வான் செல்வான் | வினைமுதல் |
| பான் | – | தானலையபான் புகுந்தான் | வினைகொண்டு |
| பாக்கு | – | தான்றருபாக்கு வருவான். | முடிந்தன. |

| | | |
|---|---|---|
| என | தானுண்டென மகிழ்ந்தான்<br>பிறனுண்டென மகிழ்ந்தான் | |
| அ | தானுண்ண வருகிறான்.<br>பிறறுண்ணக் காண்கிறான் | |
| இன் | தானுண்ணின் மகிழ்வான்<br>பிறனுண்ணிற் கொடுப்பான் | இடையினைந்தும்<br>தன்வினை முதல் |
| இய | தானுண்ணிய வருவான்<br>பிறனுண்ணிய கொடுப்பான் | வினையும் பிறவினை<br>முதல் வினையும் |
| இயர் | தானுண்ணியர் போவான்<br>பிறனுண்ணியர் வழங்குவான். | கொண்டன. |

உண்டாலுவக்கும், உண்டாற்பசிதீரும், எ–ம். விருந்தின்றியுண்டான் மழையின்றிப் பொய்ப்பின், எ–ம். இன்ன வென்றதனால், வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக் குறிப்பும் இப்படியே தன்வினைமுதல் வினையும் பிறவினை முதல்வினையு மேற்றல் காண்க.

இச்சூத்திரத்தில் வினைமுதல் கொள்ளும் பிறவுமேற்கும் பிற என்பதற்கு வேறுகருத்துக் கூறினாருமுளர். அக்கருத்துப் பின்வரும் சினைவினை சினையொடும் என்னுஞ் சூத்திரப் பொருளுக் கியையாமையிருத்தலும், "அவற்றுள், முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின" எ–ம். "அம்முக் கிளவியுஞ் சினைவினை தோன்றிற், சினையொடு முடியா முதலொடு முடியினும், வினையோரனைய வென்மனார் புலவர்" எனவும் வருந் தொல்காப்பியச் சூத்திரங்களோடும் அவற்றிற்குச் சேனாவரையர் உரைத்தவுரையோடும் இயையாதிருத்தலும் நோக்கியுணர்க. அவற்றை ஈண்டு விரிப்பிற் பெருகும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.: அவற்றுள்** – (முன் சூத்திரத்திற் சொல்லிய பன்னிரண்டு வாய்பாட்டு) வினையெச்சங்களுள், **முதலில்** – முதலிலுள்ள, **நான்கும்** – செய்து, செய்பு செய்யா செய்யூ என்ற ) நான்கும், **ஈற்றில்** – இறுதியிலுள்ள, **மூன்றும்** – (வான் பான் பாக்கு என்கிற விகுதிகளையுடைய) மூன்றும், **வினைமுதல்** – தன்கருத்தாவின் வினையை, **கொள்ளும்** – கொண்டு முடியும்; **பிற** – நடுவிலுள்ள (செய்தென செய செயின் செய்யிய செய்யியர் என்ற) ஐந்தும், **பிறவும்** – (தன்கருத்தாவின் வினையை மாத்திரமே யன்றிப்) பிற கருத்தாவின் வினையையும், **ஏற்கும்** – கொண்டு முடியும், **எ—று.**

**(உ—ம்.)**

உ. – இராமன் நடந்துவந்தான்

பு. – பொன்னன் உண்குபு போனான் — முதலில் நான்கும்,

ஆ. – புயல் பொய் யாக் கொடுக்கும் — ஈற்றில் மூன்றும் தன் கருத்தாவின்

ஊ. – மகள் காணூ மகிழ்ந்தாள் வான்—புலி கொல்வான் சென்றது — வினையைக் கொண்டு முடிந்தன.

பான். – வேடர் அலைப்பான் புகுந்தனர்

பாக்கு. – வள்ளல் தருபாக்கு வருவான்

என. சாத்தான் உண்டென மகிழ்ந்தான்

சாத்தான் உண்டென யான் மகிழ்ந்தேன் — இடையில் ஐந்தும் – தன் கருத்தாவின் வினையையும்,

வேறு கருத்தாவின் வினையையும் கொண்டு முடிந்தன.

அ. பொன்னன் உண்ண வருகிறான்

சாத்தன் உண்ண நீ காணாய்

இன். இராமன் உண்ணின் மகிழ்வான்

வறியன் உண்ணின் வள்ளல் கொடுப்பான்

இய. மகன் உண்ணிய வருவான்

மகள் உண்ணிய தாய் கொடுப்பாள்

இயர். தந்தை உண்ணியர் போவான்

பிறன் உண்ணியர் தான் வழங்குவான்

'இடையிலைந்தும்' என்னாது **'பிற'** என்றதனால் கீழ்சூத்திரத்து **'இன'** என்றதனாற் கொண்ட வினையெச்சங்களுள், செய்து என்னும் வாய்பாடு

பற்றிவருகிற இகர யகர வீற்று வினையெச்சங்களும், உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்சமும், தன் கருத்தாவின் வினையையும், மற்றவை தன் கருத்தாவின் வினையையும், பிற கருத்தாவின் வினையையும் கொள்ளு மெனக் காண்க.

உ–ம்.: 'மகன் ஓடி வந்தான்'

'மகள் போய்க் கண்டாள்' தன் கருத்தாவின் வினை கொண்டன.

'தான் வலியப் பேசினான்'

'அவன் உண்டால் உவக்கும்' 'மழை இன்றிப் பொய்ப்பின்'

'யான் உண்டால் பசி தீரும்' 'விருந்தின்றி அவன் உண்ணான்'

என இருவகைக் கருத்தாவின் வினை கொண்டன. பிறவும் இவ்வாறே.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:–அவற்றுள்** – மேலைச் சூத்திரத்துட் சொல்லிய வினையெச்சங் களுள், **முதலில் நான்கும்** – முதலிலுள்ள செய்து செய்பு செய்யாச் செய்யூ என்னும் நான்கும், **ஈற்றில் மூன்றும்** – இறுதியிலுள்ள வான் பான் பாக்கு என்னும் விகுதிகளையுடைய மூன்றும், **வினைமுதல் கொள்ளும்** – வினைமுதலைக் கொண்டு முடியும். **பிற** – நடுவிலுள்ள செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர் என்னும் ஐந்தும் இவைபோல்வன பிறவு மென்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக் குறிப்புக்களும் ஆகிய இவைகள், **பிறவும் ஏற்கும்** – செய்பவனையன்றி மற்றவைகளையுங் கொண்டு முடியும். எ–று.

(உ–ம்.)

உ– தான் நடந்து வந்தான்

பு – தான் உண்குபு போனான்

ஆ – தான் கல்லாக் கழித்தான்

ஊ – தான் காணூஉ மகிழ்ந்தான்

வான் – தான் கொல்வான் செல்வான்

பான் – தான் அலைப்பான் புகுந்தான்

பாக்கு – தான் தருபாக்கு வருவான் – முதலினான்கும் ஈற்றின் மூன்றும வினைமுதல் கொண்டு முடிந்தன.

---

பாடவேறுபாடு:–

1. முன்சொன்னவினைகளுக்கோர் புறநடை

என – தான் உண்டென மகிழ்ந்தான்

பிறன் உண்டென மகிழ்ந்தான்

அ – தான் உண்ண வருகிறான்

பிறன் உண்ணக் காண்கிறான்

இன் – தான் உண்ணின் மகிழ்வான்

பிறன் உண்ணிற் கொடுப்பான்

இய – தான் உண்ணிய வருவான்

பிறன் உண்ணிய கொடுப்பான்

இயர் – தான் உண்ணியர் போவான்

பிறன் உண்ணியர் வழங்குவான் – இடையினைந்தும் வினை முதலும் பிறவுங் கொண்டன.

உண்டாலுவக்கும், உண்டாற்பசிதீரும் – எனவும், மழையின்றிப் பொய்ப்பின், விருந்தின்றி யுண்டான் – எனவும், 'இன்ன' (சூ – 343) என்றதனால் வருஞ் செய்தால் முதலியவையும் வினையெச்சக்குறிப்பும், இப்படியே வினைமுதலும் பிறவுமேற்றல் காண்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**அவற்றுள்** – (முன் சூத்திரத்துட் சொல்லிய) வினையெச்சங்களுள், **முதலில்** – முதலிலுள்ள, **நான்கும்** – (செய்து செய்பு செய்யா செய்யூ) என்னும் நான்கும், **ஈற்றில்** – இறுதியிலுள்ள, **மூன்றும்** – (வான் பான் பாக்கு) என்னும் விகுதிகளையுடைய மூன்றும், **வினைமுதல்** – தன் கர்த்தாவின் வினையை, **கொள்ளும்** – கொண்டு முடியும், **பிற** – (நடுவிலுள்ள) செய்தென செய செயின் செய்யிய செய்யியர் என்னும் ஐந்தும் இவைபோல்வன பிறவும் என்றதனால் வருஞ்செய்தால் முதலியவையும் வினையெச்சக் குறிப்புகளும் ஆகிய இவைகள், பிறவும் (தன்கர்த்தாவின் வினையையேயன்றி) பிற கர்த்தாவின் வினையையும், **ஏற்கும்** – கொண்டு முடியும்.

உதாரணம்

---

பாடவேறுபாடு:–

1. முதலினான்கும் வினைமுதல் கொண்டு முடிந்தன.

உ. தான் நடந்து வந்தான்
பு. தான் உண்புகு போனான்
ஆ. தான் கல்லாக் கழித்தான்
ஊ. தான் காணூ மகிழ்ந்தான்
வான். தான் கொல்வான் செல்வான்
பான். தான் அலைப்பான் புகுவான்
பாக்கு தான் தருபாக்கு வருவான்

முதலில் நான்கும், ஈற்றில் மூன்றும் வினை முதல் கொண்டு முடிந்தன.

என தான் உண்டென மகிழ்ந்தான்
பிறன் உண்டென மகிழ்ந்தான்
அ தான் உண்ண வருகிறான்
பிறன் உண்ணக் காண்கிறான்
இன் தான் உண்ணின் மகிழ்வான்
பிறன் உண்ணின் கொடுப்பான்
இய தான் உண்ணிய வருவான்
பிறன் உண்ணிய கொடுப்பான்
இயர் தான் உண்ணியர் போவான்
பிறன் உண்ணியர் வழங்குவான்

இடையில் ஐந்தும் வினை முதலும் பிறவுங் கொண்டன

உண்டால் உவப்பான்
உண்டால் பசிதீரும்
மழையின்றிப் பொய்ப்பின்
விருந்தின்றி யுண்டான்

'இன' என்றதனால் வருகிற செய்தால் முதலியவையும் வினை யெச்சக் குறிப்பும், வினைமுதலும் பிறவும் ஏற்றன.

## மோசகு பொன்னையா

முன்னர்ச் சொல்லப்பட்ட வாய்பாட்டு வினையெச்சங்கள் பன்னிரண்டனுள் முதற்கண் உள்ள செய்து, செய்பு, செய்யா, செய்யூ, என்னும் நான்கும், ஈற்றின்கண் உள்ள வான், பான், பாக்கு என்னும் மூன்றுமாகிய ஏழு எச்சங்களும் வினை முதலைக்கொண்டு முடியும்; நடுவிலுள்ள செய்தென, செய, செயின், செய்யிய, செய்யியர் என்னும் ஐந்தனோடு, இன என்றதனால் அமைத்துக் கொள்ளற்குரியனவும் வினைமுதலையும் பிறவற்றையும் கொண்டு முடியும். எ–று.

முந்திய நூற்பாவின் உரையில் செய, செயின் என்னும் எச்சங்களோடு ஒருங்குவைத்து எண்ணத்தக்கன என எடுத்துரைக்கப்பட்டவற்றையும் அன்றி, இன்றி என்பன போன்ற எச்சங்களையும் இன என்றதனாற் கொள்க.

அவன் உண்ண வருகின்றான் என்பது வினைமுதல்

முடிதற்கும், மகன் உண்ணத் தந்தை மகிழ்வான் என்பது பிறகொண்டு முடிதற்கும் எடுத்துக்காட்டாம். இவ்வாறே எச்சங்கள்தோறும் எடுத்தோதிக் கொள்க.

(25)

## 344. சினைவினை சினையொடு [1]முதலொடுஞ்செறியும்.

**சினைவினை சினையொடும் முதலொடும் செறியும்.**

பாடவேறுபாடு:-

1. முதலொடு செறியும்

sinai vinai sinaiyotum mutalotum seriyum.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**The governing verb**

The governing verb of a verbal participle whose subject is a member may agree with that subject or its whole.

### ஒப்புமைப் பகுதி

அம்முக் கிளவியும் சினைவினை தோன்றின்
சினையொடு முடியா முதலொடு முடியினும்
வினையோர் அனைய வென்மனார் புலவர்

(தொல். சொல்.: 231)

ஏனை எச்சம் வினைமுத லானும்
ஆன்வந்த தியையும் வினைநிலை யானும்
தாமியல் மருங்கின் முடியும் என்ப

(தொல். சொல்.: 232)

சினைவினை முதலொடும் பிறவினை பிறவினை

முதலொடு முடிதலு முன்னினர் கொளலே

(இ.வி.: 248)

அம்முப் பெயருஞ் சினைவினை நின்று
சினைவினை யொடுமுடி யாது முதலொடு
முடியினும் வினையா ளொருதன் மையவே

(மு.வீ.: 626)

## மயிலை நாதர்

எ–ன், [1]மேலதற்கு எய்தியதோர் புறநடையுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: சினைவினை என்னாமோ வெனின், சினை தன்னுடனும் முடியும் முதலுடனும் முடியும், எ–று.

வ–று.:–

கையிற்று வீழ்ந்தது, கையிற்று வீழ்ந்தான்; கையிறுபு வீழ்ந்தது, கையிறுபு வீழ்ந்தான்; கையிறா வீழ்ந்தது, கையிறாவீழ்ந்தான்; கையிறூஉ வீழ்ந்தது, கையிறூஉ, வீழ்ந்தான் என [1]வரும். பிறவும் வந்த வழிக்காண்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், மேல் 'வினைமுதல் கொள்ளும்' என்றவற்றிற்கு ஓர் புறனடை உணர்–ற்று.

இ–ள்.:–'முதலில் நான்கும் ஈற்றின் மூன்றும்' என்ற வினையெச்சங்கள் சினைவினையாயின் அவை 'வினைமுதல் கொள்ளும்' என்ற விதியானே சினையொடு முடிதலேயன்றி முதலுடனும் முடியும்; அங்ஙனம் முடியுமாயினும் சினையொடு முதற்கு ஒற்றுமை யுண்மையின் வினைமுதல் கொண்டதேயாம் எ–று.

வ–று.:–

காலிற்று வீழ்ந்தான், காலிறுபு வீழ்ந்தான், காலிறா வீழ்ந்தான், காலிறூஉ வீழ்ந்தான் எனவும்; கண் வருவான் கதிரவன் தொழுதார், கண்தழைப்பான் கதிரவன் தொழுதார், கண்வருபாக்குக் கதிரவன் தொழுதார் எனவும்; காலிற்று வீழ்ந்தது எனவும் வரும். பிறவும் அன்ன.

'காலிற்று வீழ்ந்தான்' என்புழி வீழ்தற்கு வினைமுதல் முதற்பொருளாம்; அஃதன்றிச் சினைப்பொருளாயின் கண் விழித்துப் பார்த்தான், செல்வமிக்குயர்ந்தான், கண்பெரியன், நாடுபெரியன், செல்வம் பெரியன் என்றாற்போல 'உயர்திணை தொடர்ந்த பொருண்முதல் ஆறும்' (377) என்னும் சூத்திரத்தான் அமைவதாம் என்க. பிறவும் அன்ன.

## கூழங்கைத் தம்பிரான்

சூ-ம், இவ்வினையெச்சத்திற்கோர் புறநடை கூறுகின்றது.

இ-ள்.:- **சினைவினை** - சினையைச் சேர்ந்த வினையெச்சமாமே யெனில், **சினையொடு** - சினைவினைதன்னுடனும் முடியும், **முதலொடுஞ் செறியும்** - முதல்வினையொடும் முடியும், எ-று.

உ-ம்.:-

கையிற்று வீழ்ந்தது, கையிற்று வீழ்ந்தான்; கையிறுபு வீழ்ந்தது, கையிறுபு வீழ்ந்தான்; கையிறா வீழ்ந்தது, கையிறா வீழ்ந்தான்; கையிறூஉ வீ.....ழ்ந்தது, கையிறூஉ வீழ்ந்தான்; முலை சுரந்தது, கொடுத்தது, முலை சுரந்து கொடுத்தாள் என வரும்.

## விசாகப் பெருமாளையர்

இது, முன்வினை முதல்கொண்டு முடியுமென்றவற்றிற்கு ஓர் புறனடை யுணர்த்துகின்றது.

இ-ள்.:- **சினைவினை** - முதலி னான்கு மீற்றின் மூன்றுமென்ற வினையெச்சங்கள் சினைவினையாயின் அவை, **சினையொடும்** - முன்வினை முதல்கொள்ளுமென்ற விதியினாலே சினையுடனே யன்றி, **முதலொடும்** - முதலுடனும், **செறியும்** - முடியும், எ-று.

வ-று.:-

காலொடிந்து விழுந்தான், கண்வருவான், கதிரவனைத் தொழுதான் எனவரும். பிறவுமன்ன. ஒடிதல்-சினைவினை, விழுதல்-முதல்வினை.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

சினைவினைக்கு முடிபுகூறுஞ் சூத்திரம் யாது?

சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும்.

(சினைவினை சினையொடும் முதலொடும் செறியும்.)

**இ–ள்.:–** முதலினான்கும் ஈற்றின் மூன்றும் என்ற வினையெச்சங்கள் சினைவினையாயின் அவை முன் வினைமுதல் வினைகொள்ளும் என்ற விதியினாலே சினைவினையுடனேயன்றி ஒற்றுமைபற்றி முதல்வினையுடனும் முடியும், எ–று.

வ–று.:–

கால் ஒடிந்து வீழ்ந்தது. இதிற் சினையின் வினையாகிய ஒடிந்து என்னும் எச்சம் சினையின் வினையாகிய வீழ்ந்தது என்பதோடு முடிந்தது.

அவன் கால் ஒடிந்து வீழ்ந்தான். இதிற் சினை வினையாகிய ஒடிந்து என்னும் எச்சம் முதல்வினையாகிய வீழ்ந்தான் என்பதோடு முடிந்தது.

இச்சூத்திரக் கருத்து யாதெனின், முதலினான்கு மீற்றின் மூன்றும் வினைமுதல் கொள்ளுமென்ற விதிபற்றிச் சினைவினையோடு முடிதற்பாலவாகிய சினையின்வினை, அச்சினை தன்முதலோடு ஒற்றுமையுடைமையான் முதல்வினையோடு முடியினும் வினைமுதல்வினை கொண்டனவே யாம்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மேல் வினைமுதல் கொள்ளுமென்றவற்றிற்கு ஓர் புறனடையுணர்த்திற்று.

**இ–ள்.:–** முதலில் நான்கும் ஈற்றில் மூன்று மென மேற்கூறிய எச்சங்கள், வினைமுதல் கொள்ளுமென்றதினாலே) சினைவினையாயிற் சினையொடு முடிதலே யன்றி முதலுடனேயும் முடியுமென்றவாறு.

வ–று.:–

'காலிற்றுவீழ்ந்தது', 'கண்சிவந்துநொந்தது' எனச் சினைவினை சினையொடு முடிந்தன. காலிற்றுவீழ்ந்தான், கண்ணொந்து கிடந்தான் எனச் சினைவினை முதலொடுமுடிந்தன. காலிறுபுவீழ்ந்தான், காலிறாவீழ்ந்தான், காலிறூஉவீழ்ந்தான் எனப் பிற வாய்பாடுகளோடும் ஒட்டிக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :- சினைவினை** – (முதலின் நான்கும் ஈற்றில் மூன்றும் என்ற வினையெச்சங்கள்) சினைவினையாயின் (அவை), **சினையொடும்** – (முன்வினை முதல்கொள்ளும் என்ற விதியினால்), சினைவினையுடன் முடிதல் மாத்திரமேயல்லாமல், **முதலோடும்** – முதல் வினையுடனும், **செறியும்**– (ஒற்றுமை நயம்பற்றி) முடியும்.

குறிப்பு :-

(சினை– அவபவம்; முதல் – அவயவி.)

**உ–ம் :-**

கால் ஒடிந்து விழுந்தது – சினைவினை தனது வினையோடு முடிந்தது. சாத்தன் கால் ஒடிந்துவிழுந்தான் சினைவினை தனது முதலின் வினையோடு முடிந்தது.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:- சினைவினை** – முதலினான்கும் ஈற்றின் மூன்றும் என்ற வினையெச்சங்கள் சினைவினை யாயின் அவை, **சினையொடும்** – முன் வினைமுதல்கொள்ளும் என்ற விதியினாலே சினையுடனே யன்றி, **முதலொடுஞ்செறியும்** – ஒற்றுமைபற்றி முதலுடனும் முடியும். **எ–று.**

வ–று.:-

'காலொடிந்து விழுந்தான்', 'கண் வருவான் கதிரவனைத் தொழுதான்' என வரும். பிறவுமன்ன. ஒடிதல் சினைவினை; விழுதல் முதல்வினை.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:- சினைவினை** – முதலினான்கும் ஈற்றின் மூன்றும் என்ற வினையெச்சங்கள் சினைவினையாயின் அவை, – **சினையொடும்** – முன்வினைமுதல் கொள்ளும் என்ற விதியினாலே சினைவினையுடனேயன்றி, – **முதலொடும் செறியும்** – ஒற்றுமைபற்றி முதல்வினையுடனும் முடியும். **எ–று.**

காலிற்று வீழ்ந்து, கண்சிவந்து நொந்தது எனச் சினைவினையோடு முடிந்தன.

வ–று.:-

காலொடிந்து விழுந்தான்; கண்வருவான்; கதிரவனைத் தொழுதான் என முதல்வினையோடு முடிந்தன.

பிறவுமன்ன ஒடிந்து சினைவினை; விழுந்தான் முதல்வினை. வருவான் சினைவினை; தொழுதான் முதல்வினை.

காலிறுவு வீழ்ந்தான், காலிறாவீழ்ந்தான், காலிறூஉவீழ்ந்தான், எனப் பிறவாய்பாடுகளோடும் ஒட்டிக் கொள்க. சினையொடு முதற்கு ஒற்றுமையுண்மையின், சினைவினை முதல்வினையைக் கொண்டு முடியினும் பிறவினையைக் கொள்ளாது தன் கருத்தாவின் வினை கொண்டதொக்குமென்றபடி.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:–** **சினை வினை** – ('முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்' என்ற வினையெச்சங்கள்) உறுப்பின் வினையாயின் (அவை), **சினையொடும்** – (முன் 'வினைமுதல்கொள்ளும்' என்ற விதியினால்) உறுப்பின்வினையுடன் முடிதல் மாத்திரமே யல்லாமல், **முதலொடும்** – உறுப்பியின் வினையுடனும், **செறியும்**– (ஒற்றுமைநயம்பற்றி) முடியும்; **எ–று.**

**சினை** – அவயவம், உறுப்பு. முதல் – அவயவி, உறுப்பி.

உ–ம்.:–

கால் ஒடிந்து விழுந்தது

கண் சிவந்து நொந்ததுஅச்சினையின் வினையோடு

சினைவினை முடிந்தது

சாத்தன் கால்ஒடிந்து விழுந்தான்

அச்சினைக்கு உரியமுதலின் வினையோடு

பொன்னன் கண்நொந்து கிடந்தான் சினைவினை முடிந்தது.

---

பாட வேறுபாடு.:–

1.புகுந்தது

2.நாயிறுபட, கோழிகூவ, யானையொடித் துண்ண, கேழறாக்க, எனச் செயவெனெச்சந் திரிந்து செய்தெனெச்சமாய் வந்தனவேனுஞ் செயவெனெச்சப்பொருளோயாகித் தன்றொழிலும் பிறிதின் வினையுமேற்றவாறு காண்க. பிறவுமன்ன.

## பவானந்தம் பிள்ளை

**இ-ள்.:- சினைவினை** - (முதலினான்கும் ஈற்றின் மன்றும் என்ற வினையெச்சங்கள்) சினைவினையாயின் அவை, **சினையொடும்** - முன்வினைமுதல்கொள்ளும் என்றவிதியினாலே சினையுடனேயன்றி, **முதலொடும் செறியும்** - ஒற்றுமைபற்றி முதலுடனும் முடியும். எ-று.

**(உ-ம்.)**

கால் ஒடிந்து விழுந்தது - சினைவினை சினையொடு முடிந்தது. ஒடிதலும் விழுதலும் சினைவினையாதல் காண்க. காலொடிந்து விழுந்தான் சினைவினை முதலொடு முடிந்தது. ஒடிதல் சினைவினை; விழுதல் முதல்வினை. பிறவுமன்ன.

'கண்விழித்துப் பார்த்தான்' என்பது முதலைக் காட்டும் விகுதியான் முடிந்திருப்பினும், பார்த்தல் வினையும் சினையின் வினையாதலின் இந்தச் சூத்திரத்தில் அமையாது, 'உயர்திணை தொடர்ந்த' என்னும் 418-ஆம் சூத்திரத்தில் மையும். இங்ஙனம் வரும் பிறவற்றையும் இவ்வாறே அச் சூத்திரத்தா லமைக்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ-ள்.) சினைவினை** - (முதலின் நான்கும் ஈற்றில் மூன்றும் என்ற வினையெச்சங்கள்) சினைவினையாயின் (அவை), **சினையொடும்**-(முன் வினைமுதல் கொள்ளும் என்ற விதியினாலே) சினையுட னேயன்றி, முதலொடும் **செறியும்** - முதலுடனும் முடியும். **(எ-று)**

**(பொ-ரை.)** (முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும் என்றவினை யெச்சங்கள்) சினைவினையாயின், (அவை) தன்கர்த்தாவின் வினையைக் கொள்ளும் என்ற விதியினாலே சினையொடு முடிதலேயன்றி, முதலுடனு முடியும்; அங்ஙனமுடியுமாயினும் சினையொடு முடிவதற்கு ஒற்றுமை யுண்மையின் வினைமுதல் கொண்டதேயாம்.

(சினை - அவயவம், உறுப்பு. முதல் - அவயவி, உறுப்பி.)

**(உ-ம்.)**

கால் ஒடிந்து விழுந்தது.

கண்சிவந்து நொந்தது.

ஒடிதலாகிய சினைவினை விழுதலாகிய அச்சினையின் வினையோடு முடிந்தது. கண்சிவந்து நொந்ததும் அது.

காலொடிந்து விழுந்தான்.

கண்ணொந்து கிடந்தான்.

ஒடிதலாகிய சினைவினை அச் சினைக்குரிய விழுதலென்னும் முதல் வினையோடு முடிந்தது. கண் கண்ணொந்து கிடந்தானென்பதும் அது.

## கா. நமச்சிவாய முதலியார்

**சினைவினை** – (முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும் என்ற வினையெச்சங்கள்) சினைவினையாயின், (அவை) **சினையொடும்** – (முன் வினைமுதல் கொள்ளும் என்ற விதியினாலே) சினையுடனே யன்றி, **முதலொடும்** –முதலுடனும், **செறியும்** – முடியும்.

**உதாரணம்**

| | |
|---|---|
| காலொடிந்து விழுந்தான். | ஒடிதல், வருதல் – சினைவினை |
| கண்வருவான் கதிரவனைத் தொழுதான் | விழுதல், தொழுதல் – முதல்வினை |

## மோசசு பொன்னையா

'முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்'1 என்ற வினையெச்சங்கள் சினைவினையாகவரின், அவை வினை முதலாகிய சினையோடு முடிதலேயன்றி, முதலுடனும் முடியும். அவ்வாறு முடியினும் அது வினைமுதல் முடிபென்றேயாம் எ–று.

எ–டு:–

காலொடிந்து விழுந்தது–சினைவினை சினையொடு முடிந்தது

காலொடிந்து விழுந்தான்–சினைவினை முதலோடு முடிந்தது

சினைவினை முதலொடு முடியுங்கால் முதல் உயர்திணையாயின் உயர்திணைக்குரிய விகுதிபெற்றே முடியும் என்பதையும், அது,

உயர்திணை தொடர்ந்த பொருள்முத லாறும்
அதனொடு சார்த்தி னத்திணை முடிபின,

என்ற நூற்பாவால் அமைக்கப்படும் என்பதையும் கொள்க.

## 345 சொற்றிரி யினும்பொரு டிரியா வினைக்குறை.

சொல் திரியினும் பொருள் திரியா வினைக்குறை.

sol ṭiriyinum poruḻ ṭiriyā viṉaikkuṟai.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

Although the forms of verbal participles may vary their meanings remain the same.

### மயிலை நாதர்

இதுவுமது.

இ–ள்.: தத்தம் உருபு ஒன்று ஒன்றாய்த் திரிந்து வருவன உளவேனும் தம்பொருளிற்றிரியாவாம், வினையெச்சங்கள், எ–று.

உம்மையால், திரிபு சிறுபான்மைய வெனக் கொள்க.

வ–று.:–

நாயிறுபட்டு வந்தான், கோழிகூவிப்பொழுது [1]புலர்ந்தது, "உரற்கா லியானை யொடித்துண் டெஞ்சிய, யாஅ வரிநிழற் றுஞ்சும்" (குறுந். 232), "செந்நா யேற்றை கேழ றாக்கி, இரியற் பிணவ றீண்டலிற் பரீஇச், செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின்" (அக நா. 21) என்பன [2]செயவெனெச்சந் திரிந்து செய்தெனெச்சமாய் வந்தன வேனும் செயவெனெச்சப் பொருளே ஆயினவாறு காண்க. பிறவுமன்ன.

### சங்கர நமச்சிவாயர்

எ–னின், இதுவும் அது.

இ–ள்.: 'முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும் வினைமுதல் கொள்ளும்' என்ற வினையெச்ச வாய்பாடுகளாகப் பிற வினையெச்ச வாய்பாடுகள் திரியினும், அவற்றின் பொருள் திரியா, எ–று.

வ–று.:–

ஞாயிறு பட்டுவந்தான், கோழி கூவிப் பொழுது புலர்ந்தது.

" உரற்கால் யானை ஒடித்துண் டெஞ்சிய யாஅ
வரிநிழல் துஞ்சும்"

"செந்நா யேற்றை கேழல் தாக்க
இரியற் பிணவல் தீண்டலின் பரீஇச்
செங்காய் உதிர்ந்த பைங்குலை யீந்தின்"
'யான் கொள்வான் பொன்கொடுத்தார்' எனவும் வரும்.
பிறவும் அன்ன.

இவை, செயவெனெச்சம் செய்து செய்வான் எனத் திரிந்து நின்றும் அச்செயவெனெச்ச முடிபு ஏற்று நின்றன. எனவே, ஞாயிறு பட்டுவந்தான் என்பதற்கு ஞாயிறு பட வந்தான் எனப் பொருளுரைக்க வேண்டும் என்பதாயிற்று. பிறவும் அன்ன.

வினைக்குறை எனப் பொதுப்படக் கூறினமையான், வினையெச்சங்களுள் ஒன்று ஒன்றாய்த் திரிந்து வருவன பிறவும் உளவேல் அவையும் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், வினையெச்ச மயக்கம் கூறுகின்றது.

**இ–ள்.:– சொற்றிரியினும்** – தத்த வினையெச்ச உருபுகள் ஓர் உருபு மற்றோர் உருபாய்த் திரிந்து வருவன உளவேனும், **பொருள் திரியா** – தத்தம் பொருளிற் றிரியாமல் தத்தம் பொருள் பெறவே நிற்கும், **வினைக்குறை** – வினையெச்சப் பகுதி, எ–று.

உ–ம்.:–

'ஞாயிறு பட்டு வந்தான்', 'கோழி கூவிப் பொழுது புலர்ந்தது', "உரற்கால் யானை ஒடித்துண் டெஞ்சிய, யாஅ வரி நிழற் றுஞ்சும்", "செந்நா யேற்றை கேழறாக்கி. . . செங்கா யுதிர்ந்த பைங்குலை யீந்தின்" என செயவெனெச்ச உருபு திரிந்தது.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.:–சொல்**–முதலினான்கு மீற்றின் மூன்றுமென்ற வினையெச்சவாய்பாடுகளாக, **வினைக்குறை**–பிறவினையெச்ச வாய்பாடுகள், **திரியினும்**–வேறுபடினும், **பொருள்**–அவற்றின் பொருள்கள், **திரியா**–வேறுபடாவாம், எ–று.

வ–று.:–

'கோழிகூவிப் பொழுது புலர்ந்தது', 'யான் கொள்ளுவான் பொன் கொடுத்தான்': இவற்றில், 'கூவ' என்பது 'கூவி' என்றும் 'கொள்ள' என்பது 'கொள்வான்' என்றுந் திரிந்தன.

மற்றவைகளு மிப்படியே.

இது வினைக்குறிப்பிற்கு ஆவதோர் விதியுணர்த்துகின்றது.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஒருவினையெச்சம் மற்றொருவினையெச்ச வாய்பாடாகத் திரியிற் பொருள் வேறுபடாதோ?

சொற்றிரி யினும்பொரு டிரியா வினைக்குறை

(சொல் திரியினும் பொருள் திரியா வினைக்குறை.)

**இ—ள்.:** முதலினான்கு மீற்றின் மூன்றும் என்ற வினையெச்ச வாய் பாடுகளாகப் பிற வினையெச்சவாய்ப்பாடுகள் வேறுபடினும் அவற்றின் பொருள்கள் வேறுபடாவாம், எ—று.

வ—று.:—

(1) ஞாயிறு பட்டு வந்தான் என்புழிப், படவென்னுஞ் செயவென் வாய்ப்பட்டு நிகழ்காலவினையெச்சம் பட்டெனத் திரிந்து நின்றது.

(2) மழை பெய்து நெல் விளைந்தது என்புழிப், பெய்யவென்னுங் காரணப் பொருட்டாகிய செயவென் வாய்பாட்டிறந்தகால வினை யெச்சம் பெய்தெனத் திரிந்து நின்றது. ஆகிடந்து செறு விளைந்தது; பூணணிந்து விளங்கிய புகழ் காண் மார்ப; உண்டு பசி கெட்டது என்புழிக், கிடக்க, அணிய, உண்ண என்பன, முறையே, கிடந்து, அணிந்து, உண்டு எனத் திரிந்துநின்றன.

(3) யான் கொள்வான் பொன் கொடுத்தான் என்புழிக், கொளவென்னுஞ் செயவென் வாய்பாட்டு வினையெச்சங் கொள்வானெனத் திரிந்து நின்றது.

கோழி கூவிப் பொழுது புலர்ந்தது என்புழிக், கூவவென்பது கூவியெனத் திரிந்ததன்று; கூவுதல் புலர்தற்குக் காரணமாகாமையாலும், செயவெனெச்சங் காரணப்பொருண்மை யுணர்த்துமிடத்தல்லது இறந்தகால முணர்த்தாமையாலு மென்றுணர்க. கூவுவித்து என நிற்கற்பாலது கூவியென விவ்விகுதி தொக்குநின்றது. "குடிபொன்றிக் – குற்றமு மாங்கே தரும்;" "குடிமடிந்து குற்றம்பெருகும்;" "இருணீங்கி யின்பம் பயக்கும்." என்புழிப், பொன்றுவித்து, மடிவித்து, நீங்குவித்து எனற்பாலன, பொன்றி, மடிந்து, நீங்கி என விவ்விகுதி தொக்கு நின்றன.

சொற்றிரியினும் என்றதனால் இன்னும் கொள்ளக்கிடக்கும் வினையெச்சங்கள் உளவோ?

செய்து என்னும் வினையெச்சம் தனக்குரிய இறந்தகாலத்தை விட்டு எதிர்காலத்தைப் பற்றியும் வருமென்பதும். "நீ பொய்கூறியபின் மெய்கூறுவார் யார்," தின்னாமுன், உரைத்தவழி, உரைக்குமிடத்து, உண்டக்கால், என்புழிப் பின் முன் முதலியனவும் காலங்கருதி வரும் வினையெச்ச வீறுகளாமென்பதும் கொள்ளப்படும். நீ உண்டு வருவாய், அவன் வந்து செய்வான் என்புழிச் செய்தெனெச்சம் பொருள் சிதையாமல் எதிர்கலத்து வந்தவாறு கண்டு கொள்க.

## முகவை இராமானுச கவிராயர்

இதுவுமது,

இ–ள்.:– வினைக்குறை – மேற்கூறிய வினையெச்ச வாய்பாடுகள், சொற்றிரியினும் – பிற வாய்பாடுகளாகத் திரிந்து வரினும், பொருடிரியா – அவற்றின் பொருள் வேறுபடாவா மென்றவாறு.

வ–று.:–

ஞாயிறுபட்டுவந்தான், கோழிகூவிப்பொழுது புலர்ந்தது (புலர்ந்தது–விடிந்தது,), யானைஒடித்துண்டு குறைந்தமரம் எனவும், யான்கொள்வான்பொருள் கொடுத்தான் எனவும் வரும். பிறவுமன்ன. இவை, செய – என்னெச்சஞ் செய்து, செய்வான் எனத் திரிந்து நின்றும், அச்செய என்னெச்சப் பொருட்டாயே நின்றன. எனவே, ஞாயிறுபட்டுவந்தான் என்பதற்குப் பொருள், ஞாயிறுபடவந்தான் எனவும், யான் கொள்வான் என்பதற்கு யான் கொள்ள எனவும் உரைக்க வேண்டுமென்பதாயிற்று. இன்னுந் திரிந்து வருவன உளவாயின் அவற்றிற்கும் இவ்வாறு பொருளுரைத்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை:– வினைக்குறை – வினையெச்ச வாய்பாடுகள், சொல்திரியினும்–(வேறுவாய்பாடுகளாகச்) சொல் மாறிவந்தாலும், பொருள் – (அவற்றின்) பொருள்கள், திரியா – வேறுபடாவாம்.

குறிப்பு :–

இதனால் – தன் வினைமுதலின் வினையைக் கொண்டு

முடிதற்கு ஏற்ற "முதலில்நான்கும் ஈற்றில்மூன்றும்" என்ற வினையெச்ச வாய்பாடுகள் வேறு வினைமுதலின் வினையைக் கொண்டு முடிந்தால், அவ்விடங்களில் அவற்றை வேறு வினைமுதலின் வினையைக் கொண்டு முடிதற்கு ஏற்ற வினையெச்சங்களின் திரிபாகக் கொள்ளவேண்டும் என்றதாயிற்று.

உ–ம் :–

மழைபெய்து நெல்விளைந்தது.
யான் கொள்வான் பொன்கொடுத்தான்.

இவற்றில் 'பெய்து', 'கொள்வான்' என்பன வேறு வினைகொண்டு முடிதற்கு ஏலாமையால் அவற்றை முறையே 'பெய்ய', 'கொள்ள' என்னும் செயவெனெச்சத்தின் திரிபாகக் கொள்க. இனி, 'வினைக்குறை' எனப் பொதுப்படக் கூறியதனால் எவ்வகை வினையெச்சச் சொல்லும் பொருளுக்கு இயையாமல் மாறிவருமாயின், அதனைப் பொருளுக்கு இயைந்த வினையெச்சச் சொல் திரிந்து வந்ததாகக் கொள்க.

உ–ம்:–

"கொழுநற்றொழுது எழுவாள்"
('தொழாநின்று' எனும் நிகழ்காலவினையெச்சம் 'தொழுது' எனத்திரிந்தது)

"பொருளிலார்க் கிவ்வுலக மில்லாகி யாங்கு"
('ஆகின்' என்னும் எதிர்கால வினையெச்சம் 'ஆகி' எனத்திரிந்தது.)

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:–** சொல் வினைக்குறை திரியினும் – முதலினான்கு மீற்றின் மூன்றும் என்ற வினையெச்ச வாய்பாடுகளாகப் பிற வினையெச்ச வாய்பாடுகள் வேறுபடினும், பொருள் திரியா – அவற்றின் பொருள்கள் வேறுபடாவாம், எ–று.

வ–று.:–

'ஞாயிறு பட்டு வந்தான்' என்புழிப், படவென்னுஞ் செயவென் வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சம் பட்டெனத் திரிந்து நின்றது.

**'மழைபெய்து நெல்விளைந்தது'** என்புழிப் பெய்யவென்னுங் காரணப்பொருட்டாகிய செயவென் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம் பெய்தெனத் திரிந்து நின்றது. **'ஆ கிடந்து செறு விளைந்தது'; 'பூணணிந்து விளங்கிய புகழ் சான் மார்ப'; 'உண்டு பசி கெட்டது'** என்புழிக், கிடக்க, அணிய, உண்ண என்பன, முறையே, கிடந்து, அணிந்து, உண்டு எனத் திரிந்து நின்றன.

**'யான் கொள்வான் பொன் கொடுத்தான்'** என்புழிக் கொளவென்னுஞ் செயவென் வாய்பாட்டு வினையெச்சங் கொள்வானெனத் திரிந்து நின்றது.

**'கோழிகூவிப் பொழுதுபுலர்ந்தது'** என்புழிக், கூவவென்பது கூவியெனத் திரிந்ததன்று, கூவுதல் புலர்தற்குக் காரணமாகாமையாலும், செயவெனெச்சங் காரணப் பொருண்மை யுணர்த்து மிடத்தல்லது இறந்தகால முணர்த்தாமையாலு மென்றுணர்க. கூவுவித்து என நிற்கற்பாலது கூவியென விவ்விகுதி தொக்கு நின்றது. **"குடிபொன்றிக் – குற்றமு மாங்கே தரும்." "குடிமடிந்து குற்றம் பெருகும்" "இருணீங்கி யின்பம் பயக்கும்"** என்புழிப் பொன்றுவித்து, மடிவித்து, நீங்குவித்து எனற்பாலன, பொன்றி, மடிந்து, நீங்கி என விவ்விகுதி தொக்கு நின்றன.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள், வினைக்குறை சொல் திரியினும்** – முதலினான்கு மீற்றின் மூன்றும் என்ற வினையெச்ச வாய்பாடுகளாகப் பிறவினை யெச்சவாய்பாடுகள் வேறுபடினும், **பொருள் திரியா** – அவற்றின் பொருள்கள் வேறுபடாவாம்.

வ–று:–

**(1)**ஞாயிறு பட்டு வந்தான் என்புழிப் படவென்னுஞ் செய வென் வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சம் பட்டெனத் திரிந்து நின்றது.

**(2)**மழை பெய்து நெல் விளைந்தது என்புழிப் பெய்ய வெண்ணுங் காரணப் பொருட்டாகிய செயவென்வாய்பாட் டிறந்த கால வினையெச்சம் திரிந்து நின்றது. ஆ கிடந்து செறுவிளைந்தது; பூணணிந்து விளங்கிய புகழ் சான் மார்ப; உண்டு பசி கெட்டது என்புழிக் கிடக்க, அணிய, உண்ண என்பன முறையே, கிடந்து

அணிந்து, உண்டு எனத் திரிந்து நின்றன.

(3)யான் கொள்வான் பொன் கொடுத்தான் என்புழிக்,
கொளவென்னுஞ் செயவென்வாய்பாட்டு வினையெச்சங்
கொள்வானெனத் திரிந்து நின்றது.

"குடிபொன்றிக் – குற்றமு மாங்கே தரும்"

"குடிமடிந்து குற்றம் பெருகும்"

"இருணீங்கி யின்பம் பயக்கும்".
என்புழிப், பொன்றுவித்து, மடிவித்து,

நீங்குவித்து எனற்பாலன, பொன்றி, மடிந்து, நீங்கி என
விவ்விகுதி தொக்குநின்றன.

வினையெஞ்சுகிளவியும் வேறுபல்குறிய" என்றார்
ஆசிரியர் தொல்காப்பியனார்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:– வினைக்குறை** – வினையெச்ச வாய்பாடுகள், **சொல் திரியினும்** – (வேறு வாய்பாடுகளாகச்) சொல் மாறிவந்தாலும், **பொருள்** – (அவற்றின்) பொருள்கள், **திரியா** – வேறுபடாவாம்; **எ–று.**

என்றது – தன்கருத்தாவின் வினையைக் கொண்டு முடிதற்கு ஏற்ற 'முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்' என்ற வினையெச்ச வாய்பாடுகள் வேறுகருத்தாவின் வினையைக் கொண்டு முடிந்தால், அவ்விடங்களில் அவற்றை, வேறு கருத்தாவின் வினையையும் கொண்டு முடிதற்கு ஏற்ற வினையெச்சங்களின் திரிபாகக் கொள்க என்றதாயிற்று. (இது, உருபு மயக்கம் போல்வது.)

'மழைபெய்து நெல்விளைந்தது', 'யான்கொள்வான் பொன்கொடுத்தான்' இவற்றில், பெய்து கொள்வான் என்பவை, வேறுவினை கொண்டு முடிதற்கு ஏலாமையால், அவற்றை முறையே பெய்ய, கொள்ள என்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபாகக் கொள்க.

---

பாடவேறுபாடு:–

1. "பற்றாரை யட்ட களத்து" என்பன ..... தொக்கு நின்றன. இவை யிலாக்கவினைக்குறிப்புக் கண்டு கொள்க.

இனி, 'வினைக்குறை' எனப் பொதுப்படக் கூறியதனால் எவ்வகை வினையெச்சச் சொல்லும் பொருளுக்கு இயையாமல் மாறி வருமாயின், அதனைப் பொருளுக்கு இயைந்த வினையெச்சச்சொல் திரிந்து வந்ததாகக் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– வினைக்குறை** – (மேற்கூறிய) வினையெச்சவாய்பாடுகள், **சொல் திரியினும்** – (பிறவாய்பாடுகளாகச்) சொல்லளவில் வேறுபடினும், **பொருள் திரியா** – அவற்றின் பொருள்கள் வேறுபடாவாம். எ–று.

எனவே, தன் வினைமுதலின் வினையைக்கொண்டு முடிதற்கு ஏற்ற முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும் என்ற வாய்பாட்டு வினையெச்சங்கள் வேறு வினைமுதலின் வினையைக்கொண்டு முடிந்தால், அவ்விடங்களில் அவற்றை வேறு வினைமுதலின் வினையைக்கொண்டு முடிதற்கு ஏற்ற வினையெச்சங்களின் திரிபாகக் கொள்ளவேண்டும் என்பதாயிற்று.

(உ–ம்.)

(1) ஞாயிறு பட்டு வந்தான், கோழிகூவிப் பொழுது புலர்ந்தது – என்புழிப், பட கூவவென்னுஞ் செயவென்வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சங்கள் பட்டு, கூவி எனத் திரிந்தும் அச் செயவென் எச்சப்பொருட்டாயே நின்றன.

(2) மழை பெய்து நெல் விளைந்தது – என்புழிப், பெய்யவென்னுங் காரணப்பொருட்டாகிய செயவென் வாய்பாட் டிறந்தகாலவினையெச்சம் பெய்தெனத் திரிந்தும் அக் காலணப் பொருட்டாயே நின்றது. ஆ கிடந்து செறு விளைந்தது; பூணணிந்து விளங்கிய புகழ்சான் மார்ப; உண்டு பசி கெட்டது – என்புழிக், கிடக்க அணிய உண்ண என்பன, முறையே, கிடந்த அணிந்து உண்டு எனத் திரிந்தும் பொருள் திரியாமல் நின்றன.

(3) யான் கொள்வான் பொன் கொடுத்தான் – என்புழிக், கொளவென்னுஞ் செயவென்வாய்பாட்டு வினையெச்சங் கொள்வானெனத் திரிந்தும் பொருள் திரியாமல் நின்றது.

## கா. நமச்சிவாய முதலியார்

**வினைக்குறை** – பிற வினையெச்ச வாய்பாடுகள், **சொல்** – (முதலினான்கு மீற்றில் மூன்றும் என்ற) வினையெச்ச வாய்பாடுகளாக, **திரியினும்** – வேறுபடினும், **பொருள்** – (அவற்றின்) பொருள்கள், **திரியா** – வேறுபடாவாம்.

**உதாரணம்**

கோழி கூவிப் பொழுது புலர்ந்தது.
யான் கொள்வான் பொன் கொடுத்தான்.

இவற்றில் **கூவு** என்னும் காரண காரியங்களைக் குறிக்காத நிகழ்காலச் செயவெனெச்சம் கூவி என்றும், **கொள்ள** என்னும் காரியப் பொருட்டாகிய எதிர்காலச் செயவெனெச்சம் கொள்வான் என்றும் திரிந்தன.

'முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்' என்ற வினையெச்ச வாய்பாடுகள் வினைமுதலின் வினையைக் கொண்டு முடியாமல், வேறு வினைமுதலின் வினையைக் கொண்டு முடிந்தால், அவ்விடங்களில் அவற்றை வேறு வினைமுதலின் வினையைக் கொண்டு முடிதற்கு ஏற்ற வினையெச்சங்களின் திரிபாகக் கொள்க.

மழை பெய்து நெல் விளைந்தது – இதில் **பெய்து** என்பது வேறு வினைமுதல் வினைகொண்டு முடிதற்கு ஏலாமையால், அதை, **பெய்ய** என்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபாகக் கொள்க.

இனி, '**வினைக்குறை**' எனப் பொதுப்படக் கூறியதனால் – எவ்வகை வினையெச்சச் சொல்லும் பொருளுக்கு இயையாமல் மாறி வருமாயின், அதனைப் பொருளுக்கு இயைந்த வினையெச்சச்சொல் திரிந்து வந்ததாகக் கொள்க.

'கொழுநற் றொழுது எழுவாள்'

தொழாநின்று என்னும் நிகழ்கால வினையெச்சம், தொழுது எனத் திரிந்து நின்றது எனக் கொள்க.

## மோசசு பொன்னையா

ஒரு வினையெச்ச வாய்ப்பாட்டுச் சொற்கள் முன்னர் வினை முதல் கொள்வன இவை, பிறவுமேற்பன3 இவை என விதிக்கப்பட்ட

முறையினின்று திரிந்துமுடியினும், அன்றிப் பிறவாறு திரிந்து முடியினும், பொருள்கோள் முறைமையில் அது திரியாது வழங்கும் எ–று.

**எ-டு:-**

1. மழை பெய்து நெல் விளைந்தது யான் கொள்வான் கொடுத்தான் – பெய்து, கொள்வான் என்பன வினைமுதலையன்றிப் பிறகொண்டு முடிவன அல்ல ஆதலின், பெய்ய, கொள்ள என்னும் செயவென்னெச்சமாகத் திரிக்கப்பட்டுப் பொருள் திரியா வகையில் கொள்ளப்படும்.
2. கொழுநற் றெழு தெழுவாள் என்ற விடத்து எழு முன்

தொழுதல் கூடாமையின் தொழாநின்று எனத் திரிக்கப்பட்டுப் பொருள் திரியா வகையில் கொள்ளப்படும்.

(27)

## 346. ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா.

ஆக்க வினைக்குறிப்பு ஆக்கம் இன்று இயலா.

ākka vinaikkurippu ākkam inru iyalā.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**MISCELLANEOUS RULES**

**indefinite verb**

Indefinite verbs implying 'becoming' must be invariably followed by a verb of becoming.

### ஒப்புமைப் பகுதி

வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே

(தொல். சொல்.: 432)

வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே
யாவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே

(இ.வி.: 249)

### மயிலை நாதர்

இதுவுமது.

இ–ள்.:– ஆக்கப் பொருண்மைக்கண் வரும் வினையெச்சக் குறிப்பு ஆக்கச் சொல்லினை யொழிய வாரா, எ–று.

வ–று.:–

'அறங்கேட்டு அருளுடையனாயினான்',

'மருந்துண்டு நல்லனாயினா'னென வரும்.

ஆயினானென்பது ஆக்கம்.

"வேங்கையுங் காந்தளு நாறி, ஆம்பன் மலரினுந் தான்றண் ணியளே" (குறுந். 84)

"குருதி படிந்துண்டகாக முருவிழந்து, குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்மால்",

[1]"டம்பியா ரட் களத்து" (கள.:5) என்பன செய்யுளாகலான் தொகுக்கப்பட்டன வெனக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், வினைக்குறிப்பிற்கு ஆவதோர் விதி உணர்–ற்று.

இ–ள்.:– ஆக்கத்தான் வரும் வினைக்குறிப்புச் சொற்கள் ஆக்கச் சொல்லின்றி வாரா, எ–று.

வேற்றுமைப் புணர்ச்சிக்கு வேற்றுமை யுருபுகள் விரிந்தும் தொக்கும் அதனுடைமையாய் நின்றாற்போல, ஆக்கவினைக் குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்தும் தொக்கும் அதனுடைமையாய் நிற்றலின் ஆக்கமின்றி இயலா என்றார்.

வ–று.:–

சாத்தன் நல்லனாயினான், சாத்தன் நல்லன்;
கல்வியால் பெரியனாயினான், கல்வியால் பெரியன்;
கற்று வல்லராயினார், கற்று வல்லர்;

[3]"குருதி படிந்துண்ட காகம் உருவிழந்து குக்கிற்
புறத்த சிரல்வாய செங்கண்ண"

என ஆக்கச்சொல் விரிந்தும் தொக்கும் வந்தன.

எனவே 'நல்லன்' என்பது இயற்கை வினைக்குறிப்பாயின் விரிதல் தொகல் என்னும் இரண்டனுள் ஒருவாற்றானும் ஆக்கம் வேண்டாது 'சாத்தன் நல்லன்' என்றே வரும் என்பதாயிற்று. இங்ஙனமாகவே, வினைக்குறிப்பு ஆக்க வினைக் குறிப்பு என்றும், இயற்கை வினைக்குறிப்பு என்றும், இருவகைப்படும் எனவும், அவை இவ்வாறு நடக்கும் எனவும் கூறினாராயிற்று. வினையாயினும் ஆக்கத்தை நோக்கி இயற்கை எனப்பட்டது.

இச் சூத்திரத்திற்கு வினையெச்சங் கொண்டு முடியும் ஆக்க வினைக்குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்தே வரும் என்றும், தொக்கு வருவன செய்யுள் விகாரம் என்றும் பொருள் கூறுவாரும் உளர். வினையெச்சங்கொண்டு முடியும் ஆக்க வினைக் குறிப்பு என விதவாமையானும் ஆக்க வினைக்குறிப்பு என்ற துணையானே வினையெச்சங்கொண்டு முடியும் வினைக்குறிப்பு என்பது தாமே போதரும் எனின் கல்வியாற் பெரியன் எனப் பிறவழியும் ஆக்கவினைக்குறிப்பு வருதலானும், அஃது யாண்டு வரினும் ஆக்கச்சொல் விரிந்தேனும் தொக்கேனும் வேண்டியே நிற்றலானும், இவர் கற்று வல்லர் என வழக்கின்கண்ணும் ஆக்கச்சொல் தொக்கு வருதலானும்,

'காரண முதலா ஆக்கம் பெற்றும்'

என்னும் சூத்திரம் மாறுகொளக் கூறலாய் முடியுமாதலானும் அது பொருந்தாது என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், ஆக்கவினைக் குறிப்புக் கொண்டு முடியும் வினையெச்சத் திற்கோர் இயல்பு கூறுகின்றது.

இ–ள்.:– ஆக்க வினைக் குறிப்பு – வினையெச்சம் கொண்டு முடியும் ஆக்கவினைக்குறிப்பு, ஆக்கமின்றியலா – தன்மேல் ஒரு ஆக்க வினைச் சொல்லன்றி வாரா என்க.

உ–ம்.:–

'மருந்துண்டு திண்ணியனாயினான்', 'கல்வியோதி நல்லனாயினான்', 'அறங்கேட்டு அருளுடைய னாயினான்' எனவும் வரும். ஆயினான் என்பது ஆக்கம். "வேங்கையுங் காந்தளுநாறி, ஆம்பல் மலரினுந் தான்றண் ணியளே", "குருதி படிந்துண்ட காகம் உருவிழந்து, குக்கிற் புறத்த" இவையெல்லாம் செய்யுளாதலால் ஆக்கவினைக் குறிப்பு தொகுக்கப்பட்டன.

## விசாகப் பெருமாளையர்

இ–ள்.:– ஆக்கம் – ஆக்கத்தால் வருகின்ற, வினைக்குறிப்பு– வினைக்குறிப்புச்சொல்லுகள், ஆக்கம் – ஆக்கச்சொல்லுகள், இன்று– இல்லாமல், இயலா–வாராவாம், எ–று.

வ—று.:—

சாத்தனல்லனாயினான் — என வரும். சிலவிடங்களிலே வேற்றுமையுருபு போல அவ்வாக்கச் சொல் தொக்கும் வரும். ஆகவே, இயற்கை வினைக்குறிப்பாயின், சாத்தனல்லன் என ஆக்கம் வேண்டாது, வருமென்பதாயிற்று.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வினைக்குறிப்பு எத்தனை வகைப்படும்?

ஆக்க வினைக்குறிப்பு இயற்கை வினைக்குறிப்பென இரு வகைப்படும்.

ஆக்கவினைக்குறிப்பின் இயல்பு யாது?

ஆக்க வினைக்குறிப் பாக்கமின் றியலா.

(ஆக்க வினைக்குறிப்பு ஆக்கம் இன்று இயலா.)

**இ—ள்.:—** ஆக்கத்தால் வரும் வினைக்குறிப்புச் சொற்கள் விரிந்தாயினுந் தொக்காயினும் வரும் ஆக்கச் சொல்லின்றி வராவாம், **எ—று.**

வ—று.:—

சாத்தனல்லனாயினான், சாத்தனல்லன்; கல்வியாற் பெரியனாயினான், கல்வியாற்பெரியான்; கற்று வல்ல னாயினான், கற்று வல்லன் என ஆக்கச்சொல் விரிந்துந் தொக்கும் வந்தன. எனவே, நல்லனென்பது இயற்கைவினைக் குறிப்பாயின், விரிதல் தொகுதலென்னும் இரண்டனுள் ஒருவாற்றானும் ஆக்கம் வேண்டாது, சாத்தனல்லன் என்றே வருமென்பதாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

இது, வினைக்குறிப்பிற்கு ஆவதோர் புறனடையுணர்த்திற்று

**இ—ள்.:— ஆக்க வினைக்குறிப்பு** — ஆதல் என்னும் ஆக்கத்தைக் கொண்ட வினைக்குறிப்புச் சொற்கள், **ஆக்கமின்று** — அந்த ஆக்கச்சொல் இல்லாமல், **இயலா** — நடவாவாமென்றவாறு.

வேற்றுமைப் புணர்ச்சிக்கு வேற்றுமை யுருபுகள் விரிந்தாயினுந் தொக்காயினுமதற்கு உரிமையாய் நிற்றல்போல, ஆக்கவினைக் குறிப்பிற்கு ஆக்கச்சொல் விரிந்தேனுந் தொக்கேனும் அதற்கு உரித்தாய் நிற்றலால், 'ஆக்கமின்றியலா' என்றார்.

வ–று.:–

சாத்தன் நல்லனாயினான், சாத்தன்நல்லன், கல்வியிற் பெரியனாயினான், கல்வியிற்பெரியன் எனவும், 'குருதி படிந்துண்ட காகம் உருவிழந்து குக்கிற் புறத்த சிரல்வாய' (குக்கில் – செம்போத்து, சிரல் – சிச்சிலிக் குருவி,) புறத்தவாயின, வாயவாயின என, ஆக்கச்சொற் கூட்டிப் பொருளுணர்க. இவற்றுள், ஆக்கச் சொல் விரிந்துந் தொக்கும் வந்தன. எனவே, நல்லன் என்பது இயற்கை வினைக் குறிப்பாயின் ஆக்கச்சொல், தொகுதல் விரிதல் என்னும் இரண்டும் வேண்டாமல், சாத்தன் நல்லன் என்றே வருமென்பதாயிற்று.

ஆகவே, வினைக்குறிப்பு ஆக்கவினைக் குறிப்பும் இயற்கை வினைக்குறிப்பும் என இருவகைப்படும். இனி வினையெச்சங் கொண்டு முடியும் ஆக்கவினைக்குறிப்பிற்கு இந்த விதியென்று சொல்வாரு முண்டு. அது பொருந்தா தென்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– ஆக்கம்– (ஆதல் என்னும்) ஆக்கத்தைக்கொண்ட, வினைக் குறிப்பு – குறிப்புவினைச்சொற்கள், ஆக்கம் இன்று – (அந்த) ஆக்கச் சொல் இல்லாமல், இயலா –வாராவாம்.

குறிப்பு :–

வேற்றுமைப் புணர்ச்சிக்கு வேற்றுமை உருபுகள் விரிந்தாயினும், மறைந்தாயினும் அதற்கு உரியவாய் நிற்றல்போல, ஆக்க வினைக்குறிப்புக்கு ஆக்கச்சொல் விரிந்தாயினும் மறைந்தாயினும் அதற்கு உரியதாய் நிற்றலின் 'ஆக்கமின்றியலா' என்றார்.

உ–ம்:–

கல்வியாற் பெரியனாயினான் – ஆக்கச்சொல் விரிந்துநின்றது.

கல்வியாற் பெரியன் –ஆக்கச்சொல் மறைந்துநின்றது.

எனவே, இயற்கைவினைக்குறிப்பாயின் 'இராமன் நல்லன்' என ஆக்கச்சொல் மறைதலும் விரிதலும் இல்லாமலே வருமென்க. இதனால் குறிப்புவினை – ஆக்கவினைக் குறிப்பு, இயற்கை வினைக் குறிப்பு என

இரண்டு வகைப்படும் என்றும், அவை இவ்வாறு நடக்கு மென்றும் கூறினாராயிற்று.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– ஆக்க வினைக்குறிப்பு** – ஆக்கத்தால் வரும் வினைக்குறிப்புச் சொற்கள். **ஆக்கம் இன்று இயலா** – விரிந்தாயினுந் தொக்காயினும் வரும் ஆக்கச்சொல்லின்றி வாராவாம். **எ–று.**

வ–று.:–

**'சாத்தனல்லனாயினான், சாத்தனல்லன்', 'கல்வியாற் பெரியனாயினான், கல்வியாற் பெரியன்'; 'கற்று வல்லனாயினான், கற்று வல்லன்'** என ஆக்கச்சொல் விரிந்துந் தொக்கும் வந்தன. எனவே, நல்லனென்பது இயற்கைவினைக் குறிப்பாயின், விரிதல் தொகுதலென்னும் இரண்டனுள் ஒருவாற்றானும் ஆக்கம் வேண்டாது, சாத்தனல்லன் என்றே வருமென்பதாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:–ஆக்க வினைக்குறிப்பு** – ஆக்கத்தால் வரும் வினைக்குறிப்புச் சொற்கள் – **ஆக்கம் இன்று இயலா** – விரிந்தாயினும் தொக்காயினும் வரும் ஆக்கச் சொல்லின்றி வாராவாம். **எ–று.**

வ–று.:–

சாத்தனல்லனாயினான்; கல்வியாற்பெரியனாயினான். கல்வியாற்பெரியன்; கற்றுவல்லனாயினான்; கற்றுவல்லன் என ஆக்கச் சொல் விரிந்துத் தொக்கும் வந்தன. எனவே, நல்லனென்பது இயற்கை வினைக் குறிப்பாயின். விரிதல் தொகுதலென்னும் இரண்டனுள் ஒரு வாற்றானும் ஆக்கம் வேண்டாது, சாத்தனல்லன் என்றே வருமென்பதாயிற்று. ஆக்கமாவது – இயற்கையாய் இல்லாமல் பின்னுண்டான தன்மை, சற்றுவல்லனாயின் என்பதில் ஒருவன் பிறந்தபோதே அக்கல்வி வன்மையின்றிப் பின்னுண்டானதறிக. ஏனையவு முய்த்துணர்க. ஆக்கமெனினுஞ் செயற்கையெனினும் ஒக்கும்.

---

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.:— ஆக்கம்** — (ஆதல் என்னும்) ஆக்கத்தைக் கொண்ட, **வினைக்குறிப்பு** — குறிப்பு வினைச்சொற்கள், **ஆக்கம் இன்று** — (அந்த) ஆக்கச்சொல் இல்லாமல், **இயலா** — வராவாம்; எ—று.

வேற்றுமைப்புணர்ச்சிக்கு வேற்றுமையுருபுகள் விரிந்தாயினும் மறைந்தாயினும் அதற்கு உரிமையாக நிற்பதுபோல, ஆக்கவினைக் குறிப்புக்கு ஆக்கச் சொல் விரிந்தாயினும் மறைந்தாயினும் அதற்கு உரியதாக நிற்கும்.

**உ—ம்.:—**

'பகைவன் நல்லனாயினான்',

'கல்வியாற் பெரியனாயினான்' — (ஆக்கச்சொல் விரிந்து நின்றது)

**'சாத்தன் நல்லன்'**

**'கல்வியாற் பெரியன்'** — (ஆக்கச்சொல் மறைந்து நின்றது.)

எனவே, இயற்கை வினைக்குறிப்பாயின், 'ஆக்கச்சொல்' மறைந்து வருதலும் விரிந்துவருதலு மில்லாமல், தந்தை நல்லன், குலத்தாற் பெரியன் என்றே வருமெனக் கொள்க.

இங்ஙனமாகவே, குறிப்புவினை — ஆக்கவினைக் குறிப்பு, இயற்கை வினைக்குறிப்பு என இரண்டு வகைப்படு மென்றும், அவை இவ்வாறு நடக்குமென்றும் கூறினாராயிற்று.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:— ஆக்க வினைக்குறிப்பு** — ஆக்கத்தால் வரும் வினைக்குறிப்புச் சொற்கள், **ஆக்கம் இன்று இயலா** — விரிந்தாயினுந் தொக்காயினும் வரும் ஆக்கச்சொல்லின்றி வாராவாம். எ—று.

**(உ—ம்.)**

சாத்தனல்லனாயினான், சாத்தனல்லவன்; கல்வியாற் பெரியனாயினான், கல்வியாற் பெரியன்; கற்று வல்லனாயினான், கற்றுவல்லன் — என ஆக்கச் சொல் விரிந்துந் தொக்கும் வந்தன.

எனவே, வினைக்குறிப்பானது, ஆக்கவினைக்குறிப்பு இயற்கை வினைக்குறிப்பு என இருவகைப்படும் என்பதும்,

---

பாடவேறுபாடு:—

**1.** உயர்திணைப்படர்க்கையாண்பால்

நல்லனென்பத இயற்கைவினைக் குறிப்பாயின் விரிதல் தொகுதலென்னும் இரண்டனுள் ஒரு வாற்றானும் ஆக்கம் வேண்டாது சாத்தனல்லன் என்றே வருமென்பதும் பெறப்பட்டன.

## கா. நமச்சிவாய முதலியார்

**ஆக்க வினைக்குறிப்பு** – (வினை எச்சம் கொண்டு முடிகின்ற) ஆக்கச் சொல்லைக்கொண்ட வினைக்குறிப்புச் சொற்கள், **ஆக்கம் இன்று இயலா**– (அந்த) ஆக்கச்சொல் இல்லாமல் வாராவாம்.

**உதாரணம்**

| | |
|---|---|
| சாத்தன் மருந்துண்டு நல்லன் ஆயினான். | ஆக்கச்சொல் விரிந்தது. |

செய்யுட்களில், இவ்வாறு ஆக்கச்சொல் பெறாது வருமாயின், **செய்யுள் விகாரம்** என்க.

## மோசசு பொன்னையா

எச்சங்கள் குறிப்புவினை கொண்டு முடியுங்கால் ஆக்கச் சொல் பெற்றேவரும் எ–று.

**எ-டு:-**

*மருந்துண்டு நல்லனாயினான்.*

இரண்டு எதிர்மறை புணர்த்திக் கூறியுள்ளமையின், மருந்துண்டு நல்லன், கற்றுவல்லன், பெற்றுடையன் என இவ்வாறு ஆக்கச்சொல் தொக்கி வருவனற்றையும் அமைக்க. ஆக்க வினைக்குறிப்பின்கண் ஆக்கச்சொல் தொக்கிவருதல் செய்யுள் வழக்கு என்பர்.

தொல்காப்பியர்,

**வினையெஞ்சு கிளவிக்கு வினையுங் குறிப்பு**
**நினையத் தோன்றிய முடிபா கும்மே**
**ஆவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே,**

என எச்சவியலிற் கூறிய நூற்பாக் கருத்தை, ஈண்டு வினையெச்சம் அதிகாரப்பட்டு நிற்குமிடத்தின் இறுதிக்கண் ஒழிபாகக் கூறினார் இவ்வாசிரியர்.

சாத்தன் நல்லன்; இராமன் கரியன்; சிபி நெடியன்; அகத்தியன்

குள்ளன் என வினையெச்சம் வேண்டாத வினைக்குறிப்புச் சொற்கள் ஆக்கமின்றியே இயலும் என்பதும் இதனான் அமைக்கப்பட்டது எனக் கொள்க. செயற்கைப் பொருள் மரபுரைக்கும் 'காரண முதலா ஆக்கம் பெற்றும்' என்னும் நூற்பாவுள் ஆக்கப்பேறு அமைக்கப்படுதலின், ஈண்டுக் கூறல் வேண்டா எனின், குறிப்புவினைகள் ஆக்கச்சொல்பெறின், குறிப்புவினைகளாம்தம் நிலையை இழந்து தொழில்வினைகளாகி நிற்பினும் அவை குறிப்பு வினைகளே எனற்கு ஈண்டு இந்நூற்பா வேண்டும் என்க.

(28)

**347. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்**
**செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே.**

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்
செல்லாது ஆகும் செய்யும் என் முற்றே.

pallōr patarkkai mun̲n̲ilai ṭan̲maiyil
sellāṭu ākum seyyum en̲ muṟṟē.

## இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**Finite verb 'ceyyum'**

The finite verb ceyyum cannot be the predicate of plural personal and Nouns of the 1st and 2nd persons.

## ஒப்புமைப் பகுதி

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னுங் கிளவியோடு கொள்ளா

(தொல். சொல்.: 227)

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே

(இ.வி.: 241)

செய்யும்என் முற்றே சேரும் பலரொழி
மற்றைப் படர்க்கையும் மற்று அதன் ஈற்றயல்
உயிரும் உயிர்மெய்யும் ஒழிந்தே அஃகலும்
பலவின்பால் கள்ளனப் பற்றி மிகலுமாம்

(தொ.வி.: 107)

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே

(மு.வி.: 622)

## மயிலை நாதர்

எ–ன், இஃது இவ்வாற்றாற் பொது 'வினையாமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: – உயர்திணைப் பன்மைப் படர்க்கை யிடத்தும் முன்னிலை யிடத்தும் தன்மை யிடத்தும் செய்புமென்னும் நிகழ்கால முற்றுவினை ஆகாது, எ – று.

பாடவேறுபாடு:–

1.வினையென்பதுணர்த்துதல் நுதலிற்று

எனவே[2]உயர்திணை ஆண்பாலொருமையினும் பெண்பாலொருமையினும் அஃறிணை யொருமையினும் பன்மையினுமா மென்றவாறு.

உ–ம்.:

அவனுண்ணும், அவளுண்ணும், அதுவுண்ணும், அவையுண்ணு மென வரும்.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** செய்புமெனெச்சம் திணை பால் இடங்கட்குப் பொதுவாம் என விதித்தலின் அவ்வெச்சத்தானாகிய செய்யும் என்னும் முற்றும் அவ்வாறு பொதுவாமெனப் போந்தவற்றுள் சில பால் இடங்களிற் செல்லாது இம்முற்றென விலக்குதலின் எய்தியது ஒருமருங்குமறுத்தல் **உணர்–ற்று.**

**இ–ள்.:–** உயர்திணைப் பன்மைப் படர்க்கையினும் முன்னிலையினும் தன்மையினும் செல்லாது. செய்யும் என்னும் எச்சத்தானாகும் செய்யும் என்னும் முற்று. எ – று.

'பல்லோரொழிந்த படர்க்கைக் குரித்துச் செய்யும் என்னத் தெரித்திடும் முற்றே' எனச் சூத்திரம் செய்யாது எய்தியது ஒருமருங்கு மறுத்தல் தோன்றப் பல்லோர்படர்க்கை முன்னிலை தன்மையிற் செல்லாது என்றும், ஏனை முற்றுக்கள் போல் தன்னியல்பில் நில்லாது எச்சத்தானாயது இம்முற்று என்பது தோன்ற ஆகும் செய்யுமென் முற்று என்றும் கூறினார்.

இப்பால் இடங்களை விலக்கவே ஒழிந்த படர்க்கை நாற்பாலினும் செல்லும் என்பது பெற்றாம்.

வ–று.:–

**அவன் உண்ணும், அவள் உண்ணும், அது உண்ணும், அவை உண்ணும் என வரும்.**

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், செய்யுமென்னும் முற்றுச் சொல்லுக்குத் திணை பால் இடம் கூறுகின்றது.

இ–ள்.:– பல்லோர் படர்க்கை – உயர்திணைப் பலர்பாற் படர்க்கையிடத்தும்..... செல்லாது – இவையிற் சிலவே செல்லாமல், ஆகும் – ஒழிந்த உயர்திணை ஆணொருமையினும் பெண்ணொ ருமையினும் அஃறிணை யொருமையினும் அஃறிணைப் பன்மையினும் ஆகும், செய்யுமென் முற்றே – செய்யுமென்னும் நிகழ்கால வினைமுற்று, எ–று.

உ–ம்.:–

'அவன் உண்ணும்', 'அவள் உண்ணும்', 'அது உண்ணும்', 'அவை உண்ணும்'.

## விசாகப் பெருமாளையர்

இது, செய்யுமெனெச்சம் போல அதனாலாகிய செய்யுமென் முற்றுவினை சில பாலிடங்களுக்குச் செல்லாமை யுணர்த்துகின்றது.

இ–ள்.:– செய்யுமென்முற்று – செய்யுமென் முற்றானது, பல்லோர் படர்க்கை (யில்) – உயர்திணைப்பன்மைப் படர்க்கையிலும், முன்னிலை (யில்) – முன்னிலையிலும், தன்மையில் – தன்மையிலும், செல்லாதாகும் – செல்லாது, எ–று.

(எனவே பலரொழிந்த படர்க்கை நாற்பாலிலுஞ் செல்லுமென்பது பெற்றாம்.)

வ–று.:–

அவனுண்ணும், அவளுண்ணும், அதுவுண்ணும்,
அவையுண்ணும், என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

செய்யுமென்னு முற்றுச்சொற்குப் பால் இடவுரிமை கூறுஞ் சூத்திரம் யாது?

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்

செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே.

(பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில் செல்லாது ஆகும் செய்யும் என் முற்றே.)

**இ–ள்.:–** செய்யு மென்னு முற்றானது உயர்திணைப் பன்மைப் படர்க்கையிலும் முன்னிலையிலுந் தன்மையிலுஞ் செல்லாது, **எ–று.**

எனவே, பலரொழிந்த படர்க்கை நாற்பாலிலுஞ் செலுமென்பது பெற்றாம்.

**வ–று.:–**

அவனுண்ணும், அவளுண்ணும், அதுவுண்ணும்,
அவையுண்ணும் என வரும்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, எய்தியது ஒருபக்கம் விலக்குகின்றது,

**இ–ள்.:** **பல்லோர் படர்க்கை** – உயர்திணைப் படர்க்கைப் பன்மையிலும், **முன்னிலை தன்மையில்** – முன்னிலையிடத்தும் தன்மையிடத்தும், **ஆகுஞ்செய்யுமென்முற்று** – செய்யும் என்னும் பெயரெச்சத்தாலாகுஞ் செய்யும் என்னும் முற்றுவினைச்சொல், **செல்லாது** – நடவாது, **எ–று.**

இந்தப் பால், இடங்களை விலக்கவே ஒழிந்த படர்க்கை நான்கு பாலிலும் வருமென்பதாயிற்று.

**வ–று.:–**

அவனுண்ணும், அவளுண்ணும், அதுஉண்ணும்,
அவையுண்ணும் என வரும்.

'அவை யெத்திறத் தானும் பெயர்முடி பினவே' என்றும், 'பெயரல தேற்பில முற்றே' என்றுங் கூறினமையால், இதனை முற்றென்றுகூறி அவனுண்ணும் என எழுவாய்ப் பயனிலையாக உதாரணக்காட்டி யதென்னை, அவனுண்ணு மூண் என மற்றுச் சொல் நோக்கிற்றெனின், இருதிணைக்கும்

பொதுவாகிய செய்யும் என்னுஞ்சொல் எச்சமோ முற்றோ என ஐயத்தை விளைத்து உண்ணும் என நின்றபோது அவன், அது என்னும் வினைமுதல் வந்து திணையும் பாலும் விளக்கத் தொடர்மொழிப் பொருளுணர்த்தி எடுத்தலோசையால் மற்றோர் சொல்லை நோக்காது செப்பின் புணர்ச்சி போல உண்ணுமவன் என முடிந்து, பின்னர் அவனுண்ணும் அதுவரும் எனமாறி நிற்பது மரபாதலால், இது முற்றிற்கு இலக்கண மென்றும், உண்ணுமவன் வாழுமில் எனப் படுத்தலோசையாற் கூறியபோது, அவன், இல் என்ற முடிக்குஞ் சொல்லால் அமையாது, உண்ணுமவன் நல்லன், வாழுமில்நன்று என மற்றோர் சொல்லை நோக்கி நிற்பது எச்சத்திற்கு இலக்கண மென்றும் விடை கொடுத்து ஐயமகற்றுக. (விடை – எதிர்மொழி.)

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

உரை :– **செய்யும் என் முற்று** – 'செய்யும்' என்னும் வாய்பாட்டு வினைமுற்று, **பல்லோர் படர்க்கை** – படர்க்கைப் பலர்பாலினும், **முன்னிலை** – முன்னிலையிலும், **தன்மை**– தன்மையிலும், **செல்லாது ஆகும்** – வாராதாம்.

குறிப்பு:–

எனவே, படர்க்கையிற் பலர்பால் ஒழிந்த ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால்களிற் செல்லுமென்றதாயிற்று.

உ–ம் :–

அவன் உண்ணும்; அவள் உண்ணும்; அது உண்ணும்; அவை உண்ணும்.

செய்யும்மென்னும் முற்று 'நீர் உண்ணும்' என முன்னிலையிற் பன்மை ஏவலாய் வருதல் புதியன புகுதலாதலால், இங்குக் கூறாராயினார்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:–ஆகும் செய்யும் என் முற்று** – செய்யுமென்னுமெச்சத்தாலாகுஞ் செய்யுமென்னு முற்றானது, **பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில் செல்லாது** – உயர்திணைப்பன்மைப் படர்க்கையிலும் முன்னிலையிலுந் தன்மையிலுஞ் செல்லாது, எ–று.

எனவே பலரொழிந்த படர்க்கை நாற்பாலிலுஞ் செல்லுமென்பது பெற்றாம்.

வ–று.:–

'அவனுண்ணும், அவளுண்ணும், அதுவுண்ணும், அவையுண்ணும்' என வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.:– ஆகும் செய்யும் என் முற்று** – செய்யுமென்னு மெச்சத்தாலா குஞ் செய்யுமென்னு முற்றானது, **பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில் செல்லாது** – உயர்திணைப் பன்மைப் படர்க்கையிலும் முன்னிலையிலுத் தன்மையிலுஞ் செல்லாது. எ–று.

எனவே, பலரொழிந்த படர்க்கை நாற்பாலிலுஞ் செல்லுமென்பது பெற்றாம்.

வ–று.:–

அவனுண்ணும், அவளுண்ணும், அதுவுண்ணும், அவையுண்ணும் எனவரும்.

அவை யெத்திறத்தானும் பெயர்முடிபினவே, என்றும், பெயரலதேற்பி லமுற்றே, என்றுங் கூறினமையால், இதனை முற்றென்று கூறி, அவனுண்ணும் என எழுவாய்ப் பயனிலையாக உதாரணங் காட்டியதென்னை, அவனுண்ணு மூண் என மற்றுச்சொல் நோக்கிற்றெனின், இருதிணைக்கும் பொதுவாகிய செய்யும் என்னுஞ் சொல் எச்சமோ முற்றோ என ஐயத்தை விளைத்து உண்ணும் என நின்றபோது, அவன், அது, என்னும் வினைமுதல்வந்து திணையும் பாலும் விளக்கத் தொடர்மொழிப் பொருளுணர்த்தி எடுத்தலோசையால் மற்றோர் சொல்லை நோக்காது செப்பின் புணர்ச்சிபோல, உண்ணுமவன் என முடிந்து பின்னர் அவனுண்ணும், அதுவரும் என மாறிநிற்பது மரபாதலால் இது முற்றிற்கு இலக்கணமென்றும், உண்ணுமவன், வாழுமில் எனப் படுத்தலோசையாற் கூறியபோது, அவன், இல், என்ற முடிக்குஞ்சொல்லால் அமைபாது, உண்ணுமவன் நல்லன், வாழுமில் நன்று என மற்றோர் சொல்லை நோக்கி நிற்பது எச்சத்திற்கு இலக்கணமென்றும் விடைகொடுத்து ஐயமகற்றுக.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– **செய்யும் என் முற்று** – 'செய்யும் என்னும் வாய்பாட்டுவினை முற்று, **பல்லோர் படர்க்கை** – படர்க்கைப் பலர்பாலிலும், **முன்னிலை** – முன்னிலையிலும், **தன்மையில்** – தன்மையிலும், **செல்லாது ஆகும்** – வராதாம், எ–று.

எனவே, படர்க்கையில் பலர்பால் ஒழிந்த ஆண்பால் பெண்பால் ஒன்றன்பால் பலவின்பால்களில் செல்லுமென்றதாயிற்று.

உ–ம்.:–

அவன் உண்ணும், அவள் உண்ணும், அது உண்ணும், அவை உண்ணும்.

இவ் வாய்பாட்டுமுற்று, 'நீர் உண்ணும்' என முன்னிலையில் பன்மை யேவலாக வருதல் புதியனபுகுதலாதலால் இங்குக் கூறாராயினார்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில் – உயர்திணைப் பன்மைப்படர்க்கையிலும் முன்னிலையிலுந் தன்மையிலும், ஆகும் செய்யும் என் முற்று – செய்யுமென்னு மெச்சத்தாலாகுஞ் செய்யுமென்னு முற்றானது, செல்லாது – செல்லாது. எ–று.

எனவே, பலரொழிந்த படர்க்கை நாற்பாலிலுஞ் செல்லுமென்பது பெற்றாம்.

(உ–ம்.)

அவன் உண்ணும், அவள் உண்ணும், அது உண்ணும், அவை உண்ணும்.

'பெயரல தேற்பில முற்றே' (சூ–323) என்று கூறினமையால், இதனை முற்றென்று கூறி, 'அவன் உண்ணும்' என எழுவாய் பயனிலையாக உதாரணங் காட்டிய தென்னை? அவன் உண்ணும் ஊண் என மற்றுச்சொல் நோக்கிற்றெனின், இருதிணைக்கும் பொதுவாகிய செய்யும் என்னும் சொல் எச்சமோ முற்றோ என ஐயத்தை விளைத்து உண்ணும் என நின்றபோது, அவன் அது என்னும் வினைமுதல் வந்து திணையும் பாலும் விளக்கத் தொடர்மொழிப்பொரு ளுணர்த்தி எடுத்துலோசையால் மற்றோர் சொல்லை நோக்காது உண்ணுமவன் என முடிந்து, பின்னர் அவன் உண்ணும் என மாறி நிற்பது மரபாதலால் இது முற்றிற்கு இலக்கணமென்றும், உண்ணும் அவன் எனப்படுத்த லோசையாற் கூறின் அவன் என அமையாது உண்ணும் அவன் நல்லன் என மற்றோர் சொல்லை நோக்கி நிற்பது எச்சத்திற்கு இலக்கணமென்றும் கூறி ஐயமகற்றுக.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ–ள்.) செய்யும் என் முற்று** – செய்யுமென் முற்றானது, **பல்லோர் படர்க்கை (யில்)** – உயர்திணைப் பன்மைப் படர்க்கையிலும், **முன்னிலை (யில்)** – முன்னிலையிலும், **தன்மையில்** – தன்மையிலும், **செல்லாகு ஆகும்** – செல்லாகு. (எ–று.)

**(பொ–ரை.)**

உயர்திணைப்பன்மைப்படர்க்கையிலும், முன்னிலையிலும், தன்மையிலும் செல்லாது; செய்யுமென்னும் எச்சத்தாலாகும் செய்யுமென்னும் முற்று.

எனவே, பலர்பாலொழிந்த மற்றப்படர்க்கை நாற்பாலிலும் செல்லு என்பது பெற்றாம்.

**(உ–ம்.)**

அவன் உண்ணும்,

அவள் உண்ணும்,

அது உண்ணும்,

அவை உண்ணும் எனவரும்.

இவ்வாய்பாட்டு முற்று 'நீர் உண்ணும்' என முன்னிலையிற் பன்மை ஏவலாய் வருதல் புதியன புகுதலாதலால் இங்குக் கூறாதாயினார்.

## கா. நமச்சிவாய முதலியார்

**செய்யும் என் முற்று** – செய்யும் என்னும் முற்றானது, **பல்லோர் படர்க்கை(யில்)** – உயர்திணைப் பன்மைப் படர்க்கையிலும், **முன்னிலை(யில்)** – முன்னிலையிலும், **தன்மையில்** – தன்மையிலும், **செல்லாது ஆகும்** – செல்லாது.

எனவே, செய்யுள் என்னும் முற்று – பலர்பால் ஒழிந்த மற்றைப் படர்க்கை நாற்பாலிலுஞ் செல்லுமென்பது பெற்றாம்.

உதாரணம்

அவனுண்ணும்.
அவளுண்ணும்.
அது உண்ணும்.
அவை உண்ணும்.

என வரும்.

## மோசசு பொன்னையா

செய்யும் என்னும் முற்றானது உயர்திணைப் பன்மைப் படர்க்கையிலும், முன்னிலையிலும், தன்மையிலும் வழங்குதலில்லை எ–று.

இதனால் செய்யும் என்னும் எச்சம் போன்று செய்யும் என்னும் முற்று ஐம்பால் மூவிடப் பொதுவினையன்று என்றார் எனக் கொள்க.

**மாமறை மாக்கள் வருகுலங் கேண்மோ**

எனவும்,

முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ

எனவும், நீர் உண்ணும்/பாடும்/ஆடும்/எனவும், செய்யும் என்னும் ஏவல்வினைமுற்று வழங்குவதால், இந்நூற்பா ஏவல்வினைமுற்றை அடக்கிக் கூறவில்லை என்பது தெளிவு. முக்காலத்திற்கும் உரிய இயற்கை நிகழ்ச்சியைக் குறிக்கும் செய்யும் என்னும் முற்று மூன்றிடத்திற்கும் ஐந்துபாற்கும் உரியது என்பது முன்னர்ச் தெளிவுறுத்தப்பட்டது3 ஆதலின், இந்நூற்பா கூறுவது ஏனை முற்றாகிய,

**பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை**
**யவ்வயின் மூன்று நிகழுங் காலத்துச்**
**செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா,4**

எனத் தொல்காப்பியரின் வரையறை பெற்ற நிகழுங்காலத்துச் செய்யும் என்னும் முற்றையே எனக் கொள்க.

**எ-டு.:-**

அவன்/அவள்/அது/அவை உண்ணும்

இம்முற்று பழந்தமிழின் விகுதிஇல்லா வினையமைப்புக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குவதாகும் என்பது அறியத்தக்கது.

(29)

## 348. யாரென் வினாவினைக் குறிப்புயர் முப்பால்.

யார் என் வினா வினைக் குறிப்பு உயர் முப்பால்.

yār e̱n vi̱nā vi̱naik kuṟippu uyar muppāl.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**participle common to genders**

The interrogative indefinite predicate 'yâr' is restricted to the two Lower Genders.

### ஒப்புமைப் பகுதி

**யாஅர் என்னும் வினாவின் கிளவி**

அத்திணை மருங்கின் முப்பாற்கும் உரித்தே

(தொல். சொல்.: 210)

யாரென் வினைவினைக் குறிப்புயர் முப்பால்

(இ.வி. 233)

ஆண்பெண் பலரொடும் யாரெனு மொழிவரும்

(மு.வீ.: 607)

## மயிலை நாதர்

எ—ன், மேல், இருதிணைக்கும் பொதுவான வினை வினைக்குறிப்பு உணர்த்தினார்; இதனால், உயர்திணை முப்பாற்கும் பொதுவான வினைக்குறிப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.:— வினாப்பொருண்மையின் வரும் யாரென்னும் வினைக்குறிப்பு மொழி உயர்திணை மூன்றுபாற்கும் பொதுவாம், எ—று.

வ—று.:—

யாரவன், யாரவள், யாரவரென வரும்.

யாரென்றது எத்தன்மை யுடையாரென, வினைக்குறிப்பானது காண்க.

## சங்கர நமச்சிவாயர்

எ—னின், திணைப்பொது வன்றிப் பாற்பொதுவினை யாமாறு உணர்—ற்று.

இ—ள்.:—வினாப்பொருண்மையைத் தரும் யார் என்னும் வினைக்குறிப்புமுற்று உயர்திணை முப்பாற்கும் பொதுவினையாம், எ—று.

திணைப்பொதுமைக்கண் கூறிய பொதுவினை என்பதனை ஈண்டும் வருஞ் சூத்திரத்தும் தந்துரைத்துக் கொள்க.

வ—று.:—

அவன் யார், அவள் யார், அவர் யார் என வரும்.

"ஊதைகூட் டுண்ணும் உகுபனி யாமத்தெம் கோதை
கூட்டுண்ணியர் தான்யார்மன் — போதெல்லாம் தாதோடு
தாழுந்தார்க் கச்சி வளநாடன் தூதோடு
வாராத வண்டு"

என அஃறிணைக்கண் வருதலும் "நான் ஆர் என் உள்ளம் ஆர்"[1] என யார் என்பது ஆர் என மரீஇ வருதலும் புதியன புகுதலாம் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், உயர்திணை முப்பாற்கும் பொதுவான வினாவினைக் குறிப்பு வருமாறு கூறுகின்றது.

இ–ள்.:– யாரென் வினாவினைக் குறிப்பு – வினாப் பொருண்மைக்கண் வரும் யாரென்னும் வினைக்குறிப்புச் சொல், உயர் முப்பால் – உயர்திணை மூன்று பாற்கும் பொதுவாம், எ–று.

உ–ம்.:–

யார் அவன், யார் அவள், யார் அவர் என வரும். சிறுபான்மை தன்மை முன்னிலையிடத்தும் அஃறிணையிடத்தும் வரும். நீ யார், நீர் யார். இவ்வகைக்கு யான் யார், நாங்கள் யார், இக்கிளி யார் என வரும்.

யார் என்னும் வினா, யாவர் என்றும் வரும். இக்காலத்து ஆர் என்றும் ஆரை என்றும் வரும்.

## விசாகப் பெருமாளையர்

இது, திணைப்பொதுவின்றிப் பாற்பொதுவினையாமாறு உணர்த்துகின்றது.

இ–ள்.:– வினா–வினாப்பொருளைத்தருகிற, யாரென் – யாரென்கிற, வினைக்குறிப்பு – வினைக்குறிப்புமுற்று, உயர்முப்பால் – உயர்திணைமுப்பால்களுக்கும் பொதுவினையாம், எ–று.

வ–று.:–

அவன்யார், அவள்யார், அவர்யார், என வரும். இது ஆரெனவு மருவி வழங்கும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

யார் என்னும் வினாப் பொருளை யுணர்த்தும் வினைக்குறிப்புக்குப் பால் வரையறை கூறுஞ் சூத்திரம் யாது?

யாரென் வினாவினைக் குறிப்பெயர் முப்பால்

(யார் என் வினாவினைக் குறிப் உயர் முப்பால்.)

இ–ள்.:– வினாப்பொருளைத் தரும் யாரெனும் வினைக்குறிப்புமுற்று உயர்திணை முப்பால்களுக்கும் பெரிதுவினையாம், எ–று.

வ–று.:–

அவன் யார், அவள் யார், அவர் யார் என வரும்.

அஃதியார், அவையார் எனவும், யான் யார், யாம் யார் எனவும்,

நீ யார், நீர் யார் எனவும், அஃறிணையிருபாலிலும், மற்றை யீரிடத்திலும் வருதல், உயர் என்றமையால் இழி யிருபாலிலும் சிறுபான்மை கொள்ளப்படும் என்பதனாற் கொள்க.

யார் என்பது ஆரென விகாரப்பட்டும் வரும். இங்கே சொன்ன யார் என்பது, யாவரென்னும் உயர்திணைப் பலர்பாற்சொல் விகாரப்பட்ட யாரென்பதன்று.

## முகவை இராமானுச கவிராயர்

இது, பாற்பொதுவினை யுணர்த்திற்று,

**இ-ள்.:- யாரென் வினா வினைக் குறிப்பு** - வினாப்பொருளைத் தரும் யார் என்னும் வினைக்குறிப்புமுற்று, **உயர் முப்பால்**-உயர்திணை மூன்றுபாற்கும் பொதுவினையாம், **எ-று.**

வ-று.:-

அவன்யார், அவள்யார், அவர்யார், என வரும். 'யார் அது?' என அஃறிணைக்கண் வருதலும், 'நானாரென் னுள்ளமார்' என, யார் என்பது ஆர் என மருவி வருதலும் **புதியனபுகுதலா** மென்க, இதிற்பொதுவினை யென்னும் பயனிலை குறைந்து நின்றது.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :- யார் என்**- 'யார்' என்கிற, **வினா** - வினாப் பொருளைத் தருகின்றன, **வினைக் குறிப்பு** -குறிப்பு வினைமுற்று, **உயர்முப்பால்**- உயர்திணைப் படர்க்கை மூன்று பால்களுக்கும் பொதுவாம்.

**உ-ம் :-**

அவன் யார்? அவள் யார்? அவர் யார்?

இனி, நான் யார்? நாம் யார்? நீ யார்? எனத் தன்மை முன்னிலைகளில் வருதல் **புதியன புகுதல்.** இது 'யாவர்' என்னும் பலர்பாற்பெயரின் விகாரமன்று.

## ஆறுமுக நாவலர்

**இ-ள்.:- வினா யார் என் வினைக்குறிப்பு** - வினாப்பொருளைத் தரும் யாரென்னும் வினைக்குறிப்புமுற்று, **உயர் முப்பால்** - உயர்திணை முப்பால்களுக்கும் பொதுவினையாம், **எ-று.**

வ-று.:-

'அவன் யார், அவள் யார், அவர் யார்' என வரும்.

'அஃதியார், அவை யார்' எனவும், 'யான்யார் யாம் யார்' எனவும், 'நீ யார், நீர் யார்' எனவும், அஃறிணை யிருபாலிலும், மற்றையீரிடத்திலும் வருதல், புதியன புகுதலாமென்க.

யார் என்பது ஆரென விகாரப்பட்டும் வரும். இங்கே சொன்ன யார் என்பது, யாவரென்னும் உயர்திணைப் பலர்பாற் சொல் விகாரப்பட்ட யாரென்பதன்று.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள்.:– வினாயார் என் வினைக்குறிப்பு – வினாப் பொருளைத் தரும் யாரென்னும் வினைக்குறிப்புமுற்று, – உயர் முப்பால் – உயர்திணை முப்பால்களுக்கும் பொதுவினையாம். எ–று.

வ–று.:–

அவன் யார், அவள் யார், அவர் யார் எனவரும்.

அஃதியார், அவையார். எ–ம். யான் யார் யாம் யார் எ–ம். நீ யார், நீர் யார், எ–ம். அஃறிணையிருபாலிலும், மற்றையீரிடத்திலும் வருதல் புதியன புகுதலாமென்க.

யார் என்பது ஆரென விகாரப்பட்டும் வரும். இங்கே சொன்ன யார் என்பது, யாவரென்னும் உயர்திணைப் பலர்பாற் சொல் விகாரப்பட்ட யாரென்பதன்று.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– வினா யார் என் வினைக்குறிப்பு – வினாப்பொருளைத் தரும் யார் என்னும் வினைக்குறிப்புமுற்று, உயர் முப்பால் – உயர்திணை முப்பால் களுக்கும் பொதுவினையாம், எ–று.

வ–று.:–

'அவன் யார், அவள் யார், அவர் யார்' என வரும். 'அஃதியார், அவை யார்' எனவும், 'யான்யார் யாம் யார்' எனவும், 'நீ யார், நீர் யார்' எனவும், அஃறிணை யிருபாலிலும், மற்றையீரிடத்திலும் வருதல், புதியன புகுதலாமென்க.

யார் என்பது ஆரென விகாரப்பட்டும் வரும். இங்கே சொன்ன யார் என்பது, யாவரென்னும் உயர்திணைப் பலர்பாற் சொல் விகாரப்பட்ட யாரென்பதன்று என அறிக.

## பவானந்தம் பிள்ளை

இ–ள்.:– வினா யார் என் வினைக்குறிப்பு – வினாப்பொருளைத் தரும் யாரென்னும் வினைக்குறிப்புமுற்று, உயர் முப்பார் – உயர்திணை முப்பால்களுக்கும் பொதுவினையாம். எ–று.

(உ–ம்.)

அவன் யார், அவள் யார், அவர் யார்.

அஃதியாத், அவை யார் – என அஃறிணைக்கண் வருதலும்; யான், யார், யாம் யார், நீ யார், நீர் யார் – எனத் தன்மை முன்னிலைக்கண் வருதலும்; நாணார் என் உள்ளமார் – என யார் என்பது ஆர் என மருவி வருதலும், புதியன புகுதலாமென்க.

'யார் என்றது எத்தன்மையுடையார் என வினைக்குறிப்பானது காண்க' என்பது மயிலைநாதர் உரை.

இங்கே சொன்ன யார் என்பது, யாவரென்னும் உயர்திணைப் பலர்பாற் சொல் விகாரப்பட்ட யாரென்பதன்று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) யார் என் வினா– யாரென்கிற வினாப்பொருளைத் தருகிற, வினைக்குறிப்பு – குறிப்பு வினைமுற்று, உயர் முப்பால் – உயர்திணை மூன்று பால்களுக்கும் பொது வினையாம். (எ–று)

(பொ–ரை.) வினாப் பொருண்மையைத் தரும் யாரெம்னும் குறிப்புவினைமுற்று உயர்திணை முப்பால்களுக்கும் பொதுவினையாம்.

(உ–ம்)

அவன் யார், அவள் யார், அவர் யார் எனவரும்.

இஃது, இங்குப் பலர்பால் முற்றன்று; உயர்திணைப் பொதுக் குறிப்பு முற்று: பகாப்பதம். ர் – பொது விகுதி என்பாருமுளர்.

இனி, நான்யார், நாம்யார், நீயார், நீர்யார் எனத்தன்மை முன்னிலைகளில் வருதல் புதியன புகுதல். என் நெஞ்சம் ஆர், என அஃறிணைக்கு வருதலும் அது; ஆர் – யார் என்பதன் மரூஉ.

## கா. நமச்சிவாய முதலியார்

**வினா** – வினாப்பொருளைத் தருகின்ற, **யார் என்** – யார் என்னும், **வினைக்குறிப்பு** – வினைக்குறிப்பு முற்று, **உயர் முப்பால்** – உயர்திணை மூன்று பால்களுக்கும் பொதுவினையாம்.

**உதாரணம்**

அவன் யார், அவள் யார், அவர் யார்.

என வரும்.

இது, ஆர் எனவும் மருவி வழங்கும். சிறுபான்மை அது யார், அவை யார் என அஃறிணை இருபால்களிலும், நான் யார், நாம் யார்; நீ யார், நீர் யார் எனத் தன்மை முன்னிலைகளிலும் வருதல் புதியன புகுதலாம்.

## மோசசு பொன்னையா

யார் என்னும் வினாப் பொருளைத் தரும் வினைக்குறிப்பு முற்றுச்சொல், படர்க்கையில் ஆண், பெண், பலர் என்னும் உயர்திணை மூன்றுபால்களுக்கும்உரிய பொதுச் சொல்லாகும் எ–று.

அவன் யார்?, அவள் யார்?, அவர் யார்?

இஃது உயர்திணைப் பொதுக் குறிப்புமுற்றாம் ஆதலின், உயர்திணையில் அவன் யாவன்?, அவள் யாவள்? அவர் யாவர்? என வழங்கும் முறைப்படி உயர்திணைப் பன்மை வினைப்பெயராக வரும் யாவர்மூயார் என்னும் சொல்லிலும் இதுவேறானது எனக்கொள்க. யார்மூஆர் எனத் திரிந்தும் வழங்கும்.

**ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்தெங்**
**கோதைகூட் டுண்ணிய தான்யார்மன்–போதெல்லாந்**
**தாதொடு தாழுந்தார்க் கச்சி வளநாடன்**
**தூதொடு வாராத வண்டு**
**என அஃறிணைக் கண்ணும்,**
**நானாரென் னுள்ளமார்,**

எனத் தன்மைக்கண்ணும் வழங்குதல் வழக்கில் காணப்படுகின்றது.

தொல்காப்பியர்,

**யாஅ ரென்னும் வினாவின் கிளவி**
**யத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே,**

எனக் கூறியுள்ளதால், அவர் காலம் வரை, யார் என்னும் வினா வினைக்குறிப்பு உயர்திணையில் மட்டும் வழங்கிற்றுப் போலும்.

## 349 எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்.

எவன் என் வினா வினைக் குறிப்பு இழி இரு பால்.

evaṉ eṉ viṉāviṉaik kuṛippu iḷi irupāl.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

The interrogative indefinite predicate 'evan' is restricted to the two Lower Genders.

### ஒப்புமைப் பகுதி

எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்

(இ.வி.: 235)

எவனென் வினாவே யிருபாற்கு முரிய

(மு.வி.: 614)

அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவனென் வினாவே (தொல். சொல்.: 219)

### மயிலை நாதர்

எ–ன், அஃறிணை [1]இருபாற்றாம் பொதுவான வினைக்குறிப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: எவனென்னும் வினாப்பொருண்மை வினைக் குறிப்புச்சொல் அஃறிணை இருபாற்கும் பொதுவாம், எ–று.

வ–று.: எவனது, எவனவை என வரும்.

எவனென்றது எத்தன்மையுடையதென வினைக்குறிப்பானது காண்க.[2]

### சங்கர நமச்சிவாயர்

எ–னின், இதுவும் அது.

இ–ள்.:–வினாப் பொருண்மையைத் தரும் எவன் என்னும் வினைக்குறிப்புமுற்று அஃறிணை இருபாற்கும் பொதுவினையாம், எ–று.

வ–று.:–

**அஃது எவன், அவை எவன்** என வரும்.

இஃது என் எனவும், என்னை எனவும் மரீஇ வருதல் புதியன **புகுதலாம்.**

**'உயர்முப்பால்'** என்றும், **'இழி இருபால்'** என்றும் விதந்தமையின், யார் என்றும் எவன் என்றும் ஈண்டுபோந்த சொற்கள், பெயர்க்கும் வினைக்குறிப்பிற்கும் பொதுவாகிய யாவர் என்னும் சொல், யார் ஆர் என மரீஇய உயர்திணைப் பன்மைச்சொல்லும் இவ்வாறு பெயர்க்கும் வினைக்குறிப் பிற்கும் பொதுவாகிய எவன் என்னும் உயர்திணை ஆண்பாற் சொல்லும் அல்ல என்பது பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், அஃறிணை இரு பாற்கும் வினைக்குறிப்பு வருமாறு கூறுகின்றது.

**இ–ள்.:–எவனென் வினாவினைக் குறிப்பு** – வினாப் பொருண்மைக்கண் வரும் எவனென்னும் வினைக்குறிப்புச் சொல், **இழி இருபால்** – அஃறிணை இரு பாற்கும் பொதுவாம், எ–று.

**உ–ம்.:–**

**எவன் அது, எவன் அவை** என வரும்.

என்னை என்றும், என்ன என்றும், என் என்றும் வரப் பெறும். **அது என்னை, அவை என்னை; அது என்ன, அவை என்ன;** அது என், . . . .

இக்காலத்து என என்றும் பெறும். அது என, அவை என.

## விசாகப் பெருமாளையர்

இதுவுமது.

**இ–ள்.:–வினா**–வினாப்பொருளைத்தருகிற, **எவனென்** – எவனென்கிற, **வினைக்குறிப்பு** – வினைக்குறிப்புமுற்று, **இழியிருபால்** – அஃறிணை யிருபாலுக்கும் பொதுவினையாம், எ–று.

வ–று.:–

அஃதெவன், அவையெவன், என வரும். இது, என், என்னை, என்ன, எனவு மருவி வழங்கும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

எவன் என்னும் வினாவினைக்குறிப்பு எப்பாலின்கண் வரும்?

எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்.

(எவன் என் வினா வினைக்குறிப்பு இழி இருபால்.)

**இ—ள்.:** வினாப்பொருளைத் தரும் எவனென்னும் வினைக்குறிப்பு முற்றும் அஃறிணையிருபாலுக்கும் பொதுவினையாம், **எ—று.**

**வ—று.:—**

அஃதெவன், அவை யெவன் என வரும்.

எவனென்பது, என், என்ன, என்னையென விகாரப்பட்டும் வரும். இங்கே சொன்ன எவனென்பது, உயர்திணை யாண்பாலை யுணர்த்தும் எவனென்ப தன்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இதுவுமது,**

**இ—ள்.:—** **எவனென் வினாவினைக் குறிப்பு** — வினாப் பொருளைத் தரும் எவன் என்னும் வினைக்குறிப்புமுற்று, **இழியிருபால்**—அஃறிணை யிருபாற்கும் பொதுவினையாம், **எ—று.**

**வ—று.:—**

அஃதெவன், அவையெவன், எனவரும். இது, வழக்கிடத்து என்ன எனவும், செய்யுளிடத்து என் எனவும் என்னை எனவும் மருவி வருதல் புதியனபுகுதலாம், இனி, யாவர் என்னும் உயர்திணைப் பன்மைப்பெயர்ச் சொல்லும், இவ்வாறு யார் ஆர் என மருவி வருதலும், யார் என் வினைக்குறிப்புப் போலத் தோன்றுதலும், எவன் என்னும் உயர்திணை யாண்பாற் பெயர்ச் சொல்லும் எவன் என்னும் வினா வினைக்குறிப்புப் போலத் தோன்றுதலு முளவாயினும், 'உயர்முப்பால்' 'இழியிருபால்' என்றதினாலே இவை அவையல்லவெனக் காண்க. இச்சூத்திரத்திலும் பொதுவினை யென்னும் பயனிலை குறைந்து நின்றது.

---

பாடவேறுபாடு:—

1. வினையெச்சமாதலும்

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :-** **எவன் என்** – 'எவன்' என்கிற, **வினா** – வினாப்பொருளைத் தருகின்ற, **வினைக்குறிப்பு** – குறிப்பு வினைமுற்று, **இழி இருபால்** – அஃறிணைப் படர்க்கை இரண்டு பால்களுக்கும் பொதுவாம்.

உ–ம் :-

அது எவன்? அவை எவன்?

குறிப்பு :-

இது 'என்', 'ஏன்', 'என்ன', 'என்னை' என்று விகாரப்பட்டு வரும். இங்குக் கூறிய 'எவன்' என்பது ஆண்பாற்பெயரன்று.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:-** **வினா எவன் என் வினைக்குறிப்பு** – வினாப்பொருளைத் தரும் எவனென்னும் வினைக்குறிப்புமுற்று, **இழி இருபால்** – அஃறிணை யிருபாலுக்கும் பொதுவினையாம், எ–று.

வ–று.:-

அஃதெவன், அவை யெவன் என வரும்.

---

பாட வேறுபாடு.:-

1. கொடுப்ப" என உயர்திணை முப்பாலும், "விளிப்பதும் பயிரும்
2. என அஃறிணையிருபாலும் பெயர்
3. முயங்குகையான்"
4. எனத் தன்மையிடத்து ஒருமைபன்மையும், "நீ சேர்ந்தனை என முன்னிலை யொருமை பன்மையுமாகிய மூவிடத்தைம்பால் வினைமுற்று காணாது மோய், (வருந்தி) முகந்து, விளித்து, குடைந்து, பெயர்த்து, மாறி, சேர்ந்து, இயக்கி' என முறையே செய்தென்னும் வினையெச்சமாகி மூவிடத்தைம்பாலுமேற்றன.
5. இனி, விளிப்பதும் என்றவும்மை எண்ணும்மை; பயிரும் என்றது பயிலுந்தொழில்
6. பொறாஅ தமரிய
7. எனவும் விழுமிது கழியாதாயினும்
8. நெஞ்சினன் றுயருழந்தனன்"

எவனென்பது, என், என்ன, என்னையென விகாரப்பட்டும் வரும். இங்கே சொன்ன எவனென்பது, உயர்திணை யாண்பாலை யுணர்த்தும் எவனென்ப தன்று.

## வ. குமாரசாமிப்புலவர்

**இ–ள்.:–** வினா எவன் என் வினைக்குறிப்பு – வினாப் பொருளைத் தரும். **எவனென்னும் வினைக்குறிப்புமுற்று, – இழி இருபால் –** அஃறிணையிருபாலுக்கும் பொதுவினையாம். **எ–று.**

**வ–று.:–**

அஃதெவன், அவையெவன் என வரும்.

எவனென்பது, என், என்ன், என்னையென விகாரப்பட்டும் வரும். இங்கே சொன்ன எவனென்பது, உயர்திணை யாண்பாலையுணர்த்தும் எவனென்பதன்று.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:–** எவன் என் – 'எவன்' என்கிற, **வினா** – வினாப்பொருளைத் தருகிற, **வினைக்குறிப்பு** – குறிப்பு வினைமுற்று, **இழி இருபால்** – அஃறிணைப் படர்க்கை இரண்டு பால்களுக்கும் பொதுவாம், எ–று.

இது, இங்கு ஆண்பால் முற்றன்று; அஃறிணைப் பொதுக்குறிப்பு முற்று. எது என்றும், எவை என்றும் பொருள்படும். இதில், அன் – பொதுவிகுதி.

உ–ம்.:–

அது எவன், அவை எவன், இது – என் என விகாரப்பட்டும், அது, பின்பு என்னை என்ன என்னே என்னோ ஏன் எனப் பலவாறு விகாரப்பட்டும் வரும்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:–** வினா எவன் என் வினைக்குறிப்பு – வினாப்பொருளைத் தரும் எவனென்னும் வினைக்குறிப்பு முற்று, இழி இருபால் – அஃறியைணிருபாலுக்கும் பொதுவினையாம். எ–று.

**(உ–ம்.)**

அஃதெவன், அவை யெவன்.

எவனென்பத, என், என்ன, என்னையென விகாரப்பட்டு வருதல் புதியனவுகுதலாம். இங்கே சொன்ன எவனென்பது, உணர்திணையாண் பாலையுணர்த்தும் எவனென்பதன்று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ-ள்.) எவன் என்வினா-** எவனென்கிற வினாப் பொருளைத் தருகிற, **வினைக்குறிப்பு** - குறிப்பு வினைமுற்று, **இழி இருபால்** - அஃறிணை இரண்டுபாலுக்கும் பொது வினையாம். **(எ-று.)**

**(பொ - ரை.)** வினாப் பொருண்மையைத் தரும் எவன் என்னும் குறிப்பு வினைமுற்று அஃறிணை இருபாற்கும் பொதுவினையாம்.

**(உ-ம்.)**

அஃது எவன், அவை எவன் எனவரும்.

இஃது என், என்னை, என்ன எனவும் மருவிவழங்கும். இஃது இங்கு ஆண்பால் முற்றன்று; அஃறிணைப் பொதுக்குறிப்பு முற்று; பகாப்பதம். அன் - பொது விகுதி என்பாருமுளர்.

## கா. நமச்சிவாய முதலியார்

**வினா** - வினாப் பொருளைத் தருகின்ற, **எவன் என்** - எவன் என்னும், **வினைக்குறிப்பு** - வினைக்குறிப்பு முற்று, **இழி இருபால்** - அஃறிணை **இரண்டு பாலுக்கும் பொதுவினையாம்.**

**உதாரணம்**

அஃது எவன், அவை எவன்.

என வரும்.

இஃது - **என், என்னை என்ன** எனவும் மருவி வழங்கும்.

## மோசசு பொன்னையா

எவன் என்னும் வினாப் பொருளைத் தரும் வினைக்குறிப்பு முற்றுச்சொல் படர்க்கையில் ஒன்றன்பால், பலவின்பால் என்னும் அஃறிணை இருபால்களுக்கும் உரிய பொதுச்சொல்லாகும்.
எ-று.

**எ-டு**

அஃதெவன்?, அவை எவன்?,

இக்காலத்தில் இச்சொல் என் எனவும், என்னை எனவும் மருவி வழங்குகின்றது.

இதனை எழுதியவன் எவன்? அவனை அடித்தவன் எவன்? என இவ்வாறு வழங்கும் ஆண்பால் வினைகுறிப்புப் பெயரினும் இது வேறானது எனக் கொள்க.

(31)

## 350. வினைமுற் றே[1]வினை யெச்ச மாகலும்
## குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே.

வினை முற்றே வினை எச்சம் ஆகலும்
குறிப்பு முற்று ஈர் எச்சம் ஆகலும் உளவே.

vinai murrē vinai essam ākalum
kurippu murru īr essam ākalum ulavē.

### இலாசரசு (ஆங்கில மொழிபெயர்ப்பு)

**An exception**

In some cases, Finite Verbs may be used as Verbal Participles, while those of the Indefinite kind may be used as both (Verbal and Relative Participles).

### ஒப்புமைப் பகுதி

பன்முறை யானும் வினைஎஞ்சு கிளவி
சொன்முறை முடியாது அடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே

(தொல். சொல்.: 233)

வினைமுற் றேவினை யெச்ச மாகலும்
குறிப்புமுற் றீரெச் மாகலு முளவே

(இ.வி.: 240)

### மயிலை நாதர்

எ–ன், முற்றுச்சொற்கட்கு எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ–ள்.:– முற்றுவினைச்சொல் வினையெச்சமாகி வருதலும் வினைக்குறிப்பு முற்றுச்சொல் வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம், எ–று.

'ஆகலும்' என்றவும்மையான், அவ்வாறாதல் சிறுபான்மையெனக் கொள்க.

வ–று.:–

"காணான் கழிதலு முண்டென் றொருநாள்", "மோயினளுயிர்த்த காலை" (அகநா. 5,) "முகந்தனர்[1]கொடுப்ப வுகந்தனர் பெயரும்" (புறநா. 33), "விளிப்பது பயிலுங் குறும்பர்துந் துமியொடு" "எருவினுண்டாது குடைவன வாடி" (குறுந். 46) [2] எனவும், "பெயர்த்தனென் [3]முயங்கயான்" (குறுந். 84), "மக்களு ளிரட்டையாய் மாறினம் பிறந்தியாம்" [4] எனவும், "சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப" ('எம்மூ ரல்ல தூர்நனி' என்னும் செய்யுள்) "கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்" (பெரும்பாண். 392) [5] எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைமுற்று வினையெச்சமாயின.

"வரிபுனை வில்ல னொருகணை தெரிந்துகொண்டு" (அகநா. 48), [6]"அளிநிலைபெறாஅ தமரிய முகத்தள், விளிநிலை கேளாள்" (அகநா. 5), "உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து" (முருகு. 185), [7]"விழுமியது கழிவ தாயினும்", "நிலமிசைப் புரளுங் கைய வெய்துயிர்த்து" (புறநா. 44) எனவும், "துணையி [8]னெஞ்சினேன் றுயருழந் தினைவேன்", "நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சி" (புறநா. 113) எனவும், "நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய" (குறந் 22) "வெள்வேல் வலத்திர் பொருடரல் வேட்கை யினுள்ளினிர்" (கலி. 4) எனவும் ஐம்பால் மூவிடத்தும் வினைக்குறிப்பு முற்று வினையெச்சக் குறிப்பாயின.

"வெந்துப்பினன் விறல்வழுதி யொடு", "அஞ்சாயல ளாயிழைமுன்", "கடற்றானையர் கழல்வேந்தரை", "பெருவரை மிசையது நெடுவெள்ளருவி" (குறுந். 78) "புன்றா ளோமைய சுரனிறந் தோரே" (குறுந். 260) எனவும், "பெருவேட்கைய னெற்பிரிந்து", "கண்புரை காதலே மெம்முமுள்ளாள்" எனவும், "உலங்கொ டோளினை யொருநின்னால்", "வினைவேட்கையிர் வீரர் வம்மின்" எனவும் வினைக்குறிப்பு முற்றுக்கள் ஐம்பான் மூவிடத்தும் பெயரெச்ச வினைக்குறிப்பாயின. இவை இவ்வாறு பெயர்படாதன வெனக் கொள்க.

அஃதேல், முற்று எச்சமாமென்றது என்னை? எச்சந்தானே பாலும் திணையும் இடமும் விளக்கிற் றென்ன அமையாதோ வெனின், எச்சமாக வோதிய வாய்பாட்டுமொழிகள் வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் பாலும் திணையும் இடமும் விளக்காது பொதுவாய் நிற்றலானும், இவற்றுட்சில

வினையெச்சந்தன்னை யேற்று நிற்பனவும் உள வாகலானும் அமையா தென்க.

இவற்றுள், வினையெச்சமாய் வினையேற்றனவும் தம் தொழிலேற்றனவும் ஈண்டுக் காட்டினவற்றுள்ளே காண்க.

இனிப் பிறதொழில் கொண்டன வருமாறு: "விண்ணிற் றூவியிட்டான்வந்து வீழ்ந்தன" (சீவக. 894), "கலைத்தொழில் படவெழீஇப் பாடினாள்கனிந், திலைப்பொழில் குருங்கின வீன்ற தூண்டளிர்" (சீவக. 657), "பாயு மாரிபோற் பகழி சிந்தினா, ராயர் மத்தெறி தயிரி னாயினார்" (சீவக. 421), "கானவ ரிரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடு", "மானிரை பெயர்ந்த தாய ரார்த்தன ரணிந்த திண்டோள், தானொன்று முடங்கிற்றொன்று நிமிர்ந்தது சரம்பெய் மாரி, போனின்ற தென்ப மற்றப் பொருவருஞ் சிலையி னாற்கே" (சீவக. 452), "செய்யோன் செழும்பொற் சரஞ் சென்றன சென்ற தாவி" (சீவக. 2322) எனக் காண்க. பிறவுமன்ன.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

எ-னின், இருவகை முற்றிற்கும் ஆவதோர் புறனடை உணர்-ற்று.

இ-ள்.:-வினைமுற்றே வினையெச்சமாகி வருதலும், வினைக் குறிப்புமுற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம், எ-று.

ஏகாரத்தைப் பின்னும் கூட்டுக.

குறைச்சொல்லாகாது பால் காட்டி நிற்றலின் முற்றே என்றும், வினையெச்சப் பயனிலையினையும் பெயரெச்சப் பயனிலையினையும் அவாவி நிற்றலின் எச்சம் என்றும், இவை சிறுபான்மையவாகலின் ஆகலும் என்றும் கூறினார்.

வ-று.: -

"காணான் கழிதலும் உண்டென் றொருநாள்" "மோயினள் உயிர்த்தகாலை" "முகந்தனர் கொடுப்ப" "விளிப்பது பயிலும் குறும்பர் துந்துமியொடு" "எருவின் நுண்தாது குடைவன ஆடி" "பெயர்த்தவென் முயங்க யான்" "மக்களுள் இரட்டையாய் மாறினம் பிறந்து யாம்" எனவும் "சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப" "கருங்கோட் டின்னியம் இயக்கினிர் கழிமின்" எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைமுற்று வினையெச்சமாயின. " வரிபுனைவில்லன் ஒருகணை தெரிந்துகொண்டு" "அளிநிலைபெறா தமரியமுகத்தள், விளிநிலை கொள்ளாள்" "உச்சிக்கூப்பிய கையினர் தற்புகழ்ந்து" "விழுமிது கழிவதாயினும்" "நிலமிசைப் புரளும் கையவெய்துயிர்த்து" எனவும், "துணையின்நெஞ்சினேன் துயருழந்தினையேன்" "நீர்வார் கண்ணேம் தொழுதுநிற் பழிச்சி" எனவும், "நீர்வார்கண்ணை நீயிவண் ஒழிய" வெள்வேல் வலத்திர் பொருள் தரல் வேட்கையின் உள்ளினிர்" எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைக் குறிப்புமுற்று வினையெச்சக் குறிப்பாயின. "வெந்திறலினன் விறல் வழுதியொடு" "அஞ்சாயலள் ஆயிழைமுன்" "கடற்றானையர் கழல் வேந்தரை", "பொருவரை மிசையது நெடுவெள்ளருவி" "புன்தாள் ஓமைய சுரனிறந்தோரே" எனவும்; "பெருவேட்கையேன் எற்பிரிந்து" "கண்புரை காதலே மெம்முளான்" எனவும்; "உலங்கொள் தோளிளை ஒரு நின்னால்" "வினைவேட்கையிர் வீரர் வம்மின்" எனவும் மூவிடத்து ஐம்பாலினும் வினைக்குறிப்புமுற்றுப் பெயரெச்சக் குறிப்பாயின. இவற்றுள் வரும் பெயர்கள் முற்றுப்பயனிலை யாகாது பெயரெச்சப்பயனிலையாமாறு காண்க.

இனி வினைமுற்றுக்கள் சொல் திரியினும் பொருள் திரியா வினையெச்சமாய் வருமாறு:

"விண்ணிற் றூவியிட் டான்வந்து வீழ்ந்தன"

"பாயு மாரிபோல் பகழி சிந்தினார் ஆயர்
மத்தெறி தயிரின் ஆயினார்"

"கானவர் இரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடும்
ஆனிரை பெயர்ந்த வாய ரார்த்தன ரணிசெய்

திண்டோள்
தானொன்று முடங்கிற் றொன்று நிமிர்ந்தது சரம்பெய் மாரி
போனின்ற வென்ப மற்றப் பொருவரு சிலையினாற்கே"
"செய்யோன் செழும்பொற் சரம்சென்றன சென்றதாவி"

என வரும். பிறவும் அன்ன.

*இனி எண்ணின்கண் நின்ற எதிரது தழீஇய எச்சவும்மையானே, உண்டான் சாத்தன், ஊர்க்குப்போனான் என்புழி உண்ட சாத்தன் ஊர்க்குப் போனான் எனப் பொருள்படுதலின் வினைமுற்றுப் பெயரெச்சமாதலும் உள எனவும்; வெறுத்த ஞானி வீட்டை அடைந்தான், சாத்தன் உழுது வந்தான் என்புழி வெறுத்தான் ஞானி சாத்தன் உழுதான்எனப் பொருள்பட்டு ஈரெச்சம் முற்றாதலுள எனவும்; "பெறுவது கொள்வாரும் கள்வரும் நேர்" என்புழி நேர் நேர்வர் என முதனிலைத் தனி வினையும் வினைமுற்றாதலுள எனவும்; "வரிப்புனை பந்து" "அறுவேறு வகையின்" "செய்தக்க வல்ல செயக்கெடும்" "மண்மாண் புனைபாவை யற்று" என்புழி வரிந்து அற்று செய்ய மாட்சிமைபட என்று பொருள்பட்டு முதனிலைத் தனிவினைகள் வினையெச்ச மாதல் உள எனவும் கொள்க.*

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், தெரிநிலை வினைமுற்றுக் குறிப்பு வினைமுற்றுச் சொற்கட்கு எய்தாதோர் இயல்பு கூறியது.

இ–ள்.:– வினைமுற்றே வினையெச்ச மாகலும் – தெரிநிலை வினைமுற்றுச் சொல் வினையெச்சமாகி வருதலும், குறிப்பு முற்று ஈரெச்சமாகலு முளவே – குறிப்பு வினைமுற்றுச் சொல்லாயது வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலுமுள, எ–று.

உ–ம்.:–

"காணான் கழிதலு முண்டென் றொருநாள்", "மோயின ளுயிர்த்த காலை" , மொய்த்து "முகந்தனர் கொடுப்ப",

"விளிப்பது பயிலுங் குறும்பர் துந்துமியொடு", "எருவைநுண் டாது குடைவன வாடி" என வரும். "பெயர்த்தனன் முயங்கியான்", "மக்களுளிரட்டையாய் மாறினம் பிறந்துயாம்" என வரும். "சேர்ந்தனை சென்மோ பைந்தார் மார்ப" ("எம்மூ ரல்லது" எனத் தொடங்கும் பாடல்,) "கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்" என மூவிடத்து ஐம்பாலினும் வந்த தெரிநிலை வினைமுற்று வினையெச்சமாயின.

"வரிபுனை வில்ல னிருகனை தெரிந்துகொண்டு", "அளிநிலை பெறாஅ தமரிய முகத்தள், விளிநிலை கேளாள்", "உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து", "விழுமிது கழிவ தாயினும்", "நிலமிசைப் புரளுங் கையவெய்துயிர்த்து" என வரும். "துணையி னெஞ்சினேன் றுயருழந் தினையேன்", "நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சி" என வரும். "நீர்வார் கண்ணை நீயிவணொழிய", "வெள்வேல் வலத்தினிர் பொருடரல் வேட்கையி, னுள்ளிர்", "பெருவரை மிசையது" என வினைக் குறிப்புமுற்றுத் தன்வினை வினையெச்சக் குறிப்பாயினவாறு காண்க.

"வெந்துப்பினன் விறல்வழுதி", "அஞ்சாயல ளாயிழை", "கடற்றானை யார்த்தார் வேந்தர்", "பெருவரை மிசையது நெடுவெள்ளருவி", "புன்றா ளோமைய சுரனிறந் தோரே", "பெருவேட்கையே னென்னிற் பிரிந்து", "கண்புரை காதலே மெம்மு முள்ளோர்", "உலங்கொ டோளினை நின்னால் வந்தேன்", "வினைவேட்கையிர் வீரருள் வம்மின்", வினைக்குறிப்பு முற்றுக்கள் ஐம்பால் மூன்றிடத்தும் பெயரெச்ச வினைக்குறிப்பாயின. இவை இவ்வாறு வருவதன்றிப் பெயர்ப்படாதெனக் கொள்க. எச்சந்தானே திணை பால் இடம் விளங்கிற்றென அமையாதோ வெனின் முற்கூறிய வினையெச்ச இலக்கணம் வழுவாமென்க. இவற்றுட் பிறவினை கொள்ளுமாறு அம்மை "விண்ணிற் றூவியட்டான் வந்து வீழ்ந்தனவே", "கலைத்தொழில் பாடினான் காமுகர் மயங்கினார்", "பகழி சிந்தினார் பலபடை மாய்ந்தன", "மன்னன் மனநூல் அறிந்தான் உலகம் வாழ்ந்தது" என வரும்.

## விசாகப் பெருமாளையர்

இது, இருவகை முற்றிற்கும் ஆவதோர் புறனடை யுணர்த்துகின்றது.

**இ—ள்.:—வினைமுற்றே** — தெரிநிலைவினை முற்றே, **வினையெச்சமாகலும்** — வினையெச்சமாகி வருதலும், **குறிப்புமுற் (றே)** — வினைக்குறிப்பு முற்றே, **ஈரெச்சமாகலும்** — வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும், **உள** — உளவாம், எ—று.

வ—று.:—

கண்டனன் வணங்கினான் என்பது கண்டு வணங்கினான் எனவும்; 'முகந்தனர் கொடுத்தார்' என்பது, முகந்து கொடுத்தார் எனவும், பொருள்படுதலால் வினைமுற்றுவினை யெச்சமாதல் காண்க. அவன் வில்லினன் வந்தான், அவன் வில்லினனாகி வந்தான், எனப் பொருள்படுதலாற் குறிப்பு முற்றுவினையெச்சமாதல் காண்க. 'வெந்திறலினன் விறல்வழுதியொடு', வெந்திறலினனாகிய வழுதி, எனப் பொருள்படுதலாற் குறிப்புமுற்றுப் பெயரெச்சமாதல் காண்க. மற்றவைகளு மிப்படியே வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வினைமுற்றுத் திரிந்து எச்சமாகி வருதலு முளவெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

வினைமுற் றேவினை யெச்ச மாகலுங்

குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே

(வினைமுற்றே வினையெச்சம் ஆகலும்

குறிப்புமுற்று ஈரெச்சம் ஆகலும் உளவே.)

**இ—ள்.:** தெரிநிலைவினைமுற்றே வினையெச்சமாகி வருதலும் வினைக்குறிப்புமுற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம், எ—று.

89. எச்சம் முற்றாகுமென்னாது முற்று எச்சமாதலு முண்டெனக் கூறியதென்னை?

பால்காட்டும் விகுதிபெறுதல் எச்சத்திற்குரிய இலக்கண மாகாமையின் எச்சம் முற்றாதலுமுள வென்னாது வினைமுற்றே யெச்சமாகலு

முளவெனப்பட்டது.

வ-று.:-

(1) கண்டனன் வணங்கினான் என்பது கண்டு வணங்கினான் எனவும், பொருள்படுதலால், வினைமுற்று வினையெச்ச மாதல் காண்க.

(2) அவன் வில்லினன் வந்தான் என்பது அவன் வில்லினனாகி வந்தான் எனப் பொருள்படுதலாற் குறிப்புவினையெச்சமாதல் காண்க. "வெந்திறலினன் விறல்வழுதியொடு" என்பது வெந்திறலினனாகிய வழுதி எனப் பொருள்படுதலாற் குறிப்புமுற்றுப் பெயரெச்சமாதல் காண்க. பிறவுமன்ன.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** இருவகை முற்றிற்குமாவதோர் புறனடை யுணர்த்திற்று.

**இ-ள்.:- வினைமுற்றே வினையெச்சமாகலும்**-தெரிநிலை வினைமுற்றுச் சொல்லே தெரிநிலை வினையெச்சமாகி வருதலும், **குறிப்பு முற்றீரெச்சமாகலும் உள** - குறிப்புமுற்றுச் சொல்லே குறிப்பு வினையெச்ச மாகியும் குறிப்புப் பெயரெச்சமாகியும் வருதலுமுளவாம், எ-று.

குறைச்சொல்லாகாது பால்காட்டி நிற்றலால், 'வினைமுற்றே' என்றும், வினையெச்சப் பயனிலையையும் பெயரெச்சப் பயனிலையையும் வேண்டி நிற்றலால், எச்சமென்றும் இவ்வாறு வருதல் சிறுபான்மையாதலால், 'ஆகலு'மென்றுங் கூறினார். (பால்-கூறு,) மை பகுதிப்பொருள் விகுதி)

வ-று.:-

நடந்தான்வந்தான், நடந்தாள்வந்தாள், நடந்தார்வந்தார், நடந்ததுவந்தது, நடந்தனவந்தன எனவும், நடந்தாய் வந்தாய், நடந்தீர்வந்தீர் எனவும், நடந்தேன்வந்தேன், நடந்தோம் வந்தோம் எனவும், முறையே ஐம்பால் மூன்றிடத்தும் தெரிநிலை வினைமுற்று வினையெச்சமாயின. இவற்றுள் முன்னின்ற முற்றுவினையை நடந்துவந்தான், நடந்துவந்தாள், நடந்துவந்தார் என வினையெச்சமாக்குக. ஒழிந்த பகுதிகாளாற் பிறக்கும் வினைகளும் இவ்வாறு வருமெனக் காண்க. குழையினன் வந்தான், குழையினள் வந்தாள், குழையினர்வந்தார் என இவ்வாறே குறிப்புமுற்று ஐம்பால் மூன்றிடத்திலும் வினையெச்சமாய் வருமெனக் கொள்க.

இவற்றுள் முன்னின்ற குறிப்பு முற்றைக் குழையினனாகி வந்தான், குழையினளாகிவந்தாள், குழையினராகி வந்தார் என வினையெச்சமாக்கிக் காண்க. மற்றப் பாலிடங்களிலும் ஒட்டிக் கொள்க.

குழையினன் கொற்றன்வந்தான், குழையினள் கொற்றிவந்தாள், குழையினர் கொற்றர்வந்தார் எனவும்; குழையினன் கொற்றன், குழையினள் கொற்றி, குழையினர் கொற்றார் எனவும்; ஐம்பால் மூன்றிடத்து மிவ்வாறு குறிப்புமுற்றுப் பெயரெச்சமாமெனவுங் கொள்க. இவற்றுள் முன்னின்ற குறிப்புமுற்றைக் குழையினனாகிய கொற்றன் வந்தான் எனவும், குழையையுடைய கொற்றன் எனவும் பெயரெச்சமாக்கிக் காண்க, ஒழிந்த பாலிடங்களிலும் ஒட்டிக்கொள்க.

இனிச் செய்யுளிடத்து வருமாறு, 'காணான் கழிந்த வைகலும்', 'மோயினள் உயிர்த்த காலை', 'முகந்தனர்கொடுப்ப', 'விளிப்பது பயிலும்', 'குடைவன ஆடி' எனவும் 'பெயர்த்தனென் முயங்கயான்', 'மாறினம் பிறந்துயாம்' எனவும், 'சேர்ந்தனை சென்மோ', 'இயக்கினிர் கழிமின்' எனவும், ஐம்பால்மூவிடத்தும் வினைமுற்று வினையெச்சமாயின. 'வில்லனொருகணை தெரிந்து', 'அமரியமுகத்தாள் விழிநிலை கொள்ளாள்'.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– வினைமுற்றே** – (தெரிநிலை) வினைமுற்றுச் சொல்லே, **வினை எச்சம் ஆகலும்**– வினையெச்சப்பொருளதாய் வருதலும், **குறிப்பு முற்று**– குறிப்பு வினைமுற்றுச் சொல், **ஈர் எச்சம் ஆகலும்** – வினையெச்சப் பொருளும் பெயரெச்சப் பொருளும் உடையதாய் வருதலும், **உள**–உண்டு.

உதாரணம்

1. கண்டான் வணங்கினான் காணான் போனான் — இவை முறையே 'கண்டு வணங்கினான்' எனவும், 'காணாமற்போனான்' எனவும் பொருள்படுதல் காண்க.

2. 'இராமன் வில்லினன் வந்தான்', 'குழையினன் இராமன் வந்தான்'.

(இவற்றில் 'வில்லினன்' 'குழையினன்' என்பன முறையே

'வில்லினனாகி' 'குழையினனாகிய' எனப் பொருள் படுதலால், குறிப்பு முற்று வினையெச்சமாயும் பெயரெச்சமாயும் வந்தது.)

இனி, 'வினையெச்சமாகலும்' என எண்ணிநின்ற எதிரது தழீஇய எச்ச உம்மையால் – 'உண்டான் சாத்தன் ஊருக்குப் போனான்' என்பதில் உண்டசாத்தன் எனப் பொருள்படுதலால் தெரிநிலைமுற்று பெயரெச்சமாய் வருதலுங்கொள்க. 'எச்சம் முற்றாம்' என்னாது 'முற்றே எச்சமாகும்' என்றது –ஐம்பால் மூவிடங்கட்கும் பொதுவான எச்சமே முற்றுக் கோதிய விதிபெற்றுப் பாலிடங்களைக் குறித்தலாலென்க. இஃது

ஆசிரியர் தொல்காப்பியர் கருத்தென்பதைச் சேனாவரையர் உரையானும், 'எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்'' என்றவிடத்து 'எண்பதத்தான்' என்பதனை முற்றுவினையெச்சமென்று பரிமேலழகர் கூறியதனானும் உணர்க.

இன்னும், எண்ணின்கண் நின்ற எச்ச உம்மையால் ''பொருவது கொள்வாருங்கள் வருநேர்'' என்பதில் நேர் – 'நேர்வர்' எனப் பொருள்பட்டு வருதல்போல முதனிலைத்தனிவினையும் வினைமுற்றாய் வருமெனவும், ''வரிப்புனைந்து'' என்பதில் வரி – 'வரிந்து' எனப்பொருள்பட்டு வருதல்போல வினையெச்சமாய் வருமெனவுங் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:– வேற இல்லை உண்டு** – வேறு இல்லை உண்டு என்னு மூன்று வினைக்குறிப்பு முற்றுக்களும், **ஐம்பால் மூவிடத்தன** – ஐம்பாலுக்கம் மூவிடத்திற்கு முரியனவாம், **எ–று.**

**வ–று.:–**

யான் வேறு, யாம் வேறு, நீ வேறு, நீர் வேறு, அவன் வேறு, அவள் வேறு, அவர் வேற, அது வேறு, அவை வேறு இல்லை உண்டு என்பனவற்றையும் மூவிடப்பெயர்களோடும் ஒட்டுக. இல்லையென்பது சிறுபான்மை இல் என நிற்றலுமுண்டு.

இனி, மொழிந்த பொருளோடுடொன்ற வவ்வியின் மொழியாததனையு முட்டின்று முடித்தலென்னு முத்தியால், வேண்டும், தகும், படும் என்னுஞ் சொற்களும் ஐம்பான் மூவிடத்துக்கும் பொதுவாமெனக் கொள்க. இம்மூன்றும் ஒருபொருட்சொற்களாய்த் தொழிற்பெயராய்த் தேற்றப்பொருள்

பட்டே நிற்கும்.

வ-று.:-

அவரோதல்வேண்டும்; நீ போதல் வேண்டும்; யானுண்ணல் வேண்டும். எனவும். இச்சோறுண்ணத்தகும்; இவராலிக்காரியஞ் செய்யத்தகும். எனவும். லஞ்சரையஞ்சப்படும், "கற்றறிந்தோரைத் தலைநிலைத்து வைக்கப்படும்" எனவும் வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ-ள்.:- வினைமுற்றே வினையெச்சம் ஆகலும்** - தெரிநிலை வினைமுற்றே வினையெச்சமாகி வருதலும் - **குறிப்பு முற் (றே) ஈரெச்சம் ஆகலும் உள** - வினைக்குறிப்பு முற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம். எ-று.

வ-று.:-

(1) கண்டனன் வணங்கினான் என்பது கண்டு வணங்கினான். எ-ம். முகந்தனர் கொடுத்தார் என்பது முகந்து கொடுத்தார். எ-ம். பொருள்படுதலால், வினைமுற்று வினையெச்சமாதல் காண்க.

(2) அவன் வில்லினன் வந்தான் என்பது அவன் வில்லினனாகிவந் தான் எனப் பொருள்படுதலாற் குறிப்புமுற்று வினையெச்ச மாதல் காண்க. "வெந்திறலினன் விறல் வழுதியொடு" என்பது வெந்திறலினனாகிய வழுதி எனப் பொருள்படுதலாற் குறிப்பு வினைமுற்றுப் பெயரெச்சமாதல் காண்க. பிறவுமன்ன.

ஒரு கருத்தாவைப் பற்றிய பலமுற்றுவினைகள் அடுக்கி வருமிடத்தே ஈற்றுவினை ஒழித்து முன்னின்றவினை எச்சமாகத் திரியுமென்க.

இவற்றை வினையெச்சங்களே வினைமுற்றுருபமாய் நின்றனவென்றல் அமையாதோவெனின்; அமையாது. இடமுந் திணையும் எண்ணுங் காட்டிச் சிறப்பியல்பு பொருந்தி நிற்கும் முற்றின்றன்மையை அவ்வியல்பில்லாத எச்சத் தருமென்றல் பொருந்தாதாதலின் என்க. பிறவாற்றானும் வகுத்துணர்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.:– **வினைமுற்றே** – (தெரிநிலை) வினைமுற்றே, **வினையெச்சம் ஆகலும்** – வினையெச்சமாகி வருதலும், **குறிப்புமுற்(றே) ஈரெச்சம் ஆகலும் உள** – வினைக்குறிப்புமுற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம், எ–று.

வ–று.:–

**'கண்டனன் வணங்கினான்'** என்பது கண்டு வணங்கினான் எனவும், **'முகந்தனர் கொடுத்தார்'** என்பது முகந்து கொடுத்தார் எனவும், பொருள் படுதலால் வினைமுற்று வினையெச்சமாதல் காண்க.

**'அவன் வில்லினன் வந்தான்'** என்பது அவன் வில்லினனாகி வந்தான் எனப் பொருள்படுதலாற் குறிப்புமுற்று வினையெச்சமாதல் காண்க. "வெந்திறலினன் விறல் வழுதியொடு" என்பது வெந்திறலினனாகிய வழுதி எனப்பொருள்படுதலாற் குறிப்புமுற்றுப் பெயரெச்சமாதல் காண்க. பிறவுமன்ன.

இ–ள்.:– **வினைமுற்றே** – (தெரிநிலை) வினைமுற்றுச் சொல்லே, **வினையெச்சம் ஆகலும்** – வினையெச்சப் பொருளும் வருதலும், **குறிப்பு முற்று** – குறிப்பு வினைமுற்றுச் சொல், **ஈர் எச்சம் ஆகலும்** – வினையெச்சப் பொருளும், பெயரெச்சப்பொருளும் உடையதாக வருதலும், **உள** – உண்டு; எ–று.

உ–ம்.:–

(1) 'கண்டனன் வணங்கினான்' என்பது – கண்டு வணங்கினான் என்றும் 'காணான் போனான்' என்பது காணாமற் போனான் என்றும் பொருள்படுதலால், தெரிநிலை முற்று வினையெச்சமாதல் காண்க.

**'சாத்தன் வில்லினன் வந்தான்'** என்பது, வில்லையுடையனாய் வந்தான் எனப் பொருள்படுதலால் குறிப்புமுற்று வினையெச்சமாகியும், **'குழையினன் கொற்றன் வந்தான்'** என்பது, குழையையுடைய கொற்றன் வந்தான் எனப் பொருள்படுதலால் குறிப்பு முற்றுப் பெயரெச்சமாகியும் வருதல் காண்க.

இனி, **'வினையெச்சமாகலும்'** என்ற (எண்ணிநின்ற எதிரதுதழுவிய எச்ச) உம்மையால், **'உண்டான் சாத்தன்'** (ஊர்க்குப் போனான்) என்பதில், உண்ட சாத்தன் எனப்

பொருள்பட்டு, தெரிநிலை முற்றுப் பெயரெச்சமாக வருதலும் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:– வினைமுற்றே வினையெச்சம் ஆகலும்** – தெரிநிலைவினை முற்றே வினையெச்சமாகி வருதலும், **குறிப்புமுற் (றே) ஈரெச்சம் ஆகலும் உள** – வினைக்குறிப்புமுற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும் உளவாம். எ–று.

**(உ–ம்.)**

(1) கண்டனன் வணங்கினான் – என்பது கண்டு வணங்கினான் என்வ;ம, முகந்தனர் கொடுத்தார் – என்பது முகந்து கொடுத்தார் எனவும் பொருள்படுதலால், வினைமுற்று வினையெச்சமாதல் காண்க.

(2) அவன் வில்லினன் வந்தான் என்பது அவன் வில்லினனாகி வந்தான் எனப் பொருள்படுதலாற் குறிப்பு முற்று வினையெச்சமாதல் காண்க. ''வெந்திறலினன் விறல் வழுதியொடு'' என்பது வெந்திறலினனாகிய வழுதி எனப் பொருள்படுதலாற் குறிப்பு முற்றுப் பெயரெச்சமாதல் காண்க. பிறவும் அன்ன.

'வினையெச்சமாகலும்' என எண்ணி நின்ற எதிரது தழீஇய எச்சவும்மையினாலே 'உண்டான் சாத்தன் ஊர்க்குப் போயினான்' என்றால் 'உண்ட சாத்தன் ஊர்க்குப் போயினான்' எனப்பொருள் படுதலால் தெரிநிலை முற்றுப் பெயரெச்ச மாதலும் கொள்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

**(இ–ள்.) வினைமுற்றே** – (தெரிநிலை) வினைமுற்றே, **வினை எச்சம் ஆகலும்** – வினையெச்சமாகி வருதலும், **குறிப்பு முற்(றே)** – குறிப்பு வினைமுற்றே, **ஈர் எச்சம் ஆகலும்** – வினையெச் மாகியும் பெய ரெச்சமாகியும் வருதலும், **உள** – உளவாம். **(எ–று)**

**(பொ–ரை.)**

வினைமுற்றே வினையெச்சமாகி வருதலும், குறிப்பு வினைமற்றே வினையெச்சமாகியும் பெயரெச்சமாகிம் வருந்தலுமுளவாம்.

**(உ–ம்.)**

கண்டனன் வணங்கனான்=கண்டு வணங்கினான்.

முகந்கனர் கொடுத்தார்=முகந்து கொடுத்தார்.

தெரிநிலை வினைமுற்று எச்சமாயிற்று.

அவன் வில்லினன் வந்தான்=அவன் வில்லினனாகி வந்தான்.

குறிப்பு முற்று வினை யெச்சமாயிற்று.

வெந்திறலினன் விறல்வழுதியொடு= வெந்திறலினனாகிய விறல்வழுதி யொடு.

குறிப்பு முற்றுப் பெயரெச்ச மாயிற்று.

மற்றவைகளு மிப்படியே வரும்.

இனி, 'வினையெச்சமாகலும்' என்ற எண்ணிநின்ற எதிரது தழீஇய எச்ச உம்மையால், உண்டான் சாத்தன் ஊர்க்குப் போனான் என்பதில் உண்ட சாத்தன் ஊர்க்குப் போனான் எனப் பொருள்பட்டு, தெரிநிலை வினைமுற்றுப் பெயரெச்சமாய் வருதலும் கொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**வினைமுற்று** – (தெரிநிலை) வினைமுற்று, **வினையெச்சம் ஆகலும்** – வினையெச்சமாகி வருதலும், **குறிப்புமுற்று** – குறிப்புவினைமுற்று, **ஈர் எச்சம் ஆகலும்** – வினையெச்சமாகியும் பெயரெச்சமாகியும் வருதலும், **உள** – உளவாம்.

**உதாரணம்**

| | |
|---|---|
| கண்டனன் வணங்கினான் (கண்டு வணங்கினான்). முகந்தனர் கொடுத்தார் (முகந்து கொடுத்தார்) | வினைமுற்று வினையெச்சம் ஆயிற்று. |
| அவன் வில்லினன் வந்தான் (அவன் வில்லினனாகி வந்தான்). | குறிப்புமுற்று வினையெச்சம் ஆயிற்று. |
| வெந்திறலினன் விறல்வழுதி (வெந் திறலினனாகிய விறல்வழுதி). | குறிப்புமுற்று பெயரெச்சம் ஆயிற்று. |

மற்றவைகளும் இப்படியே வரும்.

## மோசசு பொன்னையா

தொழில் வினைமுற்றுச்சொல் வினையெச்சப் பொருளிலும், குறிப்பு வினைமுற்றுச்சொல் வினை, பெயர் எச்சங்களின் பொருளிலும் வருதலுண்டு. எ–று.

எ-டு.:-

1. பெயர்த்தனென் முயங்க யான்,
சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப,
மோயின ளுயிர்த்த காலை,

என தொழில் முற்றுக்கள் வினையெச்சப் பொருளவாயின.

2. நீர்வார் கண்ணேந் தொழுது நிற்பழிச்சி,
நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய,
உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து.

எனக் குறிப்பு வினைமுற்றுக்கள் வினையெச்சப் பொருளவாயின.

3. பெருவேட் கையே னெற்பிரிந்து,
வினைவேட் கையிர் வீரர் வம்பின்,
பெருவரை மிசையது நெடுவெள் ளருவி,

எனக் குறிப்பு வினைமுற்றுக்கள் பெயரெச்சப் பொருளவாயின.

(32)

நன்னூல் உரைவளம்

வினையியல் முற்றும்.